அஸ்த்திர மந்திரத்தினால் பிம்பத்தை சுத்தி செய்ய வேண்டும். ஸ்கந்த காயத்ரி மந்திரத்தினால் நன்கு அபிஷேகம் செய்யவும்.

लोहजं यदि तद्वेरं स्नानं पर्वणि पर्वणि ।
चित्रादिप्रतिमा चेत्तु शुद्धिं कूर्चेन कारयेत् ॥ ४९ ॥

*லோஹஜம் யதி தத்பேரம் ஸ்நாநம் பர்வணி பர்வணி !*
*சித்ரா திப்ரதிமாச்சேத்து சுத்திம் கூர்ச்சேந காரயேத் !!*

தங்கம், வெள்ளி, பஞ்ச லோக முதலான உலோக விக்ரஹமெனில் அபிஷேகம் ஒவ்வொரு பர்வாவிலும் செய்யவும், வரையப் பட்ட பிம்பமாயிருப்பில் கூர்ச்சத்தினால் சுத்தி செய்யவும்.

बिम्बशुद्धिर्भवेदेवं मन्त्रशुद्धिं ततः शृणु ।
ओङ्कारादिनमोऽन्ताश्च मन्त्राः पूजार्हका भवेत् ॥ ५० ॥

*பிம்பசுத்திர் பவேதேவம் மந்த்ரசுத்திம் தத: ச்ருணு!*
*ஓங்காராதி நமோந்தாச்ச மந்த்ரா: பூஜார்ஹகாபவேத் !!*

இவ்வாறு பிம்ப சுத்தி கூறப்பட்டு மந்த்ர சுத்தி கூறப்படுகிறது. "ஓம்" முதற்கொண்டு "நம:" வரையிலான மந்திரங்கள் பூஜைக்கு உகந்ததாகும். (அவற்றை கூறிக் கொள்ளவும்)

मनसोपांशुना वाचा मन्त्रशुद्धिरुदाहृता ।
यो वेत्ति पञ्चशुद्धिं च स पूजां कर्तुमर्हति ॥ ५१ ॥

*மனஸோ பாம்சுநா வாசா மந்திரசுத்தி: உதா ஹ்ருதா !*
*யோ வேத்தி பஞ்ச சுத்திஞ்ச ஸபூஜாம் கர்தும்ர்ஹதி !!*

ஓம் காரம் முதல் நம : வரை மனதாலோ, தனக்கு மட்டும் கேட்பதாயும், பிறருக்கு கேட்பதாக வார்த்தையாலும் கூறப்படுவது மந்திர சுத்தியாகும். யார் பஞ்ச சுத்தியை அறிந்து செயல்படுகிறானோ அவன் பூஜைகளைச் செய்ய உரியவனாகிறான்.

स्कन्दसूक्तेन मतिमान् मूलब्रह्मषडङ्गकैः ।
मालामन्त्रेण मतिमान् कार्तिकेयं तु पूजयेत् ॥ ५२ ॥

*ஸ்கந்த சூக்தேந மதிமாந் மூலப்ரும்மஷடங்ககை : !*
*மாலா மந்திரேண மதிமாந் கார்த்திகேயந்து பூஜயேத் !!*

ஸ்கந்த சூக்தம், மூலமந்திரம், ப்ரும்ம மந்திரம், ஷடங்க மந்திரம், மாலா மந்திரத்தினால் அறிவாளியான ஆசார்யன் கார்த்திகேயனை பூஜிக்கவும்.

आसनं कल्पयेत्पश्चाच्छास्त्रदृष्टेन वर्त्मना ।
प्रणवं पूजयेन्मन्त्री पीठाधस्तात् गुहस्य तु ॥ ५३ ॥

*ஆஸனம் கல்பயேத் பச்சாத் ஸாஸ்த்ரத்ருஷ்டேந வர்தமநா!*
*ப்ரணவம் பூஜயேத் மந்த்ரீ பீடாதஸ்தாத் குஹஸ்ய து !!*

சாஸ்திரத்தில் கூறியுள்ளபடி ஆஸனம் பூஜிக்க வேண்டும். சுப்ரமண்ய பீடத்தினடியில் 'ஓம்' என்று பூஜிக்கவும்.

आधारशक्तिं तस्योर्ध्वे ततोऽनन्तासनं यजेत् ।
धर्मं पाण्डरवर्णं च ज्ञानं वै पद्मरागकम् ॥ ५४ ॥

*ஆதாரசக்திம் தஸ்யோர்த்வே ததோ நந்தாஸநம் யஜேத் !*
*தா்மம் பாண்டர வா்ணம் ச க்ஞானம் வை பத்மராககம் !!*

ஓங்காரத்தின் மேல் ஆதாரசக்தியையும், பிறகு அனந்தாஸனத்தையும் பூஜிக்கவும். வெண்மையான தர்மத்தையும், தாமரை நிறமான க்ஞானத்தையும்.

वैराग्यं हेमवर्णं स्यादैश्वर्यं श्यामवर्णकम् ।
आग्नेयादिषु कोणेषु पूजयेत्तु विशेषतः ॥ ५५ ॥

*வைராக்யம் ஹேமவர்ணம் ஸ்யாத் ஐச்வர்யம் ச்யாம வர்ணகம் !*
*ஆக்னேயாதி ஷு கோணேஷு பூஜயேத்து விசேஷத : !!*

பொன்னிறமாக வைராக்யத்தையும், கருமை நிறமாக ஐச்வர்யத்தையும் தென் கிழக்கு முதலான கோணங்களில் விசேஷமாக பூஜிக்கவும்.

अधर्माज्ञानावैराग्यानैश्वर्यांश्च पुनः पुनः ।
राजावर्तनिभा एते प्रागादिषु प्रकल्पयेत् ॥ ५६ ॥

*அதர்மாக்ஞானாவைராக்யா னைச்வர்யாம்ச்ச புன : புன : !*
*ராஜாவர்தநிபா ஏதே ப்ராகாதிஷு ப்ரகல்பயேத் !!*

கருப்புவர்ணமாக அதர்மம், அக்ஞானம், அவைராக்யம், அநைச்வர்யம் இவைகளை கிழக்கு முதலான திசைகளில் பூஜிக்கவும்.

मायाधच्छदनं रक्तं नैर्ऋत्यां दिशि पूजयेत् ।
वेद्योर्ध्वच्छदनं श्वेतमैशान्यां दिशि पूजयेत् ॥ ५७ ॥

*மாயாதச் சதனம் ரக்தம் நைர்ருத்யாம் திசி பூஜயேத் !*
*வேத்யோர்த்வச் சதனம் ச்வேதம் ஐசான்யாம் திசி பூஜயேத் !!*

தெற்மேற்கு திசையில் மாயை வரை வியாபித்துள்ள சிகப்பு வர்ணமான அதச்சதனத்தையும், வடகிழக்கு திசையில் (சுத்த வித்யை) வரைவியாபித்துள்ள வெண்மை நிறமான ஊர்த்வ சதனத்தையும் பூஜிக்கவும்.

एवं सिंहासनं प्रोक्तं पद्मासनं ततोच्यते ।
कन्दं बीजाङ्कुरं नालं दळं केसरकर्णिकाम् ॥ ५८ ॥

*ஏவம் ஸிம்மாஸனம் ப்ரோக்தம் பத்மாஸனம் ததோச்யதே !*
*கந்தம் பீஜாங்குரம் நாளம் தளம் கேஸர கர்ணிகாம் !!*

இவ்வாறு ஸிம்மாஸனம் கூறப்பட்டு பத்மாஸனம் கூற்ப்படுகிறது. கந்தம், பீஜம், அங்குரம், நாளம், தளம், கேஸரம் கர்ணிகை

बीजं पद्मं च मतिमान् पूर्वादिषु च मध्यमे ।
शकुनीं रेवतीं पूतां महापूतां निशीथिनाम् ॥ ५९ ॥

*பூஜம் பத்மஞ்ச மதிமாந் பூர்வாதிஷு ச மத்யமே !*
*சகுனீம் ரேவதீம் பூதாம் மஹாபூதாம் நிசீதிநீம் !!*

பீஜம், பத்மம், இவைகளை கிழக்கு முதலான திசைகளிலும், நடுவில் பத்மாய நம : பூஜித்து, சகுனீ, ரேவதீ, பூதநா, மஹாபூதநா, நிசீதிநீ,

मालिनीं शीतलां शुद्धां प्रागादिषु सुपूजयेत् ।
मध्ये विश्वमुखीं पूज्य नमोऽन्तैर्नामभिः क्रमात् ॥ ६० ॥

*மாலினீம் சீதளாம் சுத்தாம் ப்ராகாதிஷு ஸுபூஜயேத் !*
*மத்யே விச்வமுகீம் பூஜ்ய நமோந்தைர் நாமபி : க்ரமாத் !!*

மாலினீ, சீதளா, சுத்தா (புத்தா) இந்த 8 சக்திகளை கிழக்கு முதலான திசைகளிலும் நடுவில் விச்வதோ முக்யை நம : என்று அந்தந்த பெயர்களுடன் நம: பதத்துடன் முடிவில் உடையதாக பூஜிக்கவும்.

मण्डलत्रयमत्रैव पूजयेद्विमलासनम् ।
क्षित्यादिप्रकृतिः प्रोक्ता तत्त्वरूपं सनातनम् ॥ ६१

*மண்டலத்ரயமத்ரைவ பூஜயேத் விமலாஸனம் !*
*க்ஷித்யாதி ப்ருதி ப்ரோக்தம் தத்வரூபம் ஸநாதநம் !!*

(சூர்ய, சந்திரன், அக்னி) மூன்று மண்டல பூஜையுடன் விமலாஸனத்தை பூஜித்து ப்ருதிவீ முதல் ப்ருக்ருதி வரை அழிவில்லாததும் தத்வருபமான

सुब्रह्मण्यासनं दिव्यं तस्योपरि यजेद् बुधः ।
तत्तत्स्वरूपध्यानेन तस्मिन् मूर्तिं प्रकल्पयेत् ॥ ६२ ॥

*சுப்ரமண்யாஸனம் திவ்யம் தஸ்யோபரி யஜேத் புத: !*
*தத்தத்ஸ்ரூப த்யானேந தஸ்மிந் மூர்த்திம் ப்ரபூஜயேத் !!*

திவ்யமான விமலாஸனத்தின் மேல் சுப்ரமண்ய ஆஸனத்தை பூஜிக்கவும், பிரதிஷ்டை செய்துள்ள அந்தந்த மூர்த்தி தியானத்தை கூறி அந்த பிம்பத்தில் மூர்த்தியை கல்பிக்கவும்.

आपाद्य बिन्दुं तद्बिन्दोरानीय कुसुमाञ्जलिम् ।
तन्मूलमन्त्रसंयुक्तं हृदा चावाहयेत् गुहम् ॥ ६३ ॥

*ஆபாத்ய பிந்தும் தத்பிந்தோ : ஆநீய குசுமாஞ்ஜலிம் !*
*தந்மூலமந்திர ஸம்யுக்தம் ஹ்ருதா சாவாஹயேத் குஹம் !!*

மூலமந்திரத்துடன் ஓங்காரத்துடன் தன்ஹ்ருதய ஸ்கந்த மந்திரத்துடன் புஷ்பாஞ்ஜலியோடு மூலமந்திரத்தினால் ஹ்ருதய மந்திரத்தோடு முருகனை ஆவாஹனம் செய்யவும்.

स्थापनं तु प्रदातव्यमीशानेन तु मन्त्रतः ।
सन्निधानं तत्पुरुषादघोरात् सन्निरोधनम् ॥ ६४ ॥

*ஸ்தாபனந்து பிரதாதவ்யம் ஈசானேன து மந்த்ரத : !*
*ஸந்நிதாநம் தத்புருஷா தகோராத் ஸந்நிரோதனம் !!*

ஈசானமந்திரத்தினால் ஸ்தாபனமும், தத்புருஷ மந்திரத்தினால் ஸந்நிதானமும், அகோர மந்திரத்தினால் ஸன்னிரோதனமும்.

स्वागतं वामदेवेन दिग्बन्धं चास्त्रमन्त्रतः ।
कवचेनावकुण्ठ्याथ सद्येनामृतकल्पना ॥ ६५ ॥

*ஸ்வாகதம் வாமதேவேந திக்பந்தஞ் சாஸ்த்ரமந்திரத : !*
*கவசேநாவகுண்டயாத ஸத்யேநாம்ருத கல்பநா !!*

வாமதேவ மந்திரத்தினால் ஸ்வாகதமும் (நல்வரவென்றும்) அஸ்திர மந்திரத்தினால் திக்பந்தனமும். கவசமந்திரத்தினால் அவகுண்டனமும், ஸத்யோஜாத மந்திரத்தினால் தேனு முத்ரையும் காண்பித்து.

स्वामिन् सर्वजगन्नाथ यावत् पूजावसानकम् ।
तावत् त्वं प्रीतिभावेन बिम्बेऽस्मिन् सन्निधिं कुरु ॥ ६६ ॥

*ஸ்வாமிந் ஸர்வஜகந்நாத யாவத் பூஜாவஸாநகம் !*
*தாவத் த்வம் ப்ரீதி பாவேந பிம்பேஸ்மிந் ஸந்நிதிர் பவ !!*

ஹேஸ்வாமியே ! எல்லா உலகுக்கும் தலைவனே ! பூஜை முடியும் வரை திருப்தியுடையவனாக இந்த பிம்பத்தில் எழுந்தருளி அருள்புரிவீராக.

इदं मन्त्रं समुच्चार्य विश्वामित्र महामुने ।
पद्ममुद्रां महामुद्रां षण्मुखीं दर्शयेत्ततः ॥ ६७ ॥

*இதம் மந்திரம் ஸமுச்சார்ய விச்வாமித்ர மஹாமுநே !*
*பத்மமுத்ராம் மஹாமுத்ராம் ஷண்முகீம் தர்சயேத் தத : !!*

இவ்வாறு ஸ்லோகம் கூறி, பத்மமுத்ரை, மஹா முத்ரா, ஷண்முகீ முத்ரை காண்பிக்கவும்.

पादौ सकृत् सकृत्पाद्यं हृदयेन प्रदापयेत् ।
पुरुषयुक्तषडर्णेन वक्त्रेष्वाचमनीयकम् ॥ ६८ ॥

*பாதௌ ஸக்ருத்ஸக்ருத் பாத்யம் ஹ்ருதயே நப்ரதாபயேத் !*
*புருஷயுக்த ஷடர்ணேந வக்த்ரேஷ்வாச மநீயகம் !!*

பாத்யத்தை அடிக்கடி ஹ்ருதய மந்திரத்தினால் பாதத்தில் (காலில்) ஸமர்பித்து, தத்புருஷ வசத்புவே நம : என்று முகங்களில் ஆசமனீயமும்

अर्घ्यं शिरसि विन्यस्य वौषडन्तेन मूलतः ।
आपोहिष्ठेति मन्त्रेण पञ्चगव्येन पूजयेत् ॥ ६९ ॥

*அர்க்யம் சிரஸி விந்யஸ்ய வௌஷடந்தேந மூலத : /*
*ஆபோஹிஷ்டேதி மந்த்ரேண பஞ்சகவ்யேந*
*பூஜயேத் //*

வௌஷட் என்ற பதத்துடன் மூல மந்திரத்தினால் சிரஸில் அர்க்யமும் ஆபோஹிஷ்டா என்று பஞ்சகவ்யத்தினால் பூஜித்து,

अभिषिच्याथ तोयेन पिष्टेन कर्षयेद्धृदा ।
गन्धाद्यैरभिषिच्याथामलकैः परिमर्दयेत् ॥ ७० ॥

*அபிஷிச்யாத தோயேந பிஷ்டேந கர்ஷயே த்ருதா /*
*கந்தாத்யை பிஷிச்யாதா மலகை : பரிமர்தயேத் //*

தீர்த்தத்தால் அபிஷேகம் செய்து அரிசி மாவினால் தேய்த்து, சந்தனம் முதலானவைகளால் அபிஷேகம் செய்து நெல்லி முள்ளியையும் தேய்க்கவும்.

स्नाप्य बिल्वोदकैः पश्चाद्धरिद्रेण च पीठकम् ।
शक्तिद्वयं च संलेप्य पूजयेत्तु पुनः पुनः ॥ ७१ ॥

*ஸ்நாப்ய பில்வோதகை : பச்சாத் ஹரித்ரைச்சைவ*
*பீடகம் /*
*சக்தி த்வயஞ்ச ஸம்லேப்ய பூஜயேத்து புந : புந : //*

பில்வ தீர்த்தத்தால் அபிஷேகம் செய்து, மஞ்சள் பொடியால் பீடத்தையும் இரண்டு சக்தியையும் பூஜித்து மறுபடியும் பூஜிக்கவும்.

पञ्चामृतेन संस्नाप्य शुद्धतोयेन वा पुनः ।
श्रीरुद्रचमकाभ्यां च पुरुषसूक्तेन मन्त्रवित् ॥ ७२ ॥

*பஞ்சாம்ருதேந ஸம்ஸ்நாப்ய சுத்ததோயேந வா புந : /*
*ஸ்ரீருத்ர சமகாப்யாஞ்ச புருஷஸூக்தேந*
*மந்த்ரவித் //*

பஞ்சாமிர்தாபிஷேகம் செய்து சுத்த தீர்த்தத்தால் அபிஷேகித்து ருத்ர சமகம், புருஷஸூக்தங்களையும்.

ततः कुमारमातेति ऋचा चैव विशेषतः ।
स्कन्दसूक्तेन गायत्र्या सेनान्यं पञ्चशान्तिना ॥ ७३ ॥

*தத : குமாரமாதேதி ருசா சைவ விசேஷத : /*
*ஸ்கந்த ஸூக்தேந காயத்ர்யா ஸேநாந்யம்*
*பஞ்சசாந்திநா //*

குமார மாதா என்ற ரிக்காலும், ஸ்கந்த ஸூக்தம், காயத்ரீ மந்திரம், பஞ்ச சாந்தியாலும் (ஸேநாந்யை)

अयं कुमारमन्त्रेण माते कुमारमन्त्रतः ।
मालामन्त्रेण मतिमान् मूलब्रह्मषडङ्गकैः ॥ ७४ ॥

*அயம்குமார மந்த்ரேண மாதே குமார மந்த்ரத : /*
*மாலா மந்த்ரேண மதிமாந் மூலப்ரம்ம*
*ஷடங்கை : //*

அயம்குமாரம், மாதே குமாரம் மந்திரங்களாலும், மாலா மந்திரம், மூலமந்திரம், ப்ரும்ம ஷடங்க மந்திரங்களாலும்.

इत्थं शुद्धाम्बुभिः स्नाप्य हृदा चाचमनं ददेत् ।
वस्त्रेण परिमृज्याथवस्त्राणि च हृदा ददेत् ॥ ७५ ॥

*இத்தம் சுத்தாம்புபி: ஸ்நாப்ப ஹ்ருதா*
*ஆசமநம்ததேத் /*
*வஸ்த்ரேண பரிம்ருஜ்யாத வஸ்த்ராணி ச ஹ்ருதா*
*ததேத் //*

இவ்வாறு ஜபித்து சுத்த தீர்த்தத்தால் அபிஷேகம் செய்து ஹ்ருதய மந்திரத்தால் ஆசமநம் கொடுத்து, வஸ்த்திரத்தால் திருவொற்றாடை செய்து வஸ்திரமணிக்கவும்.

गन्धं तत्पुरुषेण यज्ञसूत्राक्षसूत्रिकाम् ।
मकुटं कुण्डलं पट्टं हारकेयूरनूपुरम् ॥ ७६ ॥

*கந்தம் தத் புருஷேணைவ யக்ஞஸூத்ராக்ஷ ஸூத்ரிகாம் !*
*மகுடம் குண்டலம் பட்டம் ஹாரகேயூர நூபுரம் !!*

தத்புருஷ மந்திரத்தினால் சந்தனம் சாத்தி, பூணூல், ஜபமாலை (ருத்ராக்ஷ மாலை) கிரீடம், குண்டலம் (காதணி), பட்டை (விபூதி பட்டை, மாலை, தோல்வளை, கால் கொலுசு,

छत्रं वीराङ्गुलीयं स्याद्ददेदाभरणस्य तु ।
पुष्पमीशानमन्त्रेण धूपदीपौ च पूरुषात् ॥ ७७ ॥

*சந்நம் வீராங்குலீயம் ஸ்யாத் ததேதாபரணம் ஹ்ருதா !*
*புஷ்பம் ஈசாந மந்த்ரேண தூபதீபௌ ச பூருஷாத் !!*

மார்பணி ஹாரம், மோதிரம் ஆகிய ஆபரணங்களை அணிவிக்கவும், ஈசான மந்திரத்தினால் புஷ்பம் ஸமர்பித்து தத்புருஷ மந்திரத்தினால் தூபதீபம் கொடுத்து.

मनोरथाख्यमुद्रां च दर्शयेतद्देशिकोत्तमः ।
शिरोवदनहृत्कुक्षिगुह्यपादद्वये पुनः ॥ ७८ ॥

*மநோரதாக்ய முத்ராஞ்ச தர்சயேத் தேசிகோத்தம : !*
*சிரோவதந ஹ்ருத்குக்ஷி குஹ்ய பாதத்வயே புன : !!*

மநோரத முத்ரை காண்பித்து, சிரஸ், முகம், ஹ்ருதயம், குஹ்யம், 2 பாதம்

ब्रह्मपञ्चकमुच्चार्य सर्ववक्त्रं तथा पुनः ।
जगद्भुवादिषण्मूर्तिमन्त्रैरभ्यर्चयेत्सदा ॥ ७९ ॥

*ப்ரம்ம பஞ்சகமுச்சார்ய ஸர்வவக்த்ரம் ததா புந : !*
*ஜகத் புவாதி ஷண்மூர்த்தி மந்த்ரை ரப்யர்சயேத் குரு : !!*

ஈசான பஞ்ச ப்ரும்மத்தையும், ஸர்வ வக்த்ரமும் சேர்த்து, ஜகத்புவம் முதலான ஆறுமூர்த்தி மந்திரங்களையும் சேர்த்து நியாஸம் செய்து பூஜிக்கவும். (குறிப்பு- ஈசாந ஜகத்புவே நம : தத்புருஷ வசத்புவே நம : அகோர விச்வபுவே நம:, வாமதேவ ருத்ர புவே, நம: ஸத்யோஜாத ப்ரும்மபுவே நம :, ஸர்வக்த்ர புவத்புவே நம :,),

दण्डभङ्गिरिति ख्याता वक्त्रभङ्गिमथ श्रुणु ।
ईशप्राग्दक्षिणोदीची प्रतीची नैऋतेषु च ॥ ८० ॥

*தண்டபங்கிரிக்யாதா வக்த்ர பங்கி மதச்ருணு !*
*ஈசப்ராக் தக்ஷிணோதீசீ ப்ரதீசீ நைரு ருதேஷு ச !!*

இவ்வாறு செய்வது தண்டபங்கி நியாஸமாகும். வக்த்ர பங்கியை பற்றி கேள், வடகிழக்கு, கிழக்கு, தெற்கு, மேற்கு, தென் மேற்கு ஆகிய இடங்களில்

षड्वक्त्रेष्वर्चयेद्धीमान् पूर्वोक्तैर्मन्त्रषट्ककैः ।
हृदयं हृदयेऽभ्यर्च्य शिरः शिरसि मन्त्रवित् ॥ ८१ ॥

*ஷட்வக்த்ரேஷ்வ ர்ச்சயேத்தீமாந் பூர்வோக்தைர் மந்த்ர ஷட்கதை : !*
*ஹ்ருதயம் ஹ்ருதயே அப்யர்ச்ய சிரச்சிரஸி மந்த்ரவித் !!*

முன் கூறிய மந்திரங்களால் ஆறு முகங்களிலும், நியாஸம் செய்து பூஜிக்கவும், ஹ்ருதயத்தில், ஹ்ருதய மந்திரத்தையும், சிரஸில் சிரோ மந்திரத்தையும்.

शिखां शिखायामभ्यर्च्य सर्वाङ्गे कवचं यजेत् ।
नेत्रं नेत्रेषु मतिमानस्त्रं हस्ते समर्चयेत् ॥ ८२ ॥

*சிகாம் சிகாயாம் அப்யர்ச்ய ஸர்வாங்கேகவசம் யஜேத் !*
*நேத்ரந் நேத்ரேஷு மதிமாநஸ்த்ரம் ஹஸ்தே ஸமர்ச்சயேத் !!*

சிகையில் சிகாமந்திரத்தையும், எல்லா அங்கத்திலும், கவசமந்திரத்தையும், நியாஸித்து பூஜித்து, நேத்ர மந்திரத்தை நேத்ரத்திலும், கையில் அஸ்திர மந்திரத்தை பூஜிக்கவும்.

पञ्चावरणपूजां च ततः श्रृणु महामुने ।
ईशानपदमुच्चार्य जगद्भुव इति ब्रुवन् ॥ ८३ ॥

*பஞ்சாவரண பூஜாம் ச தத : ச்ருணு மஹாமுநே !*
*ஈசாந பதமுச்சார்ய ஜகத்புவ இதி ப்ருவந் !!*

பஞ்சா வரண பூஜையைக் கூறுகிறேன். கேளும்! ஈசான என்ற பதத்தையும் ஜகத்புவ என்றும் சேர்த்து,

नम इत्यर्चयेद्विद्वानीशानदळमूलतः ।
पूर्वे तु दळमूले तु जप्त्वा तत्पुरुषेण च ॥ ८४ ॥

*நம இத்யர்சயே த்வித்வா நீசாந தள மூலத : !*
*பூர்வேத் தளமூலேது ஜப்த்வா தத் புருஷேண ச !!*

நம: என்பதாக ஈசான தள முலையில் பூஜிக்கவும் கிழக்கு தள முலையில் தத் புருஷத்துடன்.

वचद्भुवे नम इति समभ्यर्च्य यथाविधिः ।
अघोरं पदमुच्चार्य ततो विश्वभुवे नमः ॥ ८५ ॥

*வசத்புவே நம இதி ஸமப்யர்ச்ய யதாவிதி !*
*அகோர பதம் உச்சார்ய ததோ விச்வ புவே நம : !!*

வசத்புவே நம: என்று அர்ச்சித்து, அகோர என்ற பதத்துடன் விச்வபுவே நம: என்று சேர்த்து,

इत्युक्त्वा मुनिशार्दूल दक्षिणे तु दळे यजेत् ।
वामं तु पदमुच्चार्य ततो रुद्रभुवं ब्रुवन् ॥ ८६ ॥

*இத்யுக்த்வா முநிசார்த்தூல தக்ஷிணேது தளே யஜேத் !*
*ராமந்துபதம் உச்சார்ய ததோ ருத்ர புவம் ப்ருவந் !!*

தக்ஷிண தளத்தில் பூஜித்து வாமம் என்கிற வாமதேவத்துடன் ருத்ரபுவம் என்று சேர்த்து,

उत्तरे तु दळविद्वान् पूजयेत्तु यथाविधि ।
सद्यं च पदमुच्चार्य ततो ब्रह्मभुवं ब्रुवन् ॥ ८७ ॥

*உத்தரேத் தளே வித்வாந் பூஜயேந்து யதாவிதி !*
*ஸத்யஞ்ச பதம் உச்சார்ய ததோ ப்ரம்ம புவம் ப்ருவந் !!*

வடக்கு தளத்தில் பூஜித்து, ஸத்ய என்ற ஸத்யோ ஜாதத்துடன் ப்ரும்மபுவம் என்று சேர்த்து,

पश्चिमे तु दळे विद्वान् पूजयेद्देशिकोत्तमः ।
नैर्ऋते तु तळे धीमान् सद्यवक्त्रपदान्तकम् ॥ ८८ ॥

*பச்சிமேது தளே வித்வாந் பூஜயேத் தேசி கோத்தம : !*
*நைர்ருதே து தளே வித்வாந் ஸத்ய வக்த்ர பதாந்தகம் !!*

மேற்கு தளத்தின் பூஜித்து, நிருருதி தளத்தில் ஸத்ய வக்த்ர (ஸர்வ கக்த்ர)

भुवद्भुवे नम इति पूजयेन्मुनिपुङ्गव ।
नेत्रमीशानभागे तु हृदये वह्निगोचरे ॥ ८९ ॥

*புவத்புவேநம இதி பூஜயேந் முநிபுங்கவ !*
*நேத்ரம் ஈசாந பாகே து ஹ்ருதயம் வந்நிகோசரே !!*

பத்த்துடன் புவத்புவே நம : என்று பூஜித்து நேத்ர மந்திரத்தை ஈசான திசையிலும், தென் கிழக்கில் ஹ்ருதய மந்திரத்தையும்.

शिरस्त्वीशानभाके तु नैर्ऋति तु शिखां यजेत् ।
कवचं वायुदेशे तु चतुर्दिक्ष्वस्त्रमर्चयेत् ॥ ९० ॥

*சிரஸ்த்வீ சாந பாகேது நைருருதேது சிகாம் யஜேத் !*
*கவசம் வாயுதே சேது சதுர்திக்ஷ்வஸ்த்ர மர்ச்சயேத் !!*

ஈசான திசையிலிருந்து சிரோ மந்திரத்தையும், நைருருதி திசையில் சிகையையும், வாயு திசையில் கவச மந்திரத்தையும், 4 திசைகளிலும் அஸ்திர மஸ்திரத்தையும் ஜபிக்கவும்.

प्रथमावरणे प्रोक्तं द्वितीयावरणं श्रृणु ।
जयन्ताख्यमग्निशिखं कृत्तिकापुत्रसंज्ञकम् ॥ ९१ ॥

*ப்ரதாமாவரணம் ப்ரோக்தம் த்விதீயாவரண்ம்*
*ஸ்ருணு !*
*ஜயந்தாக்ய மக்நிசிகம் க்ருத்திகா புத்ர சம்க்ஞகம் !!*

மேற் கூறிய வைகளில் முதலா வரணத்தில் பூஜித்து த்விதீயா வரணமானது ஜயந்தம் அக்னிசிகம் க்ருத்திகா புத்ரம்

अनन्तरं भूतपतिं सेनान्यं गुहसंज्ञकम् ।
हेमशूलं विशालाक्षं शक्तिवज्रधरं यजेत् ॥ ९२ ॥

*அநந்தரம் பூத பதிம் ஸேநாந்யம் குஹ*
*ஸம்க்யஞகம் !*
*ஹேம தூலம் விசாலாக்ஷம் சக்திவஜ்ரதரம்*
*யஜேத் !!*

பூதபதி, ஸேநாநி, குஹன், ஹேம தூலன், விசாலாக்ஷன், சக்தி வஜ்ர தாரியாக,

पूर्वादीशानपर्यन्तं स्वस्वदिक्षु प्रपूजयेत् ।
द्वितीयावरणं प्रोक्तं तृतीयावरणं श्रृणु ॥ ९३ ॥

*பூர்வாதீசாந பர்யந்தம் ஸ்வஸ்வதீக்ஷு ப்ரபூஜயேத் !*
*த்விதீயா வரணம் ப்ரோக்தம் த்ருதீயாவரணம்*
*ஸ்ருணு !!*

கிழக்கு முதலாக அந்தந்த திக்குகளில் பூஜிக்கவும், த்விதீயா வரணம் மூன்றாவதாக ஆவரண பூஜை கூறப்படுகிறது.

दक्षिणे तु महावल्लीं देवसेनां तथोत्तरे ।
गजेन्द्रं पूर्वदिग्भागे मयूरं पश्चिमे यजेत् ॥ ९४ ॥

*தக்ஷிணே து மஹாவள்ளீம் தேவஸேநாம்*
*ததோத்தரே !*
*கஜேந்த்ரம் பூர்வதிக் பாகே மயூரம் பச்சிமே*
*யஜேத் !!*

தெற்கு பாகத்தில் மஹா வள்ளியையும், வடக்கு பாகத்தில் தேவஸேனாவையும் பூஜிக்கவும். கஜேந்திரனை கிழக்கேயும், மேற்கில் மயூரததையும்,

अग्निभागे सुदेहं च सुमुखं नैरृते यजेत् ।
देवसेनापतिं वायौ चैशान्यां तु सुमित्रकम् ॥ ९५ ॥

*அக்னிபாகே ஸுதேஹஞ்ச சுமுகம் நைர்ருதே*
*யஜேத் !*
*தேவ ஸேநாபதிம் வாயௌசைசான்யாம்*
*சுமித்ரகம் !!*

ஆக்னேயத்தில், சுதேஹனையும், நைர்ருதியில் சுமுகனையும், வாயுதிசையில் தேவஸேனா பதியையும், ஈசானத்தில் சுமித்ரனையும் பூஜிக்கவும்.

तृतीयावरणं प्रोक्तं चतुर्थावरणं श्रृणु ।
इन्द्रादिलोकपालांश्च यजेत् स्वस्वदिशि क्रमात् ॥ ९६ ॥

*த்ருதீயா வரணம் ப்ரோக்தம் சதுர்த்தாவரணம்*
*ச்ருணு !*
*இந்த்ராதி லோக பாலாம்ச்ச யஜேத் ஸ்வஸ்வ திசி*
*க்ரமாத் !!*

மூன்றாவது ஆவரணம் கூறி 4 வது ஆவரணம் கூறப்படுகிறது, இந்திரன், முதலான திக்பாலகர்களை அந்தந்த திசையில் பூஜிக்கவும்.

चतुर्थावरणं प्रोक्तं पञ्चमावरणं श्रृणु ।
वज्रं शक्तिं च दण्डं खेटं पाशं तथाङ्कुशम् ॥ ९७ ॥

*சதுர்த்தாவரணம் ப்ரோக்தம் பஞ்சமா வரணம்*
*ச்ருணு !*
*வஜ்ரம் சக்திஞ்ச தண்டஞ்ச கேடம் பாசம்*
*ததாங்குசம் !!*

4 வது ஆவரணம் கூறி ஐந்தாவது ஆவரணம் கூறப்படுகின்றது. வஜ்ரம், சக்தி, தண்டம், கேடயம், பாசம், அங்குசம்,

गदा त्रिशूलं पद्मं च चक्रं चेति दशायुधम् ।
ऐन्द्राद्यष्टदिशोर्ध्वेऽपि अधस्ताच्चैव पूजयेत् ॥ ९८ ॥

*கதா த்ரிசூல பத்மஞ்ச சக்ரஞ்சேதி தசாயுதம்!*
*ஐந்த்ராத்யஷ்ட திசோர்த்வேபி அதஸ்தாச்சைவ*
*பூஜயேத்!!*

கதை, திரிசூலம், பத்மம், சக்ரம் இவ்வாறாக தசாயுதங்களை கிழக்கு திசை முதலாக 10 திசைகளில்.

स्वस्वनामादिमन्त्रेण पूजयेत् यथाक्रमम् ।
धेनुं पद्मं त्रिशूलाख्यं मकरां सृङ्नमस्कृताम् ॥ ९९ ॥

*ஸ்வஸ்நாமாதி மந்தரேண பூஜயேத்து யதாக்ரமம் !*
*தேநு பத்ம த்ரிசூலாக்யம் மகராம் ஸ்ருங்*
*நமஸ்க்ருதாம் !!*

அந்தந்த ஆயுதப் பெயர்களை கூறி அர்ச்சிக்கவும், தேனு முத்ரை, பத்ம முத்ரை, திரிசூல முத்ரை, மகா முத்ரை, ஸ்ருங்முத்ரை, நமஸ்காரமுத்ரை காண்பித்து.

षडङ्गन्यासमन्त्रेण कल्पयेत् विधिवत्तथा ।
गुहाय दर्शयेत् पश्चाद्ददेदाचमनार्घ्यकम् ॥ १०० ॥

*ஷடங்கந் நியாஸ மந்த்ரேண கல்பயே*
*த்விதிவத்ததா !*
*குஹாய தர்சயேத் பச்சாத் ததேதா சமநார்க்யகம் !!*

ஷடங்கந்யாஸ மந்திரத்தினால் முத்ரைகளை முருகனுக்கு காண்பிக்கவும் ஆசமனார்க்யம் கொடுக்கவும்.

सैकत्रिंशत्कलान्यासं मकुटादिक्रमान्यसेत् ।
नैवेद्यं दापयेत् पश्चात् उपदंशसमन्वितम् ॥ १०१ ॥

*ஸைக த்ரிம்சத் கலாந்யாஸம் மகுடாதி*
*க்ரமாந்யஸேத் !*
*நைவேத்யம் தாபயேத் பச்சாத் உபதம்ச*
*ஸமந்விதம் !!*

ஏகத்ரிம்சத் கலாந்யாஸம் என்கிற 31 கலாந்யாஸத்தை சிரஸ் முதல் நியாஸம் செய்யவும், காய்கறி வகையையும், நைவேத்யமாகி ஸமர்பிக்கவும்.

नालिकेराम्रपनसं कदलीफलसंयुतम् ।
गुळखण्डसमोपेतमाज्यपूर्णं दधिप्लुतम् ॥ १०२ ॥

*நாளிகேராம்ர பநஸம் கதளீபலஸம் யுதம்!*
*குள கண்ட ஸமோபேதம் ஆஜ்ய பூர்ணம் ததி*
*ப்லுதம் !!*

தேங்காய், மாம்பழம், பலாப்பழம், வாழைப்பழம் இவைகளையும் வெல்லக் கட்டியுடன், நெய், தயிர், இவைகளையும் சேர்த்து,

अपूपैर्विविधैश्चैव शृङ्गिबेरसमन्वितम् ।
आहृत्यं चास्त्रमन्त्रेण सम्प्रोक्ष्यार्घ्यजलेन च ॥ १०३ ॥

*அபூபைர் விவிதைச்சைவ ச்ருங்கிபேர*
*ஸமன்விதம் !*
*ஆஹ்ருத்யம் ச அஸ்த்ர மந்த்ரேண*
*ஸம்ப்ரோக்ஷ்யார்க்ய ஜலேநச !!*

அப்ப வகைகளையும், வெள்ளறிகாய், பக்ஷணங்களையும், கொண்டு வந்து, அஸ்த்திர மந்திரத்தினால் அர்க்ய ஜலத்தால் ப்ரோக்ஷித்து.

अन्नसूक्तं जपित्वा तु नैवेद्यं दापयेद्धृदा ।
कर्पूरोशीरसंयुक्तं पानीयमपि दापयेत् ॥ १०४ ॥

*அன்னம் ஸூக்தம் ஜபித்வாது நைவேத்யம்*
*தாபயேத்ருதா!*
*கர்பூரோ சீரஸம்யுக்தம் பாநீயமபி தாபயேத் !!*

அன்ன ஸூக்தம் ஜபித்து ஹ்ருதய மந்திரத்தினால் நைவேத்தியம் கொடுக்கவும், பச்ச கற்பூரம், விளாமிச்சம்வேர், சேர்த்த ஜலத்தால் பாத்யம் கொடுக்கவும்.

हस्तस्योद्वर्तनं कृत्वा पश्चादाचमनं ददेत् ।
ताम्बूलं दापयेत् पश्चात् कर्पूरादिसमन्वितम् ॥ १०५ ॥

*ஹஸ்த ஸ்யோ த்வர்த்தநம் க்ருத்வா பச்சாதாசமநம் ததேத் !*
*தாம்பூலந்தாபயேத் பச்சாத் கா்பூராதி ஸமந்விதம் !!*

கையலம்பும் உபசாரம் செய்து ஆசமனம் கொடுக்கவும். கற்பூரம், வாசனத்ரவ்யங்களுடன் தாம்பூலம் கொடுக்கவும்.

निवेदितं तु यत्सर्वं सुमित्राय प्रदापयेत् ।
तत्सर्वमन्नपानादिभोक्तव्यं ब्राह्मणादिभिः ॥ १०६ ॥

*நிவேதி தந்துயத் ஸா்வம் சுமித்ரா ப்ரதாபயேத் !*
*தத்ஸா்வ மந்த பாநாதி போக்தவ்யம் ப்ராம்மணாதிபி : !!*

நிவேத்யமான பொருட்களை சுமித்ர சண்டருக்கு ஸமா்பிக்கவும், பிராம்மணா் களுடன் அன்னபா நாதிகளை போஜனம் செய்யவும்.

भुक्तिमुक्तिप्रदं नृणां सर्वरोगविनाशनम् ।
परिवारबलिं क्षिप्त्वा धूपदीपादिदापयेत् ॥ १०७ ॥

*புத்தி முக்தி ப்ரதந் ந்ருணாம் ஸா்வரோக விநாசநம் !*
*பரிவார பலிம் க்ஷிப்த்வா தூபதீபாதி தாபயேத் !!*

மனிதா் களுக்கு பக்தி, முக்திகளை கொடுக்கக்கூடியதும், எல்லா நோயையும் போக்க வல்லதுமான பரிவார பலிகொடுத்து தூபதீப நிவேத்யங்களை ஸமா்பிக்கவும்.

विभूतिदर्पणच्छत्रचामरव्यजनादिकम् ।
दर्शयित्वा नित्याग्निकार्यं चैव समाचरेत् ॥ १०८ ॥

*விபூதி தா்பணச்சத்ர சாமரவ்ய ஜநாதிகம் !*
*தா்சயித்வாத நித்யாக்நி காா்யஞ் சைவ ஸமாசரேத் !!*

(விபூதி) பஸ்ம ஸமா்ப்பனம், கண்ணாடி, கொடி, சாமரம், விசிறி முதலியன உபசாரங்களை ஸமா்பித்து நித்யாக்னி காா்யம் செய்யவும்.

नित्योत्सवं ततः कुर्यात् विधिदृष्टेन वर्त्मना ।
नृत्तं गीतं च वाद्यं च षण्मुखाय प्रदर्शयेत् ॥ १०९ ॥

*நித்யோத்ஸவம் தத : குா்யாத் விதித்ருஷ்டேந வா்த்மநா !*
*ந்ருத்த கீதஞ்ச, வாத்யஞ்ச ஷண்முகாய ப்ரதா்சயேத் !!*

முறைப்படி நித்யோத்ஸவம் செய்து, நாட்டியம், பாட்டு, வாத்யங்களை முருகனுக்கு ஸமா்பிக்கவும்.

मूलमन्त्रं शतं जप्त्वा तन्निवेद्य स्तुतिं वदेत् ।
प्रदक्षिणनमस्कारौ कृत्वा सन्तोषयेद्गुहम् ॥ ११० ॥

*மூலமந்த்ரம் சதம் ஜப்த்வா தந்நிவேத்ய ஸ்துதிம் வதேத் !*
*ப்ரதக்ஷிண நமஸ்காரௌ க்ருத்வா ஸந்தோஷயேத் குஹம் !!*

நூறு ஆவ்ருத்தி மூலமந்திரம் ஜபம் செய்து ஸமா்பித்து ஸ்தோத்ர வந்தனம் செய்யவும், பிரதக்ஷிண, நமஸ்காரம் செய்து முருகனைத்ருப்தி படுத்தவும்.

मन्त्रहीनं क्रियाहीनं भक्तिहीनं षडानन ।
यत् पूजितं मया देव परिपूर्णं तदस्तु ते ॥ १११ ॥

*மந்தரஹீநம் க்ரியாஹீநம் பக்திஹீநம் ஷடாநந !*
*யத்பூஜிதம் மயாதேவ பரிபூா்ணம் ததஸ்துதே !!*

மந்திர குறைவு, (கிரியை) செயல் குறைவு, பக்தி குறைவு, இவைகளுடன் எவ்வாறு பூஜித்தேனோ ! அது குறை வில்லாததாக ஆகட்டும்.

प्रार्थयित्वाथ सेनान्यं नमस्कृत्वा पुनः पुनः । साधुवासाधु वा कर्म यद्यदाचरितं मया ॥ ११२ ॥

*ப்ராா்த்தயித்வாத ஸேநாந்யம் நமஸ்க்ரித்வா புந : புந : !*
*ஸாது வாஸாது வா காா்ம யத்யதா சரிதம் மயா !!*

இவ்வாறாக முருகனை வேண்டி நமஸ்கரித்து, நன்மையோ, தீமையோ என்னால் எது அனுஷ்டிக்கப்பட்டதோ,

तत्सर्वं देवदेवेश गृहाणाराधनं परम् ।
पूजाफलं तु तत्सर्वमात्मना सह बुद्धिमान् ॥ ११३ ॥

*தத்ஸர்வம் தேவ தேவேச க்ருஹாணாராதநம் பரம் /*
*பூஜா பலந்து தத்ஸர்வம் ஆத்மநாஸஹ புத்திமாந் //*

அதை தேவதேவனே எல்லா ஆராதனையும் ஏற்றுக் கொள்ளவும், பூஜை பயனை எல்லாம் தன்னுடன் கூட

निवेदयेत्तु सेनान्यै करे पुष्पान्वितैर्जलैः ।
एककालं द्विकालं वा त्रिकालं वा समर्चयेत् ॥ ११४ ॥

*நிவேதயேத்து ஸேநாந்யை கரே புஷ்பாந்விதைர் ஜலை: /*
*ஏககாலம் த்விகாலம் ரா த்ரிகாலம் வா ஸமர்ச்சயேத் //*

முருகன் கையில், ஜலம், புஷ்பங்களுடன் ஸமர்பிக்கவும், ஓர் வேளை, இரண்டு வேளை, மூன்று காலம் பூஜையோ செய்யவும்.

उत्तमोत्तममेवं स्यान्नवकालार्चनं मुने ।
वित्तशाठ्यं न कुर्यात् यथाविभवविस्तरम् ॥ ११५ ॥

*உத்தமோத்த மமேவம் ஸ்யாத் நவகாலார்சநம் முநே /*
*வித்தசாட்யம் ந குர்யாத்து யதாவிபவிஸ்த்தரம் //*

9 காலம் பூஜை செய்து உத்தமோத்தம பூஜையாகும், பணக்குறைவின்றி முறைப்படி மிகவும் விஸ்தாரமாகவும். பூஜிக்கவும்

अर्धयामे महासेनं पूजां कुर्याद्विशेषतः ।
तत्पश्चात् क्षेत्रपालं च सुमित्रं पूजयेद्गुरुः ॥ ११६ ॥

*அர்த்தயாமே மஹாஸேநம் பூஜாங்குர்யா த்விசேஷத: /*
*தத்பச்சாத் க்ஷேத்ர பாலஞ்ச ஸுமித்ரம் பூஜயேத்குரு: //*

அர்த்தயாம காலத்தில், விசேஷமாக முருகனை பூஜிக்கவும், அதன் பிறகு பைரவனையும், சுமித்ர சண்டரையும் பூஜிக்கவும்.

सौख्यं कुर्यात्तदन्तेषु शास्त्रदृष्टेन वर्त्मना ।
एवं क्रमेण विधिवदुत्तमाराधनं स्मृतम् ॥ ११७ ॥

*ஸௌக்யம் குர்யாத் ததந்தேஷு சாஸ்த்ர த்ருஷ்டேந வர்த்மநா /*
*ஏவம் க்ரமேண விதிவத் உத்தமாராதநம் ஸ்ம்ருதம் //*

ஸௌக்ய கர்மா, நிருத்த கீத உத்ஸவம் ஸாஸ்திர முறைப்படி செய்யவும். இவ்வாறாக உத்தம முறையில் பூஜிக்கவும்.

समृद्धिदं ताण्डवान्तं बल्यन्तं शान्तकं भवेत् ।
हविष्यन्तमशक्तश्चेत् दीपान्तं वापि पूजयेत् ॥ ११८ ॥

*ஸம்ருத்திதம் தாண்டவாந்தம் பல்யந்தம் சாந்தகம் பவேத் /*
*ஹவிஷ்யந்த மசக்தச்சேத் தீபாந்தம் வாபி பூஜயேத் //*

தாண்டவம் உபசாரம் வரை பூஜை செய்யவும், ஸமிருத்தியையளிக்கும், பலி பூஜை வரை செய்வது சாந்தம் எனப்படும், ஹவிஸ் வரை பூஜை செய்ய இயலாவிடில் தீப தரிசனம் (தீபோபசாரம்) வரையிலாவது பூஜிக்கவும்.

एवं यः कुरुते मर्त्यः सपुण्यां गतिमाप्नुयात् ।
भवेद् विप्रः सुवेदाढ्यो राजा विजयमाप्नुयात् ।
धनं वैश्यस्तथाप्नोति शूद्रः सुखमवाप्नुयात् ॥ ११९ ॥

*ஏவயம் ய: குருதே மர்த்ய : ஸபுண்யாம்*
*கதிமாப்நுயாத் /*
*பவே த்விப்ரஸ் ஸுவேதாட்யோ ராஜாவிஜய*
*மாப்நுயாத் //*
*தநம் வைச்யஸ் ததாப்நோதி சூத்ரஸ் ஸுக*
*ஸமவாப்நுயாத் ///*

இவ்வாறு யார் பூஜைகளை செய்கிறானோ அவன் நல்லகதியை அடைவான், பிராமணன் வேத மறிந்தவனாகவும், அரசன் வெற்றியையும் அடைவான். வைசியன் தனவானாகவும், நான்காம் வர்ணத்தவர் ஸௌக்யத்தையும் அடைவான்.

इति कुमारतन्त्रे नित्यपूजाविधिर्नाम पञ्चमः पटलः ॥

இதி ஸ்ரீ குமாரதந்த்ரே கௌசிக ப்ரச்னே நித்ய
பூஜா விதி படல : பஞ்சம :

இவ்வாறு குமாரதந்திரத்தில் நித்யபூஜா முறை
5 - வது படலமாகும்.

# ।। षष्ठः पटलः ।।

## !! ஆறாவது படலம் !!

## ।। नैवेद्यविधिः ।।

### நைவேத்ய விதி :

अतः परं प्रवक्ष्यामि नैवेद्यविधिमुत्तमम् ।
ग्रामवृद्धिकरं पुण्यं राजराष्ट्रविवर्धनम् ॥ १ ॥

*அத : பரம் ப்ரவக்ஷ்யாமி நைவேத்யவிதி முத்தமம் !*
*க்ராமவிருத்திகரம் புண்யம் ராஜ ராஷ்ட்ர*
*விவர்தனம் !!*

மேலானதும் ஊரகவளர்ச்சி செய்வதும் புனிதமானதும், அரசன் அரசு உயர் வாக்குவதுமான நைவேத்ய விதியைச் சொல்கிறேன்.

व्रीहिवेणुप्रियङ्गूश्च नीवारं यवमेव च ।
गोधूमं षड्विधं प्रोक्तं नैवेद्यं षण्मुखप्रियम् ॥ २ ॥

*வ்ரீஹிவேணு ப்ரியங்கூச்ச நீவாரம் யவமேவச !*
*கோதூமம் ஷட் விதம் ப்ரோக்தம் நைவேத்யம்*
*ஷண்முகப்ரியம் !!*

நெல், அரிசி, மூங்கிலரிசி, செந்நெல், யவை தினை தானியம் கோதுமை ஆகிய ஆறுவிதம் (அன்னம்) ஷண்முகனுக்கு விருப்பமான நைவேத்யம் என்று சொல்லப்படுகிறது,

आत्मनो हितमन्विच्छेत् प्राग्द्रव्यं यत् सुपक्वकम् ।
यो ददाति गुहायैव तां तां वृद्धिं समाप्नुयात् ॥ ३ ॥

*ஆத்மனோ ஹிதமன் விச்சேத் ப்ராக்த்ரவ்யம் யத்*
*சுபக்வகம் !*
*யோததாதி குஹாயைவ தாம் தாம் விருத்தி ம்*
*ஸமாப்னுயாத் !!*

எவர் தனக்கு நன்மையை விரும்புபவராகில் முன்பு (சொன்ன) பொருளை பக்குவமாக்கி குஹனுக்குத் தருகிறாரோ (அவர்) அந்த அந்த மேன்மையை (பயனை) அடைவார்.

अदत्वा येन भुक्तं चेत् तद्द्रव्यं क्षीयते भृशम् ।
नित्यं नैमित्तिकं काम्यं नैवेद्यं त्रिविधं स्मृतम् ॥ ४ ॥

*அதத்வாயேன புக்தம் சேத் தத்த்ரவ்யம் க்ஷீயதே*
*ப்ருசம் !*
*நித்யம் நைமித்திகம் காம்யம் நைவேத்யம் த்ரிவிதம்*
*ஸ்ம்ருதம் !!*

(அப்படி முருகனுக்கு) கொடுக்கப்படாமல் யாரால் அந்த பொருள் உண்ணப்படுகிறதோ அது அழிவது அதிகமாகும். நைவேத்யம் நித்யம், நைமித்திகம், காம்யம் என்று மூன்று விதமான நைவேத்தியமாகும்.

नित्यं नवविधं प्रोक्तं तथा नैमित्तिकं तु वा ।
यथेष्टं काम्यमित्युक्तं तेषां भेदमिहोच्यते ॥ ५ ॥

*நித்யம் நவவிதம் ப்ரோக்தம் ததா நைமித்திகம் துவா !*
*யதேஷ்டம் காம்யமித்யுக்தம் தேஷாம்*
*பேதமிஹோச்யதே !!*

(இதில்) நித்யம் என்பது ஒன்பது விதமாகவும் அதே அளவு நைமித்திகமும், எவ்வளவு விருப்பமோ அது காம்யம் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதன் விளக்கம் இங்கு சொல்லப்படுகிறது.

नैवेद्यमाढकं पक्वं मध्यमं चाधमं स्मृतम् ।
द्विगुणं त्रिगुणं तस्मिन् नैवेद्यं मध्यमोत्तमम् ॥ ६ ॥

*நைவேத்யம் ஆடகம் பக்வம் மத்யமம் சாதமம்*
*ஸ்ம்ருதம் !*
*த்விகுணம் த்ரிகுணம் தஸ்மின் நைவேத்யம்*
*மத்யமோத்தமம் !!*

நைவேத்யம் பக்குவமாகி ஒருபிடி (த்ரோண அளவில் 4ல் 1 பங்கு) அளவுள்ளது அதமத்தில் அதமம் என்றும் இரண்டு படி அளவு அதமத்தில்

மத்தியமம், மூன்றுபடி அளவு அதமத்தில் உத்தமம் என்றும் நினைக்கத்தக்கது ( 9 விதம் என்பது அதமம், மத்யமம், உத்தமம் ஆகியவைகளில் ஒவ்வொன்றும் மூன்று பிரிவாகவுள்ளது. . (3 X 3 = 9)

अर्धभारेण नैवेद्यं मध्यमाधममुच्यते ।
भारं भारार्धकं प्रोक्तं मध्यमे मध्यमोत्तमम् ॥ ७ ॥

*ஆர்த்தபாரேண நைவேத்யம் மத்யமா தமமுச்யதே !*
*பாரம் பாரார்தகம் ப்ரோக்தம் மத்யமே*
*மத்யமோத்தமம் !!*

நைவேத்யம் பாரம் என்ற அளவில் (எடை) பாதி உள்ளது. மத்தியமத்தில் அதமம் என்றும் ஒரு பாரம் மத்தியமத்தில் மத்யமம் ஒன்றரை பாரம் (1½ எடை) உள்ளது மத்தியம உத்தமம் என்றும் சொல்லப்பட்டுள்ளது.

त्रिभारं तण्डुलैः पक्वमुत्तमाधममुच्यते ।
षड्भारद्वितयं चान्नमुत्तमे मध्यमोत्तमम् ॥ ८ ॥

*த்ரிபாரம் தண்டுலை: பக்வம் உத்தமா தமமுச்யதே !*
*ஷட்பாரத்விதயம் சான்னம் உத்தமே*
*மத்யமோத்தமம் !!*

பாரம் மூன்று (எடை) உள்ளது உத்தமத்தில் அதமம் என்றும் ஆறு பாரம் உள்ளது. உத்தமமத்யமாகவும், பன்னிரெண்டு பாரம் உள்ளது உத்தமத்தில் உத்தமம் என்றும் சொல்லப் பட்டுள்ளது.

एककालस्य नैवेद्यमेवमेव महामुने ।
नित्यमेव समाख्यातं नैमित्तिकमथ श्रृणु ॥ ९ ॥

*ஏக காலஸ்ய நைவேத்யம் ஏவமேவ மஹாமுனே !*
*நித்ய மேவ சமாக்யாதம் நைமித்திகமத ச்ருணு !!*

ஹே மகரிஷியே ஒரு கால பூஜைக்கு இந்த அளவில் நைவேத்யம் என்றும் இது நித்திய நைவேத்ய முறையாகும். பின்பு நைமித்திக முறையைக் கேள்.

खारिषट्कं समारभ्य तेन वृद्धिं नवोदितम् ।
नवद्विगुणभारान्तं मध्यमादित्रयं त्रयम् ॥ १० ॥

*காரிஷட்கம் சமாரப்ய தேன வ்ருத்திம் நவோதிதம் !*
*நவத்விகுண பாராந்தம் மத்யமா தித்ரயம் த்ரயம் !! .*

12 படி அளவில் ஆறு மடங்கு உள்ளது (காரிக்ஷட்கம்) இதில் 9 எடையில் ஆரம்பித்து படிப்படியாக 18 எடை முடிய அளவு உள்ள அதமம். மத்யமம், உத்தமம் இவைகளின் மூன்று, மூன்று விதமானதாகும்.

एवं नैमित्तिकं प्रोक्तं श्रृणु काम्यं महामुने ।
प्रार्थितं येन यन्मात्रं तावन्मात्रं हि काम्यकम् ॥ ११ ॥

*ஏவம் நைமித் திகம்ப்ரோக்தம் ச்ருணு காம்யம்*
*மஹாமுனே !*
*ப்ரார்த்திதம் யேன யன்மாத்ரம் தாவன் மாத்ரம் ஹி*
*காம்யகம் !!*

இவ்வாறு நைமித்திகம் சொல்லப்பட்டது ஹே மகரிஷியே ( அடுத்து ) காம்ய நைவேத்ய முறையைக் கேள்!. எந்த அளவில் யாரால் வேண்டிக் கொள்ளப்பட்டதோ அந்த அளவு காம்ய நைவேத்ய முறையாகும்.

कुडुवं तु चतुः प्रस्थं पैशाचान्नं प्रकीर्तितम्१ ।
द्विःप्रस्थं चरुसंज्ञं स्यात् आढकं हविरुच्यते ॥ १२ ॥

*குடுவம் து சது : ப்ரஸ்தம் பைசா சான்னம்*
*ப்ரகீர்த்திதம் !*
*த்விப்ரஸ்தம் சருஸம்க்ஞம் ஸ்யாத் ஆடகம்*
*ஹவிருச்யதே !!*

குடுவம் என்ற 4 படி உள்ளது. பைசா சான்னம் என்றும், 2 படி உள்ளது சரு என்பது 1 படி உள்ள ஹவிஸ் என்றும் சொல்லப் பட்டுள்ளது.

चातुर्वर्णोद्भवा नारी पतिपुत्रवती तथा ।
यद्वा सुमङ्गली कन्या व्रीहिप्रहरकर्मणि ॥ १३ ॥

*சாதுர்வர்ணோத் பவா நாரீ பதிபுத்ரவதீ ததா !*
*யத்வா சுமங்கலீ கன்யா வ்ரீஹிப்ரஹர கர்மணி !!*

நான்கு வர்ணத்திலும் உதித்வளும் கணவன் குழந்தை உள்ளவளுமான சுமங்கலியாகிய பெண் அல்லது கன்னிகை (யைக் கொண்டு) நெல்குத்தல் செய்யும் போது.

आदित्यरश्मिभिस्तप्तं धान्यं शुद्धमुलूखले ।
निक्षिप्य मुसलं ग्राह्य कुट्टयेत्प्रागुदङ्मुखः ॥ १४ ॥

*ஆதித்ய ரஸ்மிபிஸ்தப்தம் தான்யம் சுத்தமு லூகலே !*
*நிக்ஷிப்ய முசலம் க்ராஹ்ய குட்டயேத்*
*ப்ராகுதங்முக : !!*

சூரிய கிரஹணங்களால் காய்ச்சப்பட்ட நெல்லை சுத்தம் செய்யப்பட்ட உரலில் இட்டு கிழக்கு, வடக்கு முகமாக இருந்து உலக்கையினால் இடிக்க வேண்டும்.

तुषान्यपोह्य शूर्पेण तुषकम्बुविवर्जितम् ।
विशदं तण्डुलं ग्राह्य शुद्धात्मा परिचारकः ॥ १५ ॥

*துஷான்யபோஹ்ய சூர்பேண துஷகம்பு விவர்ஜிதம் !*
*விசதம் தன்டுலம் க்ராஹ்ய சுத்தாத்மா பரிசாரக : !!*

முறத்தினால் உமி தவிடுகளை நீக்கி தூய வெள்ளையான அரிசியை சுத்தமான மனதை உடைய பரிசாரகன் எடுத்து

नवभाण्डानि संक्षाल्य तेषु निक्षिप्य तण्डुलान् ।
वस्त्रपूतेन तोयेन हृदा क्षाल्य पुनः पुनः ॥ १६ ॥

*நவபாண்டானி ஸம்க்ஷாள்ய தேஷு நிக்ஷிப்ய*
*தண்டுலான் !*
*வஸ்த்ரபூதேன தோயே ன ஹ்ருதா க்ஷால்ய புன :*
*புன : !!*

புதிய மண்பாத்திரங்களை துலக்கி அவைகளில் அரிசியைப் போட்டு (வஸ்த்திரத்தினால்) துணியினால் சுத்திகரிக்கப்பட்ட நீரால் இருதய மந்திரத்தோடு மீண்டும் மீண்டும் அலம்ப (களைய) வேண்டும்

तण्डुलाद्द्विगुणं तोयं कल्पयेत् बीजमुख्यतः ।
तण्डुलैर्चयेच्चुल्लीं सद्येन परिचारकः ॥ १७ ॥

*தண்டுலாத் த்விகுணம் தோயம் கல்பயேத்*
*பீஜமுக்யத : !*
*தண்டுலைரர்ச்சயேச் சுல்லீம் சத்யேன பரிசாரக : !!*

(பீஜமுக்யமந்திரத்தால்) மூலமந்திரத்தோடு அரிசியினைக் காட்டிலும் இரண்டு மடங்கு நீர் விட வேண்டும். பின்பு அந்த அரிசியினால் அடுப்பில் ஸத்யோ ஜாதமந்திரத்தை பரிசாரகன் அர்ச்சனை (அர்ச்சித்து) செய்ய வேண்டும்.

चुल्यां काष्ठं समानीय वह्निं प्रज्वाल्य चास्त्रतः ।
केशकीटोपविद्धं च शर्करा तुषसंयुक्तम् ॥ १८ ॥

*சுல்யா காஷ்டம் சமானீய வன்னிம் ப்ரஜ்வால்ய*
*சாஸ்த்ரத:!*
*கேசகீடோப வித்தம் ச சர்க்கரா துஷஸம்யுதம் !!*

அந்த அடுப்புக்கு விறகு எடுத்துவைத்து அஸ்திர மந்திரத்தால் நெருப்பை எரியச் செய்யவும் (கேசம்) புழு, மணல் (கரும்பு சக்கை) உமி இவையுடன் கூடியதும்

अतिपक्वमपक्वं च नैवेद्यं न प्रकल्पयेत् ।
शुद्धान्नं पायसं मुद्गं गुळान्नं कृसरान्नकम् ॥ १९ ॥

*அதிபக்வம் அபக்வம் ச நைவேத்யம்*
*ந ப்ரகல்பயேத் !*
*சுத்தான்னம் பாயஸம் முத்கம் குளான்னம்*
*க்ருசரான்னகம் !!*

அதிகமாக குழைந்ததும், வேகாததாகவும் செய்யக் கூடாது. (சுத்தான்னம்) பாயஸம், வெண்பொங்கல், சர்க்கரை பொங்கல், எள், வெல்லம் சாதம், (ஆகியவை கல்பிக்கவும்)

उपदंशं ततो वक्ष्ये श्रुणु कौशिक सुव्रत ।
मुद्गमाषकुलुत्थं च निष्पावं शिम्बमाढकम् ॥ २० ॥

*உபதம்சம் ததோ வக்ஷ்யே ச்ருணு கௌசிக ஸுவ்ரத !*
*முத்கமாஷ குளுத்தம் ச நிஷ்பாவம் சிம்பமாடகம் !!*

பிறகு துணையுணவு வகைகளைக் கூறுகிறேன். உறுதியுடைய கௌசிகரே கேளும்! பாசிபயறு, உளுந்து, கொள்ளு, நிஷ்பாவம், (காராமணி) அவரை, துவரை ஆகியவையும்

तथा वै राजमाषं तु सूपमेवं प्रकल्पयेत् ।
पनसालाबुकदली बृहती द्वयमेव च ॥ २१ ॥

*ததா வை ராஜமாஷம்து ஸூபமேவம் ப்ரகல்பயேத் !*
*பனஸாலாபு கதலீ ப்ருஹதீ த்வய மேவ ச !!*

அப்படியே வெண் மொச்சை ஆகிய பருப்பு வகைகளும் ஏற்படுத்தவும் (மேலும்) பலாக்காய் சுரைக்காய், வாழைக்காய், புடலங்காய், ப்ருஹதீ, கண்டங்கத்திரி

आम्रोर्वारुककूश्माण्डं कारवल्ली पटोलिका ।
मुद्गनिष्पावकफलं वल्लीमूलं सुपक्वकम् ॥ २२ ॥

*ஆம் ரோர்வாருக கூஶ் மாண்டம் காரவல்லீ*
*படோலிகா !*
*முத்க நிஷ்பாவகபலம் வல்லீ மூலம் சுபக்வகம் !!*

மாம்பழம், வெள்ளரி, பூசணி, இஞ்சி , பாகற்காய், புடலை, பயத்தக்காய், தட்டைக்காய், பழம் மற்றும் கொடிவேர் சர்க்கரை வள்ளி கிழங்கு, ஆகியவைகளை வேகவைத்தும்

कन्दं प्रियङ्गुपिष्टं च यथालाभं प्रगृह्य च ।
सर्वोपदंशकानुक्तान् मरीचिलवणाज्यकान् ॥ २३ ॥

*கந்தம் ப்ரியங்கு பிஷ்டம் ச யதாலாபம் ப்ரக்ருஹ்யச !*
*ஸர்வோபதம் சகா நுக்தாந் மரீசி லவணாஜ்யகான் !!*

கிழங்கு, (தினை) மாவு ஆகியவைகளை கிடைத்த அளவு எடுத்துக்கொண்டு, அனைத்து காய்கறிகளையும் மிளகு, உப்பு,நெய், சேர்த்ததாகவும்.

जीरकाम्लरसोपोतान् यथायोगं पचेत् पुनः ।
एतान् संयोज्य विविधान् सूपान् पक्वफलादिकान् ॥ २४ ॥

*ஜீரகாம்ல ரஸோபேதான் யதாயோகம் பசேத் புன : !*
*ஏதான் ஸம்யோஜ்ய விவிதான் ஸூபான்*
*பக்வபலாதிகான்!!*

சீரகம், புலி, ஜலம், அவைகளுடன் சேர்ந்தவைகளை எவ்வளவு சேர்க்க வேண்டுமோ, அவ்வளவு, மீண்டும் சமைக்க வேண்டும். இந்த பலவித பருப்பு வகைகளையும் (பழுத்த) பழங்கள் முதலியவைகளை முறைப்படி சேர்த்து

द्वात्रिंशांशं घृतं चैव सूपं वै षोडशांशकम् ।
अष्टांशांशं दधिक्षीरं तदर्धं शर्करा मधु ॥ २५ ॥

*த்வாத்ரிம்சாம்சம் க்ருதம் சைவ ஸூபம்வை*
*ஷோடசாம்சகம் !*
*அஷ்டாம்சாம்சம் ததி க்ஷீரம் ததர்தம் சர்க்கரா மது !!*

(இதில்) 12ல் ஒரு பங்கு நெய்யும் 16ல் ஒரு பங்கு பருப்பும் 18ல் ஒரு பங்கு தயிர், பால் இவைகளும் அதில் பாதி அளவு சர்ககரை, தேன் இவைகளும் (சேர்க்க வேண்டும்)

पक्वान्नसमये चैव मार्जन्या शोध्य भूतलम् ।
संप्रोक्ष्य चास्त्रमन्त्रेण चित्रशाकादिना युताम् ॥ २६ ॥

*பக்வான்னஸமயே சைவ மார்ஜன்யா சோத்ய*
*பூதலம் !*
*ஸம்ப்ரோக்ஷ்ய சாஸ்த்ர மந்திரேண*
*சித்ரசாகாதினாயுதம் !!*

நைவேத்தியம் சமைக்கும் போது (துடைப்பத்தால்) பூமியை சுத்தம் செய்து அஸ்திர மந்திரத்தால் ப்ரோக்ஷணம் செய்து பலவித காய்கறி சமையலுடன்

आस्यं वस्त्रेण संच्छाद्य चोत्थाप्य परिचारकः ।
नैवेद्योत्थापने काले यो नरश्च न लङ्घयेत् ॥ २७

*ஆஸ்யம் வஸ்த்ரேண ஸம்ச்சாத்ய சோத்தாப்ய பரிசாரக: !*
*நைவேத்யோத்தாபனே காலே யோ நரஸ் ச நலம்கயேத் !!*

பரிசாரகர் தன் முகத்தை துணியால் கட்டிக்கொண்டு (நைவேத்யத்தை அடுப்பிலிருந்து) எடுக்கவேண்டும் நைவேத்யம் எடுக்கும் போது யாரும் தாண்டக்கூடாது.

प्रमादात् पतितं चेत्तु सस्यानां नाशनं भवेत् ।
तद्द्रव्यं वर्जयित्वा च मूलमन्त्रैः शतं जपेत् ॥ २८ ॥

*ப்ரமாதாத் பதிதம் சேத்து ஸஸ்யா நாம் நாஸநம் பவேத் !*
*தத் த்ரவ்யம் வர்ஜயித்வா ச முலமந்திரை: சதம் ஜபேத் !!*

அசட்டை (கவனக் குறைவு) யால் (நைவேத்யம்) கீழே விழுந்தால் பயிர்களுக்கு நாசம் ஏற்படும். (அப்படி ஏற்ப்பட்டால்) அதை விசர்ஜனம் செய்து விட்டு மூலமந்திரத்தால் 100 ஆவர்த்தி ஜபம் செய்ப வேண்டும்.

पुनः पच्याथ नैवेद्यं तद्द्रव्यं प्रतिरूपकम् ।
मण्डपे दक्षिणे भागे मण्डले विन्यसेत् क्रमात् ॥ २९ ॥

*புன: பச்யாத நைவேத்யம் தத்த்ரவ்யம் ப்ரதிருபகம் !*
*மண்டபே தக்ஷிணே பாகே மண்டலே வின்யஸேத் க்ரமாத்!!*

பிறகு மறுபடியும் அதே அளவு நைவேத்யம் சமைத்து நிவேதிக்கவும், அந்த நைவேத்யத்தை மண்டபத்தின் தென் பகுதியில் மண்டலத்தில் முறையாக வைக்கவும்.

दारुहस्तेन दर्व्या वा पात्रमन्नेन पूरयेत् ।
सौवर्ण राजतं कांस्यमथवा कदळीदळम् ॥ ३० ॥

*தாருஹஸ்தேன தர்வ்யாவா பாத்ரமன்னேன பூரயேத் !*
*ஸௌவர்ணம் ராஜதம் காம்ஸ்யம் அதவா கதளீதளம் !!*

மரக்கை (அகப்பை) அல்லது கரண்டியால் தங்கம், வெள்ளி, வெண்கலம் அல்லது வாழையிலையினால் ஆன பாத்திரத்தில் அன்னத்தை நிறப்பவேண்டும்.

सर्वव्यजनसंयुक्तं त्रिपादूर्ध्वे निधापयेत् ।
तुर्यांशं भाण्डतोनीत्वा शेषं त्र्यंशं निवेदयेत् ॥ ३१ ॥

*ஸர்வ வ்யஞ்ஜன ஸம்யுக்தம் திரிபா தூர்த்வே நிதாபயேத்!*
*துர்யாம்சம் பாண்டதோ நீத்வா சேஷம் த்ரயம் சந்நிவேதயேத்!!*

அந்த அன்னத்தை அனைத்து வெஞ்சனங்களுடன் (காய்கறி, பழங்களுடன்) முக்காலியின் மேல் வைக்கவும். சமைக்கப்பட்ட பாத்திரத்தில் 4ல் ஒரு பங்கு வைத்துவிட்டு மீதி மூன்று பங்கு நிவேதனம் செய்யவும்

नित्यमेवं समाख्यातं काम्यं नैमित्तकं श्रुणुम् ।
स्थलशुद्धिं ततः कृत्वा प्रोक्षयेदस्त्रमन्त्रतः ॥ ३२ ॥

*நித்ய மேவம் ஸமாக்யாதம் காம்யம் நைமித்திகம் ச்ருணு!*
*ஸ்தலசுத்திம் தத: க்ருத்வா ப்ரோக்ஷயே தஸ்த்ரமந்த்ரத: !!*

இவ்வாறு நித்ய நைவேத்யம் செய்யவும். காம்யம் நைமித்திகம் இவைகளை கேளும், நைவேத்யம் செய்யும் இடத்தை சுத்தம் செய்து அஸ்திர மந்திரத்தால் ப்ரோக்ஷிக்கவும்.

महीं सम्यक् परिस्तीर्य घृतेनैवभिधारयेत् ।
पात्रशेषं त्रिभागैकं नीत्वा शेषं नयेत्ततः ॥ ३३ ॥

*மஹீம் ஸம்யக் பரிஸ்தீர்ய க்ருதேநைவா பிகாரயேத் !*
*பாத்ரசேஷம் த்ரிபாகைகம் நீத்வா சேஷம் நயேத் தத : !!*

பூமியை நன்கு பெருக்கி, நெய்யால் அபிகாரம் (சுத்தம்) செய்து பாத்திரத்தில் 3ல் ஒரு பங்கு விட்டு மற்ற (இரண்டு பங்கு) வைகளை அங்கு வைக்கவும்.

सर्वोपदंशसंयुक्तं प्रभूतं हविरुत्तमम् ।
अस्त्रं दशासु विन्यस्य चास्त्रमुद्रां प्रदर्शयेत् ॥ ३४ ॥

*சர்வோபதம்ச ஸம்யுக்தம் ப்ரபூதம் ஹவிருத்தமம் !*
*அஸ்த்ரம் தசாஸு வின்யஸ்ய சாஸ்த்ர முத்ராம் ப்ரதர்சயேத் !!*

அனைத்து துணைஉணவுடன் சேர்த்து வைத்து நிவேதனம் செய்வது உத்தமமான ப்ரபூதஹவிஸ் என்பதாகும். அதில் பத்து திக்குகளிலும் அஸ்த்ரமந்திரத்தை இணைத்து அஸ்த்ர முத்திரையைக் காட்டவேண்டும்.

भक्ष्यं भोज्यं च लेह्यं च पेयं चैव चतुर्विधम् ।
दापयेत् कार्तिकेयाय हृदयेन तु देशिकः ॥ ३५ ॥

*பக்ஷ்யம் போஜ்யம் ச லேஹ்யம்ச பேயம் சைவ சதுர் விதம் !*
*தாபயேத் கார்த்திகேயாய ஹ்ருதயேனது தேசிக : !!*

நைவேத்யத்தை பக்ஷணம், உணவு, குழைவு, திரவமாக, (திண்பதற்கும், உண்பதற்கும், புசிப்பதற்கும், குடிப்பதற்கும்) நான்கு விதமாக சமைத்து ஹ்ருதய மந்திரத்தால் கார்த்திகேயனுக்கு ஆசார்யர் கொடுக்க வேண்டும்.

नैवेद्यविधिराख्यातो वक्ष्ये पानीय लक्षणम् ।
निवेद्यायामृतं शुद्धे मृद्भाण्डे पूरयेज्जलम् ॥ ३६ ॥

*நைவேத்யாவிதி ராக்யாதோ வக்ஷ்யே பானீய லக்ஷணம் !*
*நிவேத்யாம்ருதம் சுத்தே ம்ருத்பாண்டே பூரயேஜ்ஜலம் !!*

இவ்வாறு நைவேத்ய விதி சொல்கிறது. (அடுத்து) குடிநீர் லக்ஷணத்தை சொல்கிறேன். நிவேதனத்திற்காக சுத்தமான மண்பாண்டத்தில் அம்ருதமான ஜலத்தை நிறப்பவும்.

वस्त्र पूतं सुशीतं च सर्वद्रव्यसमायुतम् ।
नैवेद्यान्ते तु सेनान्ये पानीयं दापयेद्धृदा ॥ ३७ ॥

*வஸ்த்ர பூதம் சுசீதம் ச ஸர்வத்ரவ்ய ஸமாயுதம் !*
*நைவேத்யாந்தேது ஸேனான்யே பானீயம் தாபயேத்ருதா !!*

குளிர்ந்த அனைத்து வாசனை திரவியங்களால் சேர்த்து வஸ்த்ர சுத்தி செய்து அந்த பானீயத்தை (குடி நீரை) நிவேதனத்தின் முடிவில் சேனானியின் பொருட்டு ஹ்ருதய மந்திரத்தால் அளிக்க வேண்டும்.

निवेदितानि सर्वाणि सुमित्राय प्रदापयेत् ।
अक्षद्वयप्रमाणान्नं बलिदानं प्रकीर्तितम् ॥ ३८ ॥

*நிவேதிதானி ஸர்வாணி சுமித்ராய ப்ரதாபயேத் !*
*அக்ஷத்வய ப்ரமாணாந்நம் பலிதானம் ப்ரகீர்த்திதம் !!*

(ஸ்கந்தனுக்கு) நிவேதனம் செய்யப்பட்ட அனைத்தையும் சுமித்ரர் என்ற சண்டிகேஸ்வரருக்கு அளிக்கவும் கர்ஷம் (அக்ஷம் + கர்ஷம் 16 உளுந்து எடை) - 32 உளுந்து அளவு வரை பலி அன்னம் அளவு கூறப்படுகிறது

द्वारस्य दक्षिणेपार्श्वे सुदेहाय प्रदापयेत् ।
द्वारस्य वामपार्श्वे तु सुमुखाय प्रदापयेत् ॥ ३९ ॥

*த்வாரஸ்ய தக்ஷிணேபார்ச்வே சுதேஹாய ப்ரதாபயேத் !*
*த்வாரஸ்ய வாம பார்ச்வே து சுமுகாய ப்ரதாபயேத் !!*

வாயிலின் தென் (வலது) பகுதியில் சுதேகனுக்கும் வாயிலின் இடது வடபகுதியில் சுமுகனுக்கும் பலிகொடுக்கவும்

गजेन्द्राय ददेदग्रे महाशास्त्रेऽग्निगोचरे ।
याम्ये पितामहायैव मातृभ्यां निर्ऋते ददेत् ॥ ४० ॥

*கஜேந்த்ராய ததேதக்ரே மஹாசாஸ்த்ரேக்னி கோசரே ।*
*யாம்யே பிதாமஹாயை (வ) மாத்ருப்யாம் நிர்ருதேத தேத் ॥*

கிழக்கில் முன் புறத்தில் கஜேந்திரனுக்கும் தென் கிழக்கில் மஹாசாஸ்தாவிற்கும் தெற்கில் பிதாமஹருக்கும் (ப்ரும்மா) மாதர்களுக்கு தென் மேற்கிலும்,

पश्चिमे स्यादगस्त्याय ज्येष्ठायै वायुगोचरे ।
सौम्येच नारदायैव भास्करायैशगोचरे ॥ ४१ ॥

*பச்சிமேஸ்யா தகஸ்த்யாய ஜ்யேஷ்டாயை வாயுகோசரே ।*
*ஸௌம்யேச நாரதாயைவ பாஸ்கராயை ச கோசரே ॥*

மேற்கில் அகஸ்தியருக்கும் வாயுதிக்கில் ஜ்யேஷ்டா தேவிக்கும் வடக்கில் நாரதருக்கும் (ஈசானதிக்கில்) வடகிழக்கில் சூரியனுக்கும் பலிகொடுத்து.

ततः पुरःस्थिते पीठे बलिं दध्याद् विशेषतः ।
यक्षराक्षसपैशाचाः भूतगन्धर्वकिन्नराः ॥ ४२ ॥

*தத : புரஸ்திதே பீடே பலிம் தத்யாத் விசேஷத : ।*
*யக்ஷ ராக்ஷஸ பைசாசா : பூத கந்தர் வகின்னரா : ॥*

பின்பு முன்புறமுள்ள (பலி) பீடத்தில் பலி கொடுக்கவும் யக்ஷர் ராக்ஷஸர் பைசாசர் பூதர் கந்தர்வர், கின்னரர்,

पितृदानवनागाश्च तेन प्रीतिं प्रयान्तु ते ।
ब्रह्मादीशानपर्यन्तं तत्तन्नाम्ना बलिं क्षिपेत् ॥ ४३

*பித்ருதானவ நாகாச்ச தேன ப்ரீதிம் ப்ரயாந்துதே ।*
*ப்ரமாதீசான பர்யந்தம் தத்தன் நாம்னா பலிம் க்ஷிபேத் ॥*

பித்ருக்கள், தானவர் (அஸுரர்கள்) நாகர்கள், ஆகியோர் அந்தபலியினால் மகிழ்ச்சி அடையட்டும் மேலும் ப்ரம்மாதிசை முதல் ஈசான திசை முடிய உள்ளவர்களுக்கும் அவரவர்கள் பெயரால் பலி கொடுக்க வேண்டும்.

पुनराचमनं कृत्वा मुखवासं गुहप्रियम् ।
लवङ्गचूर्णकर्पूरलघुखण्डस्य चूर्णकम् ॥ ४४ ॥

*புனராசமனம் க்ருத்வா முகவாஸம் குஹப்ரியம் ।*
*லவங்கசூர்ண கர்பூர லகுகண்டஸ்ய சூர்ணகம் ॥*

பின்பு ஆசமனம் செய்து குகனுக்கு பிரியமான முகவாஸம் தாம்பூலம் கொடுக்கவும் கிராம்பு பொடி, லவங்கப்பொடி, பச்சகற்பூறம், சுண்ணாம்புத்தூள், செரிமானம் செய்யும் சூர்ணம்,

फलत्रयाणां चूर्णं च संग्राह्य सुविचक्षणः ।
भोजनानन्तरे दद्यात् मुखवासं हृदाणुना ॥ ४५ ॥

*பலத்ரயாணாம் சூர்ணம் ச ஸங்க்ராஹ்ய ஸுவிசக்ஷண : ।*
*போஜனானந்தரே தத்யாத் முகவாஸம் ஹ்ருதாணுனா ॥*

மாசிக்காய், தானிக்காய், ஜாதிக்காய் (கடுக்காய்) ஏலக்காய், பாக்குகளின் பொடியையும் இவைகளை நன்கு சேர்த்து புசித்த பிறகு ஹிருதய மந்திரத்தால் முகவாஸமாக கொடுக்க வேண்டும்.

ताम्बूलं दापयेत् तस्मै क्रमुकं प्रस्थपूरितम् ।
पत्रं चतुर्गुणं दद्यात् तज्जिह्वाघ्राणवर्जितम् ।
कर्पूरादिसमायुक्तं दापयेत्तु विशेषतः ॥ ४६ ॥

*தாம்பூலம் தாபயேத் தஸ்மை க்ரமுகம் ப்ரஸ்த பூரிதம் !*
*பத்ரம் சதுர் குணம் தத்யாத் தஜ்ஜிஹ்வாக்ராண வர்ஜிதம் !!*
*கர்பூராதி ஸமாயுக்தம் தாபயேத்து விசேஷத : !!!*

கீழ்வரும் படி பின்பு ஓர் படி அளவு உள்ள பாக்கும் அதைப்போல் நான்கு (குணம்) மடங்கு வெற்றிலையும், காம்பு நுனி நீங்கியகதாகவும் பச்சை கற்பூரம் முதலிய (கத்த காம்பு, கிராம்பு, வால் மிளகு ஜாதிபத்திரி ஏலக்காய் கஸ்தூரி, கோரோசனை, ஜாதிக்காய் குங்குமப்பூ. பச்சு கற்பூரம் சுண்ணாம்பு ஆகியன) வை சேர்த்த தாமபூலம் விசேஷமாக (சிறப்பாக கொடுக்கவும்.

॥ इति श्रीकुमारतन्त्रे नैवेद्यविधिर्नाम षष्ठः पटलः॥

இதி ஸ்ரீ குமார தந்த்ரே நைவேத்ய விதிர் நாமஷஷ்ட படல :

இவ்வாறு ஸ்ரீ குமாரதந்திரத்தில் நைவேத்ய விதி படலம் என்ற 6 - வது படலம்

# ॥ सप्तमः पटलः ॥

## !! ஏழாவது படலம் !!

## ॥ अग्निकार्यविधिः ॥

## அக்னி கார்ய விதி

**அக்னி கார்ய முறை :**

अग्निकार्यविधिं वक्ष्ये श्रृणु कौशिक सुव्रत ।
कुण्डे वा स्थण्डिले वापि होमं कुर्याद्विचक्षणः ॥ १ ॥

*அக்னி கார்ய விதிம் வக்ஷ்யே ச்ருணு கௌசிக ஸுவ்ரத !*
*குண்டே வா ஸ்தண்டிலே வாபி ஹோமம் குர்யாத் சக்ஷணம் !!*

முயற்சியுடைய ஹே கௌசிகரே ! அக்னி கார்ய விதியை (வேள்வி செயல் முறையை) சொல்கிறேன் கேளும் !, நன்கு கற்று திறமையுள்ள (ஆசார்யர்) குண்டத்திலோ ஸ்தண்டிலத்திலோ சுத்த பூமி ஹோமம் செய்யவேண்டும்.

गोमयालिप्य वस्त्राद्यैरलंकृत्य मनोहरैः ।
होमद्रव्याणि पात्राणि पादयाविविधानि च ॥ २ ॥

*கோமயாலிப்ய வஸ்த்ராத்யை ரலங்க்ருத்ய மனோஹரை: !*
*ஹோமத்ரவ்யாணி பாத்ராணி ஸம்பாத்ய விவிதானி ச !!*

(அந்த குண்டத்தை) பசும் சானியால் மெழுகி வஸ்திரம் (புஷ்பம்கோலம்) சந்தனம்) முதலியவைகளால் அழகு செய்து பலவிதமான, ஹோமத்திற்கு தேவையான பொருள்களையும், பாத்திரங்களையும் சேகரித்து வைத்துக் கொண்டு

लब्धानुज्ञो विशेत् कुण्डं पश्चिमेवाथ दक्षिणे ।
पुण्याहवाचनं कुर्यात् मूर्तिपैः सह देशिकः ॥ ३ ॥

*லப்தானுக்ஞோ விசேத் குண்டம் பஸ் சிமே வாத தக்ஷிணே !*
*புண்யாஹ வாசனம் குர்யாத் மூர்த்திபைஸ்ஸஹ தேசிக:!!*

(அனுக்ஞை) அனுமதி பெற்றவராக குண்டத்தை மேற்கிலே தெற்கிலோ, (கிழக்கு வடக்கு முகமாக) அடைந்து மூர்த்திபர் (துணை குருக்கள்) களோடு கூடி புண்யாஹவாசனம் செய்யவும்.

निरीक्षणं प्रोक्षणं च ताडनं चास्त्रमन्त्रतः ।
वर्मणाभ्युक्ष्य चास्त्रेण खननं चावकीरणम् ॥ ४ ॥

*நிரீக்ஷணம் ப்ரோக்ஷணம் ச தாடனம் சாஸ்த்ர மந்த்ரத : !*
*வர்மணாப்யுக்ஷ்ய சாஸ்த்ரேண கநநம் சாவகீரணம் !!*

(பிறகு) நிரீக்ஷணம் (மூலமந்திரத்துடன் பார்த்தல்) ப்ரோக்ஷணம், (நீர்தெளித்தல்) தாடனம் (தட்டுதல்) இவைகளை அஸ்த்ர மந்திரத்தாலும் கவச மந்திரத்தால் அப்யுக்ஷணமும் (நீர் விடுதல்) அஸ்திர மந்திரத்தினால் கனனமும் (குழிபறித்தல்) அவகீரணமும் (மூடுதல்)

हृदापूर्य समाकृष्य वर्मणा सेचयेद् गुरुः ।
अस्त्रेण कुट्टनं वर्म मार्जनालेपने तथा ॥ ५ ॥

*ஹ்ருதாபூர்ய சமாக்ருஷ்ய வர்மணா சேதயேத் குரு: !*
*அஸ்த்ரேண குட்டனம் சர்ம மார்ஜனாலேபனே ததா !!*

ஹ்ருதய மந்திரத்தால் பூரணமும் (நிறப்புதல்) கவசமந்திரத்தால் லேகனமும் (கொட்டுதல்) அஸ்த்ர மந்திரத்தால் குட்டனமும் (தட்டுதல்), கவச மந்திரத்தால் மார்ஜனம் (பெருக்குதல்) மற்றும் ஆலே பனம், (மெழுகுதல்) ஆகியவை செய்து.

मध्यादिपश्चिमान्तेषु शान्त्यातीतादयः कलाः ।
विन्यस्य वर्मणा कुण्डे सूत्रत्रयेण वेष्ट्य च ॥ ६ ॥

*மத்யாதி பச்சிமாந்தேஷு சாந்த்யதீ தாதய: கலா: !*
*வின்யஸ்ய வர்மணா குண்டே ஸூத்ர த்ரயேண வேஷ்ட்ய ச !!*

நடுப்பகுதி முதல் மேற்கு பகுதி முடிய திக்குகளில் (நடு, கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு) சாந்த்யதீத கலை, வித்யா, பிரதிஷ்டா, நிவிருத்திகலை பூஜித்து முதலிய 5 கலைகளை சேர்க்கவேண்டும். கவசமந்திரத்தால் குண்டத்தில் மூவிழை நூலால் குண்டத்தின் மேகலையில் சுற்றி சுற்றவும்.

कलामयाय कुण्डाय नम इत्यर्चयेद्बुधः ।
रेखात्रयमुदीच्यन्तं प्राच्यन्तं त्वेकरेखया ॥ ७ ॥

*கலாமயாய குண்டாய நம இத்யர்ச்சயேத் புத : !*
*ரேகாத்ரய முதீச்யந்தம் ப்ராச்யந்தம் த்வேகரேகயா !!*

"ஓம் கலாமயாய குண்டாய நம:" என்று அர்ச்சனை செய்யவும் பின் (உள்ளே) தெற்கு முதல் வடக்கில் முடியுமாறு மூன்று கோடுகள், கிழக்கில் முடியுமாறு மூன்று கோடுகளும் தனிக் கோடுகளாக் எழுதவும்

अस्त्रेणैव समुल्लिख्य तेन वज्रीकृतं नयेत् ।
पूर्वोदगग्रदर्भाभ्यां हृदा कृत्वा चतुष्पदम् ॥ ८ ॥

*அஸ்த்ரேணைவ சமுல்லிக்ய தேன வஜ்ரீக்ருதம் நயேத் !*
*பூர்வோதகக்ர தர்பாப்யாம் ஹ்ருதா க்ருத்வா சதுஷ்பதம் !!*

இந்த உல்லேகனத்தை அஸ்திரமந்த்ரத் தால் செய்து (கோடிட்டு) அதே அஸ்த்ர மந்திரத்தால் (மூன்று தர்பைகளை சேர்த்து இரு புறமும் சூலம் போன்று செய்து) வஜ்ரீகரணம் செய்யவும். கிழக்கு வடக்கு நுனி நோக்கியவாறு போன்று இரண்டு தர்பங்களால் (நான்குபதம்) சதுஷ்பதம் ஹ்ருதயமந்திரத்தால் செய்யவும்

इत्यष्टादशसंस्कारं कृत्वा कुण्डाक्षिपाटनम् ।
कवचेन चतुर्दर्भान् तत्कुण्डे विन्यसेद्गुरुः ॥ ९ ॥

*இத்யஷ்டாதச ஸம்ஸ்காரம் க்ருத்வா குண்டாக்ஷி பாடனம் !*
*கவசேன சதுர்தர்பான் தத்குண்டே வின்யஸேத்குரு: !!*

குருவானவர் இவ்வாறு 18 ஸம்ஸ்காரங்களை செய்து, பின் குண்டத்தில் அக்ஷிபாடம் செய்வதன் பொருட்டு கவச மந்திரத்தால் நான்கு தர்பங்களை குண்டத்தில் வைக்கவும்.

कुण्डमध्ये हृदा विद्वान् विष्टरं विन्यसेद्बुधः ।
नाभिमध्ये तु वागीशीं नीलोत्पलदळप्रभाम् ॥ १० ॥

*குண்டமத்யே ஹ்ருதா வித்வான் விஷ்டரம் வின்யஸேத் புத : !*
*நாபிமத்யேது வாகீசீம் நீலோத்பல தளப்ரபாம் !!*

கற்றறிந்த குருவானவர் குண்டத்தின் நடுவில் ஹ்ருதய மந்திரத்தினால் விஷ்டரம் ஒன்று வைத்து. தொப்புள் பகுதியில் கரு நெய்தல் இதழ் போன்று பிரகாசிக்கும், வாகீஸ்வரியை, நீலோத்பல புஷ்பகாந்தியாயும்

ऋतुस्नातां सकूर्चस्थानं ध्यायेत् तन्मूलमन्त्रतः ।
वागीश्वरौ समभ्यर्च्य कुण्डस्याग्रेऽग्निपात्रकम् ॥ ११ ॥

*ருதுஸ்நாதாம் ஸகூர்ச்சஸ்தாம் த்யாயேத் தன்மூல மந்த்ரத : !*
*வாகீஸ்வரௌ ஸமப்யர்ச்ய குண்டஸ்யாக்ரே க்னிபாத்ரகம் !!*

ருதுஸ்னானம் செய்தவளாகவும் நினைத்து அந்த கூர்ச்சத்தில் மேல் இருப்பவளாக ஆவாஹனம் (தியானித்து) மூலமந்திரத்தால் செய்து. வாகீஸ்வரருடன் கூடிய வாகீஸ்வரியை அர்ச்சனை செய்து குண்டத்தின் முன்பு அருகில் நெருப்பு (அக்னி) பாத்திரத்தை,

निधाय चास्त्रमन्त्रेण क्रव्यादांशं परित्यजेत् ।
भौतिकं बैन्दवं जाठराग्निमेकाकृतिं नयेत् ॥ १२ ॥

*நிதாய சாஸ்த்ரமந்த்ரேண க்ரவ்யாதாம்சம் பரித்யஜேத் !*
*பௌதிகம் பைந்தவம் ஜாட ராக்னிமேகாக்ருதிம் நயேத் !!*

வைத்து அஸ்திர மந்திரத்தால் க்ரவ்யாதாம் சத்தை (மாமிச முன்னும் தன்மையை)சமாக வெளியே எறிந்து, தனது பூத உடலில் உள்ள அக்னியையும், பிந்து அக்னியையும், ஜடராக்னியையும் ஒன்று படுத்தி பாத்திரத்தில் உள்ள அக்னியில் சேர்க்கவும்.

त्रिवारं भ्राम्य तत्कुण्डं त्वग्निपात्रंच बुद्धिमान् ।
वागीशी गर्भनाट्यायां तु वागीशेन निषिञ्चितम् ॥ १३ ॥

*த்ரிவாரம் ப்ராம்ய தத்குண்டம் த்வக்னிபாத்ரம்ச புத்திமாந் !*
*வாகீசீ கர்ப நாட்யாயாம்து வாகீசேன நிஷிஞ்சிதம் !!*

அறிவுள்ள ஆசார்யா அந்த அக்னிபாத்திரத்தை குண்டத்தின் மேல்மூன்று முறை சுற்றிய பின், வாகீஸ்வரியின் கர்பநாடியில் வாகீஸ்வரரால் (நிரப்பட்டப்பட்டதாக பாவித்து) வைக்கவும்.

हृदा बध्वा त्रुटीकृत्य तयोराचमनं ददेत् ।
वर्मणेन्धनमाच्छाद्य प्रज्वाल्यास्त्रेण पूजयेत् ॥ १४ ॥

*ஹ்ருதா பத்வா த்ருடீக்ருத்ய தயோராசமனம் ததேத் !*
*வர்மனேந்தனமாச்சாத்ய ப்ரஜ்வால்யாஸ்த்ரேண பூஜயேத் !!*

உடனே சமித்துகளை ஒடித்து ஹ்ருதய மந்திரத்தால் வைத்து அந்த வாகீஸ்வரீ வாகீஸ்வர் களுக்கு இருபங்கு ஆசமனம் கொடுக்கவும் கவச மந்திரத்தால் விறகு வைத்து, அஸ்த்திர மந்திரத்தால் நன்கு (ஜ்வாலையுள்ளதாக செய்து) எரிய விட்டு பூஜிக்கவும்.

दर्भकङ्कणमस्त्रेण दक्षिणे मेखलोपरि ।
तस्य वामकरं ध्यात्वा रक्षार्थं च निधाय वै ॥ १५ ॥

*தர்பகங்கண மஸ்த்ரேண தக்ஷிணே மேகலோபரி !*
*தஸ்ய (தஸ்யாம்) வாமகரம் த்யாத்வா ரக்ஷார்த்தம் ச நிதாய வை !!*

அஸ்திரமந்திரத்தால் தர்பையினாலான கங்கணம் செய்து தெற்கு மேகலையின் மேல் காத்தலின் பொருட்டு தேவியின் வலது கையாக பாவித்து வைக்க வேண்டும்.

सद्योजातेन संपूज्य गर्भाधानं हृदा चरेत् ।
तिलाहुतित्रयेणैव पश्चात् पुंसवनक्रियाम् ॥ १६ ॥

*ஸத்யோஜாதேன ஸம்பூஜ்ய கர்பா தானம் ஹ்ருதா சரேத்!*
*திலாஹுதித்ரயேணைவ பச்சாத் பும்ஸவனக்கிரியாம்!!*

கர்பாதானத்தை (முன்னிட்டு) ஸத்யோஜாத மந்திரத்தால் அர்ச்சித்து, ஹ்ருதய மந்திரத்தால் மூன்று ஆகுதி எள்ளால் கொடுத்து பினி பும்சவனம் என்ற செய்கையை

वामदेवेन शिरसा समभ्यर्च्य हुनेत्तिलान् ।
सीमन्तं बहूरूपेण शिखया चैव कारयेत् ॥ १७ ॥

*வாமதேவேன சிரஸா ஸமப்யர்ச்ய ஹுனேத் திலாந் !*
*ஸீமந்தம் பஹுரூபேன சிகயா சைவ காரயேத் !!*

வாமதேவ மந்திரத்தினால் அர்சித்தும், சிரஸ் மந்திரத்தால் எள் ஆகுதி கொடுத்தும், சீமந்தோன்னயனத்தை அகோரமந்திரத்தால் அர்ச்சித்தும் சிகாமந்திரத்தால் ஹோமம் எள்ளால் செய்தும்

जातकर्मशिरोमन्त्रैः कवचेन च कारयेत् ।
अस्त्रेण प्रोक्ष्य तत्कुण्डं दर्भकङ्कणकं त्यजेत् ॥ १८

*ஜாதகா்ம சிரோமந்த்ரை : கவசேன ச காரயேத் !*
*அஸ்த்ரேண ப்ரோக்ஷ்ய தத்குண்டம் தா்பகங்கண கம்த்யஜேத் !!*

சிரோமந்திரத்தினால் ஜாத கா்மா விற்காக தத்புருஷ மந்திரார்சனையும் கவச மந்திரத்தால்தில ஆகுதியும், செய்து பின்பு குண்டத்தில் அஸ்திர மந்திரத்தால் நீர் தெளித்து (ப்ரோக்ஷித்து) தா்பகங்கணத்தை அவிழ்த்து விஸா்ஜனம் செய்யவும்.

दभान् पूर्वोदगग्रांश्च तन्मध्ये मेखलासु च ।
विष्वरान् तत्र परिधीन् विन्यसेदनुपूर्वशः ॥ १९ ॥

*தா்பான் பூா்வோத கக்ராம்ச்ச தன்மத்யே மே கலாஸு ச !*
*விஷ்சரான் தத்ர பரிதீன் வின்யஸேதனு பூா்வத : !!*

குண்டத்தின் நடு(வில்) மத்ய மேகலைகளில் கிழக்கு வடக்கு முகமாக நுனிகளாக தர்பைகளை வைத்து அதை அனுசரித்து விஷ்டரங்களையும் பரிதிகளையும் வைக்கவேண்டும் (ஸ்தாபித்து)

मेखलोर्ध्वे चतुर्दिक्षु चतुर्वेदान् प्रपूजयेत् ।
इन्द्रादिलोकपालांश्च विष्टरे स्वस्वदिक्षु च ॥ २० ॥

*மேகலோா்த்வே சதுா்திக்ஷு சதுா்வேதான் ப்ரபூஜயேத் !*
*இந்த்ராதி லோகபாலம்ச்ச விஷ்டரே ஸ்வஸ்வதிக்ஷு ச !!*

அந்த மேகலையின் மேல் பகுதியில் நான்கு பக்கங்களிலும் நான்கு வேதங்களையும் (பரிதிகளில் ரிக்வேதங்களையும்) விஷ்டரங்களில் அந்த அந்த திக்குகளில் இந்திரன், முதலிய லோக பாலா்களை, அந்தந்த திசையில் பூஜை செய்யவும்

स्रुक्स्रुवौ च घृतस्थालीं प्रणीतां प्रोक्षणीं तथा ।
समित्कूर्चं चरुं दर्वीं दर्भांश्चैव कमण्डलुम् ॥ २१ ॥

*ஸ்ருக் ஸ்ருவெள க்ருதஸ்தாலீம் ப்ரணீதாம் ப்ரோக்ஷணீம் ததா !*
*ஸமித்கூா்ச சரும் தா்வீம் தா்பாம்ச்சைவ கமண்டுலும் !!*

ஸ்ருக், ஸ்ருவம், நெய் பாத்திரம், ப்ரணீதா (வருண) பாத்ரம் ப்ரோக்ஷணீ பாத்திரம், சமித்து, கூா்ச்சம் (பிரம்மா) சரு, (ஹவிஸ்), கரண்டி, தா்பை, கமண்டலம் ஆகிய,

द्रव्यपात्राणि सर्वाणि वामे कुशोपरि न्यसेद् ।
अधोमुखानि पात्राणि द्वन्द्वरूपाणि साधयेत् ॥ २२ ॥

*த்ரவ்ய பாத்ராணி ஸா்வாணி வாமே குசோபரி ந்ய ஸேத் !*
*அதோமுகானி பாத்ராணி த்வந்த்வ ரூபாணி ஸாதயேத் !!*

திரவ்யபொருள் பாத்திரங்கள், அனைத்தும் இடது பாகத்தில் (வடக்கில்) தா்பையின் மேல் வைக்கவும். அனைத்து பாத்திரங்களையும் கவிழ்த்த வைகளாகவும் இரண்டிரண்டாகவும் சேகரிக்கவும் ஸ்ருக்ஸ்ருவம் ஆஜ்யபாத்ரம், ப்ரணீதாபாத்ரம், ப்ரோக்ஷணீய பாத்ரம், ஸமித், கூா்ச்சம், சரு, தா்வி, தா்பை, கமண்டலு இவ்வாறு வைக்கவும்.

प्रोक्षणीपात्रमादाय जलेनैव प्रपूरयेत् ।
वितस्तिमात्रदर्भाग्रं मध्यग्रन्थिपवित्रकम् ॥ २३ ॥

*ப்ரோக்ஷணீ பாத்ர மாதாய ஜலேனைவ ப்ரபூரயேத் !*
*விதஸ்தி மாத்ர தா்பாக்ரம் மத்யக்ரந்திபவித்ரகம் !!*

ப்ரோக்ஷனீ பாத்திரத்தை எடுத்து அதில் நீர் நிரப்பவும் ஓர் ஒட்டை (9 அங்குலம்) அளவு உள்ள நுனி தா்பையால் நடுவில் முடிச்சு உள்ள பவித்திரம் செய்து

சிவஸூக்தம், பவமான ஸூக்தம், 2 சாந்தி மந்திரங்கள் (சாந்தி பஞ்சகம், தசசுத்தி) இவைகளை தெற்கிலும் த்ரயம்பகம், விஷ்ணுஸூக்தம், வருணஸூக்தம், இவைகளை மேற்கிலும்

उत्तरे तु हिरण्यञ्च बृहद्रथन्तर मन्त्रतः ।
षडक्षरेण मन्त्रेण कोणेषु च जपेत् बुधः ॥ ४३ ॥

*உத்தரம் துஹிரண்யஞ்ச ப்ருத்ஸாம மதிமந்த்ரத:!*
*ஷடக்ஷரேண மந்த்ரேண*
*கோணேஷு சஜபேத்புத:!!*

வடக்கில் ஹிரண்யம் ப்ருஹத்ஸாம மந்திரங்களை ஜபிக்கவும். ஷடக்ஷர மந்திரத்தினால் 4 கோணங்களில் ஜபிக்கவும்

आचार्यो मूर्तिपैः सार्धं ततो होमं समाचरेत् ।
समिधाज्यचरून् लाजं सर्षपं च यवं तिलम् ॥ ४४ ॥

*ஆசார்யோ மூர்த்திபைஸ்ஸார்த்தம் ததா*
*ஹோமம்ஸமாசரேத்!!*
*ஸமிதாஜ்யசரும்லாஜம் ஸர்ஷடஞ்சயவந்திலம்!*

ஆசார்யன் மூர்த்திபர்களுடன் ஹோமம் செய்யவும். சமித்து, நெய், சரு, பொறி, கடுகு, யவை, எள்

होमद्रव्याणि सप्तैतान्यथावज्जुहुयात्क्रमात् ।
पालाशखादिराश्वत्थबिल्वान् पूर्वाविदिक्षु च ॥ ४५ ॥

*ஹோமத்ரவ்யாணி ஸப்தைதா ந்யதாவஜ்ஜுஹுயாத்*
*க்ரமாத்!!*
*பலாச, காதிராஸ்வத்த பில்வக்த*
*பில்.வர்பூர்வாதிக்ஷுச!*

ஆகிய 7 திரவியங்களை முறைப்படி ஹோமம் செய்யவும். புரசு, கருங்காலி, அரசு, பில்வம், இவைகளை கிழக்கு முதலான திசைகளில்

शमीखादिरमायूरा वटाश्चेति विदिक्षु च ।
प्रधानस्य पलाशः स्यात् समिधः परिकीर्तिताः ॥ ४६ ।

*ஸமீகாதிர மாயூர வடாஸ்சேதிவிதிக்ஷுச!*
*ப்ரதாநஸ்ய பலாஸம்ஸ்யாத் ஸமித.பரிகீர்த்திதா:!!*

வன்னி, கருங்காலி, மயிற்கொன்னை, ஆல் ஆகிய சமித்துகளை தென்கிழக்கு முதலான திசைகளிலும் பிரதானத்திற்கு புரசு சமித்தையும் ஹோமம் செய்யவும்.

स्कन्दस्य मूलमन्त्रेण ततः षण्मूर्तिमन्त्रतः ।
होमद्रव्याणि जुहुयात् प्रत्येकं तु षडाहुतिः ॥ ४७ ॥

*ஸ்கந்தஸ்ய மூலமந்த்ரேண தத:ஷண்மூர்த்தி*
*மந்த்ரத:!*
*ஹோமத்ரவ்யாணி ஜுஹுயாத்*
*ப்ரத்யேகந்துஷடாஹுதி:!!*

ஸ்கந்தருடைய மூலமந்திரத்தினாலும், ஷண்மூர்த்தி மந்திரத்தினாலும், ஒவ்வொன்றை 6 ஆகுதியாக ஹோமத்ரவியங்களை ஹோமம் செய்யவும்.

सद्यादिना शिरोऽन्तेन मन्त्रेण जुहुयात्ततः ।
शतमर्धं तदर्धं वा प्रत्येकं जुहुयात्क्रमात् ॥ ४८ ॥

*ஸத்யாதிநாசிரோந்தேந மந்த்ரேண ஜுஹுயாத்தத:!*
*சதமர்த்தம் ததர்த்தம்வா*
*ப்ரத்யேகஞ்ஜுஹுயாத்க்ரமாத்!!*

ஸத்யோஜாத, சிரோமந்திராதிகளால், ஹோமம் செய்யவும். 100, 50, 25 ஆகுதி ஒவ்வோரு மந்திரத்தினால் ஹோமம் செய்யவும்.

पूर्णाहुतिं च शिरसा स्विष्टमग्नेति होमयेत् ।
जयादिरभ्याधानञ्च राष्ट्रभृच्च हुनेत्क्रमात् ॥ ४९ ॥

*பூர்ணாஹுதிஞ்சசிரஸா ஸ்விஷ்டமக்னேதி*
*ஹோமயேத்!*
*ஜயாதிரப்யாதாநஞ்ச ராஷ்ட்ரப்ருச்ச*
*ஹுநேத்க்ரமாத்!!*

"சிரோமந்திரத்தினால் பூர்ணாகுதியும் ஸ்விஷ்ட மக்னே" என்று ஹோமம் செய்யவும். ஜயாதி ஹோமமும், ராஷ்ட்ரப்ருத் ஹோமமும்

नेत्रोन्मीलादिकं सर्वं नवबेरस्य कारयेत् ।
तत्प्रतिष्ठा विधानेन शेषं कर्म समाचरेत् ॥ ५० ॥

*நேத்ரோன்மீலாதிகம் ஸர்வம் நவபேரஸ்யகாரயேத் /*
*தத் ப்ரதிஷ்டாவிதானேந சேஷம்கர்ம ஸமாசரேத் //*

நயனோன்மீலனம் எல்லாம் புதிய பிம்பத்திற்கு செய்ய வேண்டும். அந்த புதிய பிம்ப பிரதிஷ்டையை முறைப்படி செய்யவும்.

पुनरावर्तने विद्वान् मूलबेरात् प्रगृह्य च ।
बालबेरं समावाह्य पुनर्मूले प्रवेशयेत् ॥ ५१ ॥

*புனராவர்த்தனே வித்வான் மூலபேரம் ப்ரக்ருஹ்யச /*
*பாலபேரம் ஸமாவாஹ்ய புனர்மூலே ப்ரவேசயேத் //*

புனராவர்தன பிரதிஷ்டையோவெனில் மூலபிம்பத்தி லிருந்து கலாகர்ஷணம் செய்து பாலாலயபிம்பத்தில் சேர்த்து பிறகு மூலாலய பிம்பத்தில் சேர்க்க வேண்டியது.

अनावर्ते तु यद्ग्राम चण्डालादिप्रदूषिते ।
मृण्मयानि च पात्राणि सर्वाणि परिवर्जयेत् ॥ ५२ ॥

*அநாவர்த்தேதுயத்க்ராம சண்டாலாதி ப்ரதூஷிதே /*
*ம்ருண்மயாநிச பாத்ராணி ஸர்வாணி பரிவர்ஜயேத் //*

அனாவர்த்த பிரதிஷ்டை ஆலயத்தில் சண்டாளர் முதலானவர்களால் அசுத்தம் செய்யப்பட்டால் மண்கலயம் முதலிய மண்பாத்ரங்களை தள்ளுபடி செய்யவும்.

कांस्यापात्राणि सर्वाणि शुद्धिं कृत्वा तु भस्मभिः ।
यथायोग्यं याकार्य वस्त्रोपकरणानि च ॥ ५३ ॥

*காம்ஸ்ய பாத்ராணி ஸர்வாணி சுத்திம் க்ருத்வாது*
*பஸ்மபி: /*
*யதாயோக்யம் யதாகார்யம் வஸ்த்ரோப கரணாநிச //*

வெண்கல பாத்ரம் முதலிய பாத்ரங்களை விபூதியால் சுத்தி செய்து உபயோகிக்கவும். வஸ்திரங்கள், உபகரணங்கள் இவை உபயோகப்படுத்த ஏற்றவாறு சுத்தி செய்து கொள்ளவும்.

स्कन्दस्यायतनं चैव गोमयेन विलेपयेत् ।
पुण्याहं वाचयित्वाथ शुद्धाद्भिरभिषेचयेत् ॥ ५४ ॥

*ஸ்கந்தஸ்யாயதனம் சைவ கோமயேந*
*விலேபயேத் //*
*புண்யாஹம் வாசயித்வாத சுத்தாத்பிர பிஷேசயேத் /*

முருகன் ஆலயத்தை பசுஞ்சாணத்தால் மெழுகவும். புண்யாஹவாசனம் செய்து சுத்தமான தீர்த்தத்தால் அபிஷேகம் செய்யவும்.

पञ्चगव्यैश्च संस्नाप्य घर्षयेद्बिल्वपत्रकैः ।
दर्भमूले तु वल्मीकक्षेत्रमृद्ग्राह्य लेपयेत् ॥ ५५ ॥

*பஞ்சகவ்யைச்ச ஸம்ஸ்நாப்ய கர்ஷயேத் பில்வ*
*பத்ரகை: /*
*தர்ப்பமூலேது வல்மீக க்ஷேத்ரம்ருத் க்ராஹ்ய*
*லேபயேத் //*

பஞ்சகவ்யத்தினால் அபிஷேகித்து பில்ப பாத்திரத்தினால் பிம்பத்தை தேய்க்கவும். தர்பையடி மண், புற்றடி மண், புண்ய க்ஷேத்ர மண் இவைகளை எடுத்து பூசவும்.

कौतुकं बन्धयित्वा तु हेम सूत्रेण मन्त्रवित् ।
अर्कपङ्कज बिल्वैश्च मायूराऽशोकपाटलैः ॥ ५६ ॥

*கௌதுகம் பந்தயித்வா து ஹேம ஸூத்ரேண*
*மந்த்ரவித் /*
*ஆர்க்கபங்கஜ பில்வைச்ச*
*மாயூராஸோகபாட்டலை: //*

गन्धोदैः स्वर्णतोयैश्च बिल्वोदैः स्नापयेत् गुहम् ।
नन्द्यावर्तैर्मल्लिकाभिर्मधूकाशोकपाटलैः ॥ ५७ ॥

*கந்தோதை ஸ்வர்ண தோயைச்ச பில்வோதை ஸ்நாபயேத் குஹம்!*
*நந்யா வர்த்தைர் மல்லிகாபிர் மதூகாசோக பாடலை:!!*

தங்கக் கம்பியால் ரக்ஷாபந்தனம் செய்யவும். எருக்கு, தாமரை, பில்வம், மயிற்கொன்னை, அசோக, பாதிரி முதலிய புஷ்போதகங்களாலும்,

पुन्नागैः कर्णिकारैश्च कुमुदोत्पलपुष्पकैः ।
बृहतीद्रोणपुष्पैश्च व्याघातैर्जातिचम्पकैः ॥ ५८ ॥

*புந்நாகை: கர்ணிகாரைச்ச குமுதோத்பல புஷ்பகை:!*
*ப்ருஹதீ த்ரோண புஷ்பைச்ச வ்யாகாதைர்ஜாதி சம்பகை:!!*

சந்தனம், பில்வோதகம், ஸ்வர்ணோதகம் இவைகளால் ஸ்கந்தரை அபிஷேகிக்கவும். நந்தியாவட்டை, மல்லிகை, இலுப்பை, அசோக, பாதிரி

बेरं संपूज्य विधिवत् छादयेद्वा निरन्तरम् ।
आच्छाद्य नववस्त्रैश्च प्रतिबेरं विशेषतः ॥ ५९ ॥

*பேரம் ஸம் பூஜ்ய விதிவத் சாதயே த்வாநிரந்தரம்!*
*ஆச்சாத்ய நவவஸ்த்ரைச்ச ப்ரதிபேரம் விசேஷத:!!*

புன்னை, கோங்கு, ஆம்பல், நீலோத்பலம், கொன்னை (ப்ரஹதி), அரளி, தும்பைபூ, (வ்யாகாத), ஜாதிப்பூ, சம்பகம் புஷ்பம் இவைகளால்

लोहजेः शयनं कार्यमथवाच्छदनं मतम् ।
मण्डपद्वारपूजा होमकर्माणि च पूर्ववत् ॥ ६० ॥

*லோஹஜைச்சயநங்கார்யம் அதவாச்சாதநம் மதம்!*
*மண்டபாத்வார பூஜாச ஹோம கா்மச பூர்வவத்!!*

பிம்பத்தை பூஜித்து, ஒவ்வொரு பிம்பத்தையும் புதிய வஸ்திரங்களால் இடைவெளியின்றி போர்த்தி

प्रभाते देशिकः स्नात्वा मूर्तिपैः सह मन्त्रवित् ।
कुम्भञ्च कर्धनीद्वे च वाहयित्वा समूर्तिपैः ॥ ६१ ॥

*ப்ரபாதே தேசிகஸ்நாத்வா மூர்த்திபைஸ்ஸஹ மந்த்ர வித்!!*
*கும்பஞ்ச வர்த்தநீத்வேச வாஹயித்வாத மூர்த்திபை:!*

உலோக பிம்பமாயிருந்து சயநாதிவாஸம் செய்யவும். அவ்வாறு இல்லையெனில் வஸ்திரத்தினால் போர்த்தி, மண்டபபூஜை, த்வார பூஜை, அக்னி கார்யம் வரை முன்பு போல் செய்யவும்.

हर्म्यं प्रदक्षिणं कृत्वा गुहाग्रे स्थण्डिलं न्यसेत् ।
पुत्रभ्रातृकलत्रैश्च यजमानो व्रजेदनु ॥ ६२ ॥

*ஹர்ம்யம் ப்ரதிக்ஷிணம் க்ருத்வா குஹாக்ரே ஸ்தண்டிலே ந்யஸேத்!*
*புத்ரப்ராத்ரு களத்ரைச்ச யஜமானோதி பக்திமாந்!!*

அதிகாலை மந்திரமறிந்த ஆசார்யன், மூர்த்திபர்களுடன் ஸ்நானம் செய்து பூஜைகளை முடித்து மூர்த்திபர்களுடன் கும்பத்தை 2 வர்த்தனிகளையும் எடுத்து

शुक्लवासा गुरुः प्रीतो हेमपञ्चाङ्गभूषणैः ।
बिम्बशुद्धिकृतस्तोयं स्कन्दबेरं विशेषतः ॥ ६३ ॥

*சுக்லவாஸா குரு ப்ரீதோ ஹைம பஞ்சாங்க பூஷண:!*
*பிம்ம சுத்திம் க்ருதோதோயை ஸ்கந்தபேரம் விசேஷத:!!*

ஆலயம் வலம் வந்து முருகனுக்கு முன்னதாக ஸ்தண்டிலம் அமைக்கவும். டையன் ஸஹோதர், மனைவிகளுடன் மிகவும் பக்திமானான ஆசார்யன்

विन्यसेदक्षरन्यासं ब्रह्माङ्गन्यासमुत्तमम् ।
कुम्भान्मन्त्रं समादाय वेरस्य हृदि विन्यसेत् ॥ ६४ ॥

*விந்யஸேதக்ஷரந்யாஸம் ப்ரம்மாங்கந்யாஸ முத்தமம்!*
*கும்பாந் மந்த்ரம் ஸமாதாய பேரஸ்ய ஹ்ருதி விந்யஸேத்!!*

வெண்மையான வஸ்திரம் ஸ்வர்ணத்தால் என பஞ்சாங்களை அணிந்து மகிழ்ச்சியாய் விசேஷமாக ஸ்கந்த பிம்பத்திற்கு பிம்பசுத்தி செய்ய வேண்டும்.

शक्त्योर्बीजं समादाय शक्त्योरुपरि विन्यसेत् ।
कुम्भोदकैश्च संस्नाप्य देवदेवीर्यथाक्रमम् ॥ ६५ ॥

*சக்த்யோர்பீஜம் ஸமாதாய சக்த்யோருபரி விந்யஸேத்!*
*கும்போதகைச்ச ஸம்ஸ்நாப்ய தேவதேவீர் யதாக்ரமம்!!*

ப்ரும்மாங்க நியாஸமும், அக்ஷரந்யாஸமும் செய்து கும்பத்திலிருந்து மந்திரங்களை எடுத்து பிம்ப ஹ்ருதயத்தில் சேர்க்கவும்.

जयन्ताद्यष्टविद्येशान् क्रमात्पीठे तु विन्यसेत् ।
तत्कुम्भस्योदकैः स्कन्दं स्नापयेत्तु दशाक्षरैः ॥ ६६ ॥

*ஜயந்தாத்யஷ்ட வித்யேசாந் க்ரமாத் பீடே து விந்யஸேத்!*
*தத் கும்பஸ்தோதைக ஸ்கந்தம் ஸ்நாபயேத்து தசைக்ஷரை:!!*

சக்தி பீஜந்தை எடுத்து 2 தேவியரின் மேல் சேர்க்கவும். கும்பதீர்த்தங்களால், தேவன், தேவியரை முறைப்படி அபிஷேகம் செய்யவும்.

परिवारघटाद्भिस्तु स्वस्वस्थाने क्रमाद्बुधः ।
बीजानि विधिवन्न्यस्त्वा गन्धपुष्पादिभिर्यजेत् ॥ ६७ ॥

*பரிவார கடாத்பிஸ்து ஸ்வஸ்வஸ்தாநே க்ரமாத் புத:!*
*பீஜாநி விதிவந்யஸ்த்வா கந்தபுஷ்பாதிபிர் யஜேத்!!*

ஜயந்தர், முதலான அஷ்ட வித்யேசர்களை முறைப்படி பீடத்தில் சேர்க்கவும். ஸ்கந்த கும்ப தீர்த்தங்களால் தசாக்ஷர மந்திரங்களால் ஸ்கந்தரை அபிஷேகம் செய்யவும்.

रक्तपुष्पेण मतिमान् ईशानेनैव पूजयेत् ।
स्नपनं कारयेदन्ते यथावित्तानुसारतः ॥ ६८ ॥

*ரக்த புஷ்பேண மதிமாந் ஈசாநேநைவ பூஜயேத்!*
*ஸ்நபநங்காரயேதந்தே யதாவிபவவிஸ்தரம்!!*

பரிவார கலசங்களால் அந்தந்த ஸ்தானங்களில் முறைப்படி அபிஷேகம் செய்யவும். பீஜமந்திரங்களை முறைப்படி நியாஸம் செய்து சந்தன புஷ்பங்களால் பூஜை செய்யவும்.

प्रभूतहविषं दद्यात् ब्राह्मणान् भोजयत्ततः ।
उत्सवं कारयेदन्ते यथा वित्तानुसारतः ॥ ३९ ॥

*ப்ரபூதஹவிஷம் தத்யாத் ப்ராம்மணான் போஜயேத்தத:!*
*உத்ஸவம் காரயேதந்தே யதாவித்தாநு ஸாரத:!!*

அறிவாளி ஈசான மந்திரம் கூறி சிகப்பு புஷ்பங்களால் பூஜிக்கவும். வசதிக்கு ஏற்றவாறு முடிவில் ஸ்நபனாபிஷேகம் செய்யவும்.

आचार्यं पूजयेत्कर्ता वस्त्रहेमाङ्गुलीयकैः ।
अधमं दशनिष्कन्तु मध्यमं द्विगुणं स्मृतम् ॥ ७० ॥

*ஆசார்யம் பூஜயேத் கர்த்தா வஸ்த்ர ஹேமாங்குலீயகை:!*
*அதமம் தசநிஷ்கந்து மத்யமம் த்விகுணம் ஸ்ம்ருதம்!!*

அதிகமான நிவேதனம் செய்து, அந்தணர்களுக்கு உணவளிக்கவும். வசதிக்கு ஏற்றவாறு திருவிழா நடத்தவும்.

उत्तमं त्रिगुणं प्रोक्तंमाचार्यस्य तु दक्षिणा ।
मूर्तिपानां दशांशैश्च दीनानाथांश्च पूजयेत् ॥ ७१ ॥

*உத்தமம் த்ரிகுணம் ப்ரோக்தம் ஆசார்யஸ்து தக்ஷிணா!*
*மூர்த்திபாநாம் தசாம்சைச்ச தீநாநாதாம்ச்ச பூஜயேத்!!*

வஸ்த்திரம், ஸ்வர்ணம் மோதிரங்களால் ஆசார்யனை பூஜிக்கவும். தக்ஷிணைக்கு 10 நிஷ்க ஸ்வர்ணம் கடைநிலை, 20 நிஷ்க ஸ்வர்ணம் மத்தியமம் என்றும்

एवं यः कुरुते मर्त्यः स पुण्यां गतिमाप्नुयात् ।
पुत्रार्थी लभते पुत्रान् धनार्थी च धनं लभेत् ॥
जयार्थी जयमाप्नोति मोक्षार्थी मोक्षमाप्नुयात् ॥ ७२ ॥

*ஏவம் யஃ குருதே மர்த்யஸ் ஸபுண்யாங்கதி மாப்நுயாத்!*
*புத்ரார்த்தீ லபதே புத்ராந் தநார்த்தீச தநம் லபேத்!!*
*ஜயார்த்தீ ஜயமாப்நோதி மோக்ஷார்த்தீ மோக்ஷமாப்நுயாத்!!!*

3 மடங்கான 30 நிஷ்க ஸ்வர்ணம் உத்தமமான ஆசார்ய தக்ஷிணை கூறப்பட்டுள்ளது. ஆசார்ய தக்ஷிணையில் 10 ல் ஓர் மூர்த்தங்களில் தக்ஷிணை. ஏழை அநாதைகளை திருப்தி படுத்தவும்.

இவ்வாறு ஸம்ப்ரோக்ஷண முறையை யார் செய்கிறார்களோ அவர்கள் நல்ல கதியை அடைகிறார்கள். குழந்தை வேண்டுபவர் குழந்தைகளை அடைவார். (தனம் வேண்டுபவர்) செல்வத்தை வேண்டுபவர் செல்வத்தை அடைவார். வெற்றியை வேண்டுவோர் வெற்றியையும், மோக்ஷத்தை விரும்புபவன் மோக்ஷத்தையும் அடைவான்.

इति श्रीकुमारतन्त्रे संप्रोक्षणविधिर्नाम
त्रयोविंशः पटलः

இதி ஸ்ரீ குமாரதந்த்ரே கௌசிக ப்ரச்னே ஸம்ப்ரோக்ஷணவிதி: த்ரயோவிம்சதி படல:

இவ்வாறு ஸ்ரீ குமார தந்திரத்தில் கௌசிக ப்ரச்னத்தில் ஸம்ப்ரோக்ஷண முறையாகிற 23 - வது படலமாகும்.

# ॥ चतुर्विंशः पटलः ॥

## 24 வது படலம்

### प्रतिमालक्षणविधिः

### ப்ரதிமா லக்ஷண விதி படல:

### ப்ரதிமா லக்ஷண விதி செய்யும் முறை

प्रतिमालक्षणं वक्ष्ये श्रृणुष्व कुशिकात्मज ।
चलं चलाचलं बेरमचल त्रिविधं भवेत् ॥ १ ॥

*ப்ரதிமா லக்ஷணம் வக்ஷ்யே ச்ருணுஷ்வ குசிகாத்மஜ!*
*சலம் சலாசலம் பேரம் அசலம் த்ரிவிதிம் பவேத்!!*

சலம், சலாசலம், அசலம் என மூவகைப்படும். சலமென்பது நானே உற்பத்தியாகி ஸ்திரமான சலாசலமென்பது சூலஸ்தாபனம் செய்வது ரஜ்ஜுக்களால் நரம்புகளை உண்டுபண்ணி கல்கத்தால் அவயவங்களை பூர்த்தி செய்வது சலாசலம் அசலம் எடுத்து வைத்து வேறு இடத்தில் மாற்றக்கூடியது சலாசலமாகும்.

शार्करं मृण्मयं बेरमचलं बेर मुच्यते ।
शैलजं दारुजं बेरं चलाचलमिति स्मृतम् ॥ २ ॥

*சார்கரம் ம்ருண்மயம் பேரம் அசலம் பேர முச்யதே!*
*சைலஜம் தாருஜம் பேரம் சலாசலமிதிஸ் ம்ருதம்!!*

சுக்கான் மண், பச்சை, சுக்கான், பட்டைசாறு, தாதுக்களால் செய்து கல்கமாக நயம் செய்வது மண்மயமான சிலைகள், அசலம் என்று பெயர் சிலாமயமானது, மரத்தினால் உண்டானது சிலைகள் சலாசலம் என்று பெயர்.

चलमेवं समाख्यातं रक्तं लोहञ्च दारुजम् ।
शिलं वाऽप्यथ दारुं वा कर्म योग्यस्य लक्षणम् ॥ ३ ॥

*சலமேவம் ஸமாக்யாதம் ரக்தலோஹஞ்ச தாருஜம்!*
*சிலாம் வாப்யததாரும் வா கர்ம யோக்யஸ்ய லக்ஷணம்!!*

இவ்வாறு கூறப்பட்டது, ரத்னங்கள் தங்கம், வெள்ளி முதலான லோகங்களினாலும் மரத்தினால் உண்டானதோ, சிலையானது மரத்தினாலோ பூஜைக்கு தகுந்ததாக ஆகும்.

सुनिमित्तेन संग्राह्य सर्वमङ्गलसंयुतम् ।
स्थपतिर्वास्तुशास्त्रज्ञः स्कन्दबेरं प्रकल्पयेत् ॥ ४ ॥

*ஸுநிமித்தேந ஸங்க்ராஹ்ய ஸர்வமங்கள ஸம்யுதம்!*
*ஸ்தபதிர் வா ஸுசாஸ்த்ரக்ஞ: ஸ்கந்தபேரம் ப்ரகல்பயேத்!!*

நல்ல ஸமயத்தில் (சகுணத்தோடு) க்ருஹித்து நல்ல மங்களத்தோடு கூடியதுமாகும். நல்ல அறிவுள்ள ஸ்தபதியானவன் முருகப்பெருமானின் சிலையை செய்ய வேண்டும்.

सर्वेषां मङ्गलार्थाय मानकल्पं वदाम्यहम् ।
गर्भे नवकृते भागे रुद्रमादित्रयं त्रयम् ॥ ५ ॥

*ஸர்வேஷாம் மங்களார்த்தாய மாநகல்பம் வதாம்யஹம்!*
*கர்பே நவ க்ருதே பாகே ருத்ராமாதி த்ரயம் த்ரயம்!!*

எல்லோருடைய க்ஷேமத்திற்காக ப்ரதிமையின் அளவு நான் கூறுகின்றேன். கர்பக்ருஹ அளவு ஒன்பது பாகமாக செய்து 11 பாகமாக்கி முதலாக மூன்று மூன்றாக செய்து

पुनर्विंशत्कृते भागे दशांशमधमं भवेत् ।
रुद्रांशं मध्यमं ज्ञेयमुत्तमं द्वादशांशकम् ॥ ६ ॥

*புநர் விம்சத் க்ருதே பாகே தசாம்சம் அதமம் பவேத்!*
*ருத்ராம்சம் மத்யமம் ஞேயம் உத்தமம் த்வாதசாம்சகம்!!*

20 பாகம் வரை செய்வது ஒரு பாகம் அதமமாகும். 11 அம்சம் மத்யமமாக அறிய வேண்டும். 12 பாகம் செய்வது உத்தமமாகும்.

वसुगर्ते पुनर्गर्भे पुनर्मध्यमकल्पिते ।
नवमानं भवेत्तत्र हस्तमानं ततोच्यते ॥ ७ ॥

*வஸுகர்தே புநர்கர்பே புநர் மத்யம கல்பிதே !*
*நவமாநம் பவேத்தத்ர ஹஸ்தமாந மதோச்யதே !!*

8 பங்கு, 12 பங்கு பாகமாக கல்பிக்கப்பட்டு இவ்வாறு 9 விதமாக அளவு கூறப்பட்டது. கருவறையில் மறுபடியும் ஹஸ்த அளவு பிறகு கூறுகிறேன்.

एकादिनवहस्तान्तं षट्षडङ्गुलवर्धनात् ।
त्रयस्त्रिंशन्मानमुदितं हस्तमानं महामुने ॥ ८ ॥

*ஏகாதி நவ ஹஸ்தாந்தம் ஷட்ஷடங்குல வர்த்தநாத் !*
*த்ரயஸ்த்ரிம்சந் மாநமுதிதம் ஹஸ்தமாநம்*
*மஹாமுநே !!*

ஒன்று முழம் முதல் 9 முழம் வரையில் ஆறு, ஆறு அங்குலம் கூட்டுவதினால் 33 விதமான ஹஸ்தமாக சொல்லப்பட்டது.

दैर्घ्ये नववरादूर्ध्वमेकविंशत्करान्तकम् ।
हस्तमानेन कर्तव्यं क्षुद्रहर्म्येण कारयेत् ॥ ९ ॥

*தைர்க்யே நவகராதூர்த்வம் ஏகவிம்சத் கராந்தகம் !*
*ஹஸ்த மாநேந கர்த்தவ்யம் க்ஷுத்ரஹர்ம்யேன*
*காரயேத் !!*

9 முழம் முதல் நீளத்திலிருந்து 21 முழம் வரை ஒரு முழத்தினால் செய்ய வேண்டும். குறைவாக அளவினால் செய்யக் கூடாது.

एकहस्तोच्छ्रयाद् दूनं मूलबेरं न कारयेत् ।
मूलबेरोदयं होवमुत्सवप्रतिमां शृणु ॥ १० ॥

*ஏக ஹஸ்தோச்ச்ரயாதூநம் மூலபேரம் நகாரயேத் !*
*மூலபேரோதயம் ஹ்யேவம் உத்ஸவ ப்ரதிமாம்*
*ச்ருணு !!*

மேற்சொன்ன பெரிய கற்சிலையை ஒரு முழத்திற்கு குறைவாக செய்யக் கூடாது. மூல பேரத்தினுடைய அளவு இவ்வாறு கூறப்பட்டுள்ளது. (கிஷ்கு ஹஸ்தம், ஒரு முழம் 24 தேவாங்குலம், 33 அங்குலம் - வழக்கத்தி லுள்ள ஆங்கில அளவு முறைப்படியாக) உத்ஸவ மூர்த்திக்கு உண்டான அளவை கூறுகின்றேன்.

मूलबेरसमोत्तुङ्गं तदर्धं वा तदर्धकम् ।
भूतांशं सप्तभागे तु भूतभागे युगांशकम् ॥ ११ ॥

*மூலபேர ஸமோத்துங்கம் ததர்த்தம் வா ததர்த்தகம் !*
*பூதாம்சம் ஸப்த பாகேது பூதபாகே யுகாம்சகம் !!*

மூலஸ்தானத்தின் உயரமாகவோ, இதன் பாதியாகவோ, கால்பாகமாகவோ, ஏழுபாகத்தில் 5 பாகமாகவோ, 5 பாகத்தில் 4 பாகமாகவோ

अन्यांशे द्वयभागञ्च षण्मानं मूलबेरतः ।
गर्भे नवकृते मानं नवधा गर्भमानतः ॥ १२ ॥

*அந்யாம்சே த்வயபாகஞ்ச ஷண்மாநம் மூலபேரத: !*
*கர்பே நவ க்ருதே மாநம் நவதா கர்பமாநத: !!*

3 பாகத்தை 2 பாகமாகவோ, ஆறுவிதமாக உத்ஸவ மூர்த்தி இருக்க வேண்டும். கர்பக்ருஹ 9 பாக அகலத்தை அதிஷ்டானத்திலிருந்து அஸ்த்தரம் வரை 9 பாகம் எடுத்து கொள்ள வேண்டும்.

मूलद्वारसमोत्तुङ्गं नवांशैकोनमेव च ।
अष्टभागैकहीनं वा त्रिमानं द्वारमानतः ॥ १३ ॥

*மூலத்வார ஸமோத்துங்கம் நவாம்சைகோநமேவ ச !*
*அஷ்டபாகைக ஹீநம் வா த்ரிமாநம் த்வாரமாநத: !!*

மூல வாசற்படியினுடைய உயரம் ஒன்பதில் 1 பங்கு குறைவாக 8 பங்காக இருக்க வேண்டும். 8-ல் 1 பங்கு குறைவாகவோ, 3 விதமான அளவு வாசற்படி அளவாகும்.

उत्तमं नवहस्तन्तु पञ्चहस्तन्तु मध्यमम् ।
अधमं त्रयहस्तन्तु गर्भमानमितीरितम् ॥ १४ ॥

*உத்தமம் நவ ஹஸ்தந்து பஞ்ச ஹஸ்தந்து மத்யமம்!*
*அதமம் த்ரய ஹஸ்தந்து கர்பமாந மிதீரிதம்!!*

9 முழம் உத்தமமாகவும், 5 முழம் மத்யமமாகவும், 3 முழம் அதமமாகவும், கருவறையின் விஸ்தாரமாகும். (நீளமாகும்)

सप्ताङ्गुलं समारभ्यद्विद्वयङ्गुलविवर्धनम् ।
पञ्चत्रिंशदङ्गुलान्तमङ्गुलत्रयमानकम् ॥ १५ ॥

*ஸப்தாங்குலம் ஸமாரப்ய த்வித்யங்குல விவர்த்தநம்!*
*பஞ்ச த்ரிம்சதங்குலாந்தம் அங்குல த்ரய மாநகம்!!*

7 அங்குலம் முதற்கொண்டு 2, 2 அங்குலம் கூட்டி 35 அங்குலம் வரை சுவரின் அளவாகவும், 3 விதமாக கூறப்பட்டுள்ளது.

आदिप्रासादविस्तारं तद्वाह्यं कल्पमानतः ।
तदर्धमुत्तमं ज्ञेयं तदर्धं मध्यमं स्मृतम् ॥ १६ ॥

*ஆதி ப்ராஸாத விஸ்தாரம் தத்பாஹ்யம் கல்பமாநத:!*
*ததர்த்தம் உத்தமம் ஜ்ஞேயம் ததர்த்தம் மத்யமம் ஸ்ம்ருதம்!!*

கர்பக்ருஹத்தின் புறவாயிலின் அகலம் வர்கத்தின் அதிஷ்டான களத்தி 17 அங்குலம் உத்தமமாகும். 8 ¾ அங்குலம் மத்யமமாகும்.

तस्यार्धमधमं विद्धि त्रिमानं बर्म्यमानतः ।
व्रातेरुत्तरसीमान्तं स्तम्भमानं तदुत्तमम् ॥ १७ ॥

*தஸ்யார்த்தம் அதமம் வித்தி த்ரிமாநம் ஹர்ம்ய மாநத:!*
*வ்ராதே ருத்தர ஸீமாந்தம் ஸ்தம்ப மாநம் ததுத்தமம்!!*

8 ¾ அங்குலத்தின் பாதி அதமமாக சுவற்றின் அளவு கூறவும். ஆலய அளவு 3 விதமாக கூறப்பட்டிருக்கிறது. அதிஷ்டான உபானத்திலிருந்து உத்தரம் வரை ஸ்தம்பத்தின் அளவாகும். அது உத்தமமாகும்.

मध्यमं तु नवांशोनं अष्टां शोनं तथा धमम् ।
मूलबेराधिकोत्तुङ्गं स्थापनादिषु योग्यकम् ॥ १८ ॥

*மத்யமம் து நவாம்சோநம் அஷ்டாம்சோநம் ததாதமம்!*
*மூலபேராதிகோத்துங்கம் ஸ்தாபநாதிஷு யோக்யகம்!!*

மேற்கூறிய அளவில் 9 பங்கில் 1 அளவு குறைவானது மத்யமமாகும். ஓர் முழம் குறைவானது அதமமாகும். மூலபேரத்தின் அதிக அளவாக தூண் அளவு ப்ரதிஷ்டை செய்பவைகளுக்கு உகந்ததாகும்.

परिवारदिके योग्यमाधिकोच्छ्रायमीरितम् ।
लब्धमानेन मतिमान् काम्यं संयोजयेत्ततः ॥ १९ ॥

*பரிவாராதிகே யோக்யம் அதிகோச்ராயமீரிதம்!*
*லப்த மாநேந மதிமாந் காம்யம் ஸம்யோஜயேத் தத:!!*

உத்ஸவ பேரங்களுக்கு பரிவாரங்களின் மேல் அளவாக அளவு கூறப்படுகிறது. அடைப்பட்ட அளவினால் புத்தியுடையவன் விருப்பம் போல் செய்ய வேண்டும்.

वेदाशीतिद्विषष्टी च चतुर्विंशाच्च षोडशी ।
भागं कृत्वैकभागं तु जात्यंशं ब्राह्मणादिषु ॥ २० ॥

*வேதாசீதி த்விஷஷ்டீ ச சதுர்விம்சாச்ச ஷோடசீ!*
*பாகம் க்ருத்வைக பாகந்து ஜாத்யம்சம் ப்ராம்மணாதிஷு!!*

84, 62, 24, 16 என்ற அளவை வைத்து 4 பாகம் ப்ராம்மணன் முதலியவைகளுக்கு ஜாத்யம்சம் என்ற ஓர் அங்குலம் கூட்டி செய்யவும்.

यजमानाङ्गुलैर्भक्त्वा शुभायदीनि लक्षयेत् ।
हीनं चेदङ्गुलेप्यत्र परिपूर्य समीक्षयेत् ॥ २१ ॥

*யஜமாநாம் குலைர் பக்த்வா சுபாயாதீநீ லக்ஷயேத் /*
*ஹீநம் சேத் அங்குலே புத்ர பரிபூர்ய ஸமீக்ஷயேத் //*

யஜமானனுடைய அங்குலங்களை அறிந்து ஆயாதி அளவுகளை செய்ய வேண்டும். அங்குலம் குறைவாக இருந்தால் பூர்ணமாக்கி செய்யவும். (ஷோடச - சுபம், 8 - சுபம், 10 - சுபம், என்று ஆயாதி கணக்கை செய்யவும்)

आयं वसुद्वादशभिर्व्यय चत्वारि पङ्क्तिभिः ।
संयोगरहिताष्टाभिर्नक्षत्रं वसुमक्षकैः ॥ २२ ॥

*ஆயம் வஸு த்வாதசபிர் வ்யயம் சத்வார பங்க்திபி: /*
*ஸம்யோக ரஹிதாஷ்டாபிர் நக்ஷத்ரம் வஸுமக்ஷகை: //*

8, 12 என்றிருந்தால் ஆயம் என்றும், 9, 10 என்றிருந்தால் வ்யயம் என்றும், யோகத்தில் 8 இல்லாமலும், நக்ஷத்திரத்தில் 8, 1 இல்லாமலும் கணக்கிடவும்.

द्वारञ्च नन्दमुनिभिरंशको वेदनन्दतः ।
हत्वा विभेद्य तच्छेषमायादिगणयेत्सुधीः ॥ २३ ॥

*த்வாரம் ச நந்த முநிபி: அம்சகோவேதநம் தத: /*
*ஹ்ருத்வா விபேத்ய தச்சேஷம் ஆயாதி கணயேத் சுதீ: //*

த்வாரம் - 9,நந்த - 9, முனி - 7, அம்சகம் - 9, வேத - 4, நந்த - 9, இவைகளை பெருக்கி வகுத்து கணக்கிட்டு செய்யவும். (இது ஷடாயாதி எனப்படும்)

आयाधिक्ये धनं प्रोक्तं व्ययाधिक्ये धनक्षयम् ।
नक्षत्रेषु शुभा प्रोक्ता विपत्प्रत्यरनैधना ॥ २४ ॥

*ஆயாதிக்யே தநம் ப்ரோக்தம் வ்யயாதிக்யே தநம் க்ஷயம் /*
*நக்ஷத்ரேஷு சுபா ப்ரோக்தா விபத் ப்ரத்யரநை தநா //*

ஆயாதி கணக்கில் ஆயாதி அதிகமானால் செல்வம் பெருகும் என்றும் வ்யய கணக்கு அதிகமானால் செல்வம் குறையும் என்றும் நக்ஷத்திர பொருத்தத்தில் விபத்து ப்ரத்யர நைய்தன, குற்றமின்றி கணக்கிடவும்.

ध्वजसिंह्यावृषो दन्ती शुभदा अष्टयोनिषु ।
वारं शुभार्कसौरारा: शुभयेगे शुभप्रदा: ॥ २५ ॥

*த்வஜ ஸிம்மா வ்ருக்ஷே தந்தி சுபதா அஷ்ட யோநிஷு /*
*வாரே சுபா அர்க்க ஸௌரா சுபயோகே சுப ப்ரதா: //*

த்வஜ யோநி, ஸிம்ஹ யோநி, வ்ருஷப யோநி, கஜ யோநி, இவைகள் சுப யோநிகளாகும். (ஸிம்ஹம், கரம், த்வஜம், ச்வாநம், கஜம், தூபம், கோ, வாயஸம் இவை அஷ்ட யோனிகளாகும்). (சுபமான கிழமைகள் நல்லவையாகும். ஞாயிறு, சனி கூடாது)

अंशके तस्करक्लीबा धनप्रेक्ष्यस्तथा शुभा: ।
एवं परीक्ष्य बहुधा कारयेल्लक्षणान्वितम् ॥ २६ ॥

*அம்சகே தஸ்கரக்லீபா தநப்ரேக்ஷ்ய ஸ்ததா சுபா: /*
*ஏவம் பரீக்ஷ்ய பஹுதா காரயேல்லக்ஷணாந் விதம் //*

அம்சத்தில் தஸ்கரன், கலீபன், தனம், ப்ரேக்ஷ்யன், அசுபன், இவ்வாறு பலவிதமாக பரீக்ஷித்து லக்ஷண முறைப்படி பிம்பம் அமைக்கவும். (தான்யம், நிர்பீதி, தஸ்கரன், நிதனம், புத்தி, நரபதி, சக்தி, க்லீபன், ப்ரேக்ஷ்யம், இவைகள் அம்சமாகும்.

स्वत: प्रधाने कर्तव्यं दश तान्मेचोत्तमेन तु ।
मध्यमं दशतालेन देव्यौ च परिकल्पयेत् ॥ २७ ॥

*ஸ்வத: ப்ரதாநே கர்த்தவ்யம் தசதாசோத்தமேநது /*
*மத்யமம் தசதாலேந தேவ்யௌசபரிகல்பயேத் //*

உத்தம தச தாளத்தினால் (124 அம்சத்தினால்) சுப்ரமண்யர் பிரதான மூர்த்தியை

அமைக்கவும். மத்யம தச தாளத்தினால் (116 அம்சத்தினால்) வள்ளீ தேவஸேனாவை அமைக்கவும்.

लोहजं चेन्मधूच्छिष्टं वह्नितायं च पात्रके ।
वस्त्रेण शोध्य मतिमान् मण्डपे स्थाण्डिलोपरि ॥ २८ ॥

*லோஹஜம் சேந் மதூச்சிஷ்டம் வந்திதாப்யம் ச பாத்ரகே!*
*வஸ்த்ரேண சோத்ய மதிமாந் மண்டலே ஸ்தண்டிலோபரி!!*

மெழுகினால் செய்து மண்ணினால் கடுக்கட்டு லோஹத்தை காய்ச்சி, உலோக பிம்பத்தை அமைக்கவும், துணியால் துடைத்து மண்டலத்தில் ஸ்தண்டிலத்தில் வைக்கவும்.

फलकोर्ध्वे सुलग्ने तु स्थपतिः स्थापकाज्ञया ।
मूर्धादिपादपर्यन्तं कल्पयेत्कल्पवित्तमः ॥ २९ ॥

*பலகோர்த்வேஸ லக்நேது ஸ்தபதி ஸ்தாபகாக்ஞயா!*
*மூலாதி பாத பர்யந்தம் கல்பயேத் கல்பவித்தம:!!*

பலகையின் நல்லாக்னத்தினால் ஆச்சார்ய உத்தரவினால் ஸ்தபதியானவர், சிரசு முதல் பாதம் வரை கல்பிக்க வேண்டும்.

षण्मानमत्र कथितमायमानमितीरितम् ।
प्रमाणं विपुलं प्रोक्तमुच्चमुन्मानमेव च ॥ ३० ॥

*ஷண்மாந மத்ர கதிதம் ஆயமாந மிதீரிதம்!*
*ப்ரமாண விபுலம் ப்ரோக்தம் உச்ச மச்மாந மேவச!!*

ஷண்மானமானது ஆயமானம் எனப்படும், ப்ராமணம் என்பது விபுலமென்று உந்மானம், உச்சமென்று

परिमाणं तु तत्राहं तीव्रं स्यात् पमानके ।
लम्बसूत्रं लम्बमानं षण्मानमिदमीरितम् ॥ ३१ ॥

*பரிமாணந்து தந்நாஹம் தீவ்ரம் ஸ்யாத் உபமாநகே!*
*லம்ப ஸூத்ரம் லம்பமாநம் ஷண்மாநமிதம் ஈரிதம்!!*

பரிமாணம் நாஹமென்று, உபமானம் தீவ்ரமென்றும் லம்பசூத்ரம், லம்பமானம் என்றும் 6 விதமாக அளவு கூறப்படுகிறது.

लब्धोत्सेधं प्रकुर्यात् चतुर्विंशच्छतं बुधः ।
तेष्वेकं तु समं मूले त्रितस्याष्टांशसंभवे ॥ ३२ ॥

*லம்போத்ஸேதம் ப்ரகுர்யாத்து சதுர்விம்சச்சதம் புத:!*
*தேஷ்வேகம் து ஸமம் மூலே த்ரிதஸ்யாஷ்டாம்ச ஸம் பவேத்!!*

பிம்ப உயர அளவை 124 பாகம் செய்யவும். அவைகளில் ஒன்றுக்கு சமமாக 3 பாகமாக 8 அம்சமாக கொண்டு

अङ्गुलं मात्रमित्युक्तं द्व्यङ्गुलं कोलकं स्मृतम् ।
त्र्यङ्गुलं तु कला ज्ञेया भागं स्याच्चतुरङ्गुलम् ॥ ३३ ॥

*அங்குலம் மாத்ர மித்யுக்தம் த்வியங்குலம் கோலகம் ஸ்ம்ருதம்!*
*த்ரயங்குலந்து கலா ஞேயா பாகம்ஸ்யாச் சதுரங்குலம்!!*

1 அங்குலம் மாத்ரமென்றும் 2 அங்குலம் கோலகம் என்றும், 3 அங்குலம் கலையென்றும் 4 அங்குலம் பாகமென்றும் பெயர்

तद्द्वयं वाचकं चैव मुखं तद्द्वादशाङ्गुलम् ।
मुखं तालद्विपञ्चैव तस्याः पर्यायवाचकाः ॥ ३४ ॥

*தத்த்வயம் வாசகம் சைவ முகம் தத்வாதசாங்குலம்!*
*முகம் தால த்விபஞ்சைவ தஸ்யா: பர்யாய வாசகா:!!*

பாகம் 2 கொண்டது வாசகம் என்றும் 12 அங்குலம் முகமென்று முகம், தாலம், த்விபஞ்சமென்பது பர்யாஸ வாசகமாகும்.

उष्णीषं त्रयवैकांशः केशास्तिस्त्रोऽशंकं तथा ।
भागमन्यवमक्ष्यन्तं समं नासापुटान्तकम् ॥ ३५ ॥

*உச்சிஷ்டஸ்த்ரயவை காம்ச கேசாஸ்திஸ்ரம் சகம்ததா!*
*பாகமக்ந்ய வமக்ஷ்யந்தம் ஸமநாஸா புடாந்தகம்!!*

உதட்டின் நடுபாகம் 3 ல் 1 அம்சம், கேசம், அஸ்தி இவை 1 அம்சம் ஆக 4-3, 2, 1 என்ற அளவாக ஸமமாக நாஸிகையின் வெளிப்புற அளவை செய்யவும்.

हन्वन्तं तत्समं ज्ञेयं तस्मा दूर्ध्वं शताङ्गुलम् ।
कलासप्तयवं कण्ठं मुखं रुद्रयवं च हृत् ॥ ३६ ॥

*ஹநவந்தம் தத்ஸமம் ஞேயம் தஸ்மாதூர்த்வம் சதாங்குலம்!*
*கலாஸப்தயவம் கண்ட முகருத்ரயவம்ச ஹ்ருத்!!*

இடுப்பு வரை ஸமமான அளவாகும். அது 100 அங்குல அளவாகும். 7 யவை அளவு கழுத்தும், முகம் 11 யவை அளவும் ஹ்ருதயம் 11 யவை அளவுமாகும்.

तत्समं नाभिपर्यन्तं नाभेर्मेढ्रान्तकं समम् ।
नक्षत्रांशमधश्चोरु युगांशं जानुदैर्घ्यकम् ॥ ३७ ॥

*தத்ஸமம் நாபி பர்யந்தம் நாபேர் மேட்ராந்தகம் ஸமம்!*
*நக்ஷத்ராம்சம் அதச்சோரு யுகாம்சம் ஜாநு தைர்க்யகம்!!*

அதே அளவு தொப்பூழ் வரையும் (நாபி முதல் இடுப்பு வரை அதே அளவாகும். 27 அம்சம் கீழ் தொடையும், 4 அம்சம் முழந்தாளின் (முட்டி) உயரமாகும்.

अधश्चोरुसमं जङ्घा जानु गुह्यपदोन्नतम् ।
उष्णीषात्पूर्वकेशान्तं नवांशं परिकीर्तितम् ॥ ३८ ॥

*அதச்சோரு ஸமம்ஜங்கா ஜாநுகுஹ்ய பதோந்நதம்!*
*உஷ்ணீஷாத் பூர்வகேசாந்தம் நவாம்சம் பரிகீர்த்திதம்!!*

கீழ் துடையின் அளவுக்கு ஸமமாக முழங்காலும், மூட்டுப் பிரதேச அளவு பாதத்தின் அளவாகும். உஷ்ணீஷ பாகம் முதல் பூர்வ கேசம் வரை 9 அம்சமாகும்.

उष्णीषाद् पृष्ठकेशान्तमारभ्याङ्गुलमुदाहृतम् ।
द्वयो: कर्णान्तरं पूर्वे एकविंशतिमात्रकम् ॥ ३९ ॥

*உஷ்ணீஷாத் ப்ரம்ம கேசாந்தம் ஆரப்யாங்குல முதாஹ்ருதம்!*
*த்வயோ: கர்ணாந்தரம் பூர்வே ஏகவிம்சதி மாத்ரகம்!!*

உஷ்ணீஷ பாகம் முதல் பிரம்ம கேசம் வரை அங்குல அளவாக இரண்டு காதின் முன் இடைவெளி 21 மாத்ரையாகும்.

द्व्यङ्गुलं कर्णविस्तारमायामं वसुमात्रकम् ।
भ्रूसूत्रसममेवोक्तं श्रोत्रांशं मुनिपुङ्गव ॥ ४० ॥

*த்வியங்குலம் கர்ண விஸ்தாரம் ஆயாமம் வாஸு மாத்ரகம்!*
*ப்ருஸூத்ர ஸம்மே வோக்தம் ச்ரோத்ராம்சம் முநி புங்கவ!!*

இரண்டு அங்குலம் காதின் விஸ்தாரமும், நீளம் 8 மாத்ரையளவுமாகும். புருவ ரேகை அளவின் சம அளவே காதின் மேற் சுற்றளவாகும்.

तत्पृष्टकर्णयोर्मध्ये त्रयोदशांशामीरितम् ।
पिपल्यन्तादध: कुर्यात्भागं [5]तालावलम्बनम् ॥ ४१ ॥

*தத் ப்ருஷ்ட கர்ணயோர் மத்யே த்ரயோதசாம்ச மீரிதம்!*
*பிப்பல்யந்ததாத குர்யாத் பாகந்தாளாவலம்பநம்!!*

இரண்டு காதுகளின் பின் இடைவெளி 13 அம்சமாகும். முகவாய்க்கட்டை கீழ்பாகம் 1 பாகம் நாலு பாகமாக தொங்கியதாக இருக்க வேண்டும்.

तालन्तं च स्वर्धमा॰ तत् घनं त्रियवं भवेत् ।
पिपलीचार्धमूलं च सुषिरं तस्य मानकम् ॥ ४२ ॥

*தாளாந்தஞ்ச ஸமாத்ரம் தத் கநம் த்ரியவம் பவேத்!*
*பிப்பலீ சாரத்த மூலஞ்ச ஸுஷிரம் தஸ்ய மாநகம்!!*

தொண்டை நாலு பாகத்திற்கு ஒரு மாத்ரையளவும், அதன் கனம் 3 யவை

அளவுமாகும். முகவாய்க்கட்டையின் கீழ்பாதி பாகத்தில் பள்ளமிருப்பதாக அமைக்கவும்.

नक्रकुण्डलसंयुक्तं शेषमात्राविलम्बनम् ।
शक्तिकाकारवत्कर्णनालाकृतिरुदाहृता ॥ ४३ ॥

*நக்ர குண்டல ஸம்யுக்தம் சேஷமாத்ரா விளம்பநம் !*
*சக்திகா காரவத் கர்ண நாளாக்ருதிருதா ஹ்ருதா !!*

மகர குண்டலத்துடன், கீழே தொங்குவதாகவும், காதோலையுடன் காதின் நுனி தொங்கியதாகவும் அமைக்கவும்.

द्वियवं कर्णपालिश्च तत्समं कर्णपट्टिका ।
मात्रार्धं कर्णपालीस्यादङ्गुला कर्णपालिका ॥ ४४ ॥

*த்வியவம் கர்ணபாலிச்ச தத்ஸமம் கர்ண பட்டிகா !*
*மாத்ரார்த்தம் கர்ண பாலீஸ்யாத் அங்குலாகர்ண பாலிகா !!*

2 யவை அளவு கர்ண பாலியும், அதற்கு சமமாக கர்ணபட்டிகையாகும். 1½ மாத்ரையாவது, 3 அங்குலமாவது கர்ணபாலிகை அளவாகும்.

लकरीव तयोर्मध्ये चच्वक्षी कर्णचूलिका ।
अपाङ्गात्कर्णमूलं तु सप्तमात्रं प्रचक्षते ॥ ४५ ॥

*லகாரீ வதயோர் மத்யே சஞ்சவக்ஷீ கர்ண சூளிகா !*
*அபாங்காத் கர்ண மூலந்து ஸப்த மாத்ரம் ப்ரசக்ஷதே !!*

லகாரம் போல் நடுப்பாகமும் காதின் மேலும் கேசபாக அலகுக் கண் போல் அமைக்கவும். தோள் பட்டையிலிரும் காதின் அடிபாகம் 7 மாத்ரையளவாகும்.

कोलकद्वयसाधिक्यान्नेत्रायाममुदाहृतम् ।
षड्यवं नेत्रविस्तारमायामं तु त्रिधा भवेत् ॥ ४६ ॥

*கோலக த்வய ஸாதிக்யாந் நேத்ராயாம முதாஹ்ருதம் !*
*ஷட்விதம் நேத்ர விஸ்தாரம் ஆயாமந்து த்ரிதா பவேத் !!*

2 அங்குல அளவு அதிகமாக கண்ணின் அளவு கூறப்பட்டுள்ளது. ஆறுவிதமான கண்ணின் அகல அளவமைப்பு கூறப்பட்டு, நீள, அளவு மூன்று விதமாக கூறப்பட்டுள்ளது.

कृष्णमण्डलमैशांशं मध्ये न्यसितमण्डलम् ।
कृष्णमण्डलमध्ये तु ज्यान्तिर्युक्तप्रमाणतः ॥ ४७ ॥

*க்ருஷ்ண மண்டல மைசாம்சம் மத்யே ந்யஸித மண்டலம் !*
*க்ருஷ்ண மண்டல மத்யேது ஜ்யோதிர் யுக்த ப்ரமாணத:!!*

கருவிழி ஒரம்சமும் அது நடுவில் வைக்கப்பட்டதாக இருக்கவும், கருவிழி மத்தியில் ஜ்யோதிர் மண்டலம் முறைப்படி அமைக்கவும்

करवीरोपमं रक्तं नयनस्य च मूलके ।
कनीनिका यवाद्दीर्घात् त्रिवर्णैर्लोचनं स्मृतम् ॥ ४८ ॥

*கர வீரோபமம் ரக்தம் நயநஸ்யச மூலகே !*
*கநீநி காயவாத்தீர்கா த்ரிவர்ணைர் லோசநம் ப்ரதம் !!*

அரளிப் பூ போன்று சிகப்பாக கண்ணின் அடிப்பாகம் இருக்க வேண்டும். (கழுத்து) 1 யவை அளவு நீண்டதாக மூவர்ணத்துடன் கண் இருக்க வேண்டும்.

ऊर्ध्वहर्म्यस्य मानं तु द्वियवार्धं यथाभवेत् ।
नवतो पक्ष्मरोमाणि कृष्णाञ्जननिभानि च ॥ ४९ ॥

*ஊர்த்வ ஹர்ம்யஸ்ய மாநந்து த்வியவார்த்தம் யதா பவேத் !*
*நவதோபக்ஷ்மரோமாணி க்ருஷ்ணாஞ்ஜந நிபாநிச !!*

பெரிய பிம்ப கழுத்திற்கு 2 ½ யவை அளவாவது, 90 இமை, புருவ ரோமங்கள் கருப்பாக இருக்க வேண்டும்.

भ्रूरेखायाश्चक्षुरेखा कोलकद्वयबाधिरम् ।
भ्रूरेखा मूलकेशान्तं तत्समं परिकीर्तितम् ॥ ५० ॥

*ப்ருரேகயாச்சக்ஷு ரேகா கோலக த்வய பாதிரம் !*
*ப்ருரேகா மூல கேசாந்தம் தத்ஸமம் பரிகீர்த்திதம் !!*

புருவ ரேகையும், கண்ரேகையும் 4 அங்குல அளவாக இருக்க வேண்டும். 2 புருவ ரேகையானது மூலகேசம் வரை 4 அங்குல அளவாக அமைக்கவும்.

भ्रूदीर्घसममात्रन्तु विस्तारं यवमेव च ।
आरोपचापाकृतिवत् मूलादपं क्रमात्कृशम् ॥ ५१ ॥

*ப்ரு தீர்க்க ஸம மாத்ரந்து விஸ்தாரம் யவமேவ ச !*
*ஆரோபசாபா க்ருதிவத் மூலாதக்ரம் க்ரமாத் க்ருசம் !!*

புருவத்தின் இடைவெளி ஓர்யவ மாத்ராங்குலம் இருக்க வேண்டும். எடுத்த வில்போல் புருவத்தின் அமைப்பு ஆரம்பத்திலிருந்து முறையே நுனிவரை மெலிந்ததாக இருக்க வேண்டும்.

द्व्यङ्गुलं त्रियवं प्रोक्तं द्वयोः कर्णान्तरं स्मृतम् ।
मूलनासार्धमात्रं स्यादग्रनासा शराङ्गुला ॥ ५२ ॥

*த்வியங்குலம் த்ரியவ ப்ரோக்தம் த்வயோ: கர்ணாந்தரம் ஸ்ம்ருதம் !*
*மூலநாஸார்த மாத்ரம் ஸ்யாத் அக்ரநாஸா சராங்குலம் !!*

2 அங்குலமோ, 3 யவை அங்குலமோ, கண்ணிற்கும் காதிற்கும் உள்ள இடைவெளியாகும். மூக்கின் ஆரம்பம் அரைமாத்ரையும், நுனிமூக்கு 5 அங்குலம் ஆகும்.

पुटमर्धाङ्गुलं तारं तत्तुङ्गं पञ्चभिर्यवैः ।
सुषिरं त्रियवं तिर्यक् बाह्ये चार्धयवं घनम् ॥ ५३ ॥

*புட மத்யங்குலம் தாரம் தத்துங்கம் பஞ்சபிர் யவை: !*
*ஸுஷிரம் த்ரியவந்திர்யக் பாஹ்யே சார்த்தயவம் கநம் !!*

மூக்கின் புடமானது ஓர் அங்குல நீளமும், மூக்கின் நீளம் 5 - யவை அளவுள்ளதாகும். மூக்கின் த்வாரம் குறுக்கே 3 யவையும், வெளியின் மூக்கின் கனம் 1½ யவை அளவுமாகும்.

पुटान्तं त्रियवं चैव गोजिमानं चतुर्यवम् ।
गोज्याश्च नासिकोत्सेधं कोलकं त्रियवाधिकम् ॥ ५४ ॥

*புடாந்த த்ரியவம் சைவ கோஜிமாநம் சதுர்யவம் !*
*கோஜ்யாச்சநாஸி கோத் ஸேதம் கோலகம் த்ரியவாதிகம் !!*

மூக்கின் புடம் 3 யவை சுற்றளவும், நடுப்பகுதி கோடு 4 யவையும் ஆகும், கோஜி பகுதியிலிருந்து மூக்கின் உயரம், 2 யவைக்கு மேல், 3 யவைக்கு மேல் இருக்க வேண்டும்.

द्व्यंशस्यैव तु विस्तारमङ्गुलं चेति कीर्तितम् ।
पुष्करन्तु यवोत्सेधं पुरस्तात् षड्यवं ततः ॥ ५५ ॥

*த்விம்சஸ்யைவது விஸ்தாரம் அங்குலம் சேதி கீர்த்திதம் !*
*புஷ்கரந்து யவோத்ஸேதம் புரஸ்தாத் ஷட்யவம் தத: !!*

கழுத்திலிருந்து இரண்டு தோள்பட்டையின் விஸ்தாரம் அங்குல அளவாகும். இரண்டு உதட்டின் நடுபாகமாக புஷ்கரமென்ற நடுபாக யவையளவு உயர்ந்ததாகவும், உதட்டின் நீளம் பாகம் 6 யவை அளவாகும்.

द्वियवं चार्धमेकं तु पुष्करन्तु विधीयते ।
तिलपुष्पाकृतिर्नासापुटनिष्पाववीजवत् ॥ ५६ ॥

*த்வியவம் சார்த்த மேகந்து புஷ்கரந்து விதீயதே !*
*தில புஷ்பா க்ருதிர் நாஸா புட நிஷ்பாவ பீஜவத் !!*

2 யவை, 1 ½ யவை அங்குலம் புஷ்கரம் எனப்படும். எள், புஷ்பம் போல் மூக்கும், மொச்சைக் கொட்டை போல் மூக்கின் வெளிப்புறமும்

पुटान्तादधरोष्ठान्तं कोलकं द्वियवाधिकम् ।
दन्तं दृश्यमदृश्यं हि द्वित्रयं परिकीर्तितम् ॥ ४७ ॥

*புடாந்தாதத ரோஷ்டாந்தம் கோலக த்வியவாதிகம் !*
*தந்த த்ருச்யம் த்ருச்யம் ஹி த்வித்ரயம் பரிகீர்த்திதம் !!*

மூக்கிலிருந்து கீழ் உதடு வரை 4 யவை அளவாகும். 2 யவை அங்குலத்திற்கு மேலாகும், பல், கண்ணுக்கு புலப்பட்டதாகவோ, புலப்படாததாகவோ இருப்பின் 2, 3 அங்குல இடைவெளி இருக்கும்.

द्वियवं तस्य विस्तारमुत्सेधं तत्समं भवेत् ।
ऊर्ध्वे षोडश मन्तव्या अधस्तात्तु तथैव च ॥ ५८ ॥

*த்வியவம் தஸ்ய விஸ்தாரம் உத்ஸேதம் தத்ஸமம் பவேத் !*
*ஊர்த்வே ஷோடசமந்த்வ்யா அதஸ்தாத்து ததைவ ச !!*

இரண்டு யவைஅதன் விஸ்தாரமாக, உயரத்திற்கு சமமானதாக 2 யவை அளவாகும், மேலே 16 பற்களும், கீழே 16 பற்களுமாகும்.

अधोदन्तस्य विस्तारं यवार्धं सममुच्छ्रयम् ।
जिह्वायामन्तु षण्मात्रं विस्तारं स्यात्तदर्धकम् ॥ ५९ ॥

*அதோதந்தஸ்ய விஸ்தாரம் யவார்த்தம் ஸமமுச்ச்ரயம் !*
*ஜிஹ்வாயாமந்து ஷண்மாத்ரம் விஸ்தாரஸ்ய ததர்த்தகம் !!*

கீழே உள்ள பற்களின் விஸ்தாரம், உயரம், அரை, அரை அளவாகும். நாக்கின் நீளம் 6 மாத்ரையளவும், அகலம் பாதியளவின் 3 மாத்ரை அளவுமாகும்.

अधरोष्ठस्य विस्तारमङ्गुलं स्याद्यवाधिकम् ।
मुनिरन्तञ्च विस्तारमायामः स्याद्द्विमात्रकम् ॥ ६० ॥

*அதரோஷ்டஸ்ய விஸ்தாரம் அங்குலஸ்ய யவாதிகம் !*
*முநிரந்தஞ்ச விஸ்தாரம் ஆயாமஸ்யா த்விமாத்ரகம் !!*

கீழுதட்டின் அகலம் 1 யவை அங்குலம் அதிகமானதாகும். உள் பகுதி அகல அளவு 7 மாத்ரையும், நீளம் 2 மாத்ரையுமாகும்.

भागं च त्रियवाधिक्यमास्यविस्तारमीरितम् ।
ग्रीवामूलस्य विस्तारं नवमात्रं च षडयवम् ॥ ६१ ॥

*பாகஞ்ச த்ரியவாதிக்யம் ஆஸ்ய விஸ்தார மீரிதம் !*
*க்ரீவா மூலஸ்ய விஸ்தாரம் நவமாத்ரஞ்ச ஷட்யவம் !!*

3 யவை அளவு அதிகமாக வாயின் அகலம் கூறப்பட்டுள்ளது. கழுத்தின் அடிப்பாக அகலம் 7 மாத்ரையளவும், 6 யவை அளவுமாகும்.

ग्रीवात्तु गलपर्यन्तं कलावत् द्वियवाधिकम् ।
तद्गला(द्ध)नुपर्यन्तं ह्यङ्गुलं चेति कीर्तितम् ॥ ६२ ॥

*க்ரீவாத்துகள பர்யந்தம் கலாச த்விய வாதிகம் !*
*தத்களாத்தநு பர்யந்தம் அங்குலஞ்சேதி கீர்த்திதம் !!*

கழுத்திலிருந்து பின் கழுத்து வரை 16ம், 2 யவை யளவும் அதிகமான அளவாகும். அக்கழுத்திலிருந்து சரீரம் வரை ஓர் அங்குல அளவாகும்.

ग्रीवं सुवृत्तमुदितं द्विरेखा परिवेष्टितम् ।
सूत्रान् क्रमेण चोद्भागं कोलकं चाङ्गुलं भवेत् ॥ ६३ ॥

*க்ரீவம் ஸுவ்ருத்த முதிதம் த்விரேகா பரிவேஷ்டிதம் !*
*ஸூத்ராந் க்ரமேண சோத்பாகம் கோலகம் அங்குலம் பவேத் !!*

கழுத்து நன்கு வட்டமாயும், 2 ரேகையிட்டதாகவும் இருக்க வேண்டும். சூத்ரத்தின் முறையான அளவு 2 அங்குல அளவாகும்.

अर्धाङ्गुलं क्रमात् क्षीणं बाहुपर्यन्तमेव च ।
वक्षःस्थलस्य विस्तारं दशभागं चतुर्यवम् ॥ ६४ ॥

*அர்த்தாங்குலம் க்ரமாத் க்ஷீணம் பாஹுபர்யந்த மேவ ச!*
*வக்ஷ ஸ்தலஸ்ய விஸ்தாரம் தசபாகம் சதுர்யவம் !!*

பாதி அங்குலம் உள்ளதாயும், சிறிது சிறிதாக குறைந்ததாகவும் கைவரை உள்ளதாகவும், மார்பினுடைய அளவு பத்து மடங்கு இருக்க வேண்டும்.

हिक्कासूत्रादधो बाहुः सप्तविंशतिमात्रकम् ।
कोलकं कूर्परायामं त्रिसप्तंशकोष्टकम् ॥ ६५ ॥

*ஹிக்கா ஸூத்ராததோ பாஹுஸ் ஸப்த விம்சதி மாத்ரகம்!*
*கோலகம் கூர்ப்பராயாமம் த்ரிஸப்தாம்ச ப்ரகோஷ்டகம்!!*

ஹிக்கா சூத்ர மென்ற தோள்பட்டை கோடுக்கு கீழ் கை பாகம் 27 மாத்ரை அளவாகும், புறங்கையின் நீளம், 2 மாத்ரை வடிவமாயும், முட்டுக் கையளவு 21 அம்சமும் ஆகும்.

तस्मान्मध्याङ्गुलस्याग्रं सार्धत्रयोदशाङ्गुलम् ।
सप्ताङ्गुलतलायामं शेषं मध्याङ्गुलायतम् ॥ ६६ ॥

*தஸ்மாந் மத்யாங்குலஸ்யாக்ரம் ஸார்த்த த்ரயோதசாங்குலம்!*
*ஸப்தாங்குல தலாயாமம் சேஷம் மத்யாங்குலாயதம்!!*

அதிலிருந்து நடுவிரலின் நீளம் 13 ½ அங்குல அளவாகும். 7 அங்குலம் உள்ள கையின் நீளமும், மீதமுள்ள 6 ½ யவை நடுவிரல் நீளமாகும்.

पाणेस्तलस्य विस्तारं षण्मात्रं च चतुर्यवम् ।
तत्तुल्योऽप्यष्ठभागैकं हीनमग्रस्य चाग्रतः ॥ ३७ ॥

*பாணேஸ்தலஸ்ய விஸ்தாரம் ஷண்மாத்ரஞ்ச சதுர்யவம்!*
*தத்துல்யோப்யஷ்ட பாகைகம் ஹீநமக்ரஸ்ய சாக்ரத.!!*

கை அளவின் அகலம் 7 மாத்ரையளவும், 4 யவை அளவுமாகும். அதற்குச் சமமாக 8-ல் 1 பாகம் குறைவாக ஒவ்வொன்றின் நுனி அளவாகும்.

सार्धकोलकमात्रेण तलमूले घनं भवेत् ।
षड्यवैकांशमुदितं तलस्याग्रघनं मुने ॥ ३८ ॥

*ஸார்த்த கோலக மாத்ரேண தலமூலேகநம் பவேத்!*
*ஷட்யவைகாம்ச முதிதம் தலஸ்யாக்ரம் கநம் முநே!!*

2 ½ மாத்ரையளவு கைத்தல அடிப் பகுதியின் கன அளவாகும். மயவாம்சத்தின் 1 பாகம் கைத்தல நுணியின் கன அளவாகும்.

पञ्चाशद्द्वियवोपेतं तर्जन्यानामिकाङ्गुलम् ।
द्वियवोपेतभागं स्यादङ्गुष्ठस्य तु दैर्घ्यकम् ॥ ६९ ॥

*பஞ்சாசத் த்வியவோ பேதம் தர்ஜந்யாநா மிகாங்குலம்!*
*த்வியவோ பேத பாகம் ஸ்யாத் அங்குஷ்டஸ்யது தைர்க்கியம்!!*

52 யவை அளவு ஆள்காட்டி, மோதிர விரலளவாகும். (பஞ்சாதச 17 யவை அளவு) மயவையளவு கட்டை விரலின் நீளமாகும்.

यवाधिकाष्टमो भागो कनिष्ठाङ्गुलदैर्घ्यकम् ।
रसदृक् गन्धदिक्पक्तियवतारं कनिष्ठका ॥ ७० ॥

*யவாதி காஷ்டமோ பாகோ கநிஷ்டாங்குல தைர்க்யகம்!*
*ரஸத்ருக்கந்த திக் பங்க்தி யவதாரம் வ்யதாரகம்!'*
*(மணி பந்தஸ்ய விஸ்தாரம்)*

8 யவை அளவு சுண்டு விரலின் நீளமாகும், 6, 2, 1, 8, 10 யவை அளவு மணிக்கட்டின் அகல நீளமாகும்.

अंगुष्ठादेस्तदग्रे स्याष्ठभागैकहीनकम् ।
अंगुल्यग्रं त्रिधा कृत्वा द्विभागं नवविस्तृतम् ॥ ७१ ॥

*அங்குஷ்டாதேஸ் ததக்ரே ஸ்யாத் அஷ்ட பாகைக ஹீநகம் !*
*அங்குல் யக்ரம் த்ரிதா க்ருத்வா த்விபாகம் நவவிஸ்த்ருதம் !!*

கட்டை விரலின் அடியிலிருந்து நுனிவரை 8ல் 1பாகம் குறைந்ததாக, விரல் நுனியை 3 பாகமாக பிரித்து, 2 பாகம் நகத்தின் அகலமாகும்.

तत्तारेण यवोपेतं नखायामं प्रकीर्तितम् ।
अंगुष्ठन्तु द्विपर्वं स्यादन्यांगुल्यस्त्रिपर्वयुक् ॥ ७२ ॥

*தத்தாரேண யவோபேதம் நகாயாமம் ப்ரகீர்த்திதம் !*
*அங்குஷ்டந்து த்விபர்வம் ஸ்யாத் அந்யாங்குல்யஸ்த்ரி பர்வயுக் !!*

அந்த அளவுடன் ஓர் யவை அளவு கூட்டினால் நகங்களின் நீளமாகும். கட்டை விரலுக்கு 2 பர்வாவும், மற்ற விரல்களுக்கு 3 பர்வமுமாகும்.

तस्याग्रं द्व्यङ्गुलं हित्वा द्विद्विरेखान्तरं नयेत् ।
मूलादूर्ध्वगरेखा तु मध्यमांगुलरेखयुक् ॥ ७३ ॥

*தஸ்யாக்ரே த்வியங்குலம் ஹித்வா த்வித்விரேகாந்தரம் நயேத் !*
*மூலாதூர்த்வ கரேகாது மத்யமாங்குல ரேகயுக் !!*

அதன் நுனியில் 2 அங்குலமாக கழித்து, இரண்டிரண்டு ரேகையைப் போடவும், விரலடியிலிருந்து மேல் ரேகை நடுவிரல் 2வது ரேகையுடன் சேர்ந்ததாக இருக்க வேண்டும்.

मूलयुग्मनिबद्धस्य भागमेकं प्रकीर्तितम् ।
प्रकोष्ठमध्यविस्तारं भागमेकं प्रकीर्तितम् ॥ ७४ ॥

*மூலயுக்ம நிபத்தஸ்ய பாகமேகம் ப்ரகீர்த்திதம் !*
*ப்ரகோஷ்ட மத்ய விஸ்தாரம் பாகமேகம் ப்ரகீர்த்திதம் !!*

கை மூலத்திலிருந்து மணி பந்தம் வரை ஓர் பாகமாகும், (4 மாத்ரையாகும்). மணிக்கட்டின் அடிப்பாக அகலம் 4 மாத்ரை அளவாகும்.

बाहुमध्यमविस्तारं द्वियावकमथोच्यते ।
बाहुमूलस्य निस्तारं नवमात्रार्धमिष्यते ॥ ७५ ॥

*பாஹுமத்யம விஸ்தாரம் த்வியாவக மதோச்யதே !*
*பாஹுமூலஸ்ய விஸ்தாரம் நவமாத்ரார்த்த மிஷ்யதே !!*

சரீரத்திற்கும், முழங்கைக்குமுள்ள இடைவெளி இரண்டு யவை அளவாகும். சரீரத்திற்கு கையடி பாகத்திற்குமுள்ள இடைவெளி 9 ½ மாத்ரையாகும்.

हिक्कासूत्रं तु कक्षान्तं नवमात्रार्धमुच्यते ।
कारयेत्तु द्विबाहुं च मूलतारं गुणांगुलम् ॥ ७६ ॥

*ஹிக்கா ஸூத்ரந்து கக்ஷாந்தம் நவமாத்ரார்த்த முச்யதே !*
*காரயேத்தத்வி பாஹுஞ்ச மூலதாரம் குணாங்குலம் !!*

கழுத்து பகுதி சூத்ரத்திலிருந்து கை இடுக்கு பகுதி 9 ½ மாத்ரையளவாகும், 2 கையினுடைய அடிப்பாக நீளம் 3 அங்குல அளவாகும்.

स्तनयोरन्तरं तद्वत्चुपुकं तु यवान्तरम् ।
द्वियवस्तस्य विस्तारं मण्डलं तु द्विमात्रकम् ॥ ७७ ॥

*ஸ்தநயோ ரந்தரம் தத்வத் சுபுகந்து யவாந்தரம் !*
*த்வியவஸ்தஸ்ய விஸ்தாரம் மண்டலந்து த்விமாத்ரகம் !!*

இரண்டு மார்பகத்தின் இடைவெளி 3 அங்குல இடைவெளியாகும். மார்பகம் ஓர் யவை அளவாகும். அதன் அகலம் 2 யவை அளவாகும். சுற்று வட்டம் 2 மாத்ரை அளவாகும்.

हृत्प्रदेशस्य विस्तारं सार्धं स्मृत्यंगुलं भवेत् ।
उदरस्य तु विस्तारं सार्धत्रयोदशांगुलम् ॥ ७८ ॥

*ஹ்ருத் ப்ரதேசஸ்ய விஸ்தாரம் ஸார்த்தம்*
*ஸ்ம்ருத்யங்குலம் பவேத் /*
*உதரஸ்யது விஸ்தாரம் ஸார்த்த த்ரயோதசாங்குலம் //*

ஹ்ருதய பிரதேசத்தின் அகலம் 6 ½ அங்குல அளவாகும், வயிற்றின் அளவு 13 ½ அங்குல அளவாகும்.

यवद्वयं तु हीनं स्यात् विस्तारं षड्यवं भवेत् ।
नाभिप्रदक्षिणावर्तं श्रोणिश्चाष्टादशांशकम् ॥ ७९ ॥

*யவ த்வயந்து நிம்ஹீநம் ஸ்யாத் விஸ்தாரம்*
*ஷட்யவம் பவேத் /*
*நாபி ப்ரதக்ஷிணா வர்தம் ச்ரோணி சாஷ்டா*
*தசாம்சகம் //*

2 யவை அளவு கனமும், அகலம் 6 யவை அளவுமாகும். நாபி வட்டமாக இருக்க வேண்டும். இடுப்பின் மேல் பகுதி 28 அம்ச மாத்ரை அளவாகும்.

कटिप्रदेशविस्तारं द्वाविंशत्यङ्गुलं भवेत् ।
शरीरे गोमुखाकारं कट्याश्चोर्ध्वं प्रशस्यते ॥ ८० ॥

*கடிப்ரதேச விஸ்தாரம் த்வாவிம் சத்யங்குலம்*
*பவேத் /*
*சரீரே கோமுகா காரம் கட்யாச்சோர்த்வம்*
*ப்ரசஸ்யதே //*

இடுப்புப் பகுதியின் விஸ்தாரம் 22 அங்குலமாகும். சரீரத்தில் இடுப்பிற்கு மேல் பகுதி கோமுகம் (பசுவின் முகம்) போல் அமைக்கவும்.

शरमात्रं यवोपेतं मेढ्रायाममुदाहृतम् ।
वेदाङ्गुलं समुद्दिष्टं मुष्कं विस्तारदैर्घिकम् ॥ ८१ ॥

*சரமாத்ரம் யவோபேதம் மேட்ராயாம முதா ஹ்ருதம் /*
*வேதாங்குலம் ஸமுத்திஷ்டம் முஷ்க விஸ்தார*
*தைர்கிகம் //*

மேட்ரமென்ற இடுப்பின் கீழ்பகுதி 5 யவை அளவாகும். முஷ்கம் என்ற பாகத்தின் நீள, அகல அளவு 4 அங்குல அளவாகும்.

पक्षाङ्गुलप्रमाणेन एकैकं वृषणं स्मृतम् ।
शेफं शीर्षाङ्गुलायामं तारं दशयवं भवेत् ॥ ८२ ॥

*பக்ஷாங்குல ப்ரமாணேந ஏகைகம் வ்ருஷணம்*
*ஸ்ம்ருதம் /*
*சேபம் சீர்ஷாங்குலாயாமம் தாரந்தசயவம் பவேத் //*

2 அங்குல அளவால் ஒவ்வொரு வ்ருஷணமும் (பீஜமும்) ஆகும். மீதம் 1 அங்குல அளவு அகலமும் நீளம் 10 யவை அளவும் ஆகும்.

क्षयमग्रेषु भागैकं मुकुलो चोत्पलवद्भवेत् ।
ऊरुमूलस्य विस्तारं सार्धत्रयोदशाङ्गुलम् ॥ ८३ ॥

*க்ஷயமக்ரேஷு பாகைகம் முலஞ்சோத்பல வத்*
*பவேத் /*
*ஊருமூலஸ்ய விஸ்தாரம் ஸார்த்த*
*த்ரயோதசாங்குலம் //*

(சிறுநீரகம்) நுனி வரை ஒவ்வொரு பாகம் குறைந்ததாக நீலோத்பலம் புஷ்பம் போல் நுனி உள்ளதாக ஆகும். துடை ஆரம்பத்தின் விஸ்தாரம் 13 ½ அங்குலமாகும்.

तन्मध्ये चैवविस्तारं यवमर्धांगुलाधिकम् ।
ऊर्ध्वाग्रस्य तु विस्तारं वाग्रन्धांगुलकं भवेत् ॥ ८४ ॥

*தந்மத்யே சைவ விஸ்தாரம் யம*
*மர்த்தாங்குலாதிகம் /*
*ஊர்த்வாக்ரஸ்யது விஸ்தாரம் வாக் ரந்த்ராங்குலகம்*
*பவேத் //*

அதன் மத்ய கனத்தின் விஸ்தாரம் 2½ அங்குல அளவாகும். மேல் நுனியின் விஸ்தாரம் 9 அங்குலமாகும்.

जानुमण्डलविस्तारं वसुमात्रार्धमिष्यते ।
यवनोवाष्टांगुलं प्रोक्तं जङ्घामूलस्य विस्तृतम् ॥ ८५ ॥

*ஜாநு மண்டல விஸ்தாரம் வஸுமாத்ரார்த்த மிஷ்யதே /*
*யவேநாஷ்டாங்குலம் ப்ரோக்தம் ஜங்கா மூலஸ்ய விஸ்த்ருதம் //*

முழங்காள் மூட்டு விஸ்தாரம் 8 ½ மாத்ரை அளவாகும். 8 யவை அங்குலம் முழந்தாள் ஆரம்பத்தின் அகல அளவாகும்.

तन्मध्ये तस्य विस्तारं सप्तमात्रं यवाधिकम् ।
नलकायास्तु विस्तारं [2]वर्धयेदङ्गुलं भवेत् ॥ ८६ ॥

*ஸ்ரீமத்யே தஸ்ய விஸ்தாரம் ஸப்த மாத்ரம் யவாதிகம் /*
*நளகாயாஸ்து விஸ்தாரம் வர்த்தயேத் அங்குலம் பவேத் // (ஸார்த்த வேதாங்குலம்)*

அதன் மத்தியின் முழங்காள் அகலம் சுற்றளவு 1 யவையுடன் 7 மாத்ராங்குலமாகும். முழங்காள் கீழ்பகுதி 4 ½ அங்குலம் ஆகும்.

अथ गुल्फद्वयोर्मध्यं विस्तारन्तु शराङ्गुलम् ।
तलमध्यस्य विस्तारं सार्धं भूतांगुलं भवेत् ॥ ८७ ॥

*அத்குல்ப த்வயோர் மத்யே விஸ்தாரந்து சராங்குலம் /*
*தல மதயஸ்ய விஸ்தாரம் ஸார்த்தம் பூதாங்குலம் பவேத் //*

இரண்டு நுனி காலின் இடைவெளி 5 அங்குலமாகும். இரண்டு பாத தலத்தின் விஸ்தாரம் 5 ½ அங்குலமாகும்.

तलाग्रस्य तु विस्तारं रसाङ्गुलमिति स्मृतम् ।
अक्षान् पार्ष्ण्यन्तरं भागं पार्ष्ण्योत्सेधस्य तत्समम् ॥ ८८ ॥

*தலா க்ரஸ்யது விஸ்தாரம் ரஸாங்குல மிதிஸ் ம்ருதம் /*
*அக்ஷாந் பார்ஷ்ண யந்த்ரம் பாகம் பார்ஷ் ணயோத்ஸே தஸ்ய தத்ஸமம் //*

பாத தளத்தின் நுனி அகலம் 6 அங்குலமாகும். கால் பின் பகுதியின் பாகம். 1 மாத்ரை அளவாகும், பின்புக் காலின் உயரம் -1 மாத்ரை அளவாகும்.

अक्षादङ्गुलमूलान्तं नवमात्रार्धमिष्यते ।
पादाङ्गुष्ठायतं भागं तत्तारं षट्चवाङ्गुलम् ॥ ८९ ॥

*அக்ஷாதங்குல மூலாந்தம் நவ மாத்ரார்த்த மிஷ்யதே /*
*பாதாங்குஷ்டாயதம் பாகம் தத்தாரம் தத் ஷடாங்குலம் //*

அக்ஷ பாகம் முதல் மூலம் வரை 9 ½ மாத்ரையளவு, கால் கட்டை விரல் நீளமாகும். அகலம் 6 அங்குலமாகும்.

त्रितयेन चतुर्मात्रं देशिन्यायाममिष्यते ।
यवेन मात्रविस्तारं देशिन्यास्तु विधीयते ॥ ९० ॥

*த்ரிதயேந சதுர்மாத்ரம் தேசிந் ந்யாயாம மிஷ்யதே /*
*யவேந மாத்ர விஸ்தாரம் தேசிந்யாஸ்து விதீயதே //*

7 மாத்ரையளவு தேசிநீ என்ற பிரதேசத்தின் அளவாகும். தேசினியின் அகலம் ஓர் யவை அளவாகும்.

अंगुष्ठतर्जनीमध्यं रन्ध्रं तत् त्रयकं भवेत् ।
मध्यायामं त्रिमात्रार्धं चतुरर्धयवेन च ॥ ९१ ॥

*அங்குஷ்ட தர்ஜநீ மத்யே ரந்த்ரம் தத்ரயகம் பவேத் /*
*மத்யாயாமம் த்ரிமாத்ரார்த்தம் சதுரர்த்தம் யவேநச //*

கால் கட்டை விரலுக்கும், தர்ஜநீ விரலுக்குமுள்ள இடைவெளி 3 யவை அளவாகும். நடுபாகத்தின் இடைவெளி 3 ½ மாத்ரை, 4 ½ மாத்ரை அளவாகும்.

पादाङ्गुष्ठात् कनिष्ठान्तं नखविस्तृतमीरितम् ।
विस्तारसममायामं नखानां वृत्तमाकृतिः ॥ ९२ ॥

*பாதாங்குஷ்டாத் கநிஷ்டாந்தம் நக விஸ்த்ருத மீரிதம் /*
*விஸ்தார ஸம மாயாமம் நகாநாம் வ்ருத்தமா க்ருதி: //*

இவ்வாறாக கால்கட்டை விரல் முதல் சுண்டு விரல் வரை நகங்களின் விஸ்தாரம்

கூறப்பட்டது. விஸ்தாரத்திற்கு சமமாக நீளம் இருக்க வேண்டும். நகங்கள் வட்ட வடிவமாக இருக்க வேண்டும்.

षट्सप्तत्यंगुले तस्य ऊर्वोर्भागं महामुने ।
नाभिदेशस्य नाहन्तु त्रिचत्वारिंशदङ्गुलम् ॥ १३ ॥

*ஷட்ஸப்த த்யங்குலேதஸ்ய ஊர்வோர் பாகம் மஹாமுநே !*
*நாபிதேசஸ்ய நாஹந்து த்ரிசத்வாரிம் சதங்குலம் !!*

காலிலிருந்து மேல் துடை பாகம் வரை 76 அங்குலமாகும். அதிலிருந்து தொப்பூழ் பிரதேசம் 43 அங்குலமாகும்.

श्रोणिदेशस्य नाहन्तु पञ्चाशन्मात्रमीरितम् ।
अन्येषां चैव सर्वेषां नाहमानं विधीयते ॥ १४ ॥

*ச்ரோணி தேசஸ்ய நாஹந்து பஞ்சாசந் மாத்ர மீரிதம் !*
*அந்யேஷாஞ்சைவ ஸர்வேஷாம் நாஹமாநம் விதீயதே !!*

இடுப்பிற்கு மேற்பட்ட பிரதேசம் 50 மாத்ரையளவாகும். மற்ற அவயவங்களின் அளவு கூறப்படுகிறது.

तत्तारं त्रिगुणीकृत्य तन्मध्यांशं भवेत्पुनः ।
त्रिगुणीकृततारेण तदेका शश्रयोजयेत् ॥ १५ ॥

*தத்தாரம் த்ரிகுணீ க்ருத்ய தந்மத்யாம்சம் பவேத் புந: !*
*த்ரிகுணீ க்ருததாரேண ததேகாதச யோஜயேத் !!*

மேற்கூறிய அளவை மூன்று மடங்காக்கினால், அதன் மத்தியின் அம்ச அளவாகும். 3 மடங்காக்கிய அளவால் 11 அளவை கூட்டவும்.

तदेव समवृत्तानां नाहमित्याभिधीयते ।
उष्णीषात्पृष्ठकेशान्तं सार्धत्रयोदशागुलम् ॥ १६ ॥

*ததேவ ஸம வ்ருத்தாநாம் நாஹமித்யபி தீயதே !*
*உஷ்ணீஷாத் ப்ருஷ்ட கேசாந்தம் ஸார்த்த த்ரயோ தசாங்குலம் !!*

அது ஸம விருத்தங்களின் அளவாக கூறப்படுகிறது. தலைப்பாகை முதல் பின் பிடரி பாகம் வரை 13 ½ அங்குலமாகும்.

ग्रीवायामं तु भागं स्यात् तत्समञ्चाककुत् भवेत् ।
ककुदः कटिसन्धेश्च सप्तविंशतिमात्रतः ॥ १७ ॥

*க்ரீவாயாமந்து பாகம் ஸ்யாத் தத்ஸமம்து ககுத் பவேத் !*
*ககுத: கடிஸந்தேச்ச ஸப்தவிம்சதி மாத்ரத: !!*

கழுத்தின் அளவே பின் பிடரி கழுத்தின் அளவாகும். பின் கழுத்திலிருந்து இடுப்பின் சேர்க்கை 27 மாத்ரை அளவாகும்.

गण्डप्रदेशस्तस्याधः सार्धत्रयोदशांगुलम् ।
तस्याधः पृष्टकसमं सार्धवेदांगुलं भवेत् ॥ १८ ॥

*கண்ட ப்ரதேசம் தஸ்யாதஸ் ஸார்த்த த்ரயோ தசாங்குலம் !*
*தஸ்யாத: ப்ருஷ்டக ஸமம் ஸார்த்த வேதாங்குலம் பவேத் !!*

அதற்கு கீழ் கண்டமென்ற இடுப்பின் அளவு 13½ அங்குலமாகும். அதற்கு கீழ் ப்ருஷ்டபாக அளவு 4 ½ அங்குல அளவாகும்.

ऊर्वायामन्तु तस्याधः सार्धद्वाविंशदगुलम् ।
जान्वायामान्तुभागं स्यात् जङ्घात्रिनवमानकम् ॥ १९ ॥

*ஊர்வாயாமந்து தஸ்யாத ஸார்த்த த்வாவிம்சத் அங்குலம் !*
*ஜாந்வாயாமாந்து பாகம் ஸ்யாத் ஜங்காத்ரி நவமாநகம் !!*

அதற்கு கீழ் துடையின் அளவு 12 ½ அங்குல அளவாக ஆகும், முழங்கால் முட்டிலிருந்து முழங்கால் அளவு 27 அங்குல அளவாகும்.

पार्ष्यायामन्तु भागं स्यात् पृष्ठयामं प्रकीर्तितम् ।
कर्णयोरन्तरं पृष्ठे द्वादशांगुलमुच्यते ॥ १०० ॥

*பார்ஷ்ண்யாயா மந்து பாகம் ஸ்யாத் ப்ருஷ்டயாமம் ப்ரகீர்த்திதம் I*
*கர்ணயோ ரந்தரம் ப்ருஷ்டே த்வாதசாங்குல முச்யதே II*

பின் நுனி காலின் நீள அளவு, ப்ருஷ்டபாக அளவாகும். 2 காதுகளின் பின் பகுதி அளவு 12 அங்குல அளவாகும்.

कक्षयोरन्तरं पृष्ठे सप्तविंशतिमात्रकम् ।
पृष्ठावधिसमारभ्य तस्योर्ध्वे दशमात्रकम् ॥ १०१ ॥

*கக்ஷயோ ரந்தரம் ப்ருஷ்டே ஸப்தவிம்சதி மாத்ரகம் I*
*ப்ருஷ்டாவதி ஸமாரப்ய தஸ்யோர்த்வேதச மாத்ரகம் II*

2 கை இடுக்குப் பகுதியின் பின் பாகம் 27 மாத்திரை அளவாகும். பின் பகுதியிலிருந்து அதன் மேற்பகுதி வரை 10 மாத்திரையளவாகும்.

स्फिक्पिण्डं कारयेदूर्ध्वे मूलं तद्वत्समुन्नतम् ।
उपमानं ततो वक्ष्ये श्रृणु कौशिक सुव्रत ॥ १०२ ॥

*ஸ்பிக் பிண்டங்காரயே தூர்த்வே மூலாத்பாகம் ஸமுந்நதம் I*
*உபமாநந்ததோ வக்ஷ்யே ச்ருணு கௌசிக ஸுவ்ரத II*

பின் சிரஸின் மேல்பாகம் கீழிலிருந்து 1 பாகம் மாத்திரையளவு உயர்ந்ததாகும். பின் சேர்க்கையளவு கூறுகிறேன் கேளும் கௌசிகரே!

ऊरुमूलान्तरं मात्रं जानुमध्ये कलान्तरम् ।
सार्धपक्षांगुलेनैव जङ्घान्तरमिति स्मृतम् ॥ १०३ ॥

*ஊரு மூலாந்தரம் மாத்ரந் ஜாநுமத்யே கலாந்தகம் I*
*ஸார்த்த பக்ஷாங்குலேனைவ ஜங்காந்தர மிதி ஸ்ம்ருதம் II*

துடையிடையளவு 1மாத்திரையும், முழங்கால் முட்டு நடுவரை 5 ½ மாத்திரையளவுமாகும். 2 ½ அங்குல அளவு முழங்காலின் இடைவெளியாகும்.

नलान्तरं शराङ्गुल्यभागं पार्ष्यन्तरं भवेत् ।
अंगुष्टाग्रद्वयोर्मध्ये यावकं चेति कीर्तितम् ॥ १०४ ॥

*நளாந்தரம் சராங்குல்ய பாகம் பார்ஷ்ண்யந்தரம் பவேத் I*
*அங்குஷ்டாக்ர த்வயோர் மத்யே யாவகம் சேதி கீர்த்திதம் II*

பாத கீழ்பாகம் 5 அங்குலமும் பின் பாதம் 1 பாக (2 அங்குலம்) அளவாகும். 2 கால்கட்டை விரலின் இடைவெளி 1யவை அங்குலம் ஆகும்.

सार्धपक्षांगुलं मध्ये श्रोणिप्रकोष्ठमूलयोः ।
पार्श्वमद्यमबाह्वोश्च मध्यमे कौशिकांगुलम् ॥ १०५ ॥

*ஸார்த்த பக்ஷாங்குலம் மத்யே ச்ரோணி ப்ரகோஷ்ட மூலயோ: I*
*பார்ச்வ மத்யம பாஹ்வோச்ச மத்யமே கௌசிகாங்குலம் II*

மேற்கையிலிருந்து இடுப்பையடைந்த கைமுட்டின் அளவு 15 ½ அங்குலமாகும். பக்கவாட்டு நடுக்கையின் இடைவெளி 1அங்குலமாகும்.

कर्तर्यनामिका बाह्वोरन्तरं दशमात्रकम् ।
मणिबन्धकबाह्वोश्च द्व्यन्तरं तु यमं भवेत् ॥ १०६ ॥

*கர்த்தர்ய நாமிகா பாஹ்வோ ரந்தரந்தச மாத்ரகம் I*
*மணிபந்தக பாஹ்வோச்ச த்வ்யந்தரந்து யமம் பவேத் II*

கர்த்தரி முத்ரையுள்ள மோதிர விரலிருந்து முழங்கைவரை இடைவெளி 10 மாத்திரையளவாகும். மணிக்கட்டு முதல் முழங்கை வரை இடைவெளி 2 யவை அங்குலமாகும்.

पताकाग्रं स्तनान्तं स्यात् तयोर्मध्येऽन्तरं यमम् ।
वरदं चेत्तु तत्पृष्ठं नाभेस्तु सममुच्यते ॥ १०७ ॥

*பதாகாக்ரம் ஸ்தநாந்தம் ஸ்யாத் தயோர் மத்யேந்தரம் யமம் !*
*வரதஞ்சேத்து தத் ப்ருஷ்ட நாபேஸ்து ஸமமுச்யதே !!*

பதாக முத்ரையமைப்பிலிருந்து ஸ்தனம் வரை இடைவெளி 2 மாத்ராங்குலமாகும். வரத முத்ரையாயிருப்பின், அந்தக் கையின் லம்ப மானம், தொப்பூழ் வரை அளவுள்ளதாகும்.

कटिकाधः प्रदेशन्तु मेढ्रमूलसमं भवेत् ।
अनुक्तमन्यतोग्राह्यं कल्पयेत्कल्पवित्तमः ॥ १०८ ॥

*கடிகாத: ப்ரதே சந்து மேட்ரமூல ஸமம் பவேத் !*
*அவ்யக்த மந்யதோ க்ராஹ்யம் கல்பயேத கல்ப வித்தம:!!*

இடுப்பின் அடிப்பகுதி மேட்ட பாகத்தின் அடிப்பகுதிக்கு ஸமமாகும். கூறப்படாததை கூறப்பட்ட வேறு தந்திரத்திலிருந்து எடுத்து பிம்பம் அமைக்கவும்.

केशान्तं मकुटोत्तुङ्गं मुखमात्रं प्रचक्षते ।
सत्रिपादमुखं वाऽपि द्विमुखं वाऽथ कल्पयेत् ॥ १०९ ॥

*கேசாந்தம் மகுடோத்துங்கம் முகமாத்ரம் ப்ரசக்ஷதே !*
*ஸத்ரிபாத முகம் வாபி த்விமுகம் வாத கல்பயேத் !!*

கேசம் வரை உள்ள கிரீட அமைப்பு முக அளவுடன் ஸம அளவாக இருக்க வேண்டும். 1 ¾ பாகம் முகமோ, 2 பாகமாக முகமோ அமைக்கவும்.

आयुधं मुखमात्रोच्चं सर्वलक्षणसंयुतम् ।
मानहीने महाव्याधिरधिके शत्रुवर्धनम् ॥ ११० ॥

*ஆயுதம் முக மாத்ரோச்சம் ஸர்வலக்ஷண ஸம்யுதம் !*
*மாநஹீநே மஹா வ்யாதி ரதிகே சத்ரு வர்த்தநம் !!*

கையில் தரித்துள்ள ஆயுதம் முகத்தின் சமமாக அளவாக இருக்கவும். பிம்பம் அளவு குறைவாக அமைத்தால் பெரும் வியாதியும், அதிகமாகமானால் எதிரியின் அதிகரிப்பும் உண்டாகும்.

तस्मात्सर्वप्रयत्नेन कारयेल्लक्षणान्वितम् ।
चतुर्भुजं द्विबाहुञ्च शान्तं सिद्धिप्रदं स्मृतम् ॥ १११ ॥

*தஸ்மாத் ஸர்வ ப்ரயத்நேந காரயேல்லக்ஷணாந்விதம் !*
*சதுர்புஜம் த்விபாஹுஞ்ச சாந்த: ஸித்தி ப்ரதம் ஸ்ம்ருதம் !!*

ஆகையால் மிக்க முயற்சியுடன் உரிய இலக்கணப்படி பிம்பம் அமைக்கவும். 2, 4 கைகள் உள்ள முருகன், அமைதியையும், விருப்பத்தையும் தருபவன் ஆவார்.

द्विभुजश्च चतुर्बाहुः षड्भुजोऽष्टभुजः पुनः ।
द्विषट्भुजः पञ्चभेदा एतेषां लक्षणं श्रृणु ॥ ११२ ॥

*த்விபுஜச்ச சதுர்பாஹு ஷட்புஜோஷ்ட புஜ: புந:!*
*த்விஷட் புஜ: பஞ்சபேதா ஏதேஷாம் லக்ஷணம் ச்ருணு !!*

2 கை, 4 கை, 6 கை, 8 கை, 12 கைகளுள்ள அமைப்புடையதாக முருகன் 5 விதமாகக் கூறப்பட்டுள்ளது. அவைகளின் இலக்கணத்தை கேட்பாயாக

द्विहस्ते पञ्चभेदोऽस्ति कटिबद्धाभयन्तु वा ।
पद्मयुक्तं सकबद्धं वा दण्डेन कटिबद्धकम् ॥ ११३ ॥

*த்விஹஸ்தே பஞ்சபேதோஸ்தி கடிபத்தாபயந்து வா !*
*பத்மம் யுக் (கடி) ஸக பத்மம் வா தண்டேந கடி பத்தகம் !!*

2 கை அமைப்பில் 5 விதமுள்ளது. 1 கடி பத்தம், அபயம், 2. பத்மம், கடி (பத்தம்), (2கை களிலும் பத்மம்), 3. தண்டம், கடிபத்தம்

शक्तिवज्रधरं वाऽपि शक्तिकुक्कुटमेव च ।
चतुर्भुजः सप्तभेदं वज्रशक्तिवराभयम् ॥ ११४ ॥

*சக்தி வஜ்ர தரம் வாபி சக்தி குக்குட மேவச /*
*சதுர்புஜஸ் ஸப்த பேதம் வஜ்ர சக்தி வராபயம் //*

4. சக்தி, வஜ்ராயுதம் தரித்தல், 5. சக்தி, குக்குடம் (கோழி) தரித்திருப்பது இவ்வாறாக ஐந்து விதமாகும். 4 கை அமைப்பில் 7 விதம் உள்ளது. 1. வஜ்ரம், சக்தி, வரம், அபய

अभयं वरदं पश्चादक्षमाला कमण्डलुम् ।
ततो वै कुण्डिकाक्षदृक् कटिबन्धाभयान्वितम् ॥ ११५ ॥

*அபயம் வரதம் பச்சாத் அக்ஷமாலா கமண்டலும் /*
*ததோவை குண்டி அக்ஷஸ்ருச் கடிபந்தா பயாந் விதம் //*

2. அபயம், வரதம், அக்ஷமாலை, கமண்டலம், 3. கெண்டி, அக்ஷமாலை, கடிபந்தம், அபயம்

पश्चादभीतिवरदं शक्तिकुक्कुटसंयुतम् ।
ततोऽभयञ्च शक्तिञ्च कुक्कुटं चाक्षमालिकाम् ॥ ११६ ॥

*பச்சாத பீதி வரதம் சக்தி குக்குட ஸம்யுதம் /*
*ததோபயஞ்ச சக்திஞ்ச குக்குடஞ்சாக்ஷ மாலிகாம் //*

4 அபயம், வரதம், சக்தி, குக்குடம், 5 அபயம், சக்தி, குக்குடம் (கோழி), அக்ஷமாலை

शक्तिं कमण्डलुं पश्चात् कटिबद्धाभयन्तु वा ।
पश्चात् कुक्कुटशक्तिभ्यामसिखेटसमायुतम् ॥ ११७ ॥

*சக்திம் கமண்டலும் பச்சாத் கடி பந்தா பயந்துவா /*
*பச்சாத் குக்குட சக்திப்யாம் மஸிகேட ஸமாயுதம் //*

6. சக்தி, கமண்டலம், கடிபந்தம், அபயம், 7 குக்குடம் (கோழி), சக்தி, கத்தி, கேடயம்

एवंविधानां बेराणामेकवक्त्रमुदीरितम् ।
ललाटाद्घ्राणभ्रूमध्ये श्रोणिमध्ये तथा पुनः ॥ ११८ ॥

*ஏவம் விதாநாம் பேராணாம் ஏகவக்த்ர முதீரிதம் /*
*ருத்ர மூர்த்தி ருதீரிதம் /*
*லலாடாத் க்ராண ப்ரு மத்யே ச்ரோணி மத்யே ததா புந: //*

ஆறு வாஹன பிம்பங்களுக்கு ஒரு முகமாக கூறப்பட்டுள்ளது. நெற்றியிலிருந்து மூக்கு, புருவ இடைவெளி, பிடரி பாகம்

मेढ्रमूलस्य मध्ये तु स्वातपादद्वयमध्यमे ।
अङ्गुष्ठमूलयोर्मध्ये स्थितं स्याच्छिवसूत्रकम् ॥ ११९ ॥

*மேட்ர மூலஸ்ய மத்யேதுஸ் த்வாதபாத்வய மத்யமே /*
*அங்குஷ்ட மூலயோர் மத்யே ஸ்திதம் ஸ்யாச்சிவ ஸூத்ரகம் //*

மேட்ர மூலம், கால்களின் இடைவெளி, 2 கட்டை விரலின் இடைவெளியெந்த நின்ற கோலத்துடன் சிவசூத்ர அமைப்புடன் செய்யவும்.

उष्णीषात्तु ककुद्देशं खण्डस्फिक्पादमध्यगम् ।
ऋजुस्थितिरिति ख्याता लम्बसूत्रं प्रलम्बयेत् ॥ १२० ॥

*உஷ்ணீஷாத்து ககுத்வேசம் கண்ட ஸ்பிக் பாத மத்யகம் /*
*ருஜுஸ்திதி ரிதி க்யாதா லம்ப ஸூத்ரம் ப்ரலம்பயேத் //*

தலைப்பாகையிலிருந்து, பிடரி, தோள்பட்டை, பின் கழுத்து, கால்களின் நடுப்பகுதியெல்லாம் நேராக நின்ற கோலமாக லம்ப சூத்திரம் அமைக்கவும்.

षड्भुजे त्वभयं खड्गं शक्तिं दक्षिणपाणिषु ।
खेटकं चाक्षमालाञ्च कुक्कुटं वामपाणिषु ॥ १२१ ॥

*ஷட்புஜேத்வ பயங் கட்கம் சக்திந் தக்ஷிண பாணிஷு /*
*கேடகம் சாக்ஷ மாலாஞ்ச குக்குடம் வாம பாணிஷு //*

எல்லா அலங்காரத்துடன் கூடிய ஸ்தண்டிலத்தின் மேல் மண்டலத்தில் 2 நேத்ரம் என்ற அம்சமுடைய தினத்தில் நயநோன் மீலனம் செய்யவும்.

मृण्मये गर्भगेहे तु नेत्रमोक्षणमाचरेत् ।
स्नातश्शुद्धशिल्पवेषो भस्माभरणवस्त्रयुक् ॥ ७३ ॥

*ம்ருண்மயே கர்பகேஹேது நேத்ர*
*மோக்ஷணமாசரேத் !*
*ஸ்நாதஸ்ஸில்ப்பி சுத்த வேஷோ*
*பஸ்மாபரணவஸ்த்ர யுக் !!*

ம்ருண்மயமான பிம்ப விஷயத்தில் கர்ப க்ருஹத்திலியே நயநோன் மீலனம் செய்யவும். சில்பியானவன் ஸ்நானம் செய்து சுத்தமான அலங்கரித்து வஸ்த்ரம் ஆபரணம் விபூதி தரித்து

प्रीतोऽक्षिमोक्षणं कूर्यात् हेमसूचिकया सुधी: ।
देवदेव्योर्मयूरञ्च कुक्कुटञ्च क्रमेण तु ॥ ७४ ॥

*ப்ரீதோக்ஷி மோக்ஷணங்குர்யாது*
*ஹேமசூசிகயாஸுதீ:!*
*தேவதேவ்யூர்மயூரஞ்ச குக்குடஞ்சக்ரமேணது:!!*

சந்தோஷ (மகிழ்ச்சி) அடைந்தவனாக தங்க ஊசியால் நயநோன் மீலனம் செய்யவும். முருகன் 2 தேவியர், மயில், கோழி இவைகளை முறையே

पक्ष्मरेखान्ततो लिख्य ततो वै कृष्णमण्डलम् ।
ज्योतिर्मण्डलमालिख्य पश्चाच्छिल्पि विसर्जयेत् ॥ ७५ ॥

*பக்ஷ்மரேகாந்தோலிக்ய தநோவைக்ருஷ்ண*
*மண்டலம் !*
*ஜோதிர்மண்டலமாலிக்ய பஸ்சாச்சில்பிம்*
*விஸர்ஜயேத் !!*

புருவ கோடு வரைந்து இமை கோடு வரைந்து கருவிழி அமைத்து அதன் நடுவில் பார்வை விழி வரைந்து பிறகு சில்பியை திருப்தி படுத்தவும்.

तस्याग्रे स्थण्डिलं कृत्वा बिम्बं तस्योपरिन्यसेत् ।
पुण्याहं वाचये त्तत्र प्रोक्षयेदस्त्रमन्त्रत: ॥ ७६ ॥

*தஸ்யாக்ரே ஸ்தண்டிலங்க்ருத்வா*
*பிம்பந்தஸ்யோபரிந்யஸேத் !*
*புண்யாஹம் வாசயேத்தத்ர ப்ரோக்ஷயே*
*தஸ்த்ரமந்த்ரத:!!*

அந்த பிம்பங்களுக்கு முன்னதாக ஸ்தண்டிலம் அமைத்து, அதற்கு மேல் பிம்பத்தை வைக்கவும். பிறகு புண்யாஹ வாசனம் செய்து அஸ்த்ர மந்திரத்தினால் ப்ரோக்ஷிக்க வேண்டும்.

सूत्रैकादिसमायुक्तानष्ठकुम्भान् न्यसेत्क्रमात् ।
बेरस्य परितोऽभ्यर्च्य लोकेशान् स्वस्वमन्त्रत: ॥ ७७ ॥

*சூத்ரைகாதி ஸமாயுக்தா நஷ்டகும்பாந்ய*
*ஸேத்க்ரமாத் !*
*பேரஸ்ய பரிதோப்யர்ச்ய லோகேசாந்*
*ஸ்வஸ்வமந்த்ரத:!!*

நூல் சுற்றப்பட்டு வஸ்த்ரம், மாவிலைகளால் அலங்கரிக்கப்பட்ட 8 கும்பங்களை முறைப்படி வைக்கவும். பிம்பத்தை சுற்றி 8 லோக பாலகர்களை (கலசங்களில்) பூஜிக்கவேண்டும்.

हेमसूच्या गुरुर्लिख्य नेत्रमन्त्रमनुस्मरन् ।
मधु वाताऋतायेति मधुपात्रं प्रदर्शयेत् ॥ ७८ ॥

*ஹேமஸூச்யா குருர்லிக்ய நேத்ர மந்த்ர மநுஸ்மரந் !*
*மதுவாதா ருதாயேதி மதுபாத்ரம் ப்ரதர்சயேத் !!*

தங்க ஊசியால் ஆச்சார்யன் நேத்ர மந்திரத்தை சொல்லி நயநோன் மீலனம் செய்யவும். மதுவாதா ரிதாயதா என்ற மந்திரத்தினால் தேன் பாத்ரத்தை காண்பிக்கவும்.

घृतं मिमिक्षेति मन्त्रेण घृतपात्रं प्रदर्शयेत् ।
आप्यायस्वेति मन्त्रेण क्षीरपात्रं प्रदर्शयेत् ॥ ७९ ॥

*க்ருதமிமிக்ஷேதி மந்த்ரேண க்ருதபாத்ரம்*
*ப்ரதர்சயேத்!*
*ஆப்யாயஸ்வேதி மந்த்ரேண க்ஷீரபாத்ரம்*
*ப்ரதர்சயேத்!!*

க்ருதமிமிக்ஷேதி என்ற மந்திரத்தினால் நெய் பாத்ரத்தை காண்பிக்கவும். ஆப்யாயஸ்வேதி என்ற மந்த்ரத்தினால் பால்பாத்ரத்தை காண்பிக்கவும்.

सुवर्ण रजतं कांस्यं पात्र मध्वादिना ततः ।
मुवर्णदूर्वया नेत्रं मध्वाज्यक्षीरमर्पयेत् ॥ ८० ॥

*சுவர்ண ரஜதம் காம்ஸ்யம் பாத்ரம் மத்வாதிநாதத:!*
*சுவர்ண தூர்வயாநேத்ரம் மத்வாஜ்யக்ஷீ ர*
*மர்பயேத்!!*

தேனை தங்க பாத்திரத்திலும், நெய்யை வெள்ளி பாத்திரத்திலும், பாலை வெண்கல பாத்திரத்திலும் வைக்கவும் தங்க அருகம்பில்லால் தேன், நெய், பால் இவைகளை நேத்ரத்தில் (கண்களில்) வைக்கவும்.

सुवणरिखा संयुक्तं सूर्यसोमाग्निदैवतम् ।
तर्जनीमध्यमाधिक्यां न्यसेन्नेत्रमनुस्मरन् ॥ ८१ ॥

*சுவர்ண ரேகா ஸம்யுக்தம் சூர்ய*
*ஸோமாக்நிதைவதம்!*
*தர்ஜநீ மத்ய மாலிக்யாம் ந்யஸேந்நேத்ர மநுஸ்மரந்!!*

தங்கத்தினால் கோடு வரைந்து சூர்யன், சந்த்ரன், அக்னி, ஆகிய தேவதைகளை மோதிர விரல் நடுவிரல், ஆள்காட்டிவிரல் நேத்ர மந்த்ரத்தை கூறி கண் திறக்கவும்.

धेनुगव्येति मन्त्रेण सवत्सां गां प्रदर्शयेत् ।
व्रह्मजज्ञानमन्त्रेण ब्राह्मणान्दर्शयेत्ततः ॥ ८२ ॥

*தேநுகவ்யேதி மந்த்ரேண ஸவத்ஸாம்காம்*
*ப்ரதர்சயேத்!*
*ப்ரஹ்ம ஜக்ஞாந மந்த்ரேண ப்ராஹ்மணாநு*
*தர்சயேத்தத:!!*

தேநு கவ்யம் (கௌர்தேனு) மந்த்ரேண கன்றுடன் கூடிய பசுவை காண்பிக்கவும். ப்ரம்மஜக்ஞாந மந்திரத்தை சொல்லி ப்ராம்மணர்களை காண்பிக்க வேண்டும்.

जगद्धुवादिमन्त्रेण स्वस्तिमङ्गलवाचकैः ।
प्रच्छन्नपटमावर्ज्य जनान्सर्वान्प्रदर्शयेत् ॥ ८३ ॥

*ஜகத்புவாதி மந்த்ரேண ஸ்வஸ்தி மங்கள வாசகை:!*
*ப்ரச்சந்ந படமாவர்ஜ்ய ஜநாந்ஸர்வாந் ப்ரதர்சயேத்!!*

ஜகத்புவம் என்ற மந்திரங்களாலும், ஸ்வஸ்தி மங்கள மந்திரங்களாலும் திரையை விலக்கிய பிறகு எல்லா பக்தர்களையும் காண்பிக்க வேண்டும்.

पञ्चगव्येन संस्नाप्य पञ्चव्रह्मषडङ्गकैः ।
खलशाद्भिस्तु संस्नाप्य ततः पञ्चामृतादिभिः ॥ ८४ ॥

*பஞ்சகவ்யேந ஸம்ஸ்நாப்ய*
*பஞ்சப்ரஹ்மஷடங்ககை:!*
*கலசாத்ப்ஸ்து ஸம்ஸ்நாப்ய தத:பஞ்சாம்ருதாதிபி:!!*

பஞ்ச ப்ரம்மா ஷடங்க மந்திரங்களால் பஞ்ச கவ்யத்தினால் பிம்பத்தை அபிஷேகித்து, முன்பு சாதிக்கப்பட்ட கலசங்களினால் அபிஷேகித்து முன்பு பஞ்சாமிர்தத்தால் அபிஷேகம் செய்யவும்.

अष्ठमृत्सलिलेनैव स्नापयेत्तु षडक्षरैः ।
पर्वताग्रे नदीतीरे वल्मीके कर्कटावटे ॥ ८५ ॥

*அஷ்டம்ருத்ஸலிலேநைவ ஸ்நாபயேத்து*
*ஷடக்ஷரை:!*
*பர்வதாக்ரே நதீதீரே வல்மீகேகர்கடாவடே.!!*

ஷடக்ஷர மந்திரங்களால் எண்வகை மண் நிரப்பபட்ட ஜலங்களால் அபிஷேகம் செய்யவும்.

மலையின் உச்சியிலுள்ள மண், நதிக்கரை மண், புற்றுமண், நண்டு வளைமண்.

दन्ति दन्ते वृषे श्रृङ्गे गवां गोष्ठे चतुष्पथे ।
मृदमष्टविधं ग्राह्य प्रकुर्याद्बिम्बशुद्धिकम् ॥ ८६ ॥

*தந்திதந்தே வ்ருஷபேஸ்ருங்கே கவாங்கோஷ்டேசதுஷ்பதே!*
*ம்ருத மஷ்டவிதம் க்ராஹ்யம் ப்ரகுர்யாத் பிம்ப சுத்திகம்!!*

யானை தந்தத்திலுள்ள மண், காளைக் கொம்பிலுள்ள மண், பசுமாட்டுக் கொட்டகையிலுள்ள மண், 4 சந்திகளிலுள்ள மண், ஆகிய 8 வகையான மண்ணை எடுத்து பூஜித்து பிம்ப சுத்தி செய்ய வேணும்.

स्नापयेद्बिल्वतोयैश्च पञ्चत्वक्सलिलैरपि ।
गन्धाद्भिश्शुद्धतोयैश्च स्कन्दसूक्तेनमन्त्रत: ॥ ८७ ॥

*ஸ்நாபயேத் பில்வதோயைஸ்ச பஞ்சத்வக்ஸலி லைரபி!*
*கந்தாத்பிச்சுத தோயைஸ்ச ஸ்கந்த சூக்தேந மந்த் ரத:!!*

வில்வ பத்ர ஜலம், தீர்த்தம், 5 வகையான மரப்பட்டை ஜலங்களாலும், வாசனை தீர்த்தங்களாலும் சுத்த தீர்த்தங்களாலும் ஸ்கந்த சூக்தங்களினாலும்

नमकं चमकञ्चैव पुरुषसूक्तमत: परम् ।
पञ्चशान्तिं जपित्वाथ स्नापयेच्छरसम्भवम् ॥ ८८ ॥

*நமகஞ்சமகஞ்சைவ புருஷ சூக்தமத:-பரம்!*
*பஞ்சசாந்திஞ்ஜபித்வாத ஸ்நாபயேச்சரசம்பவம்!!*

ஸ்ரீ ருத்ரம், சமகம், புருஷசூக்தம், பஞ்சசாந்தி, இவைகளை ஜபித்து, முருகனை ஸ்தாபிக்க வேண்டும்.

गन्धपुष्पादिभिर्विद्वान् पूजयेद्धृदयेन तु ।
सर्वालङ्कारसंयुक्तं सर्वतोद्यसमन्वितम् ॥ ८९ ॥

*கந்த புஷ்பாதி பிர்வித்வாந் பூஜயேத்ருதயேநது!*
*ஸர்வாலங்கார ஸம்யுக்தம் ஸர்வதோத்ய ஸமந்விதம்!!*

சந்தன புஷ்பங்கள் இவைகளினால் ஹ்ருதய மந்திரத்தினால் பூஜை செய்ய வேண்டும். எல்லா அலங்காரத்துடனும், எல்லா வாத்தியங்களுடனும்,

वितानध्वजसंयुक्तं छत्रचामरभूषितम् ।
नानाभक्तजनैस्सार्धं नानादीपैस्समायुतम् ॥ ९० ॥

*விதாநத்வ ஸம்யுக்தம், சத்ரசாமரபூஷிதம்*
*நாநாபக்த ஜனைஸ்ஸார்தம் நாநாதீபைஸ்ஸமாயுதம்!!*

விதாநம், கொடி, கொடை, சாமரம் இவைகளினால் அலங்கரிக்கப்பட்டும் பலவிதமான பக்த ஜனங்களோடும் பலவிதமான தீபங்களோடும்

रथे वा शिविकायां वा कुर्याद्ग्रामप्रदक्षिणम् ।
जलतीरं समासाद्य शुद्धिं कृत्वा भुवस्थलम् ॥ ९१ ॥

*ரத்நவா சிவிகாயாம்வா குர்யாத்க்ராம ப்ரதக்ஷிணம்!*
*ஜலதீரம் ஸமாஸாத்ய சுத்திம் க்ருத்வாபுவஸ்தலம்!!*

தேரிலோ, பல்லக்கிலோ முருகனை கிராம பிரதக்ஷிணம் செய்யவும். பிறகு, நதி, குளம் முதலிய தீர்த்தக்கரையை பிம்பத்துடன் அடைந்து அந்த இடத்தை சுத்தி செய்து

तस्मिन् बेरं समानीय वस्त्रादीनि व्यपोह्य च ।
नववस्त्रेण संवेष्ट्य लम्बकूर्चेन संयुतम् ॥ ९२ ॥

*தஸ்மிந் பேரம் ஸமாநீய வஸ்த்ராதீநிவ்ய போஹ்யச!*
*நவவஸ்த்ரேண ஸம்வேஷ்ட்ய லம்பகூர்சேந ஸம்யுதம்!!*

அந்த தேரிலிருந்து பிம்பத்தை எடுத்து வஸ்த்ரம் புஷ்பம், இவைகளை நீக்கி, புதிய வஸ்த்ரம் சாத்தி லம்ப கூர்ச்சத்துடன்

चतुर्गात्रयुतं कृत्वा जलमध्ये प्रपान्तत: ।
तन्मध्ये विन्यसेत्पीठं चतुर्गात्रयुतं दृढम् ॥ ९३ ॥

*சதுர்காத்ரயுதம் க்ருத்வா ஜலமத்யே ப்ரபாந்தத:!*
*தந்மத்யே விந்யஸேத்பீடம் சதுர்காத்ர யுதந்த்ருடம்!!*

(நான்கு) 4 காலுடைய பந்தலை, ஜலமத்தியில் அமைத்து, கெட்டியான 4 கால்களுடைய பீடத்தை (வேதிகையை) ஜலமத்தியில் வைத்து

तदूर्ध्वे फलकां क्षिप्त्वा नाभिदघ्नेऽधिवासयेत् ।
अष्टकुम्भान् न्यसेद्दिक्षु दिग्देवान् पूजयेत्तत: ॥ ९४ ॥

*ததூர்த்வே பலகாம்க்ஷிப்த்வா நாபிதேக்நேதி*
*வாஸயேத்!*
*அஷ்டகும்பாந்ய ஸேத்திக்ஷு திக்தேவாந்*
*பூஜயேத்தத:!!*

அதன் மேல் பலகையை வைத்து தொப்பூழ் முழுகும் வரை பிம்பத்தில் அதிவாஸம் செய்ய வேண்டும். 8 திசைகளில் 8 கும்பங்களை ஸ்தாபித்து இந்த்ராதிகளை பூஜிக்க வேண்டும்.

पञ्चरात्रं त्रिरात्रं वाऽप्येकरात्रं जलोषितम् ।
चतुर्वेदैश्चतुर्दिक्षु कुर्यादध्ययनं द्विजै: ॥ ९५ ॥

*பஞ்சராத்ரம் த்ரிராத்ரம் வா ப்யேகராத்ரஞ்*
*ஜலோஷிதம்!*
*சதுர்வேதைர் சதுர்திக்ஷு குர்யாத்யயநம் த்விஜை:!!*

5 ராத்திரியோ, 3 ராத்திரியோ, 1 ராத்திரியோ ஜலாதி வாஸமாக வைத்து 4 திசைகளிலும் 4 வேதங்களை அந்தணர்களால் பாராயணம் செய்ய வேண்டும்.

पुण्याहं वाचयित्वाऽथ प्रोक्षयेद्यागमण्डपम् ।
वास्तुहोमं तत: कुर्यात् समीरिणपदे बुध: ॥ ९६ ॥

*புண்யாஹம் வாசயித்வாத ப்ரோக்ஷயேத்யாக*
*மண்டபம்!*
*வாஸ்து ஹோமந்ததகுர்யாது ஸமீரிண பதே புத:!!*

புண்யாஹ வாசனம் செய்து யாகசாலையை ப்ரோக்ஷிக்க வேண்டும். பரமசாயிபதம் போட்டு வாஸ்து ஹோமம் செய்ய வேண்டும்.

पर्यग्निकरणं तेन वह्निनाऽत्रैव कारयेत् ।
वेद्यूर्ध्वे स्थाण्डिलं कृत्वा चाष्टद्रोणैस्तु शालिभि: ॥९७॥

*பர்யாக்நி கரணந்தேந வஹ்நிநாத்ரைவ காரயேத்!*
*வேத்யூர்த்வே ஸ்தண்டிலம்க்ருத்வாது*
*அஷ்டத்ரோணைஸ்ச சாலிபி:!!*

வாஸ்து அக்னியால் பர்யக்னி கரணம் செய்ய வேண்டும். 8 மரக்கால் அளவு நெல்லால் வேதிகையின் மேல் ஸ்தண்டிலம் அமைக்கவும்.

तदर्धैस्तण्डुलैश्चैव तदर्धैश्च तिलैरपि ।
तन्मध्ये नलिनं लिख्य साष्टपत्रं सकर्णिकम् ॥ ९८ ॥

*ததர்தைஸ்தண்டுலைஸ்சைவ*
*ததர்தைஸ்சதிலைரபி!*
*தந்மத்யே நளிநம் லிக்ய*
*ஸாஷ்டபத்ரம்ஸகர்ணிகம்!!*

அதன் பாதி அளவு (4) அரிசியாலும் அதன் பாதி அளவு (2) எள்ளாலும், ஸ்தண்டிலம் அமைத்து அதன் நடுவில் 8 இதழுடன் கூடியதாக தாமரை வரைந்து;

दर्भैर्लाजैस्सपुष्पैश्च परिस्तीर्य यथाविधि ।
शयनं कल्पयेत्तत्र चर्माद्यैरनुक्रमात् ॥ ९९ ॥

*தர்பைர் லாஜைஸ்ச புஷ்பைஸ்ச பரிஸ்தீர்ய*
*யதாவிதி!*
*சயநம் கல்பயேத்தத்ர சர்மாத்யை ரநுக்ரமாத்!!*

தர்பை, நெல்பொரி, புஷ்பம் இவைகளால் முறைப்படி ஸ்தண்டிலத்தின் மேல் பரப்பி தோல் முதலான 5 விரிப்புகளால் சயநம் அமைக்கவும்

जलादुत्तीर्य देवेशं स्नानवेद्योपरि न्यसेत् ।
व्योह्य वस्त्रकूर्चादीन् गव्यैश्चैवाभिषेचयेत् ॥ १०० ॥

*ஜலாதுத்தீர்ய தேவேசம் ஸ்தாந வேத்யோ பரிந்யஸேத் !*
*வ்யுபோஹ்யவஸ்த்ர கூர்சாதீந் கவ்யைஸ்சைவா பிஷேசயேத் !!*

ஜலத்திலிருந்து முருகனை எழுந்தருளச் செய்து வஸ்த்ர கூர்ச்சங்களை களைத்து பஞ்சகவ்யங்களால் (முதலியவைகளால்) அபிஷேகம் செய்ய வேண்டும்.

स्कन्दसूक्तं जपित्वाऽथ पवमानमुदीरयन् ।
अयंकुमारन्त्रेण मालामन्त्रेण देशिकः ॥ १०१ ॥

*ஸ்கந்த சூக்தம் ஜபித்வாத பவமாநமுதீரயந் !*
*அயங்குமார மந்த்ரேண மாலாமந்த்ரேண தேசிக: !!*

ஸ்கந்த சூக்தத்தையும், பவமாந சூக்தத்தையும் ஜபித்து, அயம் குமார மந்திரத்தினாலும், மாலா மந்திரத்தினாலும்

शुद्धाम्भसा तु संस्नाप्य रक्तवस्त्रेण वेष्टयेत् ।
गन्धपुष्पादिभिः पूज्य हृदयेन तु मन्त्रतः ॥ १०२ ॥

*சுத்தாம்பஸ்தாது ஸம்ஸ்நாப்ய ரக்தவஸ்த்ரேண வேஷ்டயேத் !*
*கந்த புஷ்பாதிபி: பூஜ்ய ஹ்ருதயேநது மந்த்ரத: !!*

5 சுத்தமான தீர்த்தத்தால் அபிஷேகம் செய்வித்து சிவப்பு வஸ்த்ரங்களை அணிவித்து சந்தன புஷ்பங்களினால் ஹ்ருதய மந்திரத்தினால் பூஜிக்கவும்.

कौतुकं बन्धयेत्तत्र स्कन्दशक्तिं गुरूत्तमः ।
पद्ममुद्रां नमस्कार षण्मुखीं दर्शयेत्ततः ॥ १०३ ॥

*கௌதுகம் பந்த யேத்தத்ர ஸ்கந்த சக்திம் குருத்தம: !*
*பத்மமுத்ராம் நமஸ்காரம் ஷண்முகீந்தர்ச யேத்தத: !!*

முருகனுக்கும், தேவியருக்கும் ரக்ஷாபந்தனம் செய்விக்கவும். பத்மமுத்ரை, நமஸ்கார முத்ரை, ஷண்முகீ முத்ரை காண்பிக்கவும்.

नैवेद्यं दापयित्वाऽथ ताम्बूलञ्च निवेदयेत् ।
मण्डपं विकिरान् क्षिप्त्वा प्रोक्षयेदर्घ्यवारिणा ॥ १०४ ॥

*நைவேத்யந்தாபயித்வாத தாம்பூலஞ்ச நிவேதயேத் !*
*மண்டபம் விகிராந் க்ஷிப்த்வா ப்ரோக்ஷயேதர்க்ய வாரிணா !!*

நைவேத்யம் கொடுத்து தாம்பூலம் ஸமர்பிக்கவும். விகிரம் என்ற பொரி முதலிய திரவ்யங்களை இறைத்தலை செய்து, அர்க்ய ஜலத்தினால் ப்ரோக்ஷித்து

शयने शाययेद्देवं प्राक्शिरश्चोर्ध्ववक्त्रकम् ।
शक्तिद्वयं द्विपार्श्वे तु शाययित्वा यथाविधि ॥ १०५ ॥

*சயநேஸாயயேத் தேவம் ப்ராக்சிரஸ்சோர்த்வ வக்த்ரகம் !*
*சக்திந்வயம் த்விபார்ஸ்வேது ஸாயயித்வா யதாவிதி !!*

கிழக்கு முகமாக மேல் நோக்கியவாறு சயனத்தில் முருகனை சயநம் செய்விக்கவும். இரண்டு தேவியரையும், 2 பக்கத்திலும் படுக்க வைக்க வேணும்.

वस्त्रेणाच्छादयेच्छक्ति द्वयञ्चैव पृथक्पृथक् ।
भूतशुद्धिं ततः कृत्वाऽन्तर्यजनमाचरेत् ॥ १०६ ॥

*வஸ்த்ரேணாச்சதயேச் சக்தி த்வயஞ்சைவ ப்ருதக்ப்ருதக !*
*பூதசுத்திம் தத: க்ருத்வா ப்யந்தர்யஜ நமாசரேத் !!*

2 தேவிமாரையும் வஸ்த்ரத்தினால் போர்த்தவும். பூதசுத்தி, அந்தர்யாகம் செய்யவும்

अयंकुमारमन्त्रेण गन्धपुष्पादिनार्चयेत् ।
आसनं मूर्तिमूलञ्च ब्रह्माङ्गञ्चप्रपूजयेत् ॥ १०७ ॥

*அயங்குமார மந்த்ரேணா கந்த புஷ்பாதி நார்சயேத !*
*ஆஸநம் மூர்த்தி மூலஞ்ச ப்ரஹ்மாங்கஞ்ச ப்ரபூஜயேத !!*

அயம் குமார மந்த்ரத்தினால் சந்தன புஷ்பங்களால் பூஜிக்கவும். பிம்பத்தை ஆஸன, மூர்த்தி, மூலம், ப்ரம்மாங்கத்தால் பூஜிக்கவும்.

सर्वलक्षणसंयुक्तान् कुम्भान् संगृह्य देशिकः ।
चतुर्विंशत्प्रस्थतोयैः पूरितं निष्कलं गुहम ॥ १०८ ॥

*ஸர்வ லக்ஷண ஸம்யுக்தாந கும்பாந ஸங்க்ருஹ்ய தேசிக:!*
*சதுர்விம்சது ப்ரஸ்த தோயை: பூரிதம் நிஷ்கலம் குஹம் !!*

எல்லா லக்ஷணமுடையதாயும் கும்பங்களை சேகரிக்கவும். 24 படி நீர் நிரம்பியதும், குற்றமற்றதும்

पक्वाबिम्बफलोपम्यं निर्दोषञ्च घनस्वनम् ।
स्कन्दकुम्भमिति प्रोक्तं शक्तिवज्रधरं न्यसेत् ॥ १०९ ॥

*பக்வ பிம்ப பலோ பம்யம் நிர்தோஷஞ்ச கநஸ்வநம்!*
*ஸ்கந்த கும்பம் இதி ப்ரோக்தம் சக்திவஜ்ரதரம் ந்யஸேத் !!*

பழுத்த கோவைப்பழம் போல் அழகானதும், தோஷ மற்றதும், கணீர் என்ற ஸப்தமுடையுமான கலசம், ஸ்கந்த கும்பம் எனப்படும். அதில் சக்தி வஜ்ரதரனான முருகனை பூஜிக்கவும்.

स्कन्दकुम्भमिति प्रोक्तं द्रोणतोयेन पूरितम् ।
समृद्धां लक्षणोपेतां गृहीत्वा शक्तिवर्धनीम् ॥ ११० ॥

*ஸ்கந்த கும்பம் இதி ப்ரோக்தம் த்ரோணதோயேந பூரிதம்!*
*ஸம்ருத்தாம் லக்ஷணோபேதாம் க்ருஹீத்வா சக்தி வர்த்தநீம் !!*

2 மரக்கால் அளவு ஜலம் நிறைந்த கும்பம் ஸ்கந்த கும்பம் எனப்படும். தேவியின் வர்த்தனி கலசத்தை எல்லா லக்ஷண முடையதாக

त्रिवृत्सूत्रेण सवेष्ट्य प्रादक्षिण्याद्यवान्तरम् ।
द्रोणतोयेन सम्पूर्णान् कुम्भान्सर्वान्सलक्षणान् ॥ १११ ॥

*த்ரிக்ருத ஸூத்ரேண ஸம்வேஷ்ட்ய ப்ராதக்ஷிண்யாத்ய வாந்தரம்!*
*த்ரோண தோயேந ஸம்பூர்ணாந் கும்பாந் ஸர்வாந் ஸலக்ஷணாந் !!*

முவிழை நூலால் யவை அளவு இடைவெளி உள்ளதாக சுற்றி மரக்கால் அளவு நீர் நிரம்பியதாக எல்லா கலசங்களையும்

तन्तुनावेष्ट्य कुशलो गवाक्षसदृशान्तरम् ।
अस्त्रेण क्षाल्य च प्रोक्ष्य वस्त्रपूतैर्जलैश्शुभैः ॥ ११२ ॥

*தந்துநா வேஷ்ட்ய குசலோ கவாக்ஷ ஸதருசாந்தரம்!*
*அஸ்த்ரேண க்ஷால்ய ச ப்ரோக்ஷ்ய வஸ்த்ரபூதைர் ஜலைச் சுபை:!!*

பசுவின் கண் இடைவெளியுள்ளதாக நூல்சுற்றி அஸ்த்ரமந்திரத்தினால் அலம்பி ப்ரோக்ஷித்து வஸ்த்திரத்தினால் சுத்தம் செய்தும், நல்ல நீரால்

सर्वगन्धयुतैःपूर्य रक्तवस्त्रद्वयेन च ।
स्कन्दकुम्भं समावेक्ष्य वर्द्धन्यौ च पृथक्पृथक् ॥ ११३ ॥

*ஸர்வ கந்தயுதை: பூர்ய ரத்கவஸ்த்ர த்வயேந ச!*
*ஸ்கந்த கும்பம் ஸமாவேக்ஷ்ய வர்த்தந்யை ச ப்ருதக் ப்ருதக்!!*

எல்லா வாசனையுடையதாக நிரப்பி 2 சிவப்பு வஸ்த்ரம் அணிவித்து ஸ்கந்த கும்பத்திற்கும், வர்த்தனிக்கும் தனித்தனியாக அணிவித்து

स्कन्दवेरशिरो भागे कल्पयेदासनन्ततः ।
स्कन्दकुम्भन्तु विन्यस्य स्कन्दाद्यैस्सम्यगर्चयेत् ॥ ११४ ॥

*ஸ்கந்தபேர சிரோ பாகே கல்பயே தாஸநம் தத:!*
*ஸ்கந்த கும்பந்து விந்யஸ்ய ஸ்கந்தாத்யைஸ் ஸம்யகர்சயேத்!!*

ஸ்கந்த பிம்பத்தில் தலை பாகத்தில் வைத்து ஆசஸநம் கல்பித்து ஸ்கந்த மந்த்ரங்களால், ஸ்கந்த கும்பத்தை பூஜிக்கவும்

पञ्चरत्नानि विन्यस्य न्यसेदुत्तमकूर्चकम् ।
स्कन्दकुम्भं न्यसेन्मध्ये स्कन्दमन्त्रं सबीजयुक् ॥ ११५ ॥

*பஞ்ச ரத்நாநி விந்யஸ்ய ந்யஸேத் உத்தம கூர்ச்சகம்!*
*ஸ்கந்த கும்பம் ந்யஸேந் மத்யே ஸ்கந்த மந்த்ரம் ஸபீஜ யுக்!!*

பஞ்சரத்நங்களை கும்பத்தில் போட்டு உத்தம கூர்ச்சத்தை பீஜாக்ஷரத்துடன் கூடியதாக ஸ்கந்த கும்ப மத்தியில் வைக்கவும்.

आधाराख्यमनन्तञ्च धर्मादीन् कल्पकल्पवित् ।
अष्टशक्तिशकुन्याद्यां आसनमूर्तिमेव च ॥ ११६ ॥

*ஆதாராக்ய மநந்தஞ்ச தர்மாதீந் கல்ப கல்பவித்!*
*அஷ்ட சக்திச்சகுன்யாத்யாம் ஆஸநமூர்த்தி மேவ ச!!*

ஆதாரசக்தி, அநந்தாஸநம், தர்மாதி களுடைய சிம்மாசனம், யோகாஸநம், பத்மாஸநம், விமலாசநம், இவைகளால் பூஜித்து சகுனீ முதலான 9 சக்திகளையும் பூஜித்து ஆஸந மூர்த்தியை கல்பிக்கவும்.

सङ्कल्प्य च प्रसन्नात्मा सपुष्पांजलिहस्तकान् ।
प्रभामण्डलमध्यस्थं प्रत्योदितदिशामुखम् ॥ ११७ ॥

*ஸங்கல்ப்ய ச ப்ரஸந்நாத்மா ஸபுஷ்பாஞ்ஜலி ஹஸ்தவாந்!*
*ப்ரபாமண்டல மத்யஸ்தம் ப்ரத்யோதித திசாமுகம்!!*

பிரஸந்நமாக ஹ்ருதயத்தையுடைய புஷ்பாஞ்ஜலி ஹஸ்தத்துடன் பிரபாமண்டலத்தின் நடுவில் இருப்பவரும், உதய சூரியன் போல் பிரகாசிப்பவரும்

सहस्रादित्यसङ्काशं रत्नकुण्डलभूषितम् ।
करण्डमकुटोपेतं शुद्धयज्ञोपवीतिनम् ॥ ११८ ॥

*ஸஹஸ்ராதித்ய ஸங்காசம் ரத்நகுண்டல பூஷிதம்!*
*கரண்ட மகுடோபேதம் சுத்த யக்ஞோபவீதி நம்!!*

ஆயிரம் சூரியன் போல் பிரகாசிப்பவரும், ரத்ந குண்டலத்துடன் அலங்கரித்தவரும், கரண்ட மகுடம் தரித்து சுத்தமான பூணூலை அணிந்து

रक्तवर्णाम्बरालेपं माल्यादिभिरलंकृतम् ।
छन्नवीरकटीसूत्रपादनूरसंयुतम् ॥ ११९ ॥

*ரக்த வர்ணாம் பராலேபம் மால்யாதிபிரலம் க்ருதம்!*
*சந்நவீர கடீ ஸூத்ர பாதநூர ஸம்யுதம்!!*

சிகப்பு வஸ்த்ரம் தரித்து புஷ்பமாலைகளால் அலங்கரித்து, சந்நவீரம், அரைஞான், சலங்கை இவைகளால் அலங்கரிக்கப்பட்டவரும்.

मन्दस्मितं बालवेषं सुप्रसन्नं शुभेक्षणम् ।
यादृशं प्रतिमाकरं तादृशं भावयेद् बुद्धिमान् ॥ १२० ॥

*மந்தஸ்மிதம் பாலவேஷம் ஸுப்ரஸந்நம் சுபேக்ஷணம்!*
*யாத்ருசம் ப்ரதிமாகரம் தாத்ருசம் பாவ்ய புத்திமாந்!!*

புன் சிரிப்புடையவரும், இளமையான உருவம் உடையவரும், நல்ல பார்வை யுடையவரும், சுப்ரஸன்னமானவராக தியானித்து, ஆவாஹனம் செய்யவும். பிரதிஷ்டை செய்ய கூடிய பிம்பம் எந்த உருவ அமைப்போடு இருக்கிறதோ அவ்வாறாக வேதியானித்து ஆவாஹனம் செய்யவும்

स्कन्दस्य मूलमन्त्रेण स्कन्दं पद्मस्थमावहेत् ।
स्वागतं सद्यमन्त्रेण स्थापनं वामदेवतः ॥ १२१ ॥

*ஸ்கந்தஸ்ய மூலமந்த்ரேண ஸ்கந்தம் பத்மஸ்த மாவஹேத்!*
*ஸ்வாகதம் ஸத்யமந்த்ரேண ஸ்தாபநம் வாமதேவத:!!*

ஸ்கந்தத்தினுடைய மூலமந்திரத்தினால் தாமரையில் அமர்ந்தவராக ஸ்கந்தரை ஆவாஹனம் செய்யவும், ஸத்யோஜாத மந்திரத்தினால் ஸ்வாகதத்தையும், வாமதேவ மந்திரத்தினால் ஸ்தாபனத்தையும் செய்யவும்

अघोरेण निरोधन्तु सान्निध्यमीशमन्त्रतः ।
सम्मुखं पुरुषेणैव पाद्यमाचमनार्घ्यकम् ॥ १२२ ॥

*அகோரேண நிரோதந்து ஸாந்நித்ய மீசமந்த்ரத:!*
*ஸம்முகம் புருஷேணைவ பாத்யம் ஆசமநம் அர்க்யகம்!!*

அகோர மந்திரத்தினால் நிரோதத்தையும், ஈசான மந்திரத்தினால் ஸாந்நித்யமும், தத்புருஷ மந்திரத்தினால் ஸம்முகீ முத்ரையை காண்பித்து பாத்யம், ஆசமநம், அர்க்யம், கொடுத்து

गन्धपुष्पं हृदा दद्यात् धूपन्धूरसि मन्त्रतः ।
दीपं उद्दीप्यमन्त्रेण नैवेद्यञ्चान्नसूक्तकम् ॥ १२३ ॥

*கந்த புஷ்பம் ஹ்ருதா தத்யாத் தூபம் தூரஸி மந்த்ரத:!*
*தீபம் உத்தீப்ய மந்த்ரேண நைவேத்யம் அந்நம் ஸூக்தகம்!!*

சந்தன புஷ்பத்தை ஹ்ருதய மந்திரத்தினால் அளித்து, தூரஸி மந்திரத்தினால் தூபம் கொடுத்து, உத்தீப்ய மந்திரத்தினால் தீபம் அளித்து, அந்ந ஸூக்த மந்திரத்தினால் நைவேத்யம் கொடுத்து

ताम्बूलं हृदयेनैव तेनैवाचमनन्ददेत् ।
पद्ममुद्रां षण्मुखीञ्च नमस्कारान्प्रदर्शयेत् ॥ १२४ ॥

*தாம்பூலம் ஹ்ருதயேனைவ தேனைவாசமநம் ததேத்!*
*பத்மமுத்ராம் ஷண்முகீம் ச நமஸ்காராம் ப்ரதர்சயேத்!!*

ஹ்ருதய மந்திரத்தினால் தாம்பூலம் கொடுத்து, ஹ்ருதய மந்திரத்தினாலேயே ஆசமநம் கொடுக்கவும். பிறகு பத்மமுத்ரை, ஷண்முகீ முத்ரை, நமஸ்கார முத்ரை காண்பிக்கவும்

आवाह्य हृदयेनैव दिग्बन्धेदस्त्रमन्त्रतः ।
महावल्लीं देवसेनां श्यामरत्न समप्रभाम् ॥ १२५ ॥

*ஆவாஹ்ய ஹ்ருதயேனைவ திக்பந்தேத அஸ்த்ர மந்த்ரத:!*
*மஹாவள்ளீம் தேவஸேநாம் ச்யாமரத்ந ஸமப்ரபாம்!!*

ஹ்ருதய மந்திரத்தினால் ஆவாஹநமும், அஸ்த்ர மந்திரத்தினால் திக்பந்தனமும் செய்யவும். மஹாவள்ளீ, தேவஸேநாவை பச்சை, சிவப்பு நிறமுள்ளவராகவும்

सौम्यवक्त्रे पद्महस्ते वर्धन्यौ स्वस्वबीजतः ।
आवाह्य दक्षिणे वामे पद्ममुद्रां प्रदर्शयेत् ॥ १२६ ॥

*ஸௌம்ய வக்த்ரே பத்மஹஸ்தே வர்த்தந்யௌ ஸ்வஸ்வபீஜத:!*
*ஆவாஹ்ய தக்ஷிணே வாமே பத்மமுத்ராம் ப்ரதர்சயேத்!!*

அழகான முகமும், கையில் தாமரை தரித்தவராகவும் தியானித்து, 2 வர்த்தனிகளில் அந்தந்த மூலமந்திரங்களை கூறி, வலது, இடது பக்கங்களில் ஆவாஹனம் செய்து, பத்மமுத்ரையை காண்பிக்கவும்

परितश्चाष्टकुम्भांश्च पूर्वादिषु क्रमान्न्यसेत् ।
जयन्ताख्यमग्निशिखं कृत्तिका पुत्रसंज्ञकम् ॥ १२७ ॥

*பரிதச்சாஷ்ட கும்பாம்ச்ச பூர்வாதிஷு க்ரமாந்ந்யஸேத்!*
*ஜயந்தாக்ய அக்நிசிகம் க்ருத்திகா புத்ரஸம்க்ஞகம்!!*

ஸ்கந்த கும்பத்தை சுற்றிலும் கிழக்கு முதலாக 8 கும்பங்களை ஸ்தாபிக்கவும், அதில் ஜயந்தன், அக்னிசிகன், க்ருத்திகாபுத்ரன்

अनलं तु भूतपतिं सेनान्यं गुहसंज्ञकम्।
हेमशूलं विशालाक्षं शक्तिवज्रधरं न्यसेत्॥ १२८ ॥

*அநலம் து பூதபதிம் ஸேநாந்யம் குஹஸம்க்ஞகம்!*
*ஹேமசூலம் விசாலாக்ஷம் சக்திவஜ்ரதரம் ந்யஸேத் !!*

(அநலன்), பூதபதி, ஸேநாநி, குஹன், ஹேமசூலன், விசாலாக்ஷன் இவர்களை சக்தி, வஜ்ரம் தரித்தவர்களாக பூஜிக்கவும்

स्वनामाद्यक्षरैश्चैव नमोऽन्तैर्नामभिः क्रमात्।
शक्तिञ्चैवाक्षमालाञ्च कमण्डलुधनुर्धरान्॥ १२९ ॥

*ஸ்வநாமாத்ய க்ஷைரஸ்சைவ நமோந்தைர் நாமபி: க்ரமாத்!*
*சக்திஞ்சைவாக்ஷமாலாஞ்ச கமண்டலு தநுர்தரான்!!*

அந்தந்த மூர்த்தியின் பெயர்களால் நமோந்தமாக பூஜிக்கவும். சக்தி, அக்ஷமாலை, கமண்டலு, வில்

वज्रं कृत्वा सुवर्णेन स्कन्दकुम्भे न्यसेत्पृथक्।
स्वर्णेन रचितं पद्मं वर्धन्योर्विन्यसेत्ततः॥ १३० ॥

*வஜ்ரம் க்ருத்வா ஸுவர்ணேந ஸ்கந்த கும்பே ந்யஸேத் ப்ருதக்!*
*ஸ்வர்ணேந ரசிதம் பத்மம் வர்த்தந்யோர் விந்யஸேத் தத:!*

வஜ்ரம், இவைகளை தங்கத்தால் செய்து ஸ்கந்த கும்பத்தில் வைக்கவும். தங்கதாமரை செய்து 2 வர்த்தனிக்கும் ஸமர்பிக்கவும்

रजतात्स्वस्तिकं कृत्वा कुम्भेष्वष्टसु विन्यसेत्।
नैवेद्यञ्चैव पानीयं ताम्बूलञ्च हृदा ददेत्॥ १३१ ॥

*ரஜதாத் ஸ்வஸ்திகம் க்ருத்வா கும்பேஷ்வஷ்டஸு விந்யஸேத்!*
*நைவேத்யம் சைவ பாநீயம் தாம்பூலம் ச ஹ்ருதா ததேத்!!*

வெள்ளியால் ஸ்வஸ்திகம் செய்து 8 கும்பங்களில் வைக்கவும். நைவேத்தியம், பாநீயம், தாம்பூலம் இவைகளை ஹ்ருதய மந்திரத்தினால் ஸமர்பிக்கவும்.

आत्मविद्या शिवाख्यञ्च जानुकण्ठशिरोऽवधि।
तत्वत्रयं साधिपतिं मूर्तिमूर्तीश्वरान्न्यसेत्॥ १३२ ॥

*ஆத்மவித்யா சிவாக்யஞ்ச ஜாநுகண்ட சிரோவதி!*
*தத்வத்ரயம் ஸாதிபதிம் மூர்த்தி மூர்த்திஸ்வராந்யஸேத் !!*

ஆத்ம தத்வம், வித்யா தத்துவம், சிவத்தவம் இவைகளை பாதத்திலிருந்து முழந்தாள் வரையிலும், முழந்தாள் முதல் கழுத்து வரையிலும் கழுத்து முதல் சிரோ பாகம் வரையிலும், தத்தத் த்ரயம்மாக கல்பித்து அதன் அதிபதிகளையும் மூர்த்தி மூர்த்தீஸ்வரர்களையும் பூஜிக்கவும்

मूर्तयः क्ष्मादयस्तत्र कार्तिकेयादिमूर्तिपाः।
पञ्चैकचतुरस्त्रीणी पञ्चत्रिचतुरत्रयः॥ १३३ ॥

*மூர்தயக்ஷ்மாதயஸ்தத்ர கார்த்தி கேயாதி மூர்த்திபா:!*
*பஞ்சைக சதுரஸ்த்ரீணி பஞ்சத்ரி சதுரத்ரய:!!*

மூர்த்திகள், க்ஷமா, முதலானவர்கள், மூர்த்திபர்கள், கார்த்திகேயன் முதலானவர்களாகும். 5, 1, 4, 3, 5, 3, 4, 3

अनेन विधिना कुम्भान् पूर्वाद्याशासु विन्यसेत्।
सुवर्णं सर्वकुम्भेषु न्यस्तव्यं फलकाङ्क्षिभिः॥ १३४ ॥

*அநேநவிதிநா கும்பாந் பூர்வாத்யாசஸு விந்யஸேத்:*
*ஸுவர்ணம் ஸர்வ கும்பேஷு ந்யஸ்தவ்யம் பலகாங்க்ஷிபி:!!*

இந்த எண் கணக்குப்படி கிழக்கு முதலான திசைகளில் அஷ்ட விம்சதி (28) கும்பங்களாக வைக்கவும். எல்லா கும்பங்களிலும் விருப்பப் பயனை அடைய விரும்புபவன் சுவர்ணத்தை சேர்க்கவும்

पच्चिमद्वारबाह्यान्ते नित्यद्वारं समर्चयेत् ।
शान्तिभूतिबलारोग्यं चतुर्दिक्षु सतोरणैः ॥ १३५ ॥

*பச்சிம த்வார பாஹ்யாந்த்தே நித்ய த்வாரம் ஸமர்ச்சயேத் !*
*சாந்தி பூதி பலா ரோக்யாம் சதுர்திக்ஷு ஸதோரணை:!!*

மேற்கு வாயில்படி வரையில் நித்யத்வார பூஜையை செய்யவும். சாந்தி பூதி, பல, ஆரோக்யம், என்ற பேரங்களாக 4 திசைகளிலும் தோரணங்களை பூஜிக்கவும்

शान्ति सुदेहं सुमुखमिन्द्रं पूर्वे समर्चयेत् ।
इन्द्राग्निमध्यमे भानुं वह्निकोणे हुताशनम् ॥ १३६ ॥

*சாந்திம் ஸுதேஹம் ஸுமுகம் இந்த்ரம் பூர்வேஸமர்ச்யேத் !*
*இந்த்ராக்நி மத்யமே பாநும் வஹ்நிகோண ஹுதாசநம் !!*

சாந்தி, ஸுதேஹம், ஸுமுகன், இந்த்ரன் இவர்களை கிழக்கு திசையில் பூஜிக்கவும். இந்த்ர கும்பத்திற்கும், அக்னி கும்பத்திற்கும் நடுவில் சிவஸூர்யனை பூஜிக்கவும். ஆக்நேய கோணத்தில் அக்னிடை பூஜிக்கவும்.

याम्ये विद्यां महावल्लीं ततः सेनापतिं यमम् ।
निर्ऋतिं च महाविष्णुं लक्ष्मीं निर्ऋतिगोचरे ॥ १३७ ॥

*யாம்யே வித்யாம் மஹாவல்லீம் ததஸ்ஸேநாபதிம்யமம் !*
*நிர்ருதி மஹாவிஷ்ணும் லக்ஷ்மீம் நிருருதி கோசரே !!*

தெற்கில் வித்யா கலை மஹாவள்ளீ, ஸேநாபதி, யமன், இவர்களையும், நிருருதியில் நிருருதி, மஹாவிஷ்ணு, லக்ஷ்மீ இவர்களை பூஜிக்கவும்.

आप्येति निवृत्तिं चिकिनं गजं वरुणमस्त्रकम् ।
वायुं गणेशं क्षेत्रेशं वायव्यां तेचि पूजयेत् ॥ १३७ ॥

*ஆப்யேதி நிவ்ருத்திம் சிகிநம் கஜம் வருண மஸ்த்ரகம் !*
*வாயும் கணேசம் க்ஷேத்ரேசம் வாயவ்யாம் திசி பூஜயேத் !!*

மேற்கில் நிவ்ருத்தி கலை மயூரம், கஜம், வருணன், அஸ்த்ரகம், இவர்களையும் வாயு திசையில் கணேசன், க்ஷேத்ர பாலகர், வாயு இவர்களை பூஜிக்கவும்.

प्रतिष्ठां देवसेनाञ्च सुमित्रं सोमगुत्तरे ।
ईशानञ्च चतुर्वक्त्रं गुरुमीशानगोचरे ॥ १३९ ॥

*ப்ரதிஷ்டாம் தேவஸேநாஞ்ச ஸுமித்ரம் ஸோமம் உத்தரே !*
*ஈசாநம் சதுர்வக்த்ரம் குரும் ஈசாந கோசரே !!*

வடக்கில் ப்ரதிஷ்டாக்களை, தேவஸேநா, ஸுமித்ரன், ஸோமன் இவர்களையும், ஈசான திசையில் ஈசானன், ப்ரம்மா, ஸப்தகுரு இவர்களை பூஜிக்க வேண்டும்.

तत्तत्स्वनाममन्त्रेण सर्वकुम्भान्समर्चयेत् ।
दशायुधानि संपूज्य हुं फडन्तं स्वनामतः ॥ १४० ॥

*தத்தத் ஸ்வநாமமந்த்ரேண ஸர்வகும்பாந்ஸமர்ச்சயேத் !*
*தசாயுதாநி ஸம்பூஜ்ய ஹும்பட ந்த ஸ்வநாமத:!!*

அந்தந்த மூர்த்திகளால் அந்தந்த கும்பங்களை பூஜிக்கவும், தசாயுதங்களை அந்தந்த பேரங்களுடன் முடிவில் ஹும்பன் நம: என்று வருவதாக பூஜிக்கவும் (வஜ்ராயுதம் ஹும்பன் நம:)

भो भो शक्र त्वया स्वस्यां दिशि विघ्नप्रशान्तये ।
सावधानेन यागान्तं यावत्स्थेयं गुहाज्ञया ॥ १४१ ॥

*போபோ சக்ர த்வயாஸ்வஸ்யாம் திசிவிக்நப்ரசாந்தயே!*
*ஸாவதாநே நயாகாந்தம் யாவத்ஸ்தேயம் குஹாஜ்ஞயா!*

ஏ! இந்த்ரனே உன்னால் உன்னுடைய திசையில் இடையூறுகள் நீங்கும் பொருட்டு, யாகம் முடியும் வரையில் பொருமையாக முருகனின் உத்தரவினால் இங்கு இருப்பீராக

इत्येवं दशलोकोशान् प्रत्येकं श्रावयेद्गुरु: ।
दर्पणं पूर्णकुम्भञ्च मयूरं युग्मचामरम् ॥ १४२ ॥

*இத்யேவம்தச லோகேசாந் ப்ரத்யேகம் ச்ராவயேத்குரு:!*
*தர்பணம் பூர்ணகும்பஞ்ச மயூரம் யுக்ம சாமரம்!!*

என்ற ஸ்லோகத்தை ஒவ்வொரு திக்பாலகர்களுக்கும் அவருடன் பெயரை கூறி அனுமதி பெறவும், கண்ணாடி, பூர்ண கும்பம், மயில், இரட்டை சாமரம்,

श्रीवत्सं स्वस्तिकं शङ्खं दीपो देवाष्टमङ्गलम् ।
तेषु सम्पूज्येन्मन्त्री गङ्गाद्यष्टनदी: क्रमात् ॥ १४३ ॥

*ஸ்ரீவத்ஸம் ஸ்வஸ்திகம் சங்கம் தீபோ தேவாஷ்டமங்களம்!*
*தேஷு ஸம்பூஜயேந்மந்த்ரீ கங்காத்யஷ்டநதீ: க்ரமாத்!!*

ஸ்ரீ வத்ஸம், ஸ்வஸ்திகம், சங்கம், தீபம் ஆகிய அஷ்டமங்களத்தை ஸ்தாபித்து அவைகளில் கங்கா என்ற 8 நதிகளையும் முறைப்படி பூஜிக்கவும்

गङ्गाञ्च यमुनाञ्चैव नर्मदाञ्च सरस्वतीम् ।
सिन्धुं गोदावरीञ्चैव कावेरीं कुमारीं तत: ॥ १४४ ॥

*கங்காம்ச யமுநாம் சைவ நர்மதாம்ச ஸரஸ்வதீம்!*
*ஸிந்தும் கோதாவரீம் சைவ காவேரீம் குமரீம் தத:!!*

கங்கை, யமுனை, நர்மதை, ஸரஸ்வதி, ஸிந்து, கோதாவரீ, காவேரீ, குமரீ இவர்களை பூஜிக்கவும்

तृणबन्धांञ्च कम्पाञ्च वंशे स्तम्भे यथाक्रमम् ।
पृथिव्यादीनि तत्त्वानि पूजयेन्मण्डपे सुधी: ॥ १४५ ॥

*த்ருண பந்தாஞ்சகம் பாஞ்ச வம்சே ஸ்தம்பே யதாக்ரமம்!*
*ப்ரதிவ்யாதீநி தத்வாநி பூஜயேந் மண்டபே ஸுதீ:!!*

கீற்று, கம்பம், மூங்கில், ஸ்தம்பம் இவைகளை முறையாக ப்ருதிவீ முதலான 5 தத்துவங்களை பூஜிக்கவும்

मण्डपञ्च गुहव्याप्तं निर्विघ्नं भाव्य तत्पर: ।
ऋग्वेदं पूर्वदिग्भागे यजुर्वेदन्तु दक्षिणे ॥ १४६ ॥

*மண்டபம்ச குஹவ்யாப்தம் நிர்விக்நம் பாவ்ய தத்பரம்!*
*ரிக்வேதம் பூர்வதிக்பாகே யஜுர்வேதந்து தக்ஷிணே!!*

மண்டபத்தை சுற்றி முருகன் எங்கும் வியாபித்தாக பாவித்து இடையூறு இல்லாததாகவும் பாவிக்கவும் கிழக்கில் ரிக் வேதத்தையும், தெற்கில் யஜுர் வேதத்தையும்

पश्चिमे सामवेदञ्च उदीच्यां पञ्चशान्तिकम् ।
मालामन्त्रं स्कन्दसूक्तं गायत्रीं पञ्चशान्तिकम् ॥ १४७ ॥

*பச்சிமே ஸாமவேதஞ்ச உதீச்யாம் பஞ்ச சாந்திகம்!*
*மாலா மந்த்ரம் ஸ்கந்த ஸூக்தம் காயத்ரீம் பஞ்ச சாந்திகம்!!*

மேற்கில் ஸாம வேதத்தையும், வடக்கில் அதர்வன வேதத்தையும், பாராயணம் செய்யவும் மாலாமந்த்ரம், ஸ்கந்த ஸூக்தம், ஸ்கந்த காயத்ரீ பஞ்ச சாந்தி

आग्नेयादिषु कोणेषु जपित्वा मन्त्रवित्तमै: ।
आचार्यो मूर्तिपैस्सार्धं होमकर्म समाचरेत् ॥ १४८

*ஆக்நேயாதிஷு கோணேஷு ஜபித்வா மந்த்ர வித்தமை:!*
*ஆசார்யோ மூர்த்திபைஸ் ஸார்த்தம் ஹோமகர்ம ஸமாசரேத்!!*

இவைகளை ஆக்னேயம் முதலான திசைகளில் மந்திரம் அறிந்தவர்களால் ஜபிக்க சொல்லவும்.

कार्तिकेयो विशाखश्च गुहश्चैवासुरान्तकः ।
सेनानिः षण्मुखश्चैव मयूरवाहनस्तथा ॥ १४९ ॥

*கார்த்திகேயோ விசாகச்ச குஹச்சைவாஸுராந்தக: |*
*ஸேநாநீ ஷண்முகச்சைவ மயூரவாஹநஸ்ததா ||*

கார்த்திகேயன், விசாகன், குஹன், அஸுராந்தகன், ஸேநாநீ, ஷண்முகன், மயூர வாஹனன்

शक्तिपाणिरिति ख्याता एते चैवाष्टमूर्तिपाः ।
स्वनामाद्यक्षरेणैव कुण्डानां दक्षिणे यजेत् ॥ १५० ॥

*சக்தி பாணிரிதி க்யாதா ஏதேசைவாஷ்ட மூர்த்திபா: |*
*ஸ்வநாமாத்யக்ஷரேணைவ குண்டாநாம் தக்ஷிணே யஜேத் ||*

சக்தி பாணி, இவர்கள் அஷ்ட மூர்த்திகளாவார்கள், அந்தந்த பெயரின் முதலெழுத்தை முதலில் வைத்து மூர்த்திபவர்களை குண்டத்தில் பூஜிக்கவும்

अग्न्याधानादिकं सर्वमग्निकार्योक्त वर्त्मना ।
प्रधाने स्कन्दमावाह्य सब्रह्माङ्ग सलोचनम् ॥ १५१ ॥

*அக்ன்யாதாநாதிகம் ஸர்வம் அக்நிகார்யோக்த மாசரேத் |*
*ப்ரதாநே ஸ்கந்தம் ஆவாஹ்ய ஸப்ரம்மாங்கம் ஸலோசநம் ||*

அக்னி கார்ய முறைப்படி செய்யவும். ப்ரதாந குண்டத்தில் ஸுப்ரமண்யரை ப்ரம்மமந்த்ரம், அங்க மந்த்ரம், நேத்ர மந்த்ரத்துடன் பூஜிக்கவும்.

तत्वत्रयं साधिपति मूर्तिमूर्तीश्वरान्वितम् ।
महावल्लीं देवसेनां सहितं सम्प्रपूजयेत् ॥ १५२ ॥

*தத்வத்ரயம் ஸாதிபதிம் மூர்த்தி மூர்த்தீச்வராந்விதம் |*
*மஹாவல்லீந்தேவஸேநாம் ஸஹிதம் ஸம்ப்ரபூஜயேத் ||*

தத்வத்ரயம் அதன் அதிபதிகள் மூர்த்தி, மூர்த்தீஸ்வரர்கள், மஹா வள்ளீ, தேவஸேநா இவர்கள் கூடியதாக பூஜிக்கவும்

पालाशखादिराश्वत्थवटबिल्वशमी तथा ।
प्लक्षः पश्चादपामार्गमुदुम्बरमितीरितम् ॥ १५३ ॥

*பாலாசகாதிராஸ்வத்த வடபில்வசமீததா |*
*ப்லக்ஷ:பஸ்சாதபாமார்கம் உதும்பரம் இதீரிதம் ||*

புரசு, கருங்காலி, அரசு, ஆல், வில்வம், வன்னி, இச்சி, நாயுருவி, அத்தி,இந்த ஸமித்துக்களையும்

प्रधानाद्यग्निकुण्डानां समिधो नव कीर्तिताः ।
सार्द्रा सत्वचसपलाशाश्च सप्ररोहा अनिन्दिताः ॥ १५४ ॥

*ப்ரதாநாத்யக்நி குண்டாநாம் ஸமிதோநவ கீர்த்திதா: |*
*ஸார்த்ர ஸத்வக் பலாசாஸ்ச ஸப்ரரோஹாதிநிந்திதா: ||*

ப்ரதாந குண்டம் முதல் 9 குண்டங்களின் ஸமித்து கூறப்படுகிறது. அந்த ஸமித்துக்கள் ஈரப்பசை உள்ளதாகவும், தோலுள்ளதாகவும் நன்கு விளைந்ததாகவும், குற்றமற்றதாகவும், புரசு முதலிய ஸமித்துக்கள் இருக்க வேண்டும்.

कनिष्ठांगुलनाहं स्याद्द्वादशाङ्गुलमायताः ।
समिदाज्य चरुं लाजं यवं सक्तुञ्च सर्षपम् ॥ १५५ ॥

*கநிஷ்டாங்குல நாஹம்ஸ்யாத் த்வாதசாங்குலமாயதா: |*
*ஸமிதாஜ்ய சரும்லாஜம் யவம் ஸக்துஞ்சஸர்ஷபம் ||*

சுண்டுவிரல் பருமன் கனம் உள்ளதாகவும், 12 அங்குலம் நீளமுள்ளதாகவும் இருக்க வேண்டும். ஸமித்து, நெய், அன்னம், பொறி, யவை, ஸத்துமாவு, கடுகு

तिलं मुद्गं गुलं चैव मधु क्षीरं पुनर्दधि ।
द्रव्यं त्रयोदशं प्रोक्तं होमयेत्तु यथा क्रमम् ॥ १५६ ॥

*திலமுத்கம் குளம் சைவ மதுக்ஷீரம் புநர் ததி।*
*த்ரவ்யம் த்ரயோதசம் ப்ரோக்தம் ஹோமயேத்து யதாக்ரமம் ॥*

எள், பயிறு, வெல்லம், தேன், பால் தயிர் ஆகிய 13 திரவ்யங்களை முறைப்படி ஹோமம் செய்யவும்.

मूलमन्त्रं षडङ्गैश्च समिधादीनि मन्त्रवित् ।
शतमर्धं तदर्धं वा मूलमन्त्रेण देशिकः ॥ १५७ ॥

*மூலமந்த்ர ஷடங்கைச்ச ஸமிதாதீநி மந்த்ரவித்।*
*சதம் அர்த்தம் ததர்த்தம்வா மூலமந்த்ரேண தேசிக: ॥*

மூலமந்திரத்தினாலும், ஷடங்க மந்திரத்தினாலும் ஹோமம் செய்ய வேண்டும், 100, 50 என்ற எண்ணிக்கையால் மூலமந்திரத்தினால் ஹோமம் செய்யவும்.

ब्रह्माङ्गानां दशांशं स्यान्मूलार्धं मूर्तिपाहुतिः ।
मूर्तिपा जुहुयात् दिक्षु सर्वांश्च स्वस्वमन्त्रतः ॥ १५८ ॥

*ப்ரம்மாங்காநாம் தசாம்சம் ஸ்யாத் மூலார்த்தம் மூர்த்திபாஹுதி:।*
*மூர்த்திபாஜுஹுயாத்திக்ஷு ஸர்வாம்ச்ச ஸ்வஸ்வ மந்த்ரத: ॥*

ப்ரம்ம மந்த்ரம், அங்க மந்த்ரம், மூலமந்திரத்தில் 10 ல் 1 பாகம் ஹோமம் செய்ய வேணும். மூலமந்திரத்தின் பாதி எண்ணிக்கை மூர்த்திபர்களின் பெயர் கூறி ஹோமம் செய்யவும். எல்லா திசைகளில் உள்ள குண்டங்களில் அந்தந்த மூர்த்திபர்களை ஹோமம் செய்யவும்.

स्कन्दगायत्रिमन्त्रेण प्रतिकुण्डं विशेषतः ।
शतमर्धं तदर्धं वा सर्पिषा जुहुयात्सुधीः ॥ १५९ ॥

*ஸ்கந்த காயத்ரி மந்த்ரேண ப்ரதிகுண்டம் விசேஷத:।*
*சதமர்த்தம் ததர்த்தம் வா ஸர்பிஷா ஜுஹுயாத ஸுதீ: ॥*

ஒவ்வொரு குண்டத்திலும் ஸ்கந்த காயத்ரி மந்திரத்தினால் ஹோமம் செய்யவும். 100, 50, 25, ஆவ்ருத்தி நெய்யினால் ஹோமம் செய்யவும்.

द्रव्यान्ते व्याहृतीर्हुत्वा स्पृष्ट्वा स्पृष्ट्वा च बेरकम् ।
स्कन्दसूक्तैश्च मन्त्रैश्च षड्भिः षड्वारमाज्यतः ॥ १६० ॥

*த்ரவ்யாந்தே வ்யாஹ்ருதீர் ஹுத்வா ஸ்ப்ருஷ்ட்வா ஸ்ப்ருஷ்டாசபேரகம்।*
*ஸ்கந்த ஸூக்தைஸ்ச மந்த்ரைஸ்ச ஷட்பி:ஷட்வார மாஜ்யத: ॥*

திரவ்ய ஹோமத்தின் முடிவில் வ்யாஹ்ருதி மந்திரத்தால் பிம்பத்தை ஸ்பருசித்து ஹோமம் செய்யவும். (சம்பாதாஹுதி செய்யவும்), ஸ்கந்த ஸூக்தம், ஷண்மந்த்ரம் இவைகளை 6 தடவை நெய்யினால் ஹோமம் செய்யவும்.

जगद्भुवादिषण्मूर्तिमन्त्रैश्चैव हुनेत्सुधीः ।
अयंकुमारमन्त्रेण होमयेत् षोडशाहुतीः ॥ १६१ ॥

*ஜகத்புவாதி ஷண்மூர்த்தி மந்த்ரைஸ்சைவ ஹுநேத்ஸுதீ:।*
*அயங்குமார மந்த்ரேண ஹோமயேத் ஷோடசாஹுதீம் ॥*

ஜகத்புவம் முதலான மந்திரங்கள் ஷண்மூர்த்தி மந்திரங்கள் இவைகளால் ஹோமம் செய்யவும். அயம்குமாரமந்த்ரம் 16 தடவை ஹோமம் செய்யவும்.

मालामन्त्रेण मन्त्रज्ञो जुहुयाच्छिरसाहुतिम् ।
हुत्वैवं सर्वकुण्डेषु कुर्यात्तु शिरसा हुनेत् ॥ १६२॥

*மாலாமந்த்ரேண மந்த்ரஜ்ஞோ ஜுஹுயாச்சிரஸாஹுதிம்।*
*ஹுத்வைவம் ஸர்வகுண்டேஷு குர்யாத்து சிரஸாஹுநேத் ॥*

மாலா மந்திரத்தினால் பிம்ப சிரஸில் (சம்பாதஹோமம்) செய்யவும், எல்லா குண்டத்திலும் சிரோ மந்திரத்தினால் ஹோமம் செய்யவும்.

सर्वद्रव्यसमायुक्तं हव्यवाहेन होमयेत् ।
दृढद्रव्यं करेणैव द्रवद्रव्यं स्रुवेण च ॥ १६३ ॥

*ஸர்வத்ரவ்ய ஸமாயுக்தம் ஹவ்ய வாஹேந ஹோமயேத் /*
*த்ரடத்ரவ்யம் கரேணைவ த்ரவ த்ரவ்யேஸ்ருவேணச //*

எல்லா த்ரவ்யத்தினாலும் ஹவ்ய வாஹன ஹோமம் செய்யவும். கெட்டியான த்ரவ்யங்களை கையினாலும் த்ரடமான திரவ்யங்களை ஸ்ருவத்தினாலும்

बीजानी कर्षयेच्चैव लाजमञ्जलिना हुनेत् ।
उपोष्यतो गुरुस्त्वैवं रात्रिशेषं व्यपोह्य च ॥ १६४ ॥

*பீஜாநி கர்ஷயேச்சைவ லாஜம் ஞலிநா ஹுநேத் /*
*உபோஷ்யதோ குருஸ்த்வைவம் ராத்ரிசேஷம் வ்யபோஹ்யச //*

தான்யம், மருந்து இவைகளை கர்ஷம் என்ற 4 விரல்களுக்கு இடைப்பட்ட அளவால் ஹோமம் செய்யவும், பொறியை அஞ்சலி ஹஸ்தத்தினால் ஹோமம் செய்யவும், ஆச்சார்யன் கண்விழித்து கொண்டு மீதி இரவை கழித்து

मूर्तिपैस्सह संस्नात्वा नित्यकर्मकृतो गुरु: ।
सोष्णीषस्सोत्तरीयश्च हैमपञ्चाङ्गभूषण: ॥ १६५ ॥

*மூர்த்திபை: ஸஹசம் ஸ்நாத்வா நித்ய கர்மக்ருதே குரு:/*
*ஸோஷ்ணீஷஸ்ஸோத்தரீயஸ்ச ஹைமபஞ்சாங்க பூஷண://*

மூர்த்திபர்களுடன் ஸ்நானம் செய்து நித்ய அநுஷ்டானங்கள் செய்து தலைப்பாகை உத்தரீயம் இவைகளை அணிந்து தங்கத்தாலான 5 வித ஆபரணங்களை அணிந்து (மோதிரம், கடகம், அரைஞான், காதணி, பூணூல்) தரித்தவராயும்

शिवद्विजकुलोद्भूत: शिवशास्त्रविशारद: ।
सामान्यार्घ्यं विशेषार्घ्यं पञ्चगव्यानि साधयेत् ॥ १६६ ॥

*சிவத்விஜகுலோத்பூத: சிவசாஸ்த்ர விசாரத:/*
*ஸாமாந்யார்க்யம் விசேஷார்க்யம் பஞ்சகவ்யாநிஸாதயேத் //*

சிவாச்சார்ய வம்சத்தில் பிறந்து சிவாகமத்தை அறிந்தவராயும் உள்ள ஆச்சார்யன், ஸாமான்யார்க்யம், விசேஷார்க்யம், பஞ்சகவ்யம் இவைகளை தயாரித்து கொள்ளவும்

पूर्ववद्द्वारपूजादि दिग्देवांस्तु समार्चयेत् ।
आसनावरणानान्तु हुत्वाऽप्येकैकमाहुतिम् ॥ १६७ ॥

*பூர்வவத் த்வார பூஜாதி திக்தேவாம்ஸ்து ஸமர்சயேத் /*
*ஆஸநாவரணாநாந்து ஹுத்வாப்யேகைக மாஹுதீம் //*

முன்பு போல் த்வார பூஜை திக்பாலகர் பூஜை செய்து, ஆஸந, ஆவரண பூஜை செய்து அக்னிகார்யம் செய்து ஆவரண தேவதைகள் ஹோமம் செய்யவும்.

पूर्णाहुतिं तत: कृत्वा ज्ञानखड्गधरो गुरु: ।
देशिकं तोषयेद्देवं सन्निधीकरणाय च ॥ १६८ ॥

*பூர்ணாஹுதிம் தத: க்ருத்வா ஞாநகட்க தரோகுரு:/*
*தேசிகம் தோஷயேத்தேவம் ஸந்நிதீ கரணாயச //*

பூர்ணாஹுதி செய்து ஞாந கட்கத்தை தரித்து ஆச்சார்யனை சந்தோஷித்து தெய்வ ஸந்நிதீ கரணத்திற்காக.

आचार्यं पूजयेत्कर्ता गोभूमिधनकाञ्चनैः ।
अधमं दशनिष्कन्तु द्विगुणं मध्यमं स्मृतम् ॥ १६९ ॥

*ஆசார்யம் பூஜயேத் கர்த்தா கோபூமி தநகாஞ்சநை:!*
*அதமம் தசநிஷ்கந்து த்விகுணம் மத்யமம்*
*ஸ்ம்ருதம் !!*

யஜமானன் பசு, பூமி, தநம், ஸ்வர்ணம் இவைகளால் பூஜிக்கவும். 10 நிஷ்க தக்ஷிணை அதமம் என்றும் 20 நிஷ்கம் மத்யமம் என்றும்

उत्तमं त्रिगुणं ज्ञेयं देशिकस्य तु दक्षिणा ।
तस्यैवं पञ्चमांशैकं मूर्त्तिपानान्तु दक्षिणा ॥ १७० ॥

*உத்தமம் த்ரிகுணம் ஞேயம் தேசிகயஸ்து தக்ஷிணா!*
*தஸ்யைவம் பஞ்சாம்சைகம் மூர்த்திபாநாந்து*
*தக்ஷிணா !!*

30 நிஷ்கம் உத்தமமென அறிந்து ஆச்சார்யனுக்கு தக்ஷிணை கொடுக்கவும். ஆச்சார்யனிடம் சொல்லி 5 ல் 1 பாகம் மூர்த்திபர்களின் தக்ஷிணையாகும்.

जापकान्वास्तुहोतारं तदर्धेनैव तोषयेत् ।
दैवज्ञं शिल्पिनञ्चैव तोषयेन्मूर्तिधारिवत् ॥ १७१ ॥

*ஜாபகாந்வாஸ்து ஹோதாரம் ததர்த்தேநைவ*
*தோஷயேத் !*
*தைவக்ஞம் சில்பிநம் சைவ தோஷயேந் மூர்த்தி*
*தாரவத் !!*

ஜபம் செய்பவர்களுக்கும் வாஸ்து ஆச்சார்யனுக்கும் மூர்த்திபர்கள் தக்ஷிணையில் பாதி அளவு தக்ஷிணையாகும். ஜோதிஷன் சில்பி இவர்களை மூர்த்திபர்கள் தக்ஷிணை அளவு தக்ஷிணை கொடுக்கவும்.

भक्तानां परिचाराणां यथाशक्त्या तु दक्षिणाम् ।
शयनाद्बिम्बमुत्थाप्य स्नानवेद्युपरि न्यसेत् ॥ १७२ ॥

*பக்தாணாம் பரிசாராணாம் யதாசக்த்யாது*
*தக்ஷிணாம் !*
*சயநாத் பிம்பமுத்தாப்ய ஸ்நாநவேத்யு பரிந்யஸேத் !!*

பக்தர்களுக்கும், பரிசாரகர்களுக்கும் சக்திக்கு தக்கவாறு தக்ஷிணை கொடுக்கவும். சயநத்திலிருந்து பிம்பத்தை எடுத்து ஸ்நான வேதிகையின் மேல் அமர்த்தவும்

घृतं शिरोर्पणं कुर्यात् हेमदूर्वाङ्कुराक्षतैः ।
पञ्चगव्येन संस्नाप्य पश्चात्पञ्चामृतादिभिः ॥ १७३ ॥

*க்ருதம் சிரோர்பணங்குர்யா*
*ஹேமதூர்வாங்குராக்ஷதை: !*
*பஞ்சகவ்யேநஸம்ஸ்நாப்ய பஸ்சாத்*
*பஞ்சாம்ருதாதிபி: !!*

தங்க தூர்வையாலும், அக்ஷதையாலும் (நெய்யை) க்ருத சிரோர்பணம் செய்யவும் பஞ்சகவ்யத்தினாலும் பஞ்சாமிர்தத்தினாலும் ஸ்நானம் செய்விக்கவும்

रक्ततोयैस्सुवर्णतोयैः शुद्धोदैर्गन्धतोयकैः ।
हिरण्यवर्णा ऋग्भिश्च पवमानैश्च मन्त्रतः ॥ १७४ ॥

*ரத்ந தோயை ஸ்வர்ண தோயை: சுத்தோதை: கந்த*
*தோயகை; !*
*ஹிரண்யவர்ணாருக்பிஸ்ச பவமாநைஸ்ச மந்த்ரத: !!*

ரத்நோதகம், ஸ்வர்ணோதகம், சுத்தோதகம், கந்தோதகம், இவைகளால் ஸ்நானம் செய்விக்கவும். அபிஷேகத்தின் போது ஹிரண்ய வர்ணா என்ற ரிக்குகள் பவமாந ஸூக்தம்

नमकञ्चमकञ्चैव स्कन्दसूक्तञ्च शान्तिकम् ।
जपित्वा स्नापयेत्स्कन्दं गन्धपुष्पादिनार्चयेत् ॥ १७५ ॥

*நமகம்சமகம் சைவ ஸ்கந்த ஸூக்தேந சாந்திகம் !*
*ஜபித்வா ஸ்நாபயேத் ஸ்கந்தம் கந்தபுஷ்பாதி*
*நார்ச்சயேத் !*

ருத்ரம், சமகம், ஸ்கந்த ஸூக்தம், சாந்தி மந்த்ரங்கள் இவைகளை ஜபித்து சந்தன புஷ்பங்களால் ஸ்கந்தரை பூஜிக்கவும்.

अर्घ्यपाणिर्गुरु: पश्चात्प्रविशेद्गर्भगेहकम् ।
मानुषे दैविके वाऽपि प्राग्वत्संस्कारसंयुते ॥ १७६ ॥

*அர்க்யபாணிர் குரு: பச்சாத் ப்ரவிசேத்*
*கர்பகேஹகம்!*
*மாநுஷே தைவிகேவாபி ப்ராக்வத் ஸம்ஸ்கார*
*ஸம்யுதே!!*

அர்க்ய பாத்ர அஸ்த்ரத்துடன் ஆச்சார்யன் கர்பக்ருஹம் நுழைந்து மாநுஷ பிம்பம், தெய்வீக பிம்பத்தில் முன்போல் ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட பிம்ப விஷயத்தில் சந்தோஷமான மனத்துடன்

कुशलो हृदयेनैव रत्नौषधिविगर्हितम् ।
विन्यस्य सुदृढं कृत्वा षण्मुखस्यासनाय च ॥ १७७ ॥

*குசலோ ஹ்ருதயே நைவ ரத்னௌஷதிவிகர்ஹிதம்!*
*விந்யஸ்ய ஸு த்ருடம்க்ருத்வா*
*ஷண்முகஸ்யாஸநாயச!!*

நவரத்னங்கள், ஔஷதி வர்க்கங்களால் நிரப்பப்பட்ட பீடத்தை ஷண்முகரின் ஆசனத்திற்காக நன்கு கெட்டிப்படுத்தி

सर्वातोद्यसमायुक्तं वेदघोषसमन्वितम् ।
अर्घ्यपाणि: पुरो गत्वाऽप्याचार्यो मूर्तिपैस्सह ॥ १७८ ॥

*ஸர்வாதோத்ய ஸமாயுக்தம் வேத கோஷைஸ்*
*ஸமந்விதம்!*
*அர்க்யாணி புரோகத்வா ப்யாசார்யோ*
*மூர்த்திபைஸ்ஸஹ!!*

எல்லா வாத்ய கோஷங்களுடன் வேத பாராயணங்களுடனும் அர்க்ய ஹஸ்தத்துடன் ஆச்சார்யன் மூர்த்திபர்களுடன் பிம்பத்துடனும்

सदारपुत्रास्सभ्राता यजमानो व्रजेदनु ।
हर्म्य प्रदक्षिणं कृत्वा गर्भगेहे गुहं नयेत् ॥ १७९ ॥

*ஸதார புத்ராஸ் ஸப்ராதா யஜமாநோ வ்ருஜேதநு!*
*ஹர்ம்யம் ப்ரதக்ஷிணம் க்ருத்வா கர்பகேஹே*
*குஹம் நயேத்!!*

மனைவி, குழந்தை சகோதரர்களுடன் யஜமானன் ஆச்சார்ய அனுசரித்து சென்று ஆலயத்தை வலம் வந்து கர்பக்ருஹத்தில் முருகனை ஸ்தாபிக்கவும்

सुलग्ने सुमुहूर्ते च यथा द्वारं तथा मुखम् ।
अथ ब्रह्म शिलोपेतं स्थापयेच्छरसंभवम् ॥ १८० ॥

*ஸுலக்னே ஸுமுஹுர்த்தேச யதாசாரந்ததாமுகம்!*
*அத ப்ரஹ்ம சிலோபேதம் ஸ்தாபயேச்சரஸம்பவம்!!*

நல்ல லக்னத்தில் நல்ல முஹூர்த்தத்தில் வாயில்படிக்கு உகந்ததாக வாயிற்படியை நோக்கியவாறும் ப்ரம்ம சிலையின் மேல் முருகனை ப்ரதிஷ்டை செய்யவும்.

दक्षिणे तु महावल्लीं देवसेनां तथोत्तरे ।
अष्टबन्धं तत: कुर्याद्यथा दृढतरं तथा ॥ १८१ ॥

*தக்ஷிணேத்து மஹாவல்லீம்*
*தேவஸேநாந்ததோத்தரே!*
*அஷ்டபந்தந்தத:குர்யாத் யதாத்ருட தரந்ததா!!*

தெற்கில் மஹா வள்ளியையும், வடக்கில் தேவஸேநாவையும் ஸ்தாபித்து கெட்டியாக இருக்கும்படி அஷ்டபந்தனத்தை அர்பணிக்கவும்

सर्वातोद्यसमायुक्तं कुम्भानुद्धृत्य देशिक: ।
मूर्तिपैश्शिरसावाह्य कुर्याद्धामप्रदक्षिणम् ॥ १८२ ॥

*ஸர்வாதோத்ய ஸமாயுக்தம் கும்பாநுத்ருத்யதேசிக:!*
*மூர்த்திபை: சிரஸாவாஹ்ய குர்யாத்தாம*
*ப்ரதக்ஷிணம்!!*

எல்லா வாத்ய முளக்கத்துடன் கும்பங்களை எடுத்து ஆச்சார்யன் மூர்த்திபர்களுடன் ஆலயம் வலம் வந்து முருகனுக்கு முன்பாக

देवस्यापे क्रमेणैव स्थण्डिलोपरि विन्ययेत् ।
प्रच्छन्नपटमानीय भक्त्या परमया युत:: ॥ १८३ ॥

*தேவஸ்யாக்ரேக்ரமேணைவ*
*ஸ்தண்டிலோபரிவிந்யஸேத் ।*
*ப்ரச்சந்ந படமாநீய பக்த்யாபரமயாயுத: ॥*

ஸ்தண்டிலத்தின் மேல் முறைப்படி கும்பங்களை வைக்கவும். திரையிட்டு மிகுந்த பக்தியுடன் ஆச்சார்யன்

आचार्यस्सुप्रन्नात्मा दृढचित्तो जितेन्द्रिय: ।
मूर्धादिकल्पितस्थानेष्वादिवर्णाल्लिखेत्क्रमात् ॥ १७४ ॥

*ஆசார்யஸ்ஸுப்ரஸந்நாத்மா த்ருட*
*சித்தோஜிதேந்த்ரிய: ।*
*மூர்த்நாதி கல்பிதஸ்தாநேஷ்வாதிவர்ணாந்*
*லிகேத்க்ரமாத் ॥*

ஆச்சார்யன் மகிழ்ந்த மனதுடன் த்ருடமான மனதுடன் இந்த்ரியங்களை அடக்கியவாறு சிரஸ் முதல் பாதம் வரை அந்தந்த ஸ்தானத்தினுடைய அக்ஷரங்களை (ந்யாஸம்) செய்யவும்.

सैकत्रिंशत्कलान्यासं मकुटादिक्रमान्न्यसेत् ।
जगद्भुवादीषण्मन्त्रैर्वक्त्रस्थानेषु विन्यसेत् ॥ १७५ ॥

*சைகத்ரிம் சத்கலாந்யாஸம் மகுடாதிக்ரமாந்ந்யஸேத் ।*
*ஜகத்புவாதி ஷண்மந்த்ரை: வக்த்ரஸ்தாநேஷு*
*விந்யஸேத் ॥*

31 கலையுடைய ஏகத்ரிம்சத் கலாந்யாஸத்தை சிரஸ் முதல் பாதம் வரை ந்யாஸம் செய்யவும். ஜகத்புவம் முதல் 6 மந்த்ரங்களால் சிரஸ் வக்த்ரம் முதலான ஸ்தானங்களில் ந்யாஸம் செய்யவும்

शिरोवदनहृन्नाभिगुह्याङ्घ्रिषु च तान् पुन: ।
मातृका बिन्दुसहिता देव्योरङ्गे क्रमान्न्यसेत् ॥ १८६ ॥

*சிரோவதந ஹ்ருந்நாபி குஹ்யாம் க்ரிஷு ச தாந்புந: ।*
*மாத்ருகாம் பிந்துஸஹிதாம்*
*தேவ்யோரங்கேக்ரமாந்ந்யஸேத் ॥*

சிரஸ் முகம், ஹ்ருதயம், நாபி, குஹ்யம், பாதம், இவைகளில் மேற்கூறிய ஜகத்புவாதி மந்திரங்களால் ந்யாஸம் செய்யவும். பிந்து என்கிற "ம்" என்கிற எழுத்துடன் "அ" முதல் "க்ஷ" வரை தேவியின் சரீரத்தின் முறைப்படி ந்யாஸம் செய்யவும்.

मुहूर्तं वेक्ष्य दैवज्ञे गुरवे संनिवेदयेत् ।
प्राणप्रकृतियोगन्तु ज्ञात्वा स्थापनमा चरेत् ॥ १८७ ॥

*முஹூர்த்தம் வேக்ஷ்ய தைவக்ஞ: குரவே*
*ஸந்நிவேதயேத் ।*
*ப்ராணப்ரக்ருதி யோகந்து ஞாத்வாஸ்தாபந*
*மாசரேத் ॥*

ஜோதிஷன் முஹூர்த்தத்தை அறிந்து ஆச்சார்யனிடம் தெரிவிக்கவும். ப்ராண ப்ரக்ருதி யோகத்தை அறிந்து ஸ்தாபனம் செய்யவும்.

यथोत्कृष्ट क्रमात् ज्ञात्वा तथा संस्थापयेद्गुरु: ।
कुम्भाद्बीजं समादाय बेरस्य हृदि विन्यसेत् ॥ १८८ ॥

*யதோத்க்ருஷ்டக்ரமம்ஞாத்வா ததாஸம்ஸ்தாபயேத்*
*குரு: ।*
*கும்பாத்பீஜம்ஸமாதாய பேரஸ்ய ஹ்ருதி*
*விந்யஸேத் ।*

உயர்ந்த முறைப்படி பிம்பத்தை ஸ்தாபிக்கவும், கும்பத்திலிருந்து மூலமந்த்ரத்தை எடுத்து பிம்ப ஹ்ருதயத்தில் சேர்க்கவும்.

ब्रह्माङ्गानि सर्वाजानि मूर्धादिक्रमशो न्यसेत् ।
मुकुलीं पद्ममुद्राञ्च षण्मुखीं धेनुमुद्रिकाम् ॥ १८९ ॥

*ப்ரஹ்மாங்காநிச பீஜாநி மூர்த்நாதி க்ரமஶோந்யஸேத் ।*
*முகுளீம் பத்மமுத்ராஞ்ச ஷண்முகீம் தேநு*
*முத்ரிகாம் ।*

ப்ரம்ம அங்க மந்திரங்களை பீஜாக்ஷரத்துடன் சிரஸ் முதல் பாதம் வரை சேர்க்கவும். முகளம், பத்மம், ஷண்முகி தேநு முத்ரைகளை

शक्तिमुद्रां नमस्कारन्दर्शयेत्तु गुहाय वै ।
स्कन्दकुम्भस्थतोयेन स्कन्दं संस्नापयेद्गुरुः ॥ १९० ॥

*சக்தி முத்ராம் நமஸ்காரம் தர்சயேத்து குஹாயவை!*
*ஸ்கந்தகும்பஸ்த தோயேந ஸ்கந்தம்*
*ஸம்ஸ்நாபயேத்குரு:!!*

சக்திநமஸ்கார முத்ரைகளை முருகனுக்கு காண்பிக்கவும், ஸ்கந்த கும்பதீர்தத்தால் ஸ்கந்தரை அபிஷேகம் செய்யவும்

वर्धन्योर्बीजमादाय देव्योश्चूचुकमध्यमे ।
पूर्वं सव्ये महावल्लीं देवसेनाञ्च वामके ॥ १९१ ॥

*வர்த்தந்யோர்பீஜமாதாய தேவ்யோச்சூசுக மத்யமே!*
*பூர்வம் ஸவ்யே மஹாவல்லீம் தேவஸேநாஞ்ச*
*வாமகே!!*

வர்த்தனீ பீஜ மந்திரத்தை தேவியரின் கழுத்து பாகத்தில் ஸமர்ப்பிக்கவும். முதலில் வலது பக்கம் மஹாவள்ளியையும் இடது பக்கத்தில் தேவஸேநாவையும்

विन्यस्य योनिमुद्राञ्च पद्माख्यं दर्शयेत्पृथक् ।
तत्तत्कुम्भस्थतोयेन स्नापयेच्छक्तिकाद्वयम् ॥ १०२ ॥

*விந்யஸ்ய யோநி முத்ராம்ச பத்மாக்யம் தர்சயேத்*
*ப்ருதக்!*
*தத்தத் கும்பஸ்த தோயேந ஸ்நாபயேச் சக்திகா*
*த்வயம்!!*

அவாஹித்து தனித்தனியாக யோநி முத்ரை, பத்ம முத்ரை காண்பிக்கவும். அந்த வர்த்தனி கும்ப தீர்த்தத்தால் வள்ளீ தேவஸேநாவை அபிஷேகம் செய்யவும்.

स्थापने शक्तिरहिते वर्धनीद्वयबीजकम् ।
पीठे पार्श्वद्वये विद्वान् स्थाप्य तत्राभिषेचयेत् ॥ १९३ ॥

*ஸ்தாபநே சக்தி ரஹிதே வர்த்தநீ த்வயபீஜகம்!*
*பீடே பார்ச்வ த்வயே வித்வாந் ஸ்தாப்ய*
*தத்ராபிஷேசயேத்!!*

2 தேவியரை பிரதிஷ்டை செய்யாத போது 2 வர்த்தநீ பீஜத்தை பீடத்தின் 2 பக்கமும் ஸ்தாபித்து அபிஷேகம் செய்ய வேண்டும்.

जयन्तादिघटाद्भिस्तु पीठे संस्थापयेत्क्रमात् ।
गन्धतोयेन संस्नाप्य गव्यैः पञ्चामृतैः पुनः ॥ १९४ ॥

*ஜயந்தாதி கடாத்பிஸ்து பீடே ஸம் ஸ்நாபயேத்*
*க்ரமாத்!*
*கந்ததோயேந ஸம்ஸ்நாப்ய கவ்யை: பஞ்சாம்ருதை:*
*புந:!!*

ஜயந்தன் முதலான கலச தீர்த்தங்களால் பீடத்தில் அபிஷேகம் செய்ய வேண்டும். வாசனை தீர்த்தத்தால் பஞ்சகவ்ய பஞ்சாம்ருதத்தால் செய்ய வேண்டும்.

स्कन्दसूक्तेन मन्त्रेण जपेत् षोडशवारकम् ।
शुद्धाम्भसा तु संस्नाप्य मूलब्रह्मषडङ्गकैः ॥ १९५ ॥

*ஸ்கந்த ஸூக்தேந மந்த்ரேண ஜபேத் ஷோடச*
*வாரகம்!*
*சுத்தாம்பஸாது ஸம்ஸ்நாப்ய மூலப்ரம்ம*
*ஷடங்ககை:!!*

ஸ்கந்த ஸூக்தத்தை 16 முறை ஜபம் செய்யவும். மூலமந்த்ரம், ப்ரம்ம மந்த்ரம், ஷடங்க மந்த்ரங்களால் சுத்தமான ஜலத்தினால் அபிஷேகம் செய்ய வேண்டும்.

पाद्यं वै सद्यमन्त्रेण वामेनाचमनं ददेत् ।
अर्घ्यं वै घोरमन्त्रेण वस्त्रं हृदयमन्त्रतः ॥ १९६ ॥

*பாத்யம் வைஸத்ய மந்த்ரேண வாமேநாசமநம்*
*ததேத்!*
*அர்க்யம் வை கோர மந்த்ரேண வஸ்த்ரம் ஹ்ருதய*
*மந்த்ரத:!!*

ஸத்யோஜாத மந்த்ரத்தினால் பாத்யத்தையும், ஆசமனத்தை வாமதேவ மந்திரத்தினாலும், அர்க்யத்தை அகோர மந்திரத்தினாலும், வஸ்த்ரத்தை ஹ்ருதய மந்த்ரத்தினாலும்

गन्धं तत्पुरुषेणैव पुष्पमीशानमन्त्रत: ।
भूषणं कवचेनैव धूपदीपौ हृदा ददेत् ॥ १९७ ॥

*கந்தம்தத் புருஷேணைவ புஷ்பம் ஈசாந மந்த்ரத:!*
*பூஷணம் கவசேநைவ தூபதீபௌ ஹ்ருதாததேத்!!*

சந்தனத்தை தத்புருஷ மந்திரத்தினாலும், புஷ்பத்தை ஈசாந மந்திரத்தினாலும் ஆபரணத்தை கவச மந்திரத்தினாலும், ஹ்ருதய மந்திரத்தினால் தூபதீபத்தையும் அர்ப்பணிக்கவும்

अभ्यर्च्याधारशक्त्यादिपञ्चावरणसंयुतम् ।
रक्ताम्बरैरक्तमाल्यै: रक्तगन्धैश्च भूषयेत् ॥ १९८ ॥

*அப்யர்ச்யாதார சக்த்யாதி பஞ்சாவரண ஸம்யுதம்!*
*ரக்தாம்பரைரக்த மால்யை ரக்தகந்தைச்ச பூஷயேத்!!*

ஆதாரசக்தி முதல் பஞ்சாவரணம் வரை பூஜித்து சிகப்பு வஸ்த்ரம், சிகப்பு மாலை, சிகப்பு செஞ்சந்தனம் இவைகளால் அலங்கரிக்கவும்.

पञ्चवर्णहविर्दद्यात् अन्नसूक्तेन मन्त्रत: ।
ताम्बूलाद्युपचाराणि सर्वाणि च हृदा ददेत् ॥ १९९ ॥

*பஞ்சவர்ன ஹவிர்தத்யாத் அன்னஸூக்தேந மந்த்ரத:!*
*தாம்பூலாத்யுபசாராணி ஸர்வாணிச ஹ்ருதா ததேத்!.*

5 விதமான அன்னம், ஹவிஸ் இவைகளை அன்ன ஸூக்த மந்திரத்தினால் நிவேதனம் செய்து தாம்பூலம் முதலிய உபசாரங்களை ஹ்ருதய மந்திரத்தினால்

स्वसूत्रं देवदेवीनामुद्वाहं कर्म कारयेत् ।
चतुर्थदिवसे विप्र शेषहोमं समाचरेत् ॥ २०० ॥

*ஸ்வஸூத்ராம் தேவ தேவீநாம் உத்வாஹம்கர்ம காரயேத்!*
*சதுர்த்தே திவஸேவிப்ர சேஷ ஹோமம் ஸமாசரேத்!!*

பிறகு தேவி, தேவியர்க்கு கல்யாண உத்ஸவம் செய்யவும். 4 வது சேஷ ஹோமம் என்கிற ஹோமங்களை செய்யவும்.

भूदानं देशिकायैव दद्यात् कर्ता यथा बलम् ।
ब्राह्मणान् भोजयेत्पश्चात् दीनानन्धांश्च भोजयेत् ॥ २०१ ॥

*பூதாநாம் தேசிகாயைவ தத்யாத் காாயதாபலம்!*
*ப்ராஹ்மணாந் போஜயேத் பஸ்சாத் தீநாநந்தாம்ஸ்ச பூஜயேத்!!*

பூதானத்தை ஆச்சார்யனுக்கு யஜமானன், சக்திக்கு தகுந்தவாறு அளிக்கவும், ப்ராம்மணர்களுக்கு உணவளித்து ஏழைகள் கண், தெரியாதவர்களுக்கும் உணவளிக்கவும்

तदन्ते स्नपनं कुर्यात् वित्तशाठ्यन्न कारयेत् ।
एवं य: कुरुते मर्त्य: स पुण्यगतिमाप्नुयात् ॥ २०२ ॥

*ததந்தே ஸ்நபநங்குர்யாத் வித்தஸ்லாட்யந்ந காரயேத்!*
*ஏவம்ய: குருதே மர்த்ய: ஸபுண்யாகதி மாப்நுயாத்!!*

பிறகு பணக்குறைவின்றி ஸ்நபனாபிஷேகம் செய்விக்கவும், இவ்வாறு எவன் ஒருவன் செய்கிறானோ அவன் நல்ல புண்ய கதியை அடைகிறான்.

आयु: पुत्रकलत्रञ्च वसुनिद्यायशो बलम् ।
सौभाग्यं महती लक्ष्मीमरोगत्वमनाकुलम् ॥ २०३ ॥

*ஆயு:புத்ர களத்ரஞ்ச வஸுர்வித்யாய சோபலம்!*
*ஸௌபாக்யம் மஹதீம்லக்ஷ்மீம் அரோகத்வ மநாகுலம்!!*

ஆயுள், குழந்தை, மனைவி, ஐச்வர்யம், கல்வி புகழ், பலம், ஸௌபாக்யம், பெருத்த ஐஸ்வர்யம், அளவில்லாத ஆரோக்யம் ஒற்றுமை இவைகளை

इहैव लब्ध्वा भूपृष्ठे भुक्त्वा भोगान् यथेप्सितान् ।
कर्ता कारयिता चैव कौमारं लोकमाप्नुयात् ॥ २०४ ॥

*இஹைவ லப்த்வா பூப்ருஷ்டே புக்த்வா போகாந்ய*
*தேப்ஸிதாந் /*
*கர்த்தாகாரயிதாசைவ கௌமாரம் லோக மாப்நுயாத் //*

இந்த பூலோகத்தில் அடைந்து நன்கு வேண்டியதை அணிவித்து பிறகு பிரதிஷ்டை செய்விப்பவனும் கௌமார லோகத்தை அடைகிறான்.

फलं स्कन्दप्रतिष्ठायाः संक्षेपाच्छृणु सुव्रत ।
बेरसंवेशवेद्यान्तु यावन्तः परमाणवः ।
तावद्वर्षसहस्राणि स्कन्दलोके महीयते ॥ २०५ ॥

*பலம் ஸ்கந்த ப்ரதிஷ்டாயா ஸம்க்ஷேபாத்*
*ச்ருணுஸுவ்ரத /*
*பேர ஸம்வேச வேத்யாந்து யாவந்த: பரமாணவ: //*
*தாவத்வர்ஷ ஸஹஸ்ராணி ஸ்கந்த லோகே*
*மஹீயதே ///*

மிகச்சுருக்கமாக ஸ்கந்த பிரதிஷ்டையின் பலனை கூறுகிறேன்! கேளும்! பிம்பத்தை எழுந்தருளச் செய்த வேதிகையை எவ்வளவு பரமாணு இருந்ததோ அவ்வளவு ஆயிர வர்ஷங்கள் ஸ்கந்த லோகத்தில் இருந்து விளங்குகிறான்.

इति श्रीकुमारतन्त्रे अचलप्रतिष्ठाविधिर्नाम
षड्विंशः पटलः

இதி ஸ்ரீ குமாரதந்த்ரே கௌசிகப்ரச்னே
அசலப்ரதிஷ்டாவிதி: நாம ஷட்விம்சதி படல:!

இவ்வாறு குமார தந்திரத்தில் கௌசிக ப்ரச்னத்தில்
அசல ப்ரதிஷ்டா விதி என்னும்
26-வது படலமாகும்.

# ॥ सप्तविंशः पटलः ॥

27 வது படலம்

अथ चलबेरप्रतिष्ठाविधिः

அத சலபேர ப்ரதிஷ்டா விதி படல:

चलबेरप्रतिष्ठाञ्च वक्ष्येऽहं शृणु कौशिक ।
भुक्तिमुक्तिप्रदं नृणां सर्वकामार्थसाधनम् ॥ १ ॥

*சலபேர ப்ரதிஷ்டாம்ச வக்ஷ்யேஹம் ச்ருணு கௌசிக!*
*புக்தி முக்தி ப்ரதம் ந்ருணாம் ஸர்வ காமார்த்த ஸாதநம்!!*

ஹே! கௌசிகரே சலபேர ப்ரதிஷ்டையை பற்றி கூறுகிறேன். கேள்! மனுஷ்யர்களுக்கு போகத்தையும், முக்தியையும் கொடுப்பதும் எல்லா இஷ்டங்களுக்கு சாதனமானதும்.

बालवृद्धिकरं सर्वशत्रुक्षयकरं शुभम् ।
सर्वकामदमन्यत् किं कुमारस्थापनादृते ॥ २ ॥

*பால வ்ருத்தி கரம் ஸர்வ சத்ருக்ஷயகரம் சுபம்!*
*ஸர்வ காமத மந்யத்கிம் குமாரஸ்தாபநாத்ருதே!!*

குழந்தைகள் முதல் பெரியோர்கள் வரை, சத்ருக்கள் அற்றதாகவும் மங்களமும், எல்லா இஷ்டங்களையும் சுப்ரமண்ய ஸ்தாபனத்தினால் மட்டுமே அல்லாமல் வேறு எதனால் செய்ய முடியும்.

मृगादिमासषट्के तु विकुम्भेषु शुभावहम् ।
अयने चोत्तरे श्रेष्ठं दक्षिणे स्याज्ज्वरान्वितम् ॥ ३ ॥

*ம்ருகாதிமாஸ ஷட்கேது விகும்பேஷு சுபாவஹம்!*
*அயநேசோத்தரே ச்ரேஷ்டே தக்ஷிணே ஸ்யாத் ஜ்வராந்விதம்!!*

மகரம் மாசம் முதல் ஆறு மாதத்தில் மாசி மாதத்தை தவிர சுபம், உத்தராயணம் நல்லது

मार्गशीर्षकमाघौ द्वौ वर्जयेत्तु प्रयत्नतः ।
जीवदृष्टियुते कुम्भे चलस्थापनमुत्तमम् ॥ ४ ॥

*மார்கசீர்ஷக மாகௌத்வௌ வர்ஜயேத்து ப்ரயத்நத:!*
*ஜீவத்ருஷ்டி யுதே கும்பே சலஸ்தாபந முத்தமம்!!*

மார்கழி மாதம், மாசி மாதம் இரண்டும் ப்ரேர்த்தனைப் பட்டு நீக்க வேண்டும். உயிர், நேத்ரம், கும்ப லக்னத்தில் சலஸ்தாபனம் செய்வது உத்தமம்

प्रशस्तपक्षनक्षत्रे स्थापनं सम्यगाचरेत् ।
प्रतिमां कारयेद्विद्वान् प्रतिमालक्षणोक्तवत् ॥ ५ ॥

*ப்ரசஸ்த பக்ஷ நக்ஷத்ரே: ஸ்தாபநம் ஸம்ய சாசரேத்!*
*ப்ரதிமாங்காரயே த்வித்வாந் ப்ரதிமாலக்ஷணோக்தவத்!!*

ப்ரசஸ்தமான சுக்ல பக்ஷம், நல்ல நக்ஷத்திரத்தில் சலஸ்தாபனத்தை செய்ய வேண்டும். படித்தவன் ப்ரதிமாம் முறையில் ப்ரதிமையைச் செய்ய வேண்டும்.

गजवल्लीसमायुक्तं प्रतिपञ्चोत्सवं तथा ।
शिविका बलिबेरञ्च स्नपनोत्सव कौतुकम् ॥ ६ ॥

*கஜ வல்லீ ஸமாயுக்தம் ப்ரதி பஞ்சோத்ஸவம் ததா!*
*சிபிகாபலிபேரஞ்ச ஸ்நபநோத்ஸவ கௌதுகம்!!*

கஜவள்ளி கூடியதோடாக ஐந்து பரிமித்ஸங்களை செய்ய வேண்டும். பல்லாக்கு, பலி மூர்த்தி, ஸ்நபன மூர்த்தி, உத்ஸவ மூர்த்தி, ரக்ஷாபந்தன மூர்த்தி

मूर्तीपञ्चविधानेन तत्तन्मूर्तिस्वभावकम् ।
शक्त्येकञ्च समायुक्तं स्नपनं बलिकौतुकम् ॥ ७ ॥

*மூர்த்தி பஞ்ச விதாநேந தத்தந்மூர்த்தி ஸ்வபாவகம்!*
*சக்த்யேகம்ச ஸமாயுக்தம் ஸ்நபநம் பலிகௌதுகம்!!*

ஐந்து மூர்த்தி முறையாக அந்தந்த மூர்த்தி கூறியுள்ளபடி. பஞ்சபேர விதானம், ஒரு

அம்பாளோடு கூடியதாக ஸ்நபன பேரம், பலிபேரம், ரக்ஷாபந்தன மூர்த்தி, இவைகளோடு கூட

शक्तित्रयसमोपेतमुत्सेवं मुनिपुङ्गव ।
शक्तिं विनास्त्राशिबिका पञ्चबेरविधिक्रमम् ॥ ८ ॥

*சக்தித்ரய ஸமோபேதம் உத்ஸவம் முநி புங்கவ!*
*சக்திம் விநாஸ்த்ர சிபிகா பஞ்சபேர விதிக்ரமம்!!*

மூன்று சக்திகளோடு கூட முனி ச்ரேஷ்ட்டரே! சக்தி இல்லாமல் அஸ்த்ராயுதம், பல்லக்கு இவைகளோடு கூட பஞ்சபேர விதானமாக

अंकुरानर्पयेद्विद्वान् पूर्वोक्तविधिना मुने ।
प्रासादस्याग्रत: कुर्यान्मण्डपं चतुरश्रकम् ॥ ९ ॥

*அங்குராநர்பயே த்வித்வாந் பூர்வோக்த விதிநாமுநே!*
*ப்ராஸாதஸ்யோக்ரத: குர்யாத் மண்டபம் சதுரச்ரகம்!!*

அங்கு ராப்பணம், முன்னால் கூறியபடி முறைப்படி, பாலிகையை தெளிக்க வேண்டும். கோயிலுக்கு முன்னாடி மண்டபம் சதுரச்ரமாக செய்ய வேண்டும்.

भूतादिनवहस्तान्तं विस्तारं गुरुहस्तत: ।
षोडशस्तम्भसंयुक्तं द्वादशस्तम्भकेन वा ॥ १० ॥

*பூதாதிநவ ஹஸ்தாந்தம் விஸ்தாரம் குருஹஸ்தத:!*
*ஷோடசஸ்தம்ப ஸம்யுக்தம் த்வாதசஸ்தம்பகே நவா!!*

ஆச்சார்யனுடைய கை அளவிலே 5, 9 முழம் விஸ்தாரம் வைத்துக் கொள்ள வேண்டும். 16 ஸ்தம்பம் கூடியதாக 12 ஸ்தம்பங்கள் கூடியதோ

पंक्तितालसमुत्सेधं पंक्तित्रयसमायुतम् ।
चतुर्द्वारसमायुक्तं चतुस्तोरणभूषितम् ॥ ११ ॥

*பங்க்தி தால ஸமுத்ஸேதம் பங்க்தித்ரய ஸமாயுதம்!*
*சதுர்த்வார ஸமாயுக்தம் சதுஸ்தோரண பூஷிதம்!!*

பங்க்தியினுடைய உயரமாயும், மூன்று பங்கோடு கூடியதாயும், 4 வாசற்படியோடு கூட, 4 தோரணங்களோடு கூடியதாக இருக்க வேண்டும்.

मङ्गलाष्टक संयुक्तं मङ्गलांकुरशोभितम् ।
विधानध्वजसंयुक्तं दर्भमाला सुशोभितम् ॥ १२ ॥

*மங்களாஷ்டக ஸம்யுக்தம் மங்களாங்குர சோபிதம்!*
*விதாநத்வஜ ஸம்யுக்தம் தர்பமாலாஸு சோபிதம்!!*

மங்களகரமாய் இருக்க கூடியதாய் மங்களமான அந்த முளைப் பாலிகையோடு கூடியதாய், அச்மான் நகரி, கொடி, இவைகளோடு கூட தர்பமாலையினோடு கூட பிரகாசிக்கும் படியாக

एकाशीतिपदं कृत्वा मध्यवेदिं नवांशत: ।
कुण्डानि परित: कृत्वा महादिक्षु विदिक्षु च ॥ १३ ॥

*ஏகாசீதி பதங்க்ருத்வா மத்யே வேதிம் நவாம்சத:!*
*குண்டாநி பரித: க்ருத்வா மஹாதிக்ஷு விதிக்ஷு ச!!*

51 பதம் செய்து 9ல் 1 பங்கு வேதிகை அமைக்க வேண்டும். திக்குகளையும், கோடங்களிலும், குண்டங்களை சுத்தி செய்ய வேண்டும்.

दिशासु चतुरश्राणि षट्कोणानि विदिक्षु च ।
अथवा विदिशास्वत्र वृत्तानि नलिनानि वा ॥ १४ ॥

*திசாஸு சதுரஸ்ராணி ஷட்கோ நாநி விதிக்ஷு ச!*
*அதவாவிதிஸா ஸ்வத்ர வ்ருத்தாநி நளிநாநிவா!!*

திக்குகளில் சதுரச்ரமும், ஷட்கோணம், விதுக்களிலும், இல்லாவிடில் விதிக்குகளில் விருத்தமோ, பத்மமோ அமைக்க வேண்டும்.

கும்பத்தில் பூஜிக்கப்பட்ட மூர்த்தி மந்திரங்களை 16 ஆகுதி செய்யவும்

रात्रिशेषं व्यपोह्याथ गुरुः प्रातः समुत्थितः ।
कृतनित्यविधिस्तत्र सोष्णीषस्सोत्तरीयकः ॥ २९ ॥

*ராத்ரிசேஷம் வ்யபோஹ்யாத குரு: ப்ராதஸ்ஸமுத்தித:।*
*க்ருத நித்ய விதிஸ் தத்ர ஸோஷ்ணீஷஸ் ஸோத்தரீயக:॥*

இவ்வாறாக மீதமுள்ள இரவை கழித்து காலையில் எழுந்து நித்யானுஷ்டானம் முடித்து சிரோவஸ்த்ர உத்ரீயத்துடன்

कुम्भानभ्यर्च्य विधिना पूर्णान्तु शिरसा हुनेत् ।
सुमुहूर्ते सुलग्ने तु सर्वदोषविवर्जिते ॥ ३० ॥

*கும்பாநப்யர்ச்ய விதிநா பூர்ணாந்து சிரஸாஹுநேத்।*
*ஸுமுஹூர்த்தே ஸுலக்நேது ஸர்வதோஷ விவர்ஜிதே॥*

முறைப்படி கும்பங்களை பூஜித்து அக்னிகார்யம் செய்து சிரோமந்திரத்தால் பூர்ணாஹுதி செய்யவும். குற்றமற்ற நல்ல முகூர்த்த லக்னத்தில்

पूजितो यजमानेन गोभूमिधनकाञ्चनैः ।
संतुष्टहोतृदैवज्ञशिल्पिभिः सह देशिकः ॥ ३१ ॥

*பூஜிதோயஜமாநேந கோபூமி தந காஞ்சநை:।*
*ஸந்துஷ்ட ஹோத்ரு தைவக்ஞ சில்பிபிஸ்ஸஹ தேசிக:॥*

பசு, பூமி, தனம், ஸ்வர்ணங்களால் யஜமானனால் பூஜிக்கப்பட்ட ஆச்சார்யன் மூர்த்திபர்கள், ஜோதிஷன், சில்பி இவர்களுடன் சந்தோஷமாக

उत्थाप्य चेष्टिकां कीलं यजमानादिभिः सुधीः ।
सर्वातोद्यसमायुक्तं कृत्वा धामप्रदक्षिणम् ॥ ३२ ॥

*உத்தாப்ய சேஷ்டிகாம் கீலம் யஜமாநாதிபி: ஸுதீ:।*
*ஸர்வாதோத்ய ஸமாயுக்தம் க்ருத்வாதாம ப்ரதக்ஷிணம்॥*

யஜமானர்களால் இஷ்டிகை ஸ்தூபிதண்டம், கீலகம் இவைகளை எடுத்து எல்லா வாத்ய முழக்கத்துடன் ஆலய ப்ரதக்ஷிணம் செய்து

आरोप्योपरि तन्मूर्ध्नि रन्ध्रं निरन्ध्रकं तथा ।
वैडूर्यं स्फटिकं मुक्ता वज्रं वै पुष्परागकम् ॥ ३३ ॥

*ஆரோப்யோ பரிதந் மூர்த்நி ரந்த்ரம் நிரந்த்ரகம் யதா।*
*வைடூர்யம் ஸ்படிகம் முக்தா வஜ்ரம்வை புஷ்பராககம்॥*

விமானத்தின் மீது ஏற்றி விமான சிரஸில் த்வாரத்தில் வைத்து ஓட்டை இடைவெளியின்றி வைத்து வைடூர்யம், ஸ்படிகம், முத்து, வைரம், புஷ்பராகம் இவைகளை

मध्यादीशानपर्यन्तं स्कन्दलोकेशबीजकम् ।
विन्यस्यैव शकुन्यादिनवशक्तियजेद्बुधः ॥ ३४ ॥

*மத்யா தீசாந பர்யந்தம் ஸ்கந்த லோகேச பீஜகம்।*
*விந்யஸ்யைவ சகுந்யாதி நவசக்திர் யஜேத் புத:॥*

நடுவிலிருந்து ஈசானம் வரை ஸ்கந்தபீஜம் 8 திக்பாலகர் பீஜத்தினால் வைத்து அதில் சகுனி முதலான 9 சக்திகளை பூஜிக்கவும்.

तस्योर्ध्वे कीलकं न्यस्त्वा शिखरार्धप्रमाणकम् ।
तन्मन्त्रकं समुच्चार्य दत्वा दत्वा तु निश्चलम् ॥ ३५ ॥

*தஸ்யோர்த்வே கீலகம் ந்யஸ்த்வா சிகரார்த்த ப்ரமாணகம்।*
*தந்மந்த்ரகம் ஸமுச்சார்ய தத்வா தத்வாது நிச்சலம்।*

மூர்த்தேஷ்டிகையின் மேல் கீலகத்தை வைத்து ஸ்தூபியின் ½ பாகமாக அந்த மந்திரத்தை உச்சரித்து அசையாமல் பொருத்தவும்

स्थापितान् नवकुम्भांश्च समानीय यथाक्रमम् ।
तत्कीलपरितश्चापि प्रोक्षयेत्सर्वमन्त्रत: ॥ ३६ ॥

*ஸ்தாபிதாம் நவ கும்பாம்ச்ச ஸமாநீய யதாக்ரமம் |*
*தத்கீல பரிதச்சாபி ப்ரோக்ஷயேத் ஸர்வ மந்த்ரத:||*

முன்பு ஸ்தாபிக்கப்பட்ட 9 கும்பங்களை எடுத்து அதை கீலகத்தை சுற்றி எல்லா மந்திரத்தினாலும் ப்ரோக்ஷணம் செய்யவும்

स्तूप्यंशमूर्ध्वत: कृत्वा शेषं तत्र प्रयोजयेत् ।
एवं य: कुरुते मर्त्य: सर्वलोकानवाप्य च ।
देहान्ते गणपे भूत्वा स्कन्दलोके महीयते ॥ ३७ ॥

*ஸ்தூப்யம்ச மூர்த்வத: க்ருத்வா சேஷம் தத்ர ப்ரயோஜயேத் |*
*ஏவம் ய: குருதே மர்த்ய: ஸர்வ லோகா நவாப்ய ச ||*
*தேஹாந்தே கணபோ பூத்வா ஸ்கந்தலோகே மஹீயதே ||*

ஸ்தூபிக்கு தேவையான மேல் பாகத்தை வைத்து மீதம் உள்ளதை மூடவும், இவ்வாறு யார் மூர்த்தேஷ்டிகா ஸ்தாபனம் செய்கிறானோ அவன் எல்லா உலக அனுபவத்தையும் பெற்று சரீர தேக முடிவில் கணங்களாக அடைந்து ஸ்கந்த லோகத்தில் பிரகாசிக்கிறான்

इति श्रीकुमारतन्त्रे मूर्त्नेष्टिकाविधिर्नाम द्वात्रिंश: पटल:

இதி ஸ்ரீ குமாரதந்த்ரே கௌசிக ப்ரச்னே,
மூர்த்நேஷ்டிகா
விதி: த்வாத்ரிம்சத் படல:

இவ்வாறு ஸ்ரீகுமார தந்த்ரத்தில் கௌசிக ப்ரச்னத்தில் மூர்த்நேஷ்டிகா விதி என்னும் 32 வது படலமாகும்.

## ॥ त्रयस्त्रिंशः पटसः ॥

**த்ரயஸ்த்ரிம்ச: படல:**

**33 வது படலம்**

**प्राकारलक्षणविधिः**

**ப்ராகாரலக்ஷண விதி :**

**ப்ராகாரலக்ஷண முறை**

परिवारनिवेशार्थं रक्षार्थं शोभनार्थकम् ।
प्राकारं परितः कुर्यात् शिलयेष्टिकयापि वा ॥ १ ॥

*பரிவார நிவேசார்த்தம் ரக்ஷார்த்தம் சோபநார்த்தகம் /*
*ப்ராகாரம் பரித: குர்யாத் சிலயேஷ்டிகயா பிவா //*

ஆலயக் காப்பிற்க்காகவும், அழகிற்காகவும், பரிவாராலய நிர்மாணத்திற்காகவும் கற்களாலோ, செங்கல்லாலோ, சுற்றிலும், பிராகாரம் அமைக்கவும்.

मूलप्रासादविस्तारं तदर्धं वा विचक्षणः ।
दण्डमित्यत्र संकल्प्य तद्दण्डेनैव कल्पयेत् ॥ २ ॥

*மூல ப்ராஸாத விஸ்தாரம் ததர்தம் வா விசக்ஷண: /*
*தண்ட மித்யத்ர ஸங்கல்ப்ய தத்தண்டேனைவ கல்பயேத் //*

கருவறையளவு மூல ப்ராகார அகலமாகவோ, அதில் பாதியாகவோ, அளவெனப்படும், தண்டமெனப்படும்.

मूलप्रासादपार्श्वे तु दण्डेनैकेन गानतः ।
अन्तर्निर्मलं कुर्यात् पार्श्वेषु च महामतिः ॥ ३ ॥

*மூலப்ராஸாத பார்ச்வேது தண்டேனைகேந மாநத: /*
*அந்தர் நிர்மலகங் குர்யாத் பார்ச்வேஷு ச மஹாமதி: //*

மூலாலயத்தின் பக்கத்தில் ஒருதண்ட அளவால் வைக்க அந்தர் (முதல் பிரகாரம்) இருபக்கமளவை அளவிட்டு வைக்கவும்

द्विद्विदण्डविवृध्या तु दण्डभारस्य विस्तृतम् ।
तत्पार्श्वेषु त्रिदण्डेन प्रत्याहारं प्रकल्पयेत् ॥ ४ ॥

*த்வித்விதண்ட விவ்ருத்யாது தண்டபாரஸ்ய விஸ்த்ருதம் /*
*தத்பார்ச்வேஷு த்ரிதண்டேந ப்ரத்யாஹாரம் ப்ரகல்பயேத் //*

இரண்டிரண்டு தண்ட அளவு அதிகரிப்பால் தண்ட பாரத்தின் அகலமாகும். அதன் பக்கத்தில் 3 தண்டகங்களில் அந்தர்யாஹ பிரகாரம் அமைக்கவும்

तस्य पार्श्वेषु मतिमान् चतुर्दण्डेन मानतः ।
महामर्यादिकं कुर्यात् तत्पार्श्वेषु द्विजोत्तम ॥ ५ ॥

*தஸ்ய பார்ச்வேஷு மதிமாந் சதுர்தண்டேந மாநத: /*
*மஹாமர்யாதிகம் குர்யாத் தத்பார்ச்வேஷு த்விஜோத்தம: //*

அதற்கடுத்த பிராகாரம் 4 தண்ட அளவால் செய்யவும். அதன் இரு பக்கங்களிலும் மஹாமர்யா பிரகாரம் அமைக்கவும்

पञ्चदण्डविवृद्ध्या तु पञ्चप्राकारमुच्यते ।
चतुरश्रकमेकेन मुखायाम प्रचक्षते ॥ ६ ॥

*பஞ்ச தண்ட விவ்ருத்யாது பஞ்ச ப்ராகார முச்யதே /*
*சதுரச்ரகமேகேந முகாயாமம் ப்ரக்ஷதே //*

5 தண்ட அளவால் 5ம் ப்ரகாரம் அமைக்கவும். சதுரத்திற்கு முன்பாக ஒரு பங்காக முகாயாமம் அமைத்துக் கொள்ளவும்.

पादाधिवयमथात्यर्थपादोनद्विगुणन्तु वा ।
द्विगुणं द्विगुणार्धं वा त्रिगुणं वा चतुर्गुणम् ॥ ७ ॥

*பாதாதிக்யமதாத்யர்த்த பாதோந த்விகுணம்துவா /*
*த்விகுணம் த்விகுணார்த்தம் வா த்ரிகுணம் வா சதுர்குணம் //*

1¼, 1½, 1¾, 2, 2½, 3, 4 தண்ட அளவால்

मुखायाममिति प्रोक्तं प्राकाराणां विशेषत: ।
सालं क्षुद्राल्पहर्म्याणामन्यमानेन कथ्यते ॥ ८ ॥

*முகாயாமமிதி ப்ரோக்தம் ப்ராகாராணாம் விஷேஷத:!*
*ஸாலம் க்ஷுத்ரால்ப ஹர்ம்யானாம் அந்யமாநேந கத்யதே!!*

முகத்தில் நீள அளவாகும். 5 பிராகாரங்களில் பிராகாரத்தை சுற்றி ஸாலகாரமாக சின்ன, சின்ன விமானம் அமைக்கவும்.

स्तूप्या सार्ध प्रमाणेन प्रथमं सालमीरितम् ।
द्विप्रकारं द्विहस्तैश्च त्रिसाल: पञ्चहस्तक: ॥ ९ ॥

*ஸ்தூப்யா ஸார்த்தம் ப்ரமாணேந ப்ரதமம் ஸாலமீரிதம்!*
*த்விப்ரகாரம் த்ரிஹஸ்தைச்ச த்ரிஸால: பஞ்சஹஸ்தத:!!*

ஸ்தூபியுடன் கூடியதாக முதல் பிரகாரத்தில் ஆலயம் அமைக்கவும். 2வது பிரகாரம் 3 முழகைகளாலும், 3வது பிராகாரம் 5 முழக்கையளவு

तस्मात्सप्तकरैरेव चतुर्थ सालमीरितम् ।
नवहस्तन्तु परित: तत्समं पञ्चतालक: ॥ १० ॥

*தஸ்மாத் ஸப்தகரைரேவ சதுர்த்தம் ஸாலமீரிதம்!*
*நவஹஸ்தந்து பரித ஸ்தத்ஸமம் பஞ்சஸாலகம்!!*

4வது பிராகாரம், 7 முழக்கைகளாலும், 9 முழக்கையளவு 5வது பிரகாரம் அமைக்கவும்

मध्यमानं सतारार्थ प्रथमं सालमीरितम् ।
तस्मात्पञ्चकरैरेव द्वितीयं सालमीरितम् ॥ ११ ॥

*மத்யமாநம் ஸதாரார்த்தம் ப்ரதமம் ஸாலமீரிதம்!*
*தஸ்மாத் பஞ்சகரைரேவ த்விதீயம் ஸாலமீரிதம்!!*

பாதி, 1 ½ பாக அளவோ முதல் பிராகாரசாலை விமான அமைக்கவும், 5 முழக்கைகளால், 2-வது பிராகார ஸால மேற்படுத்தவும்

सप्तहस्तं त्रितालं स्यात् नवहस्तैश्चतुर्थकम् ।
रुद्रहस्तेन कर्तव्यं पञ्चमं सालमेव च ॥ १२ ॥

*ஸப்த ஹஸ்தம் த்ரிதாலம்ஸ்யாத் நவஹஸ்தைச் சதுர்த்தகம்!*
*ருத்ர ஹஸ்தேந கர்த்தவ்யம் பஞ்சமம் ஸாலமேவ ச!!*

7 முழக்கை உயரத்தில் 3-வது ஸால விமான பிரகாரமும், 9 முழக்கையளவு 4-வது பிராகார ஸாலா விமான அமைப்பு, 11 முழக்கையளவால் 5-வது பிராகார ஸாலாவிமான அமைப்பு செய்யவும்.

उत्तमानां सताराख्ये प्रथमं सालमीरितम् ।
तस्मात्सप्तकरेणैव प्राकारञ्च द्वितीयकम् ॥ १३ ॥

*உத்தமாநாம் ஸதாராக்யே ப்ரதமம் ஸாலமீரிதம்!*
*தஸ்மாத் ஸப்த கரேணைவ ப்ராகாரஞ்ச த்விதீயகம்!!*

உத்தம, மத்ய, அதமமான பிரகாரங்களுள் முதல் பிராகாரம் இவ்வாறு அமைக்கவும். எல்லாவித வகையாலும், 2வது பிராகாரம் அமைக்கவும்

नवहस्तैस्त्रितालं स्यात् रुद्रहस्तैस्तु तालकम् ।
त्रयोदशकरेणैव पञ्चमं सालमीरितम् ॥ १४ ॥

*நவஹஸ்தைஸ் த்ரிதாலம் ஸ்யாத் ருத்ரஹஸ்தைஸ்து தாலகம்!*
*த்ரயோதச கரேணைவ பஞ்சமம் ஸாலமீரிதம்!!*

9 ¾ முழத்தால் 3-வது பிராகாரம் அமைக்கவும். 11 ¼ முழத்தால் 4-வது பிராகார உயரமும், 13-முழ அளவால் 5-வது ஸால அமைப்பாகும்.

एवं क्षुद्राल्पमध्यानामुत्तमानां विधीयते ।
एतेन द्विप्रकर्तव्यं पूर्वोक्तेन क्रमेण वा ॥ १५ ॥

*ஏவம் க்ஷுத்ரால்ப மத்யமாநாம் உத்தமாநாம் விதீயதே !*
*ஏதேந த்விப்ர கர்த்தவ்யம் பூர்வோக்தேந க்ரமேணவா !!*

இவ்வாறு சிறிய, மத்யம, உத்தம ஆலய பிராகார அளவினாலும் செய்யவும், முன்பு சொல்லப்பட்டபடி 3-விதமான ஆலய பிராகாரங்களாகவும் அமைக்கவும்

प्राकारः परितः कुर्यात् मुखायामञ्च पूर्वकम् ।
भित्त्यन्तरस्य मानेन भित्तिमध्येन वा पुनः ॥ १६ ॥

*ப்ராகாரம் பரித: குர்யாத் முகாயாமக பூர்வகம் !*
*பித்யந்தரஸ்ய மாநேந பித்திமத்யேநவா புந: !!*

ஆலயத்தை சுற்றி பிராகாரம் கருவறை முன் நீளத்துடன் முகப்புத் தோற்றத்துடன் செய்யவும், பித்தி மத்தியிலிருந்தோ பித்தி வெளியிலிருந்தோ அமைக்கவும்

बाह्ये तु नवतालं स्यात् मानसे मानवित्तमः ।
अस्य प्राकारभित्तेश्च विष्कम्भं सार्धहस्तकम् ॥ १७ ॥

*பாஹ்யேது நவதாலம் ஸ்யாத் மாநஸேமாந வித்தம: !*
*அஸ்ய ப்ராகார பித்தேச்வ விஷ்கம்பம் ஸார்த்த ஹஸ்தகம் !!*

வெளியில் 9-தாள அளவில் அமைக்கவும். பிரகார சுவற்றின் இடைவெளி ஒன்றரை முழ அளவாகும்

तस्मात् त्र्यंगुलाधिक्याद् द्विहस्ताञ्च यथाक्रमम् ।
पञ्चानामपि सालानां भित्तिविष्कम्भमीरितम् ॥ १८ ॥

*தஸ்மாத் த்ரயாங்குலாதிக்யாத் த்விஹஸ்தாச்சயதா க்ரமாத் !*
*பஞ்சாநாமபி ஸாலாநாம் பித்தி விஷ்கம்ப மீரிதம் !!*

3 அங்குலத்திலிருந்து 2 முழம் வரை 5 வித பிராகார சுவரின் கனமாகும்

तत्तद्विष्कम्भमानञ्च त्रिगुणा च चतुर्गुणा ।
प्राकारोदयमुद्दिष्टं स्वात्मांशेनाग्रविस्तरम् ॥ १९ ॥

*தத்தத் விஷ்கம்ப மாநம் ஸ்யாத் த்ரிகுணாச சதுர்குணா !*
*ப்ராகாரோதயமுத்திஷ்டம் ஸ்வாத்மாம்சேநாக்ர விஸ்தாரம் !!*

அந்தந்த சுவர் கனத்தின் மூன்றளவு, நான்களவால், பிராகார ஆரம்பம், அளவாகும். அதன் அம்ச அளவு முகப்பு அகலமாகும்

उत्तरार्धोच्छ्रितं वाऽपि कुम्भमध्यं ततोच्छ्रितम् ।
क्षुद्राल्पानां तु सालानां भित्तिहस्तप्रमाणकम् ॥ २० ॥

*உத்தரார்த்தோச்ச்ரிதம் வாபி கும்ப மத்யம் ததோச்ச்ரிதம் !*
*க்ஷுத்ரால்பாநாந்து ஸாலாநாம் பித்தி ஹஸ்த ப்ரமாணத: !!*

பிரகாரத்தின் மேல்பட்டையை கும்பம் போல் மேல் பாகம், க்ஷுத்ர அல்பசாலத்தின் சுவற்றின் கன பிரமாணத்துடன் செய்யவும்

सार्धहस्तावधिर्यावत् वर्धयेत्पूर्ववत्क्रमात् ।
यथायोग्यमलङ्कारं तथैव परिकल्पयेत् ॥ २१ ॥

*ஸார்த்த ஹஸ்தா வதிர்யாவத் வர்த்தயேத் பூர்வவத் க்ரமாத் !*
*யதாயோக்யம் அலங்காரம் ததைவ பரிகல்பயேத் !!*

1½ முழ அளவாக வாவது அதிகரித்து சுவற்றின் மேல்பாகம் அமைக்கவும். எவ்வாறு செய்தால் அழகாக இருக்குமோ அவ்வாறு செய்யவும்

ऋजुभित्तियुतं वाऽपि बुद्बुदार्धेन्दुशीर्षकम् ।
छत्राकारधरो वाऽपि प्राकारं परिकल्पयेत् ॥ २२ ॥

*ருஜுபித்தியுதம் வாபி புத்புதார்த்தேந்து சீர்ஷகம் !*
*சத்ராகார தரோவாபி ப்ராகாரம் பரிகல்பயேத் !!*

சமமாகவோ, நுரைபோன்று, அரை சந்திரன் போலே, குடை போன்றோ, பிராகாரம் அமைக்கவும்

भित्तिन्यासमं वाऽपि पादार्धाधिकमेव वा ।
शीर्षोत्तुङ्गन्तु सालानामेतेषामन्तरालकम् ॥ २३ ॥

*பித்திந்யாஸ ஸமம் வாபி பாதார்த்தாதிக மேவவா !*
*சீர்ஷோத்துங்கந்து ஸாலாநாம் ஏதேஷாம்*
*அந்தராளகம் !!*

சுவற்றின் கன அளவு சமமாகவோ, கன அளவின் 1 ¼ பாக அளவாகவோ பிராகார சுவற்றின் மேல் அமைப்பு அமைக்கவும்

एकद्वित्रितलैर्युक्तं कुर्यादावृतिमण्डपम् ।
मानान्तं बाह्यभित्युच्चं यथाक्रमं तलान्तकम् ॥ २४ ॥

*ஏக த்வித்ரி தலைர்யுக்தம் அங்குர்யாதாவ்ருத*
*மண்டபம் !*
*மாநாந்தம் பாஹ்ய பித்யுச்சம் யதாக்ரமம்*
*தலாந்தகம் !!*

ஓர்தளம், 2 தளம், 3 தளத்துடன் கூடிய மண்டபத்தை இடைவெளியுள்ளதாக அமைக்கவும். முறைப்படி சுவற்றின் பின் பிறவாய், முறைப்படி தளத்திற்கு முன்பாக அளவுமாகும்.

मूलसद्मोत्तरार्धं वा प्रस्तारं तत्तथापि वा ।
खण्डहर्म्योत्तरार्धं वा शिखरोन्नतमेव वा ॥ २५ ॥

*மூலஸத்மோத்தரார்த்தம் வா ப்ரஸ்தாரம்*
*தத்ததாபிவா !*
*கண்ட ஹர்ம்யோத்தரார்த்தம் வா சிகரோந்நத*
*மேவவா !!*

பிராகாரத்தின் சுவரின் உயரம் மூலாலய உயரத்தின் பாதியோ, பிரஸ்தமந்த அளவும், கண்ட, ஹர்ம்யம், உத்தரார்த்தம், மேற்பட்டிகையின, சிகரம் வரை உயர்ந்ததாகவோ

उभयोः सालरूपं वा कल्पयेत्सालशीर्षके ।
यथेष्टदिक्षु सालेषु द्वारं युक्त्या प्रकल्पयेत् ॥ २६ ॥

*உபயோஸ்ஸால ரூபம் வா கல்பயேத் ஸால*
*சீர்ஷகே !*
*யதேஷ்டதிக்ஷு ஸாலேஷு த்வாரம் யுக்த்யா*
*ப்ரகல்பயேத் !!*

ஸாலா ரூபமாகவோ, ஸால சீர்ஷம் என்ற மேற்பகுதியை கல்பிக்கவும், விருப்பப்பட்ட திசையில் சின்ன கோபுரங்கள், வாயிற்படி, உத்தேசித்து அமைக்கவும்

गोपुरं तत्र तत्रैव कल्पयेद्विधिपूर्वकम् ।
अन्तर्हारे तथाचान्ये वह्नौ स्याद्दव्यकोष्ठकम् ॥ २७ ॥

*கோபுரம் தத்ர தத்ரைவ கல்பயேத்விதி பூர்வகம் !*
*அந்தர்ஹாரே ததாசாந்யே வந்ஹௌ ஸ்யாத் தவ்ய*
*கோஷ்டகம் !!*

ஈசானத்திலிருந்து இடைவெளியான அந்த இடத்தில் கோபுரத்தை முறைப்படி அமைக்கவும், வேராந அந்தர் ஹாரத்தில் ஆக்னேயத்தில் மடப்பள்ளி அமைக்கவும்

प्रासादस्य द्विपार्श्वे तु देवसेना च वल्लिकम् ।
वह्निगोपुरयोर्मध्ये धनधान्यालयं भवेत् ॥ २८ ॥

*ப்ராஸாதஸ்ய த்விபார்ச்வேது தேவஸேநாச*
*வல்லிகம் !*
*வந்ஹி கோபுரயோர் மத்யே தநதாந்யாலயம் பவேத் !!*

ஆலயத்தின் 2 பக்கத்திலும் தேவஸேநாவையும், வள்ளியையும், அமைக்கவும். ஆக்னேயத்திற்கும், கோபுரத்திற்கும் வெளிபுறவாய் பணத்திற்கும், தான்யத்திற்கு மிருப்பிடமாக அமைக்கவும்

याम्ये तु जनशाला च पुष्पमण्डपमेव च ।
नैर्ऋत्यामस्त्रशाला च वाहनावासमेव च ॥ २९ ॥

*யாம்யேது ஜநசாலாச புஷ்பமண்டப மேவ ச !*
*நைருத்யாம் அஸ்த்ர சாலாச வாஹநா வாஸ*
*மேவ ச !!*

தெற்கில் ஜனசாலை, புஷ்ப மண்டபம் அமைக்கவும். நைருருதியில் ஆயுத சாலையும், வாஹந மண்டபத்தையும் அமைக்கவும்.

वारुणे वायवे चैव शयनस्थानमीरितम् ।
आस्थानमण्डपं सौम्ये तत्र पूर्वघृतालयम् ॥ ३० ॥

*வாருணே வாயவே சைவ சயந ஸ்தாந மீரிதம் !*
*ஆஸ்தாந மண்டபம் ஸௌம்யே தத்ர பூர்வ*
*க்ருதாலயம் !!*

மேற்கிலிருந்து வாயு திசையின், சயன ஸ்தானம் கல்பிக்கவும். வடக்கில் ஆஸ்தான மண்டபமும் அதற்கு கிழக்கில் நெய் சேகரிக்கும் இடத்தையும் அமைக்கவும்

ऐशान्ये यागशालां तु वापीकूपं तु तत्र वै ।
ऐशगोपुरयोर्मध्ये वाद्यस्थानं द्विजोत्तम् ॥ ३१ ॥

*ஐசாந்யே யாகசாலாந்து வாபீ கூபந்து தத்ரவை !*
*ஐச கோபுரயோர் மத்யே வாத்ய ஸ்தாநம்*
*த்விஜோத்தம !!*

ஈசானத்தில் யாகசாலையும், கிணறு, குளத்தையும் அமைக்கவம். ஈசானத்திற்கும், கோபுரத்திற்கும் உள் மத்தியில், வாத்யங்கள் வைக்குமிடம் ஏற்படுத்தவும்

एवं यः कुरुते मर्त्यः सर्वपापैः प्रमुच्यते ।
अथैवं तारयेत्पूर्वान् त्रिसप्तकुलजानपि ॥ ३२ ॥

*ஏவம் ய: குருதே மர்த்ய: ஸர்வ பாபை: ப்ரமுச்யதே !*
*அதைவம் தாரயேத் பூர்வாந் த்ரிஸப்த குலாநபி !!*

இவ்வாறு யார் செய்கிறானோ! அவன் எல்லா பாபத்திலிருந்தும் விடுபடுகிறான். தனக்கும், முன்பும், பின்புமாக 21 தலைமுறைகளை நல்லவர்களாகச் செய்கிறான்

सर्वान्कामानिह प्राप्य पुत्रपौत्रादिसंयुतः ।
जन्मैकविंशति विप्र साम्राज्यं समवाप्नुयात् ॥
स्कन्दलोकं ततः प्राप्य स्कन्देन सहमोदते ॥ ३३ ॥

*ஸ்வாந் காமா நிஹப்ராப்ய புத்ர பௌத்ராதி ஸம்யுத: !*
*ஜந்மைக விம்சதிம் விப்ர ஸாம்ராஜ்யம்*
*ஸமவாப்நுயாத் !!*
*ஸ்கந்த லோகம் தத: ப்ராப்ய ஸ்கந்தேந*
*ஸஹமோததே !!!*

மகன், பேரன் இவர்களுடன் இந்த உலகத்தில் எல்லா விருப்பத்தையும் அடைந்து 21 ஜன்மமாக ஸாம்ராஜ்ய பதவியடைகிறான். பிறகு ஸ்கந்த லோகத்தையடைந்து ஸ்கந்தருடன் ஐக்யமாகி ஆனந்தமாக இருக்கிறான்.

इति श्रीकुमारतन्त्रे प्राकारलक्षणविधिर्नाम
त्रयस्त्रिंशः पटलः

இதி ஸ்ரீ குமார தந்த்ரே கௌசிக ப்ரச்னே ப்ராகார லக்ஷண விதி த்ரயஸ்த்ரிம்சத் படல:

இவ்வாறு ஸ்ரீகுமார தந்த்ரத்தில் கௌசிக ப்ரச்னத்தில் ப்ராகாரலக்ஷணவிதி என்னும் 33-வது படலமாகும்.

# ॥ चतुस्त्रिंशः पटलः ॥

### சதுஸ்த்ரிம்சः படலः

### 34 வது படலம்

### परिवारविधिः

### பரிவார விதி படலः

### பரிவாரம் அமைக்கும் முறை

परिवारविधिं वक्ष्ये श्रृणु कौशिक सुव्रत ।
परिवारविमानानां मानं गर्भगृहार्धकम् ॥ १ ॥

*பரிவார விதிம் வக்ஷ்யே ச்ருணு கௌசிகஸுவ்ரத !*
*பரிவார விமாநநாம் மாநம் கர்ப க்ரஹார்த்தகம் !!*

கௌசிகரே ! பரிவார விதியை பற்றி கூறுகிறேன் கேளும்! பரிவார விமானங்களுக்கு மூலஸ்தான ஆலய கர்ப க்ருஹத்தின் பாதியளவு இருக்கவேண்டும்.

तत्रभागः प्रकर्तव्यो यथा युक्तिवशाद्बुधैः ।
प्रसादमण्डपसभा शालाकारार्थयोग्यकम् ॥ २ ॥

*தத்ர பாகः ப்ரகர்த்தவ்யः யதாயுக்தி வசாத் புதைः!*
*ப்ராஸாத மண்டபஸபா சாலாகாரார்த்த யோக்யகம் !!*

யுக்தியாக அளவு ஏற்படுத்திக் கொள்ளவும். பிராகார மண்டபம் சபையளவு ஸாலாகார வடிவமாகும். (ஸாலாகாரம் என்பது நீண்ட வடிவமானது)

एकद्वित्रितलं कुर्यात् परिवारालये बुधः ।
परिवारामरेत्सेधाः प्रतिमालक्षणोक्तवत् ॥ ३ ॥

*ஏக த்வித்ரிதலங்குர்யாத் பரிவாராலயே புதः!*
*பரிவாராமரோத் ஸேதாःப்ரதிமாலக்ஷணோக்தவத் !!*

1. தளம், 2. தளம், 3. தளமாகவும் இருக்கலாம். பரிவார பிம்பங்களின் உயரம், பிரதிமாலக்ஷணப்படி இருக்கவேண்டும்

सर्वलक्षणसंयुक्तं स्थानकासनमेव च ।
शिवं विष्णुं विधातारं विघ्नेशं गुहमेव च ॥ ४॥

*ஸர்வ லக்ஷண ஸம்யுக்தம் ஸ்தாநகாஸநமேவ ச !*
*சிவம் விஷ்ணும் விதாதாரம் விக்நேசம்*
*குஹமேவச !!*

எல்லா அமைப்புடன் நின்ற கோலமாகவோ, அமர்ந்ததாகவோ, சிவம், விஷ்ணு, பிரம்மா, விநாயகர், குஹன்

पञ्चमूर्ति विजानीयादेवमेव विचक्षणः ।
एते सर्वे प्रोक्ताः सर्वकारणकारणम् ॥ ५ ॥

*பஞ்ச மூர்த்திம் விஜாநீயாத் ஏகமேவ விசக்ஷணः!*
*ஏதே ஸர்வே ஸுரா ப்ரோக்தா ஸர்வகாரண*
*காரணம் !!*

இவர்கள் பஞ்சமூர்த்தி பரிவாரமாக (முதல் பரிவாரமாக) கூறப்பட்டுள்ளது. இந்த ஐவரும் எல்லா காரணத்திற்கும் முக்யமானவர் களாவார்கள்.

विश्वरक्षकरा ह्येते तस्मात् सेव्या सुरोत्तमैः ।
एतस्मात् परिवारात्तु सर्वदेवसुरोत्तमाः ॥ ६ ॥

*விச்வ ரக்ஷா கரா ஹ்யேதே தஸ்மாத் ஸேவ்யா*
*ஸுரோத்தமைः!*
*ஏதஸ்மாத் பரிவாராத்து ஸர்வ தேவ ஸுரோத்தமாः!!*

மேலே இந்த ஐவர்கள் உலகத்தை காப்பவர்களாகும். ஆகையால் தேவர்களால் துதிக்கப்படுவர்களாக ஆகிறார்கள். ஆகையால் எல்லா தேவர்களுக்கும் உத்தமான ஐவர்கள் பரிவாரமாக ஆகிறார்கள்.

अष्टौ तु द्वादश पुनः परिवारस्तु षोडश ।
द्वात्रिंशत्परिवारांश्च वक्ष्येऽहं श्रृणु कौशिक ॥ ७ ॥

*அஷ்டௌ து த்வாதச புநः பரிவாரஸ்து ஷோடச!*
*த்வாத்ரிம்சத் பரிவாராம்ச்ச வக்ஷ்யேஹம் ச்ருணு*
*கௌசிக !!*

8, 12, 16, 32 என்ற எண்ணிக்கையுள்ள பரிவார தேவதைகளை கூறுகிறேன். கௌசிகரே கேளும்.

गेहे नवपदं कृत्वा मध्यभागाद्बहिः क्रमात् ।
प्राङ्मुखे तु गजं स्थाप्य वह्नौ शास्तारमेव च ॥ ८ ॥

*கேஹே நவபதம் க்ருத்வா மத்ய பாகாத் பஹி: க்ரமாத்!*
*ப்ராங் முகேது கஜம் ஸ்தாப்ய வந்ஹௌ சாஸ்த்தார மேவ ச !!*

ஆலயத்தை 9 பதம் செய்து மத்யபதத்திற்கு வெளியில் முறையாக கிழக்கில், கஜத்தையும், ஆக்னேய திசையில் சாஸ்தாவையும்

यमे पितामहं सप्तमातरो निर्ऋते पुनः ।
ज्येष्ठादेवीं जलेशे च वायौ दुर्गां प्रतिष्ठयेत् ॥ ९ ॥

*யமே பிதாமஹம் ஸப்த மாதரோ நிருருதே புந:!*
*ஜ்யேஷ்டா தேவீம் ஜலேசேச வாயௌ தூர்காம் பிரதிஷ்டயேத் !!*

தெற்கில் (பிதாமஹரையும்) பிரும்மாவையும், நிருருதியில் ஸப்த மாதாக்களையும், மேற்கில் ஜ்யேஷ்டா தேவியையும், வாயு திசையில் துர்கையையும் பிரதிஷ்டை செய்யவேண்டும்.

सोमं वै क्षेत्रकं प्रोक्तमैशान्यान्तु सुमित्रकम् ।
अष्टौ तु परिवारास्स्युरथद्वादश कथ्यते ॥ १० ॥

*ஸோமேவை க்ஷேத்ரகம் ப்ரோக்தம் ஈசாந்யாந்து ஸுமித்ரகம்!*
*அஷ்டௌது பரிவாராஸ்யு ரத த்வாதச கத்யதே !!*

வடக்கில் க்ஷேத்ர பாலரையும், வடகிழக்கில் (ஈசானத்தில் சுமித்ரரையும் பிரதிஷ்டை செய்வது அஷ்ட பரிவாரமாகும். பிறகு 12 பரிவாரம் கூறப்படுகிறது.

पञ्चपञ्चपदं कृत्वा मध्ये नवपदाद्बहिः ।
गजं विधिमगस्त्यं च नारदं च चतुर्दिशि ॥ ११ ॥

*பஞ்ச பஞ்ச பதம் க்ருத்வா மத்யே நவபதாத் பஹி:!*
*கஜம் விதிம் அகஸ்த்யஞ்ச நாரதம் ச சதுர்த்திசி !!*

ஐந்து, ஐந்தாக 25 பதம் செய்து நடுவில் 9 பதத்திற்கு வெளியே கஜம், பிரும்மா, அகஸ்த்யர், நாரதர், இவர்களை 4 திசைகளிலும்

पश्चात्सूर्यपदे वह्नौ यमे रक्षसि वारुणे ।
वायौ सौम्यं तथैशान्ये क्रमादेतान् प्रतिष्ठयेत् ॥ १२ ॥

*பச்சாத் ஸூர்ய பதே வந்ஹௌ யமே ரக்ஷஸி வாருணே!*
*வாயௌ ஸௌம்யே ததைசாந்யே க்ரமாதேதாத் ப்ரதிஷ்டயேத் !!*

பிறகு சூர்யபதம் ஆக்னேயபதம், தெற்குபதம், நிருருதிபதம், மேற்குபதம், வாயுபதம், வடக்குபதம், ஈசான்ய பதம் இவைகளில் முறையாக இவர்களை பிரதிஷ்டை செய்யவும்

सूर्यः शास्ता यमश्चैव मातरो वरुणस्तथा ।
दुर्गाश्रीदसुमित्राश्च द्वादशैते प्रकीर्तिताः ॥ १३ ॥

*ஸூர்ய சாஸ்தாயமச்சைவ மாதரோ வருணஸ்ததா!*
*தூர்காஸ்ரீத ஸுமித்ராச்ச த்வாதசைதே ப்ரகீர்த்திதா:!!*

சூர்யன், சாஸ்தா, யமன், மாத்ருக்கள், வருணன், துர்கை, குபேரன், சுமித்திரன் இவர்களுடன் கூடிய பரிவாரம் 12 பரிவார மூர்த்திகளாக கூறப்பட்டுள்ளது.

षट्कषट्कपदं कृत्वा तन्मध्ये षोडशाद्बहिः ।
गजं विधिमगस्त्यञ्च नारदञ्च चतुर्दिशि ॥ १४ ॥

*ஷட்க ஷட்க பதம் க்ருத்வா தந்மத்யே ஷோடசாத் பஹி:!*
*கஜம் விதிம் அகஸ்த்யஞ்ச நாரதம்ச சதுர்த்திசி!!*

ஆறு X ஆறு பதம் செய்து 36பத மத்தியில் நடுபதம் விட்டு சுற்றிலும் 16 பதம் விட்டு அதைச்

சுற்றிலும் கஜம், பிரம்மா, அகஸ்தியர், நாரதர் இவர்களை 4 திசைகளிலும் ஸ்தாபித்து

ऐशे जयन्ते भानौ च वह्नौ च विदथे पदे ।
भृङ्गो रूपो नैर्ऋते च शेषो वायुपदे पुनः ॥ १५ ॥

*ஐசே ஜயந்தே பானௌச வந்நௌ ச விததே பதே !!*
*ப்ருங்கோரூபோ நைருதேச சேஷோ வாயுபதே புந:!!*

ஈசானத்தில் ஜயந்தன், அக்னி பாகத்தில் சூர்யனையும், நிருருதியில் ப்ருங்கரையும், வாயுதிசையில் சேஷனையும்

मुख्याञ्चाप्युदिते भागे सुमित्रं शशिभास्करौ ।
शास्तारञ्च महालक्ष्मीं भारतीं सप्तमातरम् ॥ १६ ॥

*முக்யாச்சாப்யுதே பாகே ஸுமித்ரம் சசி பாஸ்கரௌ !*
*சாஸ்த்தாரஞ்ச மஹாலக்ஷ்மீம் பாரதீம் ஸப்த மாதரம் !!*

கிழக்கில் முக்யரையும், சுமித்ரையும் சாஸ்தா மஹாலக்ஷ்மி, பாரதி (ஸரஸ்வதி) ஸ்ப்தமாத்ருக்கள்

शुक्रं वृहस्पतिं दुर्गां दितिदेवीं तथादितिम् ।
स्थापयेत्क्रमशो विद्वानेते षोडशदेवताः ॥ १७ ॥

*சுக்ரம் ப்ருஹஸ்திம் தூர்காம் திதிவேதீம் ததாதிதிம் !*
*ஸ்தாபயேத் க்ரமசோவித்வாத் ஏதே ஷோடச தேவதா:!!*

சுக்ரன், பிருஹஸ்பதி, துர்கை, திதிதேவதை அதிதி இவர்களை முறைப்படி ஸ்தாபிக்கவும் இவர்கள் 16 பரிவாரதேவதைகளான ஷோடசபரிவார தேவதைகளாகும்.

सप्तसप्तपदं कृत्वा मध्ये नवपदाद्बहिः ।
सावित्रेन्द्रजेरुद्रजये नैवापवत्सकः ॥ १८ ॥

*ஸப்த ஸப்த பதம் க்ருத்வா மத்யேநவபதாத் பஹி: !*
*ஸாவித்ரேந்த்ரஜயே ருத்ர ஜயேசைவாப வத்ஸக:!!*

7x7=49 பதம் அமைத்து நடுவில் 9 பதம் விட்டு சாவித்ரபதம், இந்திரஜயபதம், ருத்ரஜயபதம், ஆபவத்ஸ பதமிவைகளில்

श्रियं भूमिं तथा ज्येष्ठां भारतीं च प्रतिष्ठयेत् ।
आर्ये च वास्त्वधिपते मित्रे चैव तु धारयेत् ॥ १९ ॥

*ச்ரியம் பூமிம் ததா ஜ்யேஷ்டாம் பாரதீம் ச ப்ரதிஷ்டயேத் !*
*ஆர்யே ச வாஸ்த்வதி பதே மித்ரே சைவது தாரயேத் !!*

1 லக்ஷ்மி, 2 பூமி, 3. ஜ்யேஷ்டை, 4 பாரதி (ஸரஸ்வதி) இவர்களை பிரதிஷ்டை செய்யவும் ஆர்யபதம், வாஸ்வதிபதிபதம், உத்தரபதம் இவைகளில்

गजेन्द्रं च विधातारमगस्त्यं नारदं मुनिम् ।
ईशे चैव तु पर्जन्ये महेन्द्रे भास्करे पदे ॥ २० ॥

*கஜேந்த்ரம் ச விதாதாரம் அகஸ்த்யம் நாரதம் முநிம் !*
*ஈசே சைவது பர்ஜந்யே மஹேந்த்ரே பாஸ்கரே பதே !!*

கஜேந்திரன், விதாதா, அகஸ்த்தியர், நாரதர், இவர்களையும் ப்ரதிஷ்டை செய்யவும், ஈசபதம், பர்ஜந்ய, பதம், மஹேந்த்ர பதம் பாஸ்கர பதம் இவைகளில்

सौम्योऽन्तरिक्षे वह्नौ च पूष्णि पश्चाद् ग्रहक्षते ।
यमे गन्धर्वमृगये पितृदौवारिके पदे ॥ २१ ॥

*ஸௌம்யே அந்தரிக்ஷே வந்நௌ ச பூஷ்ணி பச்சாத் க்ரஹக்ஷதே !*
*யமே கந்தர்வ ம்ருகயே பித்ரு தௌவாரிகே பதே !!*

ஸௌம்ய பதம், அந்தரிக்ஷ பதம், வந்நி பதம், பூஷ்ணிபதம், க்ரஹக்ஷதபதம், யமபதம், கந்தர்வ பதம், ம்ருகபதம், பித்ருபதம், தௌவாரிகபதம்

पुष्पदन्तश्च वरुणे सुरे यक्षे समीरणे ।
नागे भल्लाटके सोमे दिरिभागे तथा दितौ ॥ २२ ॥

*புஷ்ப தந்தச்ச வருணே ஸுரேயக்ஷே ஸமீரணே!*
*நாகே பல்லாடகே ஸோமே திதிபாகே ததாதிதௌ!!*

புஷ்பதந்த பதம், வருணபதம், ஸுரபதம், யக்ஷபதம், வாயுபதம், நாகபதம், பல்லாடக பதம், ஸோம பதம், திதி பதம், அதிதி பதம்

पदेष्वेतेषु मतिमानीशानं चन्द्रमेव च ।
सुदेगञ्च सुरेशञ्च सुमुखञ्च दिवाकरम् ॥ २३ ॥

*பதேஷ் வேதேஷு மதிமா நீசானம் சந்த்ர மேவ ச!*
*ஸுதேஹம் ச ஸுரேசஞ்ச ஸுமுகம் ச திவாகரம்!!*

இந்த பதங்களில் முறையே ஈசானம், சந்திரன், ஸுதேஹன், ஸுரேசன், ஸுமுகன், திவாகரன்

वह्निं बृहस्पतिं चैव शास्तारं यममेव च ।
भृङ्गिणं सप्तमातृश्च निर्ऋतिं वासुकिं तथा ॥ २४ ॥

*வந்ஹிம் ப்ருஹஸ்பதிம் சைவ சாஸ்தாரம் யமமேவச!*
*ப்ருங்கிணம் ஸப்த மாத்ருச்ச நிருருதிம்வா ஸுகிம்*
*ததா!!*

அக்நி, ப்ருஹஸ்பதி, சாஸ்தா, யமன், ப்ருங்கி, ஸப்த மாத்ரு, நிருருதி வாஸுகி

अष्टवारं वारुणं च भृङ्गी दक्षप्रजापतिम् ।
वायुं दुर्गां वीरभद्रं धनदञ्च सुमित्रकम् ॥ २५ ॥

*அஷ்டவாரம் வாருணம்ச ப்ருங்கீ தக்ஷ ப்ரஜாபதிம்!*
*வாயும் துர்காம் வீரபத்ரம் தநதம்ச ஸுமித்ரகம்!!*

பிறகு அஷ்ட தேவதைகளான வருணன், ப்ருங்கீ, தக்ஷ ப்ரஜாபதி, வாயு, துர்கை, வீரபத்ரன், ஸுமித்ரன்

शुक्रं च स्थापयेदेतान् द्वात्रिंशत्परिवारकान् ।
त्रिप्रकारे तथा पञ्च प्राकारेऽप्येवमेव हि ॥ २६ ॥

*சுக்ரம்ச ஸ்தாபயே தேதாந் த்வாத்ரிம்சத்*
*பரிவாரகாந்!*
*த்ரிப்ராகாரே ததாபஞ்ச ப்ராகாரேப்யேவ மேவஹி!!*

சுக்ரன், ஆகிய இவர்கள் 32 பரிவார தேவதைகளாக பிரதிஷ்டை செய்யவும், மூன்று பிராகார அமைப்புகளும் 5 பிரகார ஆலயத்திலும் இவ்வாறாக பிரதிஷ்டை செய்யவும்

पदमध्ययुतं कुड्यं यूतं वाऽथ प्रकल्पयेत् ।
यत्र द्वारन्तु चत्वारि विजानन्स्थापयेद्बुधः ॥ २७ ॥

*பதமத்ய யுதம் குட்யம் யூதம்வாத ப்ரகல்பயேத்!*
*யத்ர த்வாரந்து சத்வாரி விஜாநந் ஸ்தாபயேத் புத:!!*

மீதமுள்ள பதத்தில் சுவரையோ, தடுப்புப் போன்றோ அமைக்கவும், எங்கு வாயிற்படி அமைக்க வேண்டுமோ, அதை அறிந்து அமைக்க வேண்டும்.

ते हर्म्याभिमुखास्सर्वे स्थाप्या दन्तिपदेषु च ।
देवताभिमुखो दन्ति नवाभिमुख एव च ॥ २८ ॥

*தே ஹர்ம்யாபி முகாஸ்ஸர்வே ஸ்தாப்யாதந்தி*
*பதேஷு ச!*
*தேவதாபி முகோதந்தி நவாபி முக ஏவ ச !!*

எல்லா தேவதைகளையும் ஆலயத்திற்கு அபிமுகமாகவும், பிரதிஷ்டை செய்யவும், யானைக்காக உள்ள பதத்தில் யானையை முருகனுக்கு அபிமுகமாக பிரதிஷ்டை செய்யவும்.

गजेन्द्रस्याग्रतः कुर्यात् प्रासादार्धप्रमाणतः ।
ध्वजस्थाने तदग्रे तु तन्नीत्वा शक्तिगेहकम् ॥ २९ ॥

*கஜேந்த்ரஸ்யாக்ரத: குர்யாத் ப்ராஸாதார்த்த*
*ப்ரமாணத: !*
*த்வஜஸ்தாநே ததக்ரேது தந்நீத்வா சக்திகேஹகம்!!*

கஜேந்திரனுக்கு முன்னதாக ஆலயத்தில் ½ பாக அளவாக கஜஸ்தாபனமும் அதற்கு முன்னதாக சக்தியாலயம் கல்பிக்கவும்.

देवताभिमुखां शक्तिं कल्पयेत्कल्पवित्तम: ।
एकद्वित्रिकव्यासोत्सेध: स्याद्बलिपीठकम् ॥ ३० ॥

*தேவதாபி முகாம் சக்திம் கல்பயேத் கல்பவித்தம:!*
*ஏகத்வித்ரிக ரவ்யாஸோ த்ஸேதஸ்யாத் பலி பீடகம்!!*

முருகனுக்கு அபிமுகமாக சக்தியை கல்பிக்க வேண்டும். ஒன்று, இரண்டு, மூன்று, அஸ்த ப்ரமாண அளவு உயர, நீள அகலத்துடன் பலிபீடம் கல்பிக்கவும்.

गोपुरात्तु बहि:पीठं प्रासादार्धेन भागकम् ।
तत्समं वा त्रिपादं वा बलिपीठं प्रकल्पयेत् ॥ ३१ ॥

*கோபுரத்து பஹி: பீடம் ப்ராஸாதார்த்தேந பாககம்:!*
*தத்ஸமம் வா த்ரிபாதம் வா பலிபீடம் ப்ரகல்பயேத்!!*

ஆலயத்தின் ½ அளவாக கோபுரத்திற்கு வெளியில் பீடம் கல்பிக்கவும் பீடத்திற்கு சமமாகவோ அல்லது ¾ பாகமாகவோ பலிபீடம் அமைக்கவும்.

पीठोत्सेधे षोडशांशे जन्म एकेन कारयेत् ।
चतुरंशेन जगतीं कुमुदञ्च त्रिभागत: ॥ ३२ ॥

*பீடோத்ஸேத ஷோடசாம்சே ஜந்மஏகே நகாரயேத்!*
*சதுரம்சேந ஜகதீம் குமுதம் ச த்ரிபாகத:!!*

பீட உயரத்தை 16ஆக பிரித்து ஜந்மம் (உபாநம்) 1, 4 அம்சம், ஜகதீ, குமுதம் 3 அம்சம்

तस्योर्ध्वे कम्बुमेकेन कुण्डं कुर्यात्त्रिभागत: ।
एकेन चोपकम्पन्तु महापट्टिर्द्विभागत: ॥ ३३ ॥

*தஸ்யோர்த்வே கம்புமேகேந கண்டம் குர்யாத் த்ரிபாகத:!*
*ஏகேந சோ பகம்பந்து மஹாபட்டி த்விபாகத:!!*

அதற்கு மேல் கம்பம் 1 அம்சம், கண்டம் 3 அம்சம், உபகம்பம் 2 அம்சம், மஹாபட்டி 2 அம்சம்

ऊर्ध्वे वा जनमेकेन तुङ्गमेवमुदीरितम् ।
वाजनार्धविशालेन महापद्मविशालकम् ॥ ३४ ॥

*ஊர்த்வே வா ஜநமேகேந துங்கமேவ முதீரிதம்!*
*வாஜநார்த்த விசாலேந மஹாபத்ம விசாலகம்!!*

மேல் பாக வாஜநம் (கம்பம்) 1 அம்சம், இவ்வாறாக பீடத்தின் உயர லக்ஷணம் கூறப்பட்டுள்ளது. வாஜநத்தின் பாதி அளவு அகலமாக மஹாபத்மத்தின் விசாலம் இருக்க வேண்டும்.

ऊर्द्ध्वपद्मं तदर्धेन तत्त्रिभागैकमानत: ।
कर्णिकां तस्य मध्ये तु कल्पयेत्कल्पवित्तम: ॥ ३५ ॥

*ஊர்த்வ பத்மம் ததர்த்தேந தத் த்ரிபாகைக மாநத:!*
*கர்ணிகாம் தஸ்ய மத்யேது கல்பயேத் கல்பவித்தம:!!*

மேல் பத்மம், அதன் பாதி அளவும், அந்த அளவின் 3ல் 1 பாகம் கர்ணிகையும், பத்ம மத்தியில் கல்பிக்கவும்

एते गजाद्य सर्वेषां गोपुराभ्यन्तरेऽपि वा ।
बहिर्वा स्थापनीयास्ते मध्ये सूत्रस्य वामत: ॥ ३६ ॥

*ஏதே கஜாத ஸர்வேஷாம் கோபுராப்யந்தரே பிவா*
*பஹிர்வா ஸ்தாபநீயாஸ்தே மத்யே ஸூத்ரஸ்ய வாமத:!!*

எல்லா கோபுரத்தின் இடைவெளி நுனி பாகத்தில் யானையையோ, மயிலேயோ, மத்திய சூத்ரத்தின் இடம் பாகத்திலும் அமைக்கவும்

पञ्चानामपि सालानामग्रे पैशाचपीठकम् ।
द्वारपालं ततो वक्ष्ये श्रृणुष्व मुनिपुङ्गव ॥ ३७ ॥

*பஞ்சாநாமபி ஸாலாநாம் அக்ரே பைசாச பீடகம்!*
*த்வாரபாலம் ததோ வக்ஷ்யே ச்ருணுஷ்வ முநி புங்கவ!!*

5 பிரகார முன் பாகத்தில் பைசாசத்தை அமைக்கவும், பிறகு த்வார பாலகர் லக்ஷணம் கூறப்படுகிறது.

गुहस्य गर्भगेहस्य चतुर्दिक् द्वाररक्षका: ।
जयाश्च विजया रक्षा कृपा सत्यविचक्षणा: ॥ ३८ ॥

*குஹஸ்ய கர்ப கேஹஸ்ய சதுர்த்திக் த்வாரரக்ஷகா:!*
*ஜயாச்ச விஜயாரக்ஷா க்ருபாஸத்ய விசக்ஷணா:!!*

ஸுப்ரமண்யருடைய கருவறையை சுற்றிலும் 4 திசைகளிலும் த்வார பாலகர்கள் கூறப்படுகிறார்கள். ஜயன், விஜயன், ரக்ஷன், க்ருபன், ஸத்யன், விசக்ஷணன் இவர்களாகும்.

अभया कामरूपाश्च खड्गखेटकपाणय: ।
रक्तवर्णा विभूषाढ्या रक्तरूपापराधमा: ॥ ३९ ॥

*அபயா காம ரூபாச்ச கட்ககேடக பாணய:!*
*ரக்த வர்ணா விபூஷாட்யா ரக்த ரூபா பராதமா:!!*

அபயன், காமரூபன் இவர்கள் கட்கம், கேடயம், இவைகளை தரித்து சிகப்பு வர்ணத்து பல ஆபரணம் தரித்து சிகப்பு வர்ணத்துடனும்.

श्यामकुङ्कुमसंकाशौ द्विभुजौ वा चतुर्भुजौ ।
वज्रशक्तिधरौ चैव गदायुधधरौ स्मृतौ ॥ ४० ॥

*ச்யாம குங்கும ஸங்காசௌ த்விபுஜௌவா சதுர்புஜௌ!*
*வஜ்ர சக்தி தரௌ சைவ கதாயுத தரௌ ஸ்ம்ருதௌ !!*

பச்சை, வர்ணத்துடனும், 2 கைகளையோ, 4 கைகளையோ தரித்து அவைகளில் வஜ்ர-சக்தி கதாயுதத்தையும் தரித்து

खड्गखेटकधरौ वा मुद्रा विस्मयसंयुता: ।
महामण्डपिकाद्वारस्थौ विजयो जय इत्यपि ॥ ४१ ॥

*கட்ககேடக தாரௌவா முத்ரா விஸ்மய ஸம் யுதா:!*
*மஹாமண்டபிகா த்வாரஸ்தௌ விஜயோஜய இத்யபி !!*

கத்தி, கேடயம், விஸ்மய முத்ரை தரித்ததாக இருக்கிறார்கள். மஹாமண்டபத்திலுடைய த்வார பாலகர்கள் ஜயன், விஜயன், ஆவார்கள்.

वीरबाहुर्वीरसेनो वीरश्च वीरकञ्चुक: ।
वीरकेतुर्महावीरो वीरमौलिश्च वीर्यवान् ॥ ४२ ॥

*வீரபாஹுர் வீரஸேந: வீரச்ச வீரகஞ்சுக: !*
*வீரகேதுர் மஹாவீரோ வீரமௌலிச்ச வீர்யவாந்:!!*

வீரபாஹு வீரஸேனன், வீரன், வீரகஞ்சுகன், வீரகேது, மஹாவீரன், வீர மௌலி, வீர்யவான்.

इमे प्रथमसालस्य पूर्वादिद्वारपालका: ।
पद्मश्चैव महापद्म: सुपद्म: पद्मलोचन: ॥ ४३ ॥

*இமே ப்ரதம ஸாலஸ்ய பூர்வாதி த்வார பாலகா:!*
*பத்மச்சைவ மஹா பத்மஸ் ஸுபத்மபத்ம லோசந:!!*

இவர்கள் முதல் ப்ராகாரத்தின் கிழக்கு முதலான த்வார பாலகர்கள் ஆவார்கள். பத்மன், மஹாபத்மன், ஸுபத்மன், பத்ம லோசநன்.

पद्मग: पद्मकेतुश्च पद्माभ: पद्मवर्णक: ।
अन्तर्द्वारि चतुर्दिक्षु द्वारपालाष्टका इमे ॥ ४४ ॥

*பத்மக: பத்மகேதுச்ச பத்மாப: பத்மவர்ணக:!*
*அந்தர் த்வாரே சதுர்த்திக்ஷு த்வாரபாலாஷ்டகா இமே !!*

பத்மகன், பத்மகேது, பத்மாபன், பத்மவர்ணன், அந்தர் த்வாரத்தில் 4 திசையிலும், 8 த்வார பாலகர்கள், ஆவார்கள்.

निकुम्भ: कुम्भकर्णश्च कुम्भ: कुम्भोदरस्तथा ।
कुम्भनासा कुम्भपृष्ठ: कुम्भास्य: कुम्भगण्डक: ॥ ४५ ॥

*நிகும்ப: கும்ப கர்ணச்ச கும்ப: கும்போதரஸ் ததா!*
*கும்பநாஸா கும்ப ப்ருஷ்ட: கும்பாஸ்ய: கும்ப கண்டக:!!*

நிகும்பன், கும்பகர்ணன், கும்பன், கும்போதரன், கும்பநாஸன், கும்ப ப்ருஷ்டன், கும்பாஸ்யன், கும்ப கண்டகன்.

मध्यद्वार चतुर्दिक्षु द्वारपालाष्टका इमे ।
वक्रदन्तो वक्रदृग्दिर्वक्राङ्गो वक्रवर्णक: ॥ ४६ ॥

*மத்ய த்வார சதுர்த்திக்ஷு த்வார பாலாஷ்டகா இமே!*
*வக்ர தந்தோ வக்ர திருஷ்டிர் வக்ராங்கோ வக்ர வர்ணக:!!*

(மத்யத்வாரம்) என்ற நடுப்ராகாரம் 4 திசைகளிலுமுள்ள, 8 த்வார பாலகர்களாவர்கள், வக்ர தந்தன், வக்ர, திருஷ்டி, வக்ராங்கன், வக்ர வர்ணன்,

वक्रनासो वक्रकर्णो वक्रास्यो वक्रशीर्षक: ।
महामध्यादिपूर्वादि द्वारेषु द्वारपालका: ॥ ४७ ॥

*வக்ர நாஸோ வக்ர கர்ணோ வக்ராஸ்யோ வக்ர சீர்ஷக: !*
*மஹா மத்யாதி பூர்வாதி த்வாரேஷு த்வார பாலகா:!!*

வக்ர நாஸி, வக்ர கர்ணன், வக்ராஸ்யன், வக்ர சீர்ஷன், மஹாமத்ய ப்ராகாரத்தில் கிழக்கு முதலான த்வாரங்களில் 8 த்வார பாலகர் ஆவார்கள்.

शक्तिवज्रधरास्सर्वे सर्वाभरणभूषिता: ।
श्यामकुङ्कुमसङ्काशा पीतकृष्णा भयङ्करा: ॥ ४८ ॥

*சக்தி வஜ்ர தராஸ் ஸர்வே ஸர்வாபரண பூஷிதா:!*
*ச்யாம குங்கும ஸங்காசா பீதக்ருஷ்ணா பயங்கரா:!!*

இந்த த்வார பாலகர்கள் யாவரும் சக்தி, வஜ்ரத்தை தரித்தவர்களாகும். எல்லா ஆபரணத்தை தரித்தவராகவும், பச்சை, சிகப்பு, மஞ்சள், கருப்பு வர்ணமுடையவர்களாகவும், பயங்கரமான வர்களாகவும்.

द्विभुजौ वा चतुर्बाहु: सर्वे खेटकधारिण: ।
मुद्रा विस्मयहस्ताश्च तुङ्गाश्च विकृतानना: ॥ ४९ ॥

*த்விபுஜௌ வா சதுர்பாஹு: ஸர்வகேட தாரிண:!!*
*முத்ரா விஸ்மய ஹஸ்தாச்ச துங்காச்ச விக்ருதாநநா:!!*

2 கை 4 கைகளை தரித்து அவைகளில் யாவரும் கேடயத்தையும் விஸ்மய ஹஸ்தமாகவோ துங்க என்ற தொங்குகிற ஹஸ்தமாகவோ, ஆச்சர்யமான முகத்தை உடையவராகவோ.

एते सर्वे महाभागा: कुमार गणदेवता: ।
यत्र देवस्य तु मुखं तत्र बुध्वा समर्चयेत् ॥ ५० ॥

*ஏதே ஸர்வே மஹாபாகா: குமாரகண தேவதா:!*
*யத்ர தேவஸ்யது முகம் தத்ர புத்வா ஸமர்ச்சயேத்!!*

இந்த யாவரும் மஹா பாகர்களாக குமாரனின் கன தேவதர் ஆகிறார்கள். எங்கு முருகனின் முகம் உள்ளதோ. அதை அறிந்து பூஜை செய்யவும்.

परिवारदेवता एते विश्वामित्र महामुने ।
अहं चोमा च शास्ता च वात्सल्यत्वान्महामुने ॥ ५१ ॥

*பரிவார தேவதா ஏதே விச்வாமித்ர மஹாமுநே!*
*அஹம் சோமாச சாஸ்தாச வாத்ஸல்ய: த்வாந் மஹாமுநே!!*

கீழ் கூறப்படுகிற பரிவார தேவதைகளாக அன்பினால் ஈச்வரன், பார்வதி, சாஸ்தா இவர்கள் கூறப்படுகிறார்கள்.

कुमारो यत्र वसति वसामस्तत्र नित्यश: ।
तस्मात्सर्वान् प्रतिष्ठाप्य पूजयेत् षण्मुखालये ।
एवं य: कुरुते मर्त्य: स पुण्यां गतिमाप्नुयात् ॥ ५२ ॥

*குமாரோ யத்ர வஸதி வஸாமஸ்தத்ர நித்யச:!*
*தஸ்மாத் ஸர்வாந் ப்ரதிஷ்டாப்ய பூஜயேத் ஷண்முகாலயே!!*
*ஏவம் ய: குருதே மர்த்ய: ஸபுண்யாங்கதி மாப்நுயாத்!!!*

மேற்கூறிய சிவன், பார்வதி, சாஸ்தா, இவர்கள் முருகன் எங்கு வசிக்கிறானோ அங்கு நிச்சயம் நாங்கள் வசிப்போம், என்று ஈசன் கூறுகிறார். ஆகையினால் ஷண்முகாலயத்தில் இவர்களை பிரதிஷ்டை செய்யவேண்டும்.

இவ்வாறு யார் பரிவாரத்துடன் முருகனை பிரதிஷ்டை செய்கிறானோ அவன் நல்ல கதியை அடைகிறான்.

इति श्रीकुमारतन्त्रे परिवारविधिर्नाम चतुस्त्रिंश: पटल:

இதி ஸ்ரீகுமாரதந்த்ரே கௌசிக ப்ரச்னே பரிவார விதி:
சதுஸ்த்ரிம் சத் படல:

இவ்வாறு குமார தந்த்ரத்தில் கௌசிக ப்ரச்னத்தில்
பரிவார விதி என்னும் 34வது படலமாகும்.

# குமாரதந்திரம்

## சுப்ரமண்ய பரிவாரம்

## சுப்ரமண்ய ஸ்வாமி ஆலயம் அஷ்டபரிவாரம்

மேற்கு

| | | | | |
|---|---|---|---|---|
| | சப்த மாத்ரு 4 | ஜேஷ்டா 5 | துர்கா 6 | |
| தெற்கு | பிரம்மா 3 | சுப்ரமண்யர் | க்ஷேத்திரபாலன் 7 | வடக்கு |
| | சாஸ்தா 2 | கஜம் 1 | சுமித்திரன் 8 | |

கிழக்கு

1. கஜம்
2. சாஸ்தா
3. பிரம்மா
4. சப்தமாத்ரு
5. ஜேஷ்டா
6. துர்கா
7. க்ஷேத்திரபாலன்
8. சுமித்திரன்

ஆக 8 பரிவாரம்

## சுப்பிரமணியர் ஆலயம் 12 பரிவாரம்

மேற்கு

| | | | | |
|---|---|---|---|---|
| வருணன் 6 | | அகஸ்தியர் 7 | | துர்கா 8 |
| ஸப்தமாத்ரு 5 | | | | குபேரன் 9 |
| விதி (பிரம்மா) 4 | | சுப்ரமண்யர் | | நாரதர் 10 |
| எமன் 3 | | | | சுமித்ரர் 11 |
| சாஸ்தா 2 | | 1 கஜம் | | சூரியன் 12 |

தெற்கு — வடக்கு

கிழக்கு

துவாதஸ பரிவாரம்

1. கஜம்
2. சாஸ்தா
3. எமன்
4. விதி (பிரம்மா)
5. ஸப்த மாத்ரு
6. வருணன்
7. அகஸ்தியர்
8. துர்கை
9. குபேரன்
10. நாரதர்
11. சுமித்ரர்
12. சூரியன்

ஆக மொத்தம் 12 பரிவாரங்களாகும்

# சுப்ரமண்யர் ஆலய 16 பரிவாரம்

மேற்கு

தெற்கு | | வடக்கு

| | | | | |
|---|---|---|---|---|
| ஸப்தமாதா 7 | சுக்ராச்சாரியார் 8 | அகஸ்தியர் 9 | ப்ருஹஸ்பதி 10 | துர்கா 11 |
| ஸரஸ்வதி 6 | | | | திதி 12 |
| விதி (பிரம்மா) 5 | | சுப்ரமண்யர் | | நாரதர் 13 |
| மஹாலக்ஷ்மி 4 | | | | அதிதி 14 |
| சாஸ்தா 3 | பாஸ்கரன் 2 | கெஜம் 1 | 16 சந்திரன் | சுமித்திரன் 15 |

கிழக்கு

1. கெஜம்
2. பாஸ்கரன்
3. சாஸ்தா
4. மஹாலக்ஷ்மி
5. விதி (பிரம்மா)
6. சரஸ்வதி
7. ஸப்தமாதா
8. சுக்ராச்சாரியார்
9. அகஸ்தியர்
10. ப்ருஹஸ்பதி
11. துர்கா
12. திதி
13. நாரதர்
14. அதிதி
15. சுமித்திரன்
16. சந்திரன்

இது 16 பரிவாரங்களாகும்

# (32) த்வாத் த்ரிம்ஸத் மூர்த்திகள் ஸுப்ரமண்யர் பரிவாரம்

மேற்கு

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| நிருருதி 13 | வாஸுகி 14 | அஷ்டவஸு 15 | வாருணம் 16 | ப்ருங்கி 17 | தக்ஷப்ரஜாபதி 18 | வாயு 19 |
| ஸப்தமாத்ரு 12 | | | | | | துர்கா 20 |
| ப்ருங்கி 11 | | ஸரஸ்வதி 28 / ஜேஷ்டா 27 | | ஆர்யா 29 / வாஸ்துபதி 30 | | வீரபத்திரன் 21 |
| எமன் 10 | | | ஸுப்ரமண்யர் | | | குபேரன் 22 |
| சாஸ்தா 9 | | பூமி 26 / லக்ஷ்மி 25 | | மித்திரா 31 / கஜம் 32 | | சமித்ரன் 23 |
| ப்ருஹஸ்பதி 8 | | | | | | சுக்ராச்சாரி 24 |
| அக்னி 7 | திவாகரன் 6 | ஸமுகம் 5 | ஸரேசம் 4 | ஸதேகம் 3 | சந்திரன் 2 | ஈசானன் 1 |

தெற்கு

வடக்கு

கிழக்கு

ஈசானம் முதல் 24 மூர்த்திகள்

1. ஈசானன்
2. சந்திரன்
3. ஸதேகம்
4. ஸரேசம்
5. ஸமுகம்
6. திவாகரன்
7. அக்னி
8. ப்ருஹஸ்பதி
9. சாஸ்தா
10. எமன்
11. ப்ருங்கி
12. ஸப்தமாத்ரு
13. நிருருதி
14. வாஸுகி
15. அஷ்டவஸு
16. வாருணம்
17. ப்ருங்கி
18. தக்ஷப்ரஜாபதி
19. வாயு
20. துர்கா
21. வீரபத்திரன்
22. குபேரன்
23. சமித்திரன்
24. சுக்ராச்சாரி
25. லக்ஷ்மி
26. பூமி
27. ஜேஷ்டா
28. சரஸ்வதி
29. ஆர்யா
30. வாஸ்துபதி
31. மித்திரா
32. கெஜம் ஆக 8

மொத்தம் 32 தேவதைகள்

## சுப்ரமண்யர் பரிவாரம் இன்னொரு 9 பதம் இப்படியும் இருக்கலாம்

மேற்கு

| | | |
|---|---|---|
| ஜேஷ்டா | சரஸ்வதி | ஆர்யா |
| பூமி | சுப்ரமண்யர் | வாஸ்த்துபதி |
| லக்ஷ்மி | கஜம் | மித்திரன் |

தெற்கு (left) — வடக்கு (right)

கிழக்கு

1. கஜம்
2. லக்ஷ்மி
3. பூமி
4. ஜேஷ்டா
5. சரஸ்வதி
6. ஆர்யா
7. வாஸ்துபதி
8. மித்திரன்

மத்தியத்தில் - சுப்ரமண்யர் (ஆக - 9)

# ॥ पञ्चत्रिंश: पटल: ॥

பஞ்சத்ரிம்ச: படல:

35 வது படலம்

## करणलक्षणविधि:

**கரண லக்ஷண விதி படல:**

**கரண லக்ஷணம் செய்யும் முறை**

वक्ष्येऽहं मुनिशार्दूल करणानां तु लक्षणम् ।
यागांशकानि सर्वाणि करणानि प्रचक्षते ॥ १ ॥

*வக்ஷ்யேஹம் முநிசார்த்துல கரணாநாந்து லக்ஷணம் !*
*யாகாம்சகாநி ஸர்வாணி கரணாநி ப்ரசக்ஷதே !!*

ஆலய யாகசாலைக்கு உபயோகமான கருவிகளின் லக்ஷணம் கூறப்படுகிறது. யாகசாலைக்கு தேவையான எல்லா கருவிகளையும் கூறுகிறேன்.

अरणीस्रुक्स्रुवं चैव तोरणं चैव मङ्गलम् ।
दशायुधविधिं पश्चात् कूर्मासनविधिं पुन: ॥ २॥

*அரணீ ஸ்ருக் ஸ்ருவம் சைவ தோரணம் சைவ மங்களம் !*
*தசாயுத விதிம் பச்சாத் கூர்மாஸந விதிம் புந: !!*

அரணீ, ஸ்ருக் ஸ்ருவம், தோரணம், அஷ்ட மங்களம், தசாயுதம், கூர்மாஸநம்

खट्वाया लक्षणं पश्चात् लूखलं मुसलं तथा ।
शिबिकालक्षणं चैव डोलाया लक्षणं परम् ॥ ३ ॥

*கட்வாயா லக்ஷணம் பச்சாத் லூகலம் முஸலம் ததா !*
*சிபிகாலக்ஷணம் சைவ டோளாயா லக்ஷணம் பரம் !!*

கேடயம், உரல், உலக்கை, பல்லக்கு, ஊஞ்சல்

दीपमालाविधिं पश्चात् पुष्पाधारस्य लक्षणम् ।
भेरीं च समिधं चैव परिधिंदर्भलक्षणम् ॥ ४ ॥

*தீபமாலா விதிம் பச்சாத் புஷ்பாதாரஸ்ய லக்ஷணம் !*
*பேரீம்ச ஸமிதம் சைவ பரிதிர் தர்ப லக்ஷணம் !!*

சரவிளக்கு, புஷ்பம் குடலை, பேரீ, ஸமித்து, பரிதி, தர்பை

कूर्चञ्च विष्टरं पश्चात् लम्बकूर्चस्य लक्षणम् ।
परिस्तरणमेवन्तु दर्भमालाविधिं पुन: ॥ ५ ॥

*கூர்ச்சஞ்ச விஷ்டரம் பச்சாத் லம்ப கூர்ச்சஸ்ய லக்ஷணம் !*
*பரிஸ்தரண மேவந்து தர்பமாலா விதிம் புந: !!*

கூர்ச்சம், விஷ்டரம், லம்ப கூர்ச்சம், பரிஸ்தரணம், தர்பமாலை

प्रोक्षणीं कूर्चमेवन्तु पवित्रस्य तु लक्षणम् ।
पाद्यपात्रविधिं पश्चात् अर्घ्याचमनपात्रकम् ॥ ६ ॥

*ப்ரோக்ஷணீம் கூர்ச்ச மேவந்து பவித்ரஸ்யது லக்ஷணம் !*
*பாத்ய பாத்ர விதிம் பச்சாத் அர்க்யாசமந பாத்ரகம் !!*

ப்ரோக்ஷணீ கூர்ச்சம், பவித்ரம், பாத்ய பாத்ரவிதி, அர்க்ய பாத்ரம்

अर्घ्यपात्रविधिं चैव तत्पात्रस्य तु लक्षणम् ।
पुष्पाद्यार्घ्यपात्रञ्च प्रणीतापात्रलक्षणम् ॥ ७ ॥

*அர்க்ய பாத்ர விதிம்சைவ கந்த பாத்ரஸ்யது லக்ஷணம் !*
*புஷ்ப பாத்யார்க்ய பாத்ரஞ்ச ப்ரணீதா பாத்ர லக்ஷணம் !!*

அர்க்ய பாத்ரம், ஆசமந பாத்ரம், கந்த பாத்ரம், புஷ்ப முதலிய பாத்ரம் (ஸாமான்யார்க்ய பாத்ரம்) ப்ரணீதா பாத்ரம்

प्रोक्षणीपात्रमेतत्तु स्कन्दकुम्भस्य लक्षणम् ।
वर्धनीलक्षणं पश्चात् कुम्भानां लक्षणं पुनः ॥ ८ ॥

*ப்ரோக்ஷணீ பாத்ரமேதத்து ஸ்கந்த கும்பஸ்ய லக்ஷணம் ।*
*வர்த்தநீ லக்ஷணம் பச்சாத் கும்பாநாம் லக்ஷணம் புந: ॥*

ப்ரோக்ஷணீ பாத்ரம், ஸ்கந்த கும்ப லக்ஷணம், வர்த்தநீ கலச லக்ஷணம், மற்ற கும்பங்களின் லக்ஷணம்

कलशानां शरावाणां कुण्डिकायाश्च लक्षणम् ।
हविः पात्रविधिं पश्चादुपदंशस्य पात्रकम् ॥ ९ ॥

*கலசாநாம் சராவாணாம் குண்டிகாயாச்ச லக்ஷணம் ।*
*ஹவி: பாத்ர விதிம் பச்சாத் உபதம் சஸ்ய பாத்ரகம் ॥*

கலசம், சராவம், கிண்டி லக்ஷணம், ஹவிஸ் பாத்ர லக்ஷணம், காய்கறி, இவைகளின் பாத்ரம்

वितानलक्षणं दर्वी स्थालिकायास्तु लक्षणम् ।
वितानञ्च पताकाश्च क्षुद्रध्वजविधानकम् ॥ १० ॥

*(விதானம்) விதாந லக்ஷணம் தர்வீ ஸ்தாலிகாயஸ்து லக்ஷணம் ।*
*விதாநஞ்ச பதாகாச்ச க்ஷுத்ர த்வஜ விதாநகம் ॥*

முடியின் லக்ஷணம், தர்வி லக்ஷணம், வெண்கல பானை லக்ஷணம், மேற்கட்டித்துணி, நீண்ட கொடி, சின்னகொடி, அசஞ்ஜாடி.

छत्रपिञ्छं चामरञ्च मयूरव्यजनं तथा ।
दुकूलस्य धनं पश्चादुष्णीषं चोत्तरीयकम् ॥ ११ ॥

*சத்ர பிஞ்சம் சாமரஞ்ச மயூரவ்ய ஜநம் ததா ।*
*து கூலஸ்ய தநம் பச்சாத் உஷ்ணீஷம் ச உத்தரீயகம் ॥*

கொடை, தோகை, சாமரம், மயில் விசிறி, வெண்பட்டின் லக்ஷணம், தலைப்பாகை (சிரோ வஸ்த்ரம்), அங்க வஸ்த்ரம்

वस्त्राणां लक्षणं पश्चाच्छयनानाञ्च लक्षणम् ।
उपधानं ततो कशिपुं प्रच्छन्दपटलक्षणम् ॥ १२ ॥

*வஸ்த்ராணாம் லக்ஷணம் பச்சாத் சயநாநாந்து லக்ஷணம் ।*
*உபதாநம் ததோ கசிபும் ப்ரச்சந்த பட லக்ஷணம் ॥*

வஸ்த்ர லக்ஷணம், சயந (படுக்கை) லக்ஷணம், தலைகாணி லக்ஷணம், திண்டு லக்ஷணம், திரை லக்ஷணம்

धूपपात्रविधिं चैव धूपघण्टाविधानकम् ।
दीपपात्रविधिं चैव पात्रं नीराजनस्य तु ॥ १३ ॥

*தூப பாத்ர விதிம் சைவ தூப கண்டா விதாநகம் ।*
*தீப பாத்ர விதிம் சைவ நீராஜநஸ்ய பாத்ரகம் ॥*

தூப பாத்ரம், சின்னமணி லக்ஷணம், தீப பாத்ரம், நீராஜந (தீபாராதனை) பாத்ரம்,

महाघण्टादर्पणञ्च क्रमशः शृणु सुव्रत ।
अश्वत्थं वा शमीं वाऽपि गृहीत्वारणिमाचरेत् ॥ १४ ॥

*மஹா கண்டா தர்பணஞ்ச க்ரமச: ச்ருணு ஸுவ்ரத ।*
*அச்வத்தம் வா சமீம் வாத க்ருஹீத்வாரணி மாசரேத் ॥*

பெரிய மணி, கண்ணாடி ஆகிய இந்த த்ரவ்யங்களின் லக்ஷணம் கூறப்படுகிறது. கௌசிகரே! கேளும்! அரசமரம், வன்னிமரம் இவைகளால் அரணி கட்டை செய்யவும்

दशपञ्चाङ्गुलायामा चतुरङ्गुलविस्तृता ।
षडङ्गुलघना प्रोक्ता दीर्घाह्रासञ्च वारणिः ॥ १५ ॥

*பஞ்ச தசாங்குலாயாமா சதுரங்குல விஸ்த்ருதா ।*
*ஷடங்குல கநா ப்ரோக்தா தீர்காஹ்ராஸச்ச வாரணீ ॥*

15 அங்குல நீளமும், 4 அங்குல் அகலமும், 6 அங்குல கனமும், அரணி கட்டையின் அடி நுனி கூர்மையாக இருக்க வேண்டும்.

प्रथमस्य तरोर्नाहं पञ्चाङ्गुलमुदाहृतम् ।
द्वाविंशदङ्गुलं दैर्घ्यं कीलं स्यादयसाग्रके ॥ १६ ॥

*ப்ரதமஸ்ய தரோர்நாஹம் பஞ்சாங்குல முதா ஹ்ருதம்!*
*த்வாவிம்சத் அங்குலம் தைர்க்யம் கீலம் ஸ்யாதய ஸாக்ரகே!!*

முதல் மரத்தின் அகலம் 5 அங்குலம், 22 அங்குலம் நீளமாகவும், அதன் நுனியில் இரும்பினால் கீலகம் செய்யவும்

युगाङ्गुलेन मूले तु कीलं स्वेनैव कारयेत् ।
प्रथमस्याग्रके मूले त्वयः पट्टेन वेष्टयेत् ॥ १७ ॥

*யுகாங்குலேந மூலேது கீலம் ஸ்வே நைவ காரயேத்!*
*ப்ரதமஸ்யாக்ரகே மூலே த்வய பட்டேந வேஷ்டயேத்!!*

4 அங்குலத்தினால் அடியில் கீலகத்தை செய்யவும். முதல் மரத்தின் மேலும், கீழும் இரும்பு பட்டையால் சுற்றவும்

सप्ताङ्गुलं तत् विस्तारं तदर्धं घनमुच्यते ।
उभयोः पार्श्वयोश्चैव मुष्टिरष्टाङ्गुलं भवेत् ॥ १८ ॥

*ஸப்தாங்குலந்து விஸ்தாரம் தரர்த்தம் கந முச்யதே!*
*உபயோ: பார்ச்வயோசைவ முஷ்டிரஷ்டாங்குலம் பவேத்!!*

7 அங்குலம் அகலமாகவும் அதன் பாதி கனமுடையதாகவும், 2 பக்கங்களும் கைப்பிடி 8 அங்குலமாகவும் இருக்கவும்

पञ्चाङ्गुलपरीणाहं सर्वत्रैव सुवृत्तकम् ।
दशपञ्चांगुलायामं त्रिवृत् गोपालरज्जुकम् ॥ १९ ॥

*பஞ்சாங்குல பரிணாஹம் ஸர்வத்ரைவஸு வ்ருத்தகம்!*
*பஞ்சாதசாங்குலாயாமம் த்ரிவ்ருத் கோபால ரஜ்ஜுகம்!!*

5 அங்குல நீளமும் வட்ட வடிவமாகவும், 15 அங்குல நீளமாகவும் பசுவால் மயிறுகளால் முப்பிரியாக்கப்பட்ட கயிற்றையோ

तन्तुना वाथ कर्तव्यं कनिष्ठाङ्गुलिनाहकम् ।
अरणीलक्षणं प्रोक्तं स्रुक स्रुवस्य विधिं शृणु ॥ २० ॥

*தந்துநாவாத கர்த்தவ்யம் கநிஷ்டாங்குலநாஹகம்!*
*அரணீ லக்ஷணம் ப்ரோக்தம் ஸ்ருக் ஸ்ருவஸ்ய விதி ச்ருணு!!*

நூல் கயிறாலோ, கட்டை விரல் பருமன் உள்ளதாகவோ கயிற்றை ஏற்கவும், இவ்வாறு அரணீ லக்ஷணம் கூறப்பட்டு ஸ்ருக், ஸ்ருவ லக்ஷணம் கூறப்படுகிறது

अश्वत्थेन तु शम्या वा खादिरेणाथवा पुनः ।
याज्ञिकैर्दारुभिः कुर्यात् स्रुक्स्रुवौ लक्षणाविमौ ॥ २१ ॥

*அச்வத்தேநது சம்யாவா காதிரேணாதவா புந:!*
*யாக்ஞிகைர் தாருபி: குர்யாத் ஸ்ருக் ஸ்ருவௌ லக்ஷணா விமௌ!!*

அரசங்கட்டை, வன்னிமரம், கருங்காலி மரத்தினாலோ யாகத்திற்கு உரிய மரங்களால் ஸ்ருக் ஸ்ருவம் செய்யவும்

तस्य सारणितो ग्राह्य द्विधाकृत्वाथ शिल्पिभिः ।
तत्पार्श्वे बिलिमाख्यातं त्वष्टा च निर्वृणं दृढम् ॥ २२ ॥

*தஸ்ய ஸாரணிதோ க்ராஹ்ய த்விதா க்ருத்வாத சில்பிபி:!*
*தத் பார்ச்வே பலிமாக்யாதம் த்வஷ்டாச நிர்வ்ருணம் த்ருடம்!!*

அந்த மரத்தை ரம்பத்தால் 2 ஆக அறுத்து அதன் பக்கத்தில் த்வாரம் செய்து பூச்சியில்லாததாக கெட்டியாக செய்யவும்

द्वात्रिंशदङ्गुलायामं सप्ताङ्गुलं सुवृस्तृतम् ।
तदघनं वेदमात्रं स्यात् पादमापाद्य तत्र वै ॥ २३ ॥

*த்வாத்ரிம்சத் அங்குலாயாமம் ஸப்தாங்குலந்து விஸ்த்ருதம்!*
*தத் கநம் வேத மாத்ரம் ஸ்யாத் ஏவமாபாத்ய தத்ரவை!!*

32 அங்குல நீளமும், 7 அங்குல அகலமும், அதன் கணம் 4 அங்குலமும்

मध्यसूत्रं प्रसार्यादौ सुखायामं षडङ्गुलम् ।
अग्रभागं त्रिभागैकं मुखविस्तारमेव च ॥ २४ ॥

*மத்ய ஸூத்ரம் ப்ரஸார்யாதௌ முகாயாமம் ஷடங்குலம்!*
*அக்ரபா கந்த்ரி பாகைகம் முக விஸ்தார மேவ ச!!*

நடுகோடு வரைந்து 6 அங்குலம் முகத்தின் நீளமும் (செய்து) அதன் நுனி பாகத்தை 3ல் 1 பாகமாக, முக விஸ்தாரத்தின் அளவை கல்பிக்கவும்

यवत्रयप्रमाणेन पट्टिकामुखपार्श्वयो: ।
यवमानेव निम्नं स्यान्मुखं सर्वमशेषत: ॥ २५ ॥

*யவ த்ரய ப்ரமாணேந பட்டகாமுக பார்ச்வயோ:!*
*யவமாநேந நிம்நம் ஸ்யாத் முகம் ஸர்வ மசேஷத:!!*

3 ½ யவை அளவால் பட்டிகையின் முகத்தின் 2 பக்கத்திலும், பட்டிகை அமைக்கவும். யவை அளவு முகத்தின் ஆழம் இருக்க வேண்டும்

पक्षाङ्गुले गलायामं विस्तारं भूतमात्रकम् ।
सप्ताङ्गुलायता वेदीं विस्तारं तत्समं भवेत् ॥ २६ ॥

*பக்ஷாங்குலம் களாயாமம் விஸ்தாரம் பூத மாத்ரகம்!*
*ஸப்தாங்குலாயதா வேதீ விஸ்தாரம் தத் ஸமம் பவேத்!!*

கழுத்தின் நீளம் 15 அங்குலம், கழுத்தின் நீளமும், 5 அங்குலம் அகலமும் ஆகும். வேதிகையானது 7 அங்குல நீளமும், அதே சம அளவு அகலமும் ஆகும்.

बिलं सुवृत्तं मध्ये स्यादङ्गुलायतमानत: ।
तद्विस्तारसमं गर्तं सुवृत्तं बिलमुच्यते ॥ २७ ॥

*பிலம்ஸு வ்ருத்தம் மத்யே ஸ்யாத் அங்குலாயத மாநத:!*
*தத்விஸ்தார ஸமங்கர்த்தம் ஸுவ்ருத்தம்பில முச்யதே!!*

1 அங்குல சுற்றளவும் வட்ட வடிவமாகவும், குழி இருக்க வேணும், அதன் விஸ்தாரத்திற்கு சமமாகவும் குழியும், வட்ட வடிவமாக த்வாரம் அமைக்கவும்

षट्टिमा बिलबाह्ये तु यवमानघनान्विता ।
बाह्ये वसुदलं पद्मं यवनिम्नं विचित्रकम् ॥ २८ ॥

*பட்டிகாபில பாஹ்யேது யவமாந கநாந்விதா!*
*பாஹ்யேவஸு தளம் பத்மம் யவநிம்நம் விசித்ரிதம்!!*

பட்டிகையின் த்வார பாஹ்யத்தில் யவையளவு கணமுள்ளதாக த்வாரம் இருக்க வேண்டும். ஸ்ருக்கின் 2 புறத்து வெளியிலும் 8 இதழ் தாமரை வரைந்து யவை அளவு ஆழமுள்ள பத்மத்தை அழகாக வரையவும்

वेदिकायास्तु परित: पट्टिका त्रियवा घना: ।
बिलादर्शमुखात् खाता कनिष्ठाङ्गुलमानत: ॥ २९ ॥

*வேதிகாயாஸ்து பரித: பட்டிகா த்ரியவா கநா:!*
*பிலாதர்ச முகாத் காதா கநிஷ்டாங்குல மாநத:!!*

வேதிகை சுற்றிலும் 3 யவையளவு பட்டிகை அமைக்கவும். குழியின் ஆரம்பத்திலிருந்து முகம் வரை சுண்டு விரல் அளவு

तारेणवाऽथ ताम्रेण नालं कृत्वा तु योजयेत् ।
पक्षांगुलप्रमाणेन पद्मागारन्तु गण्डिका ॥ ३० ॥

*தாரேணவாத தாம்ரேண நாளங்க்ருத்வாது யோஜயேத்!*
*பக்ஷாங்குல ப்ரமாணேந பத்மாகாரந்து கண்டிகா!!*

இரும்பினாலோ, தாம்பரத்தினாலோ குழாய் செய்து அதில் சேர்க்கவும். 15 அங்குல அளவில் தாமரை அமைப்பையும், கண்டிகையையும் அமைக்கவும்

गण्डिकैकांगुला वृत्ता तत्राहश्च द्विमात्रकम् ।
रव्यंगुलेन दण्डोच्चं तस्यार्धं नाहमुच्यते ॥ ३१ ॥

*கண்டிகை காங்குலா வ்ருத்தா தந்நாஹஞ்ச த்விமாத்ரகம்!*
*ரவ்யாங்குலேந தண்டோச்சம் தஸ்யார்த்தம் நாஹ முச்யதே!!*

கண்டிகை 1-அங்குல கனமாகவும், வட்டவடிவமாகவும், அதன் நீளம் 2- அங்குலமாகும். பின் தண்டத்தின் நீளம் 12- அங்குலமும், அகலம் 6 அங்குலமாகும்

तन्मूलैकांगुलाकारामंगुलद्वयमात्रतः ।
धर्मांगुलात्तु नाहं स्यात्तस्याधस्तात्तु पादयुक् ॥ ३२ ॥

*தந்மூலை காங்குலாகாராம் அங்குல த்வய மாத்ரத:!*
*தர்மாங்குலாத்து நாஹம் ஸ்யாத் தஸ்யாதஸ்தாத்து பாதயுக்!!*

அதன் தண்டத்தினடியில் 1 அங்குல, 2 அங்குல முதல் 4 அங்குலம் வரை அதன் அடியில் பாதம் அமைக்க வேண்டும்.

वेदिकायास्त्वधः पद्मं पद्माकारं सकर्णिकम् ।
गजोष्ठसदृशाकारं तस्य पृष्ठाकृतिर्भवेत् ॥ ३३ ॥

*வேதிகாயாஸ்த்வத: பத்மம் பத்மாகாரம் ஸகர்ணிகம்!*
*கஜோஷ்ட ஸத்ருசாகாரம் தஸ்ய ப்ருஷ்டா க்ருதிர் பவேத்!!*

வேதிகையின் அடியில் கர்ணிகையுடையதாக பத்மத்தை வரையவும். ஸ்ருக்கின் முக அடிபாகம் யானையின் உதடு போல் இருக்கவும்

एवं संग्राह्य तच्छेषं परित्यज्य दृढं तथा ।
स्रुग्लक्षणमिदं प्रोक्तं स्रुवो लक्षणमुच्यते ॥ ३४ ॥

*ஏவம் ஸம்க்ராஹ்ய தச்சேஷம் பரித்யஜ்ய த்ருடம் யதா!*
*ஸ்ருக் லக்ஷண மிதம் ப்ரோக்தம் ஸ்ருவோ லக்ஷண முச்யதே!!*

மீதமான பகுதியை விட்டுவிட்டு த்ருடமாக ஸ்ருக்கை அமைக்கவும். இவ்வாறு ஸ்ருக் லக்ஷணம் கூறப்பட்டு ஸ்ருவ லக்ஷணம் கூறப்படுகிறது.

द्वाविंशदङ्गुलं दैर्घ्यं दण्डनाहं षडङ्गुलम् ।
मूलाद्ग्रीवान्तकं यावत् त्र्यङ्गुलं ग्रीवनाहकम् ॥ ३५ ॥

*த்வாவிம்சத் அங்குலம் தைர்க்யம் தண்ட நாஹம் ஷடங்குலம்!*
*மூலாத் க்ரீவாந்தகம் யாவத் த்ர்யாங்குலம் க்ரீவ நாஹகம்!!*

22 அங்குலம் நீளமும், 6 அங்குல அகலமும், உள்ள தண்டத்தை அமைத்து அதில் அடிபாகம் முதல் கழுத்து பாகம் வரை 3 அங்குல கனமுள்ளதாக அமைக்கவும்

मूलपञ्चाग्रनाहं स्यात् द्विबिलं नासिकाकृतिः ।
पूरितङ्कर्षकार्धेन बिलमानं प्रचक्षते ॥ ३६ ॥

*மூல பச்சாக்ரநாஹம் ஸ்யாத் த்விபிலந்நாஸிகா க்ருதி:!*
*பூரிதம் கர்ஷ கார்த்தேந பிலமானம் ப்ரகீர்த்திதம்!!*

நுனியில் 5 அங்குல அகலமும், 2 குழியிட்டு நாஸிகை போல் அமைத்து நெய் மூழ்குவதற்க்கு அரை அங்குலம் ஆழம் குழியின் ஆழமாகவும்

पुष्कलाधः प्रकर्तव्यो गण्डिका द्वियसोन्नता ।
दक्षिणेन करेणैव या वक्रानामिकाङ्गुलिः ॥ ३७ ॥

*புஷ்கலாத: ப்ரகர்த்தவ்யா கண்டிகாத்வய ஸோந்நதா!*
*தக்ஷிணே நகரேணைவ யாவக்ராநாமி காங்குலி:!!*

ஸ்ருவத்தின் நெய் குழியின் அடியில் 2 கண்டிகையை அமைக்கவும். வலது கையினால், ஆள்காட்டி விரலின்றி

अङ्गुष्ठस्य तु पार्श्वो तर्जनीमध्यमांगुलि: ।
सङ्गताप्युच्छ्रिता बद्धा कनिष्ठांगुलिरुच्छ्रिता ॥ ३८ ॥

*அங்குஷ்டஸ்யது பார்ஸ்வோ தர்ஜநீ மத்யமாங்குலி: !*
*ஸங்க தாப்யுச்ச்ரிதௌ பத்வா கநிஷ்டாங்குலி ருச்ச்ரிதா !!*

கட்டை விரல் பக்கத்தில் மேலானதாக, மோதிர விரல், நடுவிரலும், கட்டை விரலுடன் நன்கு ஸ்ருவத்தை பிடித்து உயரத்தை சுண்டு விரலோடு

दक्षिणेन करेणैव स्रुवेणैकेन होमयेत् ।
स्रुक्बिलं सर्पिषा तत्र पूरयित्वा बिलोपरि ॥ ३९ ॥

*தக்ஷிணே நகரேணைவ ஸ்ருவேணைகேந ஹோமயேத் !*
*ஸ்ருக் பிலம் ஸர்ப்பிஷா தத்ர பூரயித்வாபி லோபரி !!*

வலது கையினால் ஸ்ருவத்தினால் ஹோமம் செய்யவும். ஸ்ருக்கின் த்வாரத்தை நெய்யால் நிரப்பி அந்த ஸ்ருவ குழியின் மேல்

स्रुवाग्रेण तु मन्त्रेण पुटास्यञ्चविधाय च ।
उत्थानौ तु करौ कृत्वा वेणुवन्धन्तु कारयेत् ॥ ४० ॥

*ஸ்ருவாக்ரேணது மந்த்ரேண புடாஸ்யஞ்ச விதாயச !*
*உத்தாநௌது கரௌ க்ருத்வா வேணுபந்தந்து காரயேத் !!*

ஸ்ருவ நுனியால் மந்த்ரத்தால் மூடி எழுந்திருந்து பின்னியதாக கை வைத்து

उच्छ्रितौ तर्जनीद्वे च कनिष्ठौ द्वौ तथैव च ।
वक्राङ्गुष्ठं स्रुवौ ग्राह्य द्वाभ्यां पूर्णाहुतिं हुनेत् ॥ ४१ ॥

*உச்ரிதௌ தர்ஜநீ த்வௌ ச கநிஷ்டௌ த்வௌ ததைவச !*
*வக்ராங்குஷ்டோ ஸ்ருவௌ க்ராஹ்ய த்வாப்யாம் பூர்ணாஹுதிம் ஹுநேத் !!*

ஆள்காட்டி விரலையும், சுண்டு விரலையும் நீட்டியதாக வைத்துக் கொண்டு, நன்கு ஸ்ருக் ஸ்ருவத்தை பிடித்துக் கொண்டு பூர்ணாஹுதி செய்யவும்

लक्षणं स्रुक्स्रुवस्यैवं श्रृणु तोरणलक्षणम् ।
ध्वजदण्डार्हकैर्वृक्षैरन्त: सारैस्तु याज्ञिकै: ॥ ४२ ॥

*லக்ஷணம் ஸ்ருக் ஸ்ருவஸ்யைவம் ச்ருணு தோரண லக்ஷணம் !*
*த்வஜ தண்டார்ஹகைர் வ்ருக்ஷ ரந்தஸ்ஸாரைஸ்து யாக்ஞிகை:!!*

இவ்வாறாக ஸ்ருக் ஸ்ருவ லக்ஷணம் கூறப்பட்டு தோரண லக்ஷணம் கூறுகிறேன் கேளும்! நன்கு வைரம் பாய்ந்த கொடிமரத்தை கூறப்பட்டதுமான வ்ருக்ஷங்களால் தோரணங்களால் அமைக்க வேண்டும்.

भूतहस्तसमुत्सेधमुत्सेधार्धं विशालकम् ।
करप्रमाणं शूलस्य दीर्घनाहं रसांगलम् ॥ ४३ ॥

*பூத ஹஸ்தம் ஸமுத்ஸேதம் உத்ஸேதார்த்தம் விசாலகம்!*
*கர ப்ரமாணம் சூலஸ்ய தீர்கநாஹம் ரஸாங்குலம்!!*

5 முழ அளவு உயரமும் 2 ½ முழ அகலமும், 1 ஹஸ்த அளவு சூல அளவும் சூலத்தின் நுனி நீளம் 6 அங்குலமாகும்

कन्यसं तोरणं प्रोक्तं वक्ष्यतेऽत: परं क्रमात् ।
भूतहस्तं समारभ्य नवहस्तान्तकं क्रमात् ॥ ४४ ॥

*கந்ய ஸம் தோரணம் ப்ரோக்தம் வீக்ஷதேது பரிக்ரமாத்!*
*பூதஹஸ்தம் ஸமாரப்ய நவஹஸ்தாந்தகம் க்ரமாத்!!*

இவ்வாறு கந்ய ஸம் தோரணம் என்று கூறப்பட்டு, அடுத்த தோரணம் கூறப்படுகிறது. 5 முழம் முதல் 6 முழம் வரை முறைப்படி

तलमध्यन्तु तद्दैर्घ्यं तेषामर्धैकविस्तृतम् ।
तोरणानाञ्च सर्वेषां शूलं वै हस्तमात्रकम् ॥ ४५ ॥

*தலமத்யந்து தத்தைர்க்யம் தேஷாமர்த்தைக விஸ்த்ருதம் !*
*தோரணாநாஞ்ச ஸர்வேஷாம் சூலம் வைஹஸ்த மாத்ரகம் !!*

தோரணத்தின் நீளமாகும், அதன் பாதிஅளவு அகலமாகும். எல்லா தோரணத்திற்கும் சூலம் 1 முழ அளவாகும்

तस्मात्पक्षांगुलाधिक्यात् तेषां नाहं प्रचक्षते ।
नवधा तोरणं प्रोक्तमष्टमङ्गलमुच्यते ॥ ४६ ॥

*தஸ்மாத் பக்ஷாங்குலாதிக்யாத் தேஷாந்நாஹம் ப்ரசக்ஷதே !*
*நவதா தோரணம் ப்ரோக்தம் அஷ்டமங்கல முச்யதே !!*

ஆகையால் 15 அங்குலம் அதிகமாக அகலம் கூறப்படுகிறது. 9 விதமாக தோரணம் கூறப்பட்டு அஷ்டமங்கலம் கூறப்படுகிறது.

याज्ञिकं वृक्षमादाय कारयेल्लक्षणान्वितम् ।
षोडशांगुलमायामं विस्तारन्तु तदर्धकम् ॥ ४७ ॥

*யாக்ஞிகம் வ்ருக்ஷ மாதாய காரயேல்லக்ஷணாந்விதம் !*
*ஷோடசாங்குல மாயாமம் விஸ்தாரந்து ததர்த்தகம் !!*

ஹோமத்திற்கு உபயோகமான வ்ருக்ஷங்களை க்ருஹித்து உரிய லக்ஷணத்துடன் 16 அங்குல நீளமும், 8 அங்குல அகலமுமாக

पद्मासनमधस्तात्तु विस्तारर्धेन कारयेत् ।
श्रीवत्सं चामरं युग्मं दर्पणं स्वस्तिकं गजम् ॥ ४८ ॥

*பத்மாஸந மதஸ்தாத்து விஸ்தாரார்த்தேந காரயேத் !*
*ஸ்ரீ வத்ஸம் சாமரம் யுக்மம் தர்பணம் ஸ்வஸ்திகம் கஜம் !!*

அகலத்தின் பாதி பாகமாக பத்மாஸநம் அமைக்கவும், ஸ்ரீ வத்ஸம், இரட்டை சாமரம், கண்ணாடி, ஸ்வஸ்திகம், கஜம்

पूर्णकुम्भमायूरं दीपं स्यादष्टमङ्गलम् ।
मङ्गलाष्टौ द्विधा प्रोक्तमस्त्राणां लक्षणं शृणु ॥ ४९ ॥

*பூர்ண கும்பம் ச மாயூரம் தீபம் ஸ்யாத் அஷ்டமங்கலம் !*
*மங்களாஷ்டௌ த்விதா ப்ரோக்தம் அஸ்த்ராணாம் லக்ஷணம் ச்ருணு !!*

பூர்ண கும்பம், மயூரம், தீபம் இவைகள் அஷ்ட மங்களமாகும், 2 விதமாக அஷ்டமங்களம் கூறப்பட்டு ஆயுதங்களின் லக்ஷணங்களை கேளும் !

वज्रं शक्तिञ्च दण्डञ्च खड्गं पाशं तथांकुशम् ।
गदा त्रिशूलं पद्मञ्च चक्रञ्चेति दशायुधम् ॥ ५० ॥

*வஜ்ரம் சக்திம்ச தண்டம்ச கட்கம் பாசம் ததாங்குசம் !*
*கதாத்ரிசூலம் பத்மஞ்ச சக்ரஞ்சேதி தசாயுதம் !!*

வஜ்ரம், சக்தி, தண்டம், கட்கம், பாசம், அங்குசம், கதை, த்ரிசூலம், பத்மம், சக்ரம் என தசாயுதம் ஆகும்.

हैमराजतताम्रैर्वा अयसापादपेन वा ।
एतेष्वेकेन कर्तव्यं सर्वलक्षणसंयुतम् ॥ ५१ ॥

*ஹைமம் ரஜத தாம்ரைர்வா அயஸா பாதபேநவா !*
*ஏதேஷ்வேகேந கர்த்தவ்யம் ஸர்வ லக்ஷண ஸம்யுதம் !!*

தங்கம், வெள்ளி, தாம்ரம் இரும்பு, மரம் இவைகளில் ஏதாவது ஒரு திரவ்யத்தினால் எல்லா லக்ஷணமுடையதாக தசாயுதம் அமைக்கவும்.

षोडशांगुलमायामं षडङ्गुलविशालकम् ।
तदर्धं घनमेवोक्तं निर्व्रणं सुदृढं ऋजुम् ॥ ५२ ॥

*ஷோடசாங்குல மாயாமம் ஷடங்குல விசாலகம் !*
*ததர்த்தம் கநமே வோக்தம் நிர்வ்ருணம் ஸுத்ருடம் ருஜும் !!*

16 அங்குல நீளமும், 6 அங்குல அகலமும் அதன் பாதி கணமும், ஒட்டை இல்லாததும், நேரானதும், கணமானதுமாக திரவ்யத்தை ஏற்கவும்

चतुरंगुलमूलेन मध्यमे गण्डिकात्रयम् ।
गण्डिकायाश्च नाहन्तु प्रत्येकं द्वादशाङ्गुलम् ॥ ५३ ॥

*சதுரங்குல மூலேந மத்யமே கண்டிகா த்ரயம் !*
*கண்டிகாயாச்சநாஹந்து ப்ரத்யேகம் த்வாதசாங்குலம் !!*

4 அங்குல அளவால் நடுவில் 3 கண்டிகை போல் அமைப்பைச் செய்யவும். கண்டிகையின் நீளம் 12 அங்குலமாகவும்

कृत्वाङ्गुलप्रमाणेन कृत्यं कृत्वा तदग्रके ।
अर्धाङ्गुलमाणेन पत्रतारं प्रकीर्तितम् ॥ ५४ ॥

*க்ருத்வாங்குல ப்ரமாணேந க்ருத்யங்க்ருத்வா ததக்ரகே !*
*அர்த்தாங்குல ப்ரமாணேந பத்ரதாரம் ப்ரகீர்த்திதம் !!*

1 -அங்குல ப்ரமாணமாக க்ருத்யம் என்ற அமைப்பைச் செய்யவும். ½ அங்குல ப்ராமணத்தினால் சூல பத்ரத்தின் அகலமாகவும்

पक्षत्रयद्वयं कुर्यात् अधचन्द्राकृतिर्यथा ।
मध्यपत्रमृजुं प्रोक्तं पत्रतारं यवद्वयम् ॥ ५५ ॥

*பக்ஷத்ரய த்வயங்குர்யாத் அர்த்த சந்த்ரா க்ருதிர் யதா !*
*மத்ய பத்ர ம்ருஜும் ப்ரோக்தம் பத்ரதாரம் யவத்வயம் !!*

3 இரக்கை போன்று 2 சூலம் செய்யவும், அது அரைச்சந்திர வடிவில் இருக்கவும், நடுவிலுள்ள பத்ரம் நேராதனாக இருக்கவும், பத்ரத்தின் அகலம் 2 யவை உள்ளதாக இருக்க வேண்டும்

पत्रतारेण मूलेन पादायामं प्रकीर्तितम् ।
द्विगुणं मध्यपादस्य पादायामं महामुने ॥ ५६ ॥

*பத்ர தாரேண மூலேந பாதாயாமம் ப்ரகீர்த்திதம் !*
*த்விகுணம் மத்ய பாதஸ்ய பாதாயாமம் மஹாமுநே !!*

பத்ரத்தின் அடிபாகத்தில் பாதத்தை அமைக்கவும். மத்ய பாதத்தில் இருக்கக் கூடிய அளவு 2 மடங்காகும்

अर्धाङ्गुलप्रमाणेन पत्राणां तु घनं भवेत् ।
शेषं दण्डमिति प्रोक्तं नाहं तस्य नवांगुलम् ॥ ५७ ॥

*அர்த்தாங்குல ப்ரமாணேந பத்ராணாந்து கநம் பவேத் !*
*சேஷம் தண்டம் இதி ப்ரோக்தம் நாஹம் தஸ்ய நவாங்குலம் !!*

½ அங்குல ப்ரமாணத்தினால் கண அளவாகும். மீதி பாகம் தண்டம் எனப்படும். இதனுடைய நீளம் 9 அங்குலமாகும்

एवं त्रिशूलं तस्याधस्तद्वच्छूलं प्रकीर्तितम् ।
वज्रस्य लक्षणं प्रोक्तं शक्तिलक्षणमुच्यते ॥ ४८ ॥

*ஏவம் த்ரிசூலம் தஸ்யாதஸ் தத்வச்சூலம் ப்ரகீர்த்திதம் !*
*வஜ்ரஸ்ய லக்ஷணம் ப்ரோக்தம் சக்தி லக்ஷண முச்யதே !!*

இவ்வாறு திரிசூலம் செய்து திரிசூலத்திற்கு அடியில் தண்டத்துடன் இன்னொரு சூலம் அமைக்கவும். இவ்வாறு வஜ்ர லக்ஷணம் கூறப்பட்டு சக்தி லக்ஷணம் கூறப்படுகிறது

द्विकराङ्गुलमायामं विस्तारं चतुरङ्गुलम् ।
तदर्धं तु घनं मध्ये गण्डिका चतुरङ्गुलम् ॥ ५९ ॥

*த்விகராங்குலமாயாமம் விஸ்தாரஞ்சதுரங்குலம் /*
*ததர்த்தந்து கநம் மத்யே கண்டிகா சதுராங்குலம் //*

2 - முழ நீளமும், 4 அங்குல அகலமும், 2 அங்குல கனமும் மத்தியில் கண்டிகை 4 அங்குலமும்

तदूर्ध्वे तदधः कुर्यात् त्र्यङ्गुलं मध्यपत्रवत् ।
शक्तिलक्षणमेवं स्यात् दण्डलक्षणमुच्यते ॥ ६० ॥

*ததூர்த்வே தத: குர்யாத் த்ரயங்குலம் மத்ய பத்ரவத் /*
*சக்தி லக்ஷணமேவம் ஸ்யாத் தண்ட லக்ஷண முச்யதே //*

அதன் மேலும், கீழும் 3 அங்குல அளவாக நடுபத்ரம் போல் சதுரச்ரம் போல் அமைப்பது சக்தி லக்ஷணமாகும், தண்ட லக்ஷணம் கூறப்படுகிறது.

कलाङ्गुलसमायामं मूले वेदाङ्गुलेरितम् ।
गण्डिकां कारयेत् तस्य विस्तारं चतुरङ्गुलम् ॥ ६१ ॥

*கலாங்குல ஸமாயாமம் மூலேவேதாங்குலே ரிதம் /*
*கண்டிகாம் காரயேத்தஸ்ய விஸ்தாரம் சதுராங்குலம் //*

அடியில் 16 அங்குல நீளமும், அதனடி பாகம் 4 அங்குல அளவில் கண்டிகையும் அமைத்து தண்டத்தின் விஸ்தாரம் 4 அங்குலமுமாகும்

कृत्वाङ्गुलं भवेन्मुष्टि तन्नाहं कौशिकांगुलम् ।
कृत्वांगुलं तु विस्तारं तस्योर्ध्वे गण्डिकाङ्गुलम् ॥ ६२ ॥

*க்ருத்வாங்குலம் பவேந்முஷ்டி தந்நாஹம் கௌசிகாங்குலம் /*
*க்ருத்வாங்குலந்து விஸ்தாரம் தஸ்யோர்த்வே கண்டிகாங்குலம் //*

கைப்பிடியானது 1 அங்குலமும், அதன் நீளம் 5 அங்குலமாகும். 1 அங்குலம் விஸ்தாரம், 1 அங்குலம் கண்டிகையாகும்

ऊर्ध्वं रसांगुलं तारमधस्तात्तु युगांगुलम् ।
क्रमेण कृशतं कुर्यात् विस्तारार्धेन विस्तृतम् ॥ ६३ ॥

*ஊர்த்வம் ரஸாங்குலம் தாரம் அதஸ்தாத்து யுகாங்குலம் /*
*க்ரமேண க்ருசதாங்குர்யாத் விஸ்தாரார்த்தேந விஸ்த்ருதம் //*

மேற் பகுதி 6 அங்குலமாகவும், கீழ் பகுதி 4 அங்குல நீளமாகும். முறைப்படி மெலிந்ததாக செய்து நன்கு விஸ்தாரமானதாகவும்

नाहन्तु दण्डमेवं स्यात् खड्गलक्षणमुच्यते ।
षोडशांगुलमायाममश्विन्यंगुलविस्तृतम् ॥ ६४ ॥

*நாஹந்து தண்டமேவம் ஸ்யாத் கட்க லக்ஷணமுச்யதே /*
*ஷோடசாங்குல மாயாமம் அச்வ்யங்குல விஸ்த்ருதம் //*

தண்டம் அமைக்கவும், கத்தியின் லக்ஷணம் கூறப்படுகிறது. 16 அங்குல நீளமும், 2 அங்குல அகலமும்

मध्येनैव तु तन्मध्ये पृष्ठे त्वश्रन्तु कारयेत् ।
कञ्चुकन्तु षडंगुल्यं तद्विस्तारं यवद्वयम् ॥ ६५ ॥

*மத்யே நைவது தந்மத்யே ப்ருஷ்டே த்வ ச்ரந்து காரயேத் /*
*கஞ்சுகந்து ஷடங்குல்யம் தத்விஸ்தாரம் யவ த்வயம் //*

நடுவாக மையத்தில் பின்பக்கம் நாற்கோணம் அமைக்கவும். கட்கத்தின் முக்கியமான பாகம் (இரும்பிலான பாகம்) 6 அங்குல நீளமும் 2 அங்குல அகலமும் ஆகும்.

युगांगुलेन कर्णन्तु तस्य नाहं गुणांगुलम् ।
अर्धांगुलन्तु फलका विस्तारं त्रियवं घनम् ॥ ६६ ॥

*யுகாங்குலேந கர்ணந்து தஸ்ய நாஹம் குணாங்குலம் !*
*அர்த்தாங்குலந்து பலகா விஸ்தாரம் த்ரியவம் கநம் !!*

4 அங்குல அளவால் கர்ண பாகமும், அதன் நீளம் 3 அங்குலமாகும். ½ அங்குல விஸ்தாரம் பலகையும், அதன் 3 யவை அங்குலம் கனமும் ஆகும்

पुष्पमर्धांगुलं ज्ञेयं शेषं युक्त्या प्रकल्पयेत् ।
खड्गलक्षणमेवं स्यात् पाशलक्षणमुच्यते ॥ ६७ ॥

*புஷ்ப மர்த்தாங்குலம் ஜ்ஞேயம் சேஷம் யுக்த்யா ப்ரகல்பயேத் !*
*கட்க லக்ஷண மேவம் ஸ்யாத் பாசலக்ஷண முச்யதே !!*

புஷ்பம் போன்ற அமைப்பு ½ அங்குலமும் மீதமுள்ள பகுதி யுக்தியால் அமைக்கவும். இவ்வாறு கட்க லக்ஷணம் கூறி பாச லக்ஷணம் கூறப்படுகிறது.

आयामं पूर्ववत् कृत्वा फलद्वयकृतांगुलि: ।
रसांगुलन्तु विस्तारं परस्परनिरीक्षितौ ॥ ६८ ॥

*ஆயாமம் பூர்வவத் க்ருத்வா பலத்வய க்ருதாங்குலி: !*
*ரஸாங்குலந்து விஸ்தாரம் பரஸ்பர நிரீக்ஷிதௌ: !!*

பாசத்தின் நீளம் முன்புபடியே அமைத்து தண்டபாகம் அஞ்சலி அமைப்பு போன்றும் ஆறு அங்குலம் அகலம் ஒன்றுக்கொன்று சம்பந்தப்பட்டதாகவும்

वेदांगुलन्तु तन्नाहं तदूर्ध्वे द्वादशांगुलम् ।
द्वयमर्धन्तु नाहं स्यात् कृशत: कृशमूलत: ॥ ६९ ॥

*வேதாங்குலத்து தந்நாஹம் ததூர்த்வே த்வாதசாங்குலம் !*
*த்வயம் அர்த்தந்து நாஹம் ஸ்யாத் க்ருசத: க்ருசமூலத: !!*

4 அங்குலம் அதன் நீளமும், அதற்கு மேல் 12 அங்குலம் உயரமும் 2 ½ அங்குலம் அகலமும், மேலிருந்து கீழே மெலிந்ததாகவும் அமைக்கவும்

पाशस्य लक्षणं प्रोक्तं श्रृणुष्वांकुशलक्षणम् ।
मूलांगुलसमायामं तन्नाहन्तु षडंगुलम् ॥ ७० ॥

*பாசஸ்ய லக்ஷணம் ப்ரோக்தம் ச்ருணுஷ்வாங்குச லக்ஷணம் !*
*மூலாங்குல ஸமாயாமம் தந்நாஹந்து ஷடங்குலம் !!*

பாச லக்ஷணம் கூறி அங்குச லக்ஷணம் கூறுகிறேன் (கூறப்படுகின்றது) அடிப்பகுதியின் அளவுப்படி உயரமும், 6 அங்குல அகலமும்

अग्रेऽङ्गुलेन मुकुलं मन्वंगुलप्रमणकम् ।
तरुणेन्दुसमाकारं मुकुलाध: सुयोजयेत् ॥ ७१ ॥

*அக்ரேங்குலேந முகுளம் மந்வங்குல ப்ரமாணகம் !*
*தருணேந்து ஸமாகாரம் முகுளாதஸ் ஸுயோஜயேத் !!*

நுனியின் 1 அங்குல அளவால் மொட்டு போன்ற அமைப்பும், 14 அங்குல நீளமும், இளம்பிறை சந்திரன் போல் மூலத்தினடியில் சேர்த்து பாச அமைப்பிலேயே

एवमंकुशमाख्यातं गदालक्षणमुच्यते ।
षोडशांगुलमायाममष्टाश्रन्तु गदाकृति: ॥ ७२ ॥

*ஏவம் அங்குச மாக்யாதம் கதாலக்ஷண முச்யதே !*
*ஷோடசாங்குல மாயாமம் அஷ்டாச்ரந்து கதாக்ருதி: !!*

அங்குசத்தையும் அமைக்கவும், இவ்வாறு அங்குச லக்ஷணம் கூறப்பட்டு கதை லக்ஷணம் கூறப்படுகிறது. 16 அங்குல நீளமும், கதையின் 8 பட்டை கதையும் உருவமும்

गण्डिकैकांगुलं मूले मुष्टिस्तु चतुरंगुलम् ।
तदूर्ध्वे गण्डिकांगुल्यं तदा शेषं प्रकीर्तितम् ॥ ७३ ॥

*கண்டிகை காங்குலம் மூலே முஷ்டிஸ்து சதுரங்குலம் !*
*ததூர்த்வே கண்டிகாங்குல்யம் ததாசேஷம் ப்ரகீர்த்திதம் !!*

கண்டிகையின் அமைப்பு 1 அங்குல அமைப்பால் அழகு படுத்தியும், கீழே 4அங்குல அளவாகவும், முஷ்டிபாகமும் அதற்கு மேல் கண்டி போன்ற பாகத்தை 1 அங்குலத்தில் செய்து மீதத்தை அங்குச தண்டம் போல் கல்பிக்கவும்

गदाया लक्षणं प्रोक्तं श्रृणु शूलस्य लक्षणम् ।
षोडशंगुलमायामं विस्तारन्तु षडङ्गुलम् ॥ ७४ ॥

*கதாயா: லக்ஷண ப்ரோக்தம் ச்ருணு சூலஸ்ய லக்ஷணம் !*
*ஷோடசாங்குல மாயாமம் விஸ்தாரந்து ஷடங்குலம் !!*

கதையின் லக்ஷணம் கூறப்பட்டு, சூல லக்ஷணம் கூறப்படுகின்றது. 16 அங்குல நீளமும், 6 அங்குல அகலமும்

वेदांगुलघनं प्रोक्तं वज्रशूलविधानतः ।
शूललक्षणमेवं स्यात् श्रृणु पद्मस्य लक्षणम् ॥ ७५ ॥

*வேதாங்குல கநம் ப்ரோக்தம் வஜ்ர சூல விதாநத: !*
*சூல லக்ஷண மேவம் ஸ்யாத் ச்ருணு பத்மஸ்ய லக்ஷணம் !!*

4 அங்குல கணமுமாக, வஜ்ரி சூலம் போன்று 1 சூல அமைப்பு 3 மட்டும் செய்வது சூலத்தின் லக்ஷணமாகும். இவ்வாறு சூல லக்ஷணம் கூறப்பட்டு பத்ம லக்ஷணம் கூறப்படுகிறது.

षडङ्गुलं तु मुकुलं तन्नालं त्र्यंगुलं भवेत् ।
दलाष्टकसमायुक्तं नालायामं दशांगुलम् ॥ ७६ ॥

*ஷடங்குலந்து முகுளம் தந்நாளம் த்ரயங்குலம் பவேத் !*
*தளாஷ்டக ஸமாயுக்தம் நாளாயாமம் தசாங்குலம் !!*

6 அங்குலம் உயரமும், 3 அங்குலம் அகலமும் 8 தளத்தோடு கூடியதும் தாமரை தண்டு 10 அங்குலமும்

रसांगुलं तु तन्नाहमेवं पद्मस्य लक्षणम् ।
चक्रस्य लक्षणं वक्ष्ये श्रृणु कौशिक सुव्रत ॥ ७७ ॥

*ரஸாங்குலந்து தந்நாஹம் ஏவம் பத்மஸ்ய லக்ஷணம் !*
*சக்ரஸ்ய லக்ஷணம் வக்ஷ்யே ச்ருணு கௌசிக ஸுவ்ரத !!*

தண்டின் அகலம் 6 அங்குலமும் பத்மத்தின் லக்ஷணமாகும். சக்ரத்துனுடைய லக்ஷணம் கூறப்படுகிறது கேளும்!

आयामं पूर्ववत् प्रोक्तमष्टांगुलसुविस्तृतम् ।
मध्ये नाभिसमायुक्तं षोडशारसमायुतम् ॥ ७८ ॥

*ஆயாமம் பூர்வ வத் ப்ரோக்தம் அஷ்டாங்குல ஸுவிஸ் த்ருதம் !*
*மத்யே நாப ஸமாயுக்தம் ஷோடசார ஸமாயுதம் !!*

16 அங்குல உயரமும், 8 அங்குல அகலமும், மத்தியில் நாபி போன்ற அமைப்பும் 16 அம்பு போன்ற அமைப்பும்

एकांगुलविशालेन परितः पत्रमुच्यते ।
मूर्ध्नि पार्श्वे तु कर्तव्यं ज्वलतायिशेषतः ॥ ७९ ॥

*ஏகாங்குல விசாலேந பரித: பத்ர முச்யதே !*
*மூர்த்நி பார்ச்வேது கர்த்தவ்யம் ஜ்வலந்தாந்தம் விசேஷத: !!*

1 அங்குல அகலத்தினால் சுற்றிலும் இதழையும், சக்ரத்தின் மேல் பகுதியிலும், உள் பக்கத்திலும் ஜ்வாலை போன்று அமைக்கவும்

दण्ड तु शूलवत्कार्यं प्रोक्तं चक्रस्य लक्षणम् ।
एवं दशायुधं प्रोक्तं कूर्मासनविधिं श्रुणु ॥ ८० ॥

*தண்டந்து சூலவத் கார்யம் ப்ரோக்தம் சக்ரஸ்ய லக்ஷணம்!*
*ஏவம் தசாயுதம் ப்ரோக்தம் கூர்மாஸந விதிம் ச்ருணு!!*

அதன் தண்டம் சூலத்திற்கு கூறப்பட்டது போல் அமைக்கவும், இவ்வாறு சக்ர லக்ஷணம் கூறப்பட்டுள்ளது. இவ்வாறு தசாயுதம் கூறப்பட்டு கூர்மாஸன விதியை கூறுகிறேன்! கேளும்!!

रुद्रांगुलसुविस्तारं तदर्धेनैव कारयेत् ।
श्रुत्यंगुलं घनं प्रोक्तं मूर्ध्नि भूतांगुलं भवेत् ॥ ८१ ॥

*ருத்ராங்குலஸு விஸ்தாரம் ததர்த்தே நைவ காரயேத்!*
*ச்ருத்யங்குலம் கநம் ப்ரோக்தம் மூர்த்நி பூதாங்குலம் பவேத்!!*

11அங்குல நீளமும், அதன் பாதி அகலமும், 4 அங்குல கனமும் கூர்மத்தின் சிரோபாகம் 5 அங்குலமும்

सप्तांगुलेन तन्नाहं मानांगुलेन कारयेत् ।
कूर्मासनमिदं प्रोक्तं खट्वाया लक्षणं श्रुणु ॥ ८२ ॥

*ஸப்தாங்குலேந தந்நாஹம் மாநாங்குலே நகாரயேத்!*
*கூர்மாஸநம் இதம் ப்ரோக்தம் கட்வாயாலக்ஷணம் ச்ருணு!!*

அதன் அங்குலம் 7 அங்குலமும், ஏற்படுத்தவும், மேற்கூறியவைகளை மாநாங்குல அளவால் அளக்கவும், இவ்வாறு கூர்மாஸநம் கூறி கேடயத்தின் லக்ஷணத்தை கூறுகிறேன்.

चतुर्विंशांगुलं पादं श्रेष्ठं मानांगुलं भवेत् ।
मध्यमं षोडशांगुल्यमधमं द्वादशांगुलम् ॥ ८३ ॥

*சதுர்விம்சாங்குலம் பாதம் ச்ரேஷ்ட மாநாங் குலம் பவேத்!*
*மத்யமம் ஷோடசாம்குல்யம் அதமம் த்வாதசாம் குலம்!!*

24 அங்குலம் பாதமும், மாநாங்குல அளவால் செய்வது ச்ரேஷ்டமாகும், 16 அங்குல நீளம் மத்யமமாகும். 12 அங்குலம் அதமமாகும்.

विंशत्यंगुलमानेन श्रेष्ठं पादस्य नाहकम् ।
मध्यमस्याधमस्यैव द्विद्व्यंगुलविहीनकम् ॥ ८४ ॥

*விம்சத்யம் குல மாநேந ச்ரேஷ்டம் பாதஸ்ய நாஹகம்!*
*மத்ய மஸ்யாதமஸ்யைவ த்வித்வியம் குல விஹீநகம்!!*

பாதத்தின் சுற்றளவு 20 அங்குலம் உத்தமமாகும். மத்யம, அதம, சுற்றளவு முறையே 2, 2 அங்குலம் குறைந்ததாகவும் ஆகவும்

मूलपादस्य विस्तारं शेषं युक्त्या प्रकल्पयेत् ।
शुभांघ्रिकरपादं वा मृगेन्द्राभाङ्घ्रिरेव च ॥ ८५ ॥

*மூல பாதஸ்ய விஸ்தாரம் சேஷம் யுக்த்யா ப்ரகல்பயேத்!*
*சுபாங்ரி கர பாதம் வா ம்ருகேந்த்ரா பாங்ரி ரேவ ச!!*

மேற்கூறிய அளவால் கேடய பாதத்தை அமைத்து, மீதத்தை யுக்தியால் அமைத்து கொள்ளவும், நல்ல அழகுள்ள பாதத்தையோ, சிங்கம் போன்ற பாத அமைப்பையோ

षट्त्रिंशदंगुलायामं तारद्विगुणमुत्तमम् ।
कौशिकांगुलविस्तारं गुलिकान्यंगुलायतम् ॥ ८६ ॥

*ஷட்த்ரிம் சதம் குலாயாமம் தாரத்விகுண முத்தமம்!*
*கௌசிகாம் குல விஸ்தாரம் குலிகாந்யம் குலாயதம்!!*

36 அங்குல நீளமும், அகலம் 2 மடங்கானதும் உத்தமம், 5 அங்குலமும், குளிகை போன்ற அமைப்பு 1 அங்குலமும்

ईलितारं त्रिधा कृत्वा मध्यभागेन पट्टिका ।
कुर्यात्कपोतकं बाह्ये पट्टिका द्वियवेन तु ॥ ८७ ॥

*ஈளிதாரம் த்ரிதா க்ருத்வா மத்யபாகேந பட்டிகா !*
*குர்யாம் க போதகம் பாஹ்யே பட்டிகா த்வியவே*
*நது !!*

நீள, அகலத்தை 3 பங்காக்கி நடுப்பாகத்தினால் பட்டிகையையும், கபோதகம் என்ற அமைப்பையும் 2 யவைஅமைப்பால் பட்டிகையையும்

अध: शूलस्य पत्रारै रक्तहारैव पिष्टयेत् ।
ईलिकाभ्यन्तरे चैव विन्यस्ता धातुना गला ॥ ८८ ॥

*அதச்சூலஸ்ய பத்ராரை ரக்த ஹேராரைவ*
*பிஷ்டயேத் !*
*ஈளிகாப்யந்தரை சைவ விந்யஸ்ததாது நாகளா !!*

கீழ்பாகம் சூலத்தினுடைய பத்ர ஆரங்களால் சிகப்பு வர்ணங்களாலும் சேர்க்கவும், ஈளிகையென்ற பிரசேத நடுவில்

सुषिरेष्वद्भुतानां तु नाराचं योजयेद्बुध: ।
नाराचेश्च समायुक्तं कक्ष्या सङ्घर्षयेत् पुन: ॥ ८९ ॥

*ஸுஷிரேஷ்வத்புதா நாந்து நாராசம் யோஜயேத்புத:!*
*நாராசைச்ச ஸமாயுக்தம் கக்ஷ்யாஸம் கர்ஷயேத்*
*தத:!!*

கழுத்து பகுதியில் த்வாரம் அமைத்து ஈட்டி போன்ற வளையம் அமைக்கவும். ஈட்டி போன்ற அமைப்புகளோடு கூடிய கேடயத்தை அமைக்கவும்.

खट्वालक्षणमेवोक्तं लूखलस्य विधिं श्रृणु ।
विंशत्यंगुलमायाममुत्तमं परिकीर्तितम् ॥ ९० ॥

*கட்வா லக்ஷண மே வோக்தம் ஊகலஸ்ய விதிம்*
*ச்ருணு !*
*விம்சத்யம் குலமாயாமம் உத்தமம் பரிகீர்த்திதம் !!*

கேடய லக்ஷணம் கூறப்பட்டு உரலின் லக்ஷணம் கூறப்படுகிறது. 20 அங்குலம் நீளம், உத்தமமாகும்

अष्टादशांगुलं मध्यं कन्यसं तु कलांगुलम् ।
आयामं त्रिगुणं कृत्वा तन्नाहं तु विधीयते ॥ ९१ ॥

*அஷ்டாதசாம் குலம் மத்யம் கந்யஸந்து கலாம்*
*குலம் !*
*ஆயாமம் த்ரிகுணம் க்ருத்வா தந்நாஹந்து*
*விதீயதே !!*

18 அங்குலம் மத்யமமாகும், 16 அங்குலம் அதமமாகும், நீளத்தின் 3-ல் 1 பாகம் தந்நாஹம் அகலமாகும்

चतुर्धा विभजेत्तारं त्रिभागं गर्तमुच्यते ।
उत्सेधात्यर्धमानेन ग्रीवामूलस्य नाहकम् ॥ ९२ ।.

*சதுர்த்தா விபஜேத்தாரம் த்ரிபாகம் கர்த முச்யதே !*
*உத்ஸேதாத்யார்த்த மானேந க்ரீவா மூலஸ்ய*
*நாஹகம் !!*

உயரத்தை 4 பங்காக்கி அதை 3-ல் பங்காக்கி 3 பாகம் உலக்கையின் குழியாகும். உயரத்தினுடைய ½ பாகம் கழுத்து பகுதி, அடிப்பகுதி சுற்றளவாகும்

ओष्ठं पक्षाङ्गुलं प्रोक्तं मानस्य च विशेषत: ।
पादं पादांगुलाहीनं मध्यमस्यधमस्य तु ॥ ९३ ॥

*ஒஷ்டம் பக்ஷாம் குலம் ப்ரோக்தம் மாநஸ்ய ச*
*விசேஷத:!*
*பாதம் பாதாம் குலாஹீநம் மத்ய மஸ்யாத மஸ்யது !!*

உரலின் வாய்ப்பகுதி 15 அங்குலமாகும், கீழ்பாகம் ஒவ்வொரு காலங்கள் குறைவாக உள்ள அமைப்பு மத்யம, அதம அளவாகும்

लूखलस्यैवमाख्यातं मुसलस्य विधिं श्रृणु ।
सार्धत्रितालमधमं युगतालं तु मध्यमम् ॥ ९४ ॥

*லூகலஸ்யைவ மாக்யாதம் முஸலஸ்ய விதிம் ச்ருணு!*
*ஸார்த்த த்ரிதால மதமம் யுகதாலந்து மத்யமம்!!*

இவ்வாறு உரலின் லக்ஷணம் கூறி உலக்கையின் லக்ஷணம் கூறுகின்றது. 5 தாள அளவு உத்தமமாகும். 3 தாள அளவு மத்யமமாகும்

उत्तमं भूततालं तु मुन्यष्टनवमात्रकम् ।
कन्यसादिपरीणाहं वृत्तं स्यात् पर्वत: समम् ॥ ९५ ॥

*உத்தமம் பூததாலந்து முந்யஷ்ட நவ மாத்ரகம்!*
*கந்யஸாதி பரீணாஹம் வ்ருத்தம் ஸ்யாத் பர்வதஸ் ஸமம்!!*

8, 9 மாத்ராங்குல அளவு அதமமாகும். மேலிருந்து கீழ் வரை வட்ட வடிவமாக இருக்க வேண்டும்

अधस्सार्धांगुलेनैव वेष्टयेन्मूलके दृढम् ।
एवं तु मुसलं प्रोक्तं शिबिकालक्षणं श्रृणु ॥ ९६ ॥

*அதஸ்ஸார்த்தாம் குலேநைவ வேஷ்டயேந் மூலகே த்ருடம்!*
*ஏவந்து முஸலம் ப்ரோக்தம் சிபிகா லக்ஷணம் ச்ருணு!!*

கீழே 1 ½ அங்குல அளவால் கெட்டியாக கொப்பி அமைக்கவும். இவ்வாறு உலக்கை முறை கூறப்பட்டு பல்லக்கு லக்ஷணம் கூறப்படுகிறது.

दारुसारमयेनैव मानांगुल्येन कारयेत् ।
षट्त्रिंशदंगुलन्तारं कन्यसस्य प्रकीर्तितम् ॥ ९७ ॥

*தாரு ஸாரமயே நைவ மாநாம்குல்யே நகாரயேத்!*
*ஷட்த்ரிம் சதம் குலந்தாரம் கந்யஸஸ்ய ப்ரகீர்த்திதம்!!*

நல்ல வைரம் பாய்ந்த மரத்தினால் மாநாங்குல அளவினால் செய்யவும், 36 அங்குல அளவுல்லது அதமமான அளவாகும்

अष्टचत्वारिमध्यं स्यात् षष्ठ्यंगुलमथोत्तमम् ।
विस्तारं द्विगुणं यामं पादोनद्विगुणं तु वा ॥ ९८ ॥

*அஷ்ட சத்வாரி மத்யமம் ஸ்யாத் ஷஷ்ட்யம் குல மதோத்தமம்!*
*விஸ்தார த்விகுணம் யாமம் பாதோந த்விகுணம் துவா!!*

48 அங்குலம் அளவானது மத்யமமாகும், 60 அங்குலம் உள்ளது உத்தமமாகும். உயரத்தின் 2 மடங்கு நீள அளவாகும். 1¾ பாகமாகவோ நீள, அளவை கல்பிக்கவும்.

ईलिकायां तु विस्तारं श्रेष्ठस्य द्व्यंगुलं भवेत् ।
अंगुलांगुलहीनेन मध्यमस्य च त्रयस्य तु ॥ ९९ ॥

*ஈளிகாயாந்து விஸ்தாரம் ச்ரேஷ்டஸ்ய த்வயங்குலம் பவேத்!*
*அங்குலாங்குல ஹீநேந மத்யமஸ்யச யஸ்யது!!*

ஈளிகையினுடைய அளவானது உத்தமத்திற்கு 2 அங்குல அளவாகும். 1,1 அங்குல குறைவாக மத்யமமாகும்.

तस्यार्धं द्विशतं प्रोक्तं मीलिकायां द्विजोत्तम ।
ईलितारं त्रिधा कृत्वा मध्यभागेन पट्टिका ॥ १०० ॥

*தஸ்யார்த்த த்விசதம் ப்ரோக்தம் ஈளிகாயாம் த்விஜோத்தம!*
*ஈளிதாரந்த்ரிதா க்ருத்வா மத்யபாகேந பட்டிகா!!*

மேற்கூறிய அளவில் பாதி அளவு 200 அங்குலம், ஈளிகையின் அளவாகும். ஈளிகையின் அளவை 3 ஆக பிரித்து நடுபாகத்தினால் பட்டிகை அமைக்கவும்.

भागेनैकेन तद्वाह्ये कारयेत्तु कपोतकम् ।
आयाममष्टधा कृत्वा भागं स्याद्भित्तिपादकम् ॥ १०१ ॥

*பாகே நை கேந தத் பாஹ்யே காரயேத்து கபோதகம் !*
*ஆயாம மஷ்டதா க்ருத்வா பாகம் ஸ்யாத் பித்தி பாதகம் !!*

1 பாகத்தினால் பட்டிகையின் வெளியில் கபோதம் என்ற அமைப்பைச் செய்யவும் நீளத்தை 8 பங்காக்கி ,அதில் 1 பாகம் பித்தி பாதமாகும்.

कुम्भञ्च वलयं चैव वृत्तकं चारुहीनकम् ।
ईलिकामध्ययोर्मध्ये चतुरश्रं कृतं तथा ॥ १०२ ॥

*கும்பஞ்ச வலயம் சைவ வ்ருத்த காஞ்சாரு ஹீநகம் !*
*ஈளிகா மத்ய யோர் மத்யே சதுரச்ரம் க்ருதம் ததா !!*

கும்பம், வலயம், வ்ருத்தம் இவைகள் அமைத்து சதுரச்ரகம் அமைக்கவும் ஈளிகைகளின் நடுவில் சதுரச்ரம் போல் அமைக்கவும்.

एकैकांशेन चोर्ध्वाया पट्टिकाद्वयमेव वा ।
मध्यमे तु द्विभागेन फलका चक्रशोभितम् ॥१०३ ॥

*ஏகைகாம் சேந சோர்த்வாயா பட்டிகா த்வய மேவ ச !*
*மத்யமேது த்விபாகேந பலகா சக்ர சோபிதம் !!*

ஒவ்வொரு அம்சத்தினால் மேல் பாகத்தில் 2 பட்டிகை அமைக்கவும், நடுவில் 2 பாக அளவால் சக்ரங்களால் அலங்கரிக்கப்பட்ட பலகையை பொருத்தவும்

ईलिकैर्जालकैश्चैव फलकैर्गुलकैरपि ।
नानापल्लिमायुक्तं नानाक्रीडा समायुतम् ॥ १०४ ॥

*ஈளிகைர்ஜ்ஜாலகைச்சைவ பலகைர் குளகைரபி !*
*நாநா வல்லீ ஸமாயுக்தம் நாநா க்ரீடா ஸமாயுதம் !!*

ஈளிகை (தோரணம் போன்ற அமைப்பு ஜாலகம் (ஜ்வல்) பலகைகளும் உருண்டை போன்ற (குண்டு) போன்ற அமைப்புகளும், பலவித கொடிகள் போன்ற அமைப்பும் பலவித விளையாட்டும் போன்ற அமைப்பும்.

तत्पूर्वमभितस्तेरुत्सेधाष्टांगुलं भवेत् ।
सिंहद्वयसमायुक्तं तदूर्ध्वे मकरास्यकम् ॥ १०५ ॥

*தத் பூர்வ மபிதஸ் தேரு: உத்ஸேதாஷ்டாங்குலம் பவேத் !*
*ஸிம்ஹ த்வய ஸமாயுக்தம் ததூர்த்வே மகராஸ்யகம் !!*

பல்லக்குக்கு முன்னதாகவும், சுற்றிலுமாக, 8 உள்ள அளவால் 2 சிம்ம முகமும் அதற்கு மேல் முதலை போன்று அமைக்கவும்.

वलाकासदृशं पादं तत्र सप्तांगुलोन्नतम् ।
अध: पट्टैश्च नाराचैर्दृढं कृत्वा द्विधा मत: ॥ १०६ ॥

*பாலகா ஸ்தருசம் பாதம் தத்ர ஸப்தாங்கு லோந்நதம் !*
*அத: படைச்ச நாராசைர் த்ருடங்க்ருத்வா த்விதாமத: !!*

பலகைக்கு சமமான பாதம் 7 அங்குல உயரமாக இருக்கவும், கீழே இரும்பு பட்டையாலும் கூர்மையான ஆனிகளாலும் த்ருடமாக பொருத்தவும்.

वेणिकावेष्टनं वाऽपि फलकाबन्धनं नयेत् ।
शिबिकालक्षणं प्रोक्तं डोलालक्षणमुच्यते ॥ १०७ ॥

*வேணிகா வேஷ்டநம் வாபி பலகாபந்தநம் நயேத் !*
*சிபிகா லக்ஷணம் ப்ரோக்தம் டோளாலக்ஷண முச்யதே !!*

அஸ்மாநகரி வஸ்த்திரத்தாலோ போன்று போர்த்தி பலகையினாலோ அமைப்புடனோ பலகையை கட்டவும், இவ்வாறு பல்லக்கு லக்ஷணம் கூறப்பட்டு சப்பரத்தின் லக்ஷணம் கூறப்படுகிறது.

पादोर्ध्वे विन्यसेद्धीमान् मण्डपाकृतिमेव च ।
अश्वश्चैव मयूरश्च गजसारथ्यकर्मणे ॥ १०८ ॥

*பாதோர்த்வே விந்யஸேத்தீமாந் மண்டபா*
*க்ருதிமேவச!*
*அச்வச்சைவ மயூரச்ச கஜஸாரத்ய கர்மணே !!*

பாதத்திற்கு மேல் மண்டபம் போன்ற அமைப்பாகச் செய்து அதை இழுத்துச் செல்வதற்கு குதிரை, மயில், யானை இவைகளை (சாரதியாக)

नानाचान्यानि सर्वाणि रथवत् कारयेत्क्रमात् ।
डोलाया लक्षणं प्रोक्तं दीपमालविधिं श्रृणु ॥ १०९ ॥

*நாநா சாந்யாநி ஸர்வாணி ரதவத் காரயேத் க்ரமாத்!*
*டோளாயா லக்ஷணம் ப்ரோக்தம் தீப மாலா*
*விதிம் ச்ருணு !!*

மற்ற எல்லா அலங்காரமும் தேர்க்கு செய்பது போல் செய்யவும் சப்பர லக்ஷணம் கூறப்பட்டு தீபமாலை லக்ஷணத்தை கூறுகிறேன். கேள்!.

अयसा वाऽथ ताम्रेण दारुभिर्दीपमालिका ।
द्वारेष्टं द्वारवत्कुर्यात् कुबेरश्रीप्रभाकृति: ॥ ११० ॥

*அயஸா வாத தாம்ரேண தாருபிர் தீப மாலிகா!*
*த்வா ரேஷ்ட த்வாரவத் குர்யாத்*
*குபேர ஸ்ரீ ப்ரபா க்ருதி:!!*

இரும்பினாலோ, தாம்பரத்தினாலோ, மரத்தினாலோ, சரவிளக்கை அமைக்கவும் வாசற்படியில் அதன் அளவாகவும் முருகன் திருவாசி அளவாகவோ

कारयेदन्यदेशे तु द्वारमानप्रमाणत: ।
सुस्निग्धान् सुदृढान् कृत्वा स्कन्धान् वेलाङ्गुलायतात्
॥ १११ ॥

*காரயேதந்ய தேசேது த்வாரமாந ப்ரமாணத:!*
*ஸுஸ்நிக்தாத் ஸுத்ருடாந் க்ருதவா*
*ஸ்கந்தாந்வேலாங்குலாயதாத்!!*

மற்ற இடங்களில் வாயிற்படி அளவாகவோ இடைவெளியின்றி கெட்டியாக அமைத்து 3 அங்குல அளவாக தீப பாத்ரங்களை வைக்கவும்.

त्रिभागैकं न्यसेद्दण्डं भूताङ्गुलमथान्तरम् ।
दीपमालाविधि: प्रोक्त: पुष्पमालाविधिं श्रृणु ॥ ११२ ॥

*த்ரிபாகைகம் ந்யஸேத்தண்டே பூதாங்குலம்*
*அதாந்தரம் !*
*தீப மாலா விதி ப்ரோக்தம் புஷ்பதாா விதம் ச்ருணு !!*

மூன்றில் 1 பாகம் தண்டம் அமைத்து விளக்குக்கு இடைவெளி 5 அங்குலம் உள்ளதாக அமைக்கவும், சரவிளக்கு, முறைகூறி புஷ்பமாலை முறை கூறுகிறேன்.

अशोकासननिम्बाश्च मधूकपनसासना: ।
खदिर: शिशुपाश्चाम्रचन्दनश्चम्पक: शुभा: ॥ ११३ ॥

*அசோகாஸந நிம்பாச்ச மதூகபநஸா ஸநா:!*
*கதிரச் சிம்சு பாச்சாம்ர சந்தநச்சம்பகச் சுபா:!!*

அசோக மரம், புன்னாக மரம், லிம்ப வ்ருக்ஷம், (வேப்பமரம்) இலுப்பமரம், பலாமரம், கருங்காலி, காட்டுவாகை, மாமரம், சந்தன மரம், செம்பகமரம், இவைகள் புஷ்ப மாலைக்கு உகந்த மரங்களாகும்.

अष्टतारप्रमाणेन विस्तारद्विगुणायतम् ।
वेदपादसमायुक्तं द्वादशांगुलदैर्घ्यकम् ॥ ११४ ॥

*அஷ்ட தார ப்ரமாணேந விஸ்தார த்விகுணாயதம்!*
*வேத பாத ஸமாயுக்தம் த்வாதசாங்குல*
*தைர்க்யகம் !!*

8 தாள ப்ரமாணம் அகலமும் 2 மடங்கு நீளமும் 12 அங்குல நீளமான 4 கால்களையும், உடையதாயும்.

घनमष्टांगुलं प्रोक्तं हित्युत्सेधं कृतांगुलम् ।
दर्पणोदरसंकाशं कुर्यान्मानांगुलेन तु ॥ ११५ ॥

*கநம் அஷ்டாங்குலம் ப்ரோக்தம் ஹித்யுத் ஸேதங் க்ருதாங்குலம் !*
*தர்ப்பணோதர ஸங்காசம் குர்யாந்மாநாங்குலே நது !!*

8 அங்குலம் கணமாயும் 4 அங்குல உயரமாயும், கண்ணாடி போல் வலவலப்பானதும் மாநாங்குல அளவினால்.

पुष्पाधारमिदं प्रोक्तं भेरिकालक्षणं श्रृणु ।
आयामं युगतालं स्यात् नाहं भूतयवं भवेत् ॥ ११६ ॥

*புஷ்பதார மிதம் ப்ரோக்தம் பேரிகா லக்ஷணம் ச்ருணு !*
*ஆயாமம் யுகதாலம் ஸ்யாம் நாஹம் பூதயவம் பவத் !!*

புஷ்பாதாரத்தைச் செய்யவும், இவ்வாறு புஷ்பாதாரம் கூறப்பட்டு பேரிகா லக்ஷணம் கூறப்படுகிறது. நீளம் 4 தாள அளவும், அகலம் 5 யவை அளவும்.

रव्यंगुलं मुनिश्रेष्ठ मुखतारं प्रचक्षते ।
आरं घातसुवृत्तं स्याद्घनमर्धांगुलं भवेत् ॥ ११७ ॥

*ரவ்யங்குலம் முநிச்ரேஷ்டம் முகதாரம் ப்ரசக்ஷதே !*
*ஆரம்காத ஸு விர்த்தம் ஸ்யாத் கநமர்த்தாம் குலம் பவேத் !!*

12 அங்குலம் வேதிகையின் முக அளவாகும், 2 வளைவுகளின் உள்பக்கம் ஆழமானதாகவும், வடிவமானதும் உள்கணம் ½ அங்குலமானதாகவும் இருக்கவும்.

उभयो: पार्श्वयोर्वक्रं द्वयपट्टेन वेष्टयेत् ।
सप्तकोलसमायुक्तमाकारेण तु कारयेत् ॥ ११८ ॥

*உபயோ: பார்ச்வயோர் வக்ரம் த்வய பட்டேந வேஷ்டயேத் !*
*ஸப்தகீல ஸமாயுக்த மாகாரேணது காரயேத் !!*

2 பக்கத்திலும் குருக்காக வளையத்தை சேர்த்து கட்டவும், 7 கீலகத்துடன் உடையதாக பேரியை அமைக்கவும்.

भेरीलक्षणमाख्यातं समिधां लक्षणं श्रृणु ।
द्वादशांगुलमायामं कनिष्ठाङ्गुलनाहकम् ॥ ११९ ॥

*பேரீ லக்ஷண மாக்யாதம் ஸமிதாம் லக்ஷணம் ச்ருணு !*
*த்வாதசாம்குல மாயாமம் கநிஷ்டாம்குல் நாஹகம் !!*

பேரீ லக்ஷணம் கூறப்பட்டு ஸமித்து லக்ஷணம் கூறப்படுகிறது. 12 அங்குல நீளமும் 1 அங்குல அளவு சுற்றளவும்.

सार्द्रं सत्वसमाच्छेदसप्ररोहमनिन्दितम् ।
अवक्रं निर्व्रणं शुद्धं ब्राह्मणैरवृत्तं शुभम् ॥ १२० ॥

*ஸார்த்ரம் ஸத்வக்ஸமாச்சேத ஸப்ரரோஹ மநிந்திதம் !*
*அவக்ரம் நிர்வருணம் சுத்தம் ப்ராம்மனை ராவ்ருதம் சுபம் !!*

ஈரப்பசை உள்ளது தோலுடனும், நேராக வெட்டியதும் நன்கு விளைந்ததும் குற்றமற்றதும், வளைவில்லாததும், பூச்சியற்றதும், ப்ராம்மணர்களால் கொண்டு வரப்பட்டதுமான.

मूलेन मूलसंयुक्तमग्रेणाग्रसमायुतम् ।
समिधां लक्षणं प्रोक्तं परिधेर्लक्षणं श्रृणु ॥ १२१ ॥

*மூலேந மூல ஸம்யுக்தம் அக்ரேணாக்ர ஸமாயுதம்*
*ஸமிதாம் லக்ஷணம் ப்ரோக்தம் பரிதேர் லக்ஷணம் ச்ருணு !!*

அடிப்பாகத்தோடு அடிபாகத்தையும், நுனி பாகத்தோடு நுனி பாகத்தையும் சேர்க்கவும் இவ்வாறு ஸமித்து லக்ஷணம் கூறப்பட்டு பரித் லக்ஷணம் கூறப்படுகிறது.

आयामं परिधीनां तु सवेदांशदशांगुलम् ।
वीथ्यंगुलपरीणाहमपर्णमव्रणं समम् ॥ १२२ ॥

*ஆயாமம் பரிதீநாந்து ஸவேதாம் சதசாம் குலம்!*
*வீத்யாம் குல பரீணாஹம் அபர்ணம் வ்ரணம்*
*ஸமம் !!*

பிரிதியினுடைய நீளம் 14 அங்குலமாகும், 2 அங்குல கனமும் இலையில்லாததும், பூச்சியற்றதும், ஸமமானதும்.

प्रोक्तं तु यत् सनित्तेन परिधीध्मानि संग्रहेत् ।
परिधिर्लक्षणं प्रोक्तं दर्भाणां लक्षणं श्रृणु ॥ १२३ ॥

*ப்ரோக்தம்து யத் ஸமித்தேந பரிதீத்மாநி*
*ஸம்க்ரஹேத் !*
*பரிதிர் லக்ஷணம் ப்ரோக்தம் தர்பாணாம் லக்ஷணம்*
*ச்ருணு !!*

எந்த பிம்பத்திற்க்கு எந்த ஸமித்தை ஹோமம் செய்கிறோமோ, அந்த ஸமித்தை பரிதியாக ஏற்கவும், பரிதி லக்ஷணம் கூறப்பட்டு தர்ப லக்ஷணம் கூறப்படுகிறது.

स्रीपुंनपुसकाकारास्त्रिविधा: समुदाहृता: ।
मृदु: श्याम: स्त्रिय: प्रोक्तास्त्रीणां कर्मसु योजयेत् ॥१२४॥

*ஸ்த்ரீ புந் நபும்ஸகா காரா ஸ்த்ரிவிதாஸ் ஸமுதா*
*ஹ்ருதா: !*
*ம்ருது ச்யாமஸ்த்ரிய : ப்ரோக்தா ஸ்த்ரீணாம் கர்மஸு*
*யோஜயேத் !!*

பெண், ஆண், அலி என்று 3 விதமாக தர்பையின் லக்ஷணம் கூறப்படுகிறது. மிருதுவானதும், பச்சையானதும், உள்ளது பெண் தர்பமாகும் இந்த ஸ்த்ரி தர்பங்களை ஸ்த்ரீ விஷயமான காரியங்களுக்கு பயன்படுத்தவும்.

ईषत्पक्षसमायुक्ता स्थिरा: पुंलिङ्गका स्मृता: ।
पुंक्रियासु तथा योग्या स्थिरा: कोमलवर्जिता: ॥ १२५ ॥

*ஈஷத் பக்ஷ ஸமாயுக்தா ஸ்திரா : புல்லிம்க காஸ்*
*ம்ருதா :!*
*பும் க்ரியாஸு ததாயோக்யா ஸ்திரா : கோமள*
*வர்ஜிதா : !!*

சிறிது பக்கங்களில் தர்பை விரிந்ததாகவும், நேரானதாகவும் இருப்பது புல்லிங்க, தர்பையாகும், புருஷ சம்பந்தமான கிரியைகளுக்கு பயன்படுத்தவும் நேரானதும், அழகில்லாததுமான.

नपुंसका इति ख्याता न ग्राह्या: सर्वकर्मसु ।
सुच्छिन्नाग्रा सुभिन्नाग्रा खण्डिता: परिवर्जयेत् ॥ १२६ ॥

*நபும்ஸகா இதி க்யாதா நக்ராஹ்யாஸ் ஸர்வ*
*கர்மஸு !*
*ஸுச்சிந்நா க்ராஸு பிந்நாக்ரா கண்டிதா :*
*பரிவர்ஜயேத் !!*

தர்பங்கள் நபும்ஸக தர்பம் எனப்படும் அவைகளை எந்த கிரியைகளுக்கும் உபயோகிக்ககூடாது. வெட்டப்பட்ட நுனியை உடையதும். விலக்கப்பட்ட நுனியையுடையதும் 2 ஆக கிழிக்கப்பட்டதும் தர்பைகள் தல்ல தக்கவைகளாகும்.

मूलस्थूलं भवेन्नारी अग्रंथूलं नपुंसकम् ।
समं पुंलिङ्गमित्युक्तं विश्वामित्र महामुने ॥ १२७ ॥

*மூல ஸ்தூலம் பவேந்நாரீ அக்ரஸ்தூலம்*
*நபும்ஸகம் !*
*ஸமம் புல்லிம்க மித்யுக்தம் விச்வாமித்ர*
*மஹாமுநே !!*

தர்பையின் அடிபாகமும் ஸ்தூலமாக இருந்தால் பெண் தர்பம், 2ம் நுனி தர்பம் ஸ்தூலமாக இருந்தால் நம்புஸக தர்பம் என்றும், தர்பம் சமமாக இருந்தால் புல்லிங்கதர்பம் என்றும் அறியவும்.

दर्भाणां लक्षणं प्रोक्तं कूर्चानां लक्षणं श्रृणु ।
उत्तमं नवदर्भैस्तु सप्तदर्भैस्तु मध्यमम् ॥ १२८ ॥

*தர்பாணாம் லக்ஷணம் ப்ரோக்தம் கூர்ச்சாநாம் லக்ஷணம் ச்ருணு!*
*உத்தமம் நவ தர்பைஸ்து ஸப்த தர்பைஸ்து மத்யமம்!!*

தர்பை லக்ஷணங்களை கூறப்பட்டு கூர்ச்ச லக்ஷணங்களை கூற படுகின்றது கேளும்! 9 தர்பைகளால் செய்வது கூர்ச்சம் உத்தமமென்றும், 7 தர்பைகளால் செய்யும் கூர்ச்சம் மத்யமமென்றும்.

कन्यसं पञ्चदर्भैस्तु ग्रन्थिरेकाङ्गुलं भवेत् ।
दक्षिणावर्तकं ग्रन्थिकूर्चाग्रं चतुरङ्गुलम् ॥ १२९ ॥

*கந்ய ஸம் பஞ்ச தர்பைஸ்து க்ரந்தி ரேகாங்குலம் பவேத் !*
*தக்ஷிணா வர்த்தகம் க்ரந்தி கூர்ச்சாக்ரம் சதுரங்குலம் !!*

5 தர்பைகளால் செய்யும் கூர்ச்சம் அதமமெனவும், கூர்ச்ச முடிச்சு 1 அங்குலமும், வளமாக சுற்றியதாகவும், முடிச்சுக்கு மேல் உள்ள நுனிபாகம் 4 அங்குலம் உடையதாகவும்.

ग्रन्थ्यधस्तात्तदायामं रुद्रधर्म नवाङ्गुलम् ।
कूर्चानां लक्षणं प्रोक्तं विष्टरस्य विधिं श्रृणु ॥ १३० ॥

*க்ரந்த்யதஸ்தாத்ததா யாமம் ருத்ர தர்ம நவாம் குலம் !*
*கூர்ச்சாநாம் லக்ஷணம் ப்ரோக்தம் விஷ்டரஸ்ய விதிம் ச்ருணு!!*

முடிச்சின் அடிபாகம் 11 அங்குலம், 8 அங்குலம், 9 அங்குலமாகவோ இருக்கவேணும். இவ்வாறக கூர்ச்ச லக்ஷணம் கூறி விஷ்டர லக்ஷணம் கூறப்படுகின்றது.

सप्तदर्भसमायुक्तं ग्रन्थितं सव्यमार्गतः ।
रत्न्यङ्गुलं भवेन्मूलं ग्रन्थिरेकाङ्गुलं मतम् ॥ १३१ ॥

*ஸப்த தர்ப ஸமாயுக்தம் க்ரந்திதம் ஸவ்ய மார்கத: !*
*ரத்ந்யங்குலம் பவேந்மூலம் க்ரந்திரேகாங்குலம் மதம் !!*

7 தர்பையுடன் முடிச்சு போடபட்டு வலப்பக்கமாக சுற்றி ஒரு சாண் அளவு அடிபாகம் உள்ளதாயும் முடிச்சு 1 அங்குலம் உள்ளதாயும் இருக்கவும்.

विष्टरस्य विधिः प्रोक्तो लम्बकूर्चविधिं श्रृणु ।
एकविंशतिदर्भैश्च ग्रन्थिरेकाङ्गुलं भवेत् ॥ १३२ ॥

*விஷ்டரஸ்ய விதி : ப்ரோக் தோ லம்ப கூர்ச்ச விதம் ச்ருணு!*
*ஏக விம்சதி தர்பைச்ச க்ரந்தி ரேகாங்குலம் பவேத் !!*

விஷ்டர விதியை கூறி லம்ப கூர்ச்ச விதியை கூறுகிறேன். 21 தர்பைகளால் 1 அங்குல முடிச்சுடன் கூடியதாக அமைத்து.

ग्रन्थितदक्षिणावर्तं कूर्चाग्रं चतुरङ्गुलम् ।
मूर्धादिपादपर्यन्तं लम्बितं यज्ञदायकम् ॥ १३३ ॥

*க்ரந்தி தத்தக்ஷிணா வர்தம் கூர்சாக்ரம் சதுரங்குலம் !*
*மூர்த்நாதி பாத பர்யந்தம் லம்பிதம் யக்ஞ தாயகம்!!*

மேல் முடிச்சு வலமாக சுற்றியதாயும், கூர்ச்சத்தின் நுனி 4 அங்குலமுடையதாயும் சிரஸ் முதல் பாதம் வரை தொங்கும் அமைப்புடையது யாகபலனை அளிக்கக்கூடியது.

लम्बकूर्चविधिः प्रोक्ता परिस्तरणमुच्यते ।
धर्मदर्भसमायुक्तं ग्रन्थिः पक्षाङ्गुलं भवेत् ॥ १३४ ॥

*லம்ப கூர்ச்ச விதி: ப்ரோக்தம் பரிஸ்தரண முச்யதே*
*தர்ம தர்ப ஸமாயுக்தம் க்ரந்தி: பக்ஷாங்குலம் பவேத் !!*

லம்ப கூர்ச்சமுறை கூறப்பட்டு பரிஸ்தரண முறை கூறப்படுகிறது. 4 தர்பையுடன் கூடி 2 அங்குல முடிச்சுடையதும் முடிச்சுக்கு மேல்

वेदाङ्गुलं तदग्रं स्यात् षट्त्रिंशदङ्गुलायतम् ।
परिस्तरणमाख्यातं दर्भमालाविधिं श्रृणु ॥ १३५ ॥

*வேதாங்குலம் ததக்ரம் ஸ்யாத் ஷட்த்ரிம் சதங்குலாயதம் !*
*பரிஸ்தரண மாக்யாதம் தர்பமாலாவிதிம்ச்ருணு!!*

4 அங்குல நுனியுடையதாயும் 36 அங்குலம் நீளமுடையதாயும் இருக்கவேண்டும். பரிஸ்தரணம் லக்ஷணம் கூறப்பட்டு தர்பமாலை விதி கூறப்படுகிறது.

भूतवेदाग्निदर्भैर्वा व्योमहस्तं प्रलम्बितम् ।
कनिष्ठिकाङ्गुला नाहं रज्जुं कुर्यान्मनोरमैः ॥ १३६ ॥

*பூத வேதாக்நி தர்பைர்வா வ்யோம ஹஸ்தம் ப்ரலம்பிதம் !*
*கநிஷ்டிகாங்குலா நாஹம் ரஜ்ஜும் குர்யாந் மநோரமை: !!*

5, 4, 3 தர்பைகளாலோ 1 முழம் தொங்குவதாக சுண்டுவிரல் பருமன் கயிற் போல் செய்து அழகாக தொங்கச் செய்வது தர்ப மாலையாகும்.

दर्भमालाविधिः प्रोक्ता प्रोक्षणीकूर्चमुच्यते ।
सप्तविंशतिदर्भैश्च कलाङ्गुलसमायतम् ॥ १३७ ॥

*தர்பமாலாவிதி: ப்ரோக்தம் ப்ரோக்ஷணீ கூர்ச்ச முச்யதே!*
*ஸப்த விம்சதி தர்பைச்ச கலாங்குல ஸமாயதம்!!*

தர்ப மாலை முறை கூறப்பட்டு ப்ரோக்ஷணீ கூர்ச்சமுறை கூறப்படுகிறது. 27 தர்பைகளால் 16 அங்குல நீளமாக.

व्योमांगुलं भवेद्ग्रन्थिरग्रं वेदांगुलं भवेत् ।
वेणी वा विष्टरं वाऽथ प्रोक्षणीकूर्चमीरितम् ॥ १३८ ॥

*வ்யோமாம் குலம் பவேத் க்ரந்தி: அக்ரம வேதாம் குலம் மதம்!*
*வேணிவா விஷ்டரம் வாத ப்ரோக்ஷணீ கூர்ச்ச மீரிதம்!!*

1 அங்குல அளவால் முடிச்சிப் போட்டு அதற்கு மேல் பாகம் 4 அங்குல அளவாக இருக்க வேண்டும். பின்னல் போன்ற விஷ்டரம் போன்றோ ப்ரோக்ஷணீ கூர்ச்சம் செய்ய வேண்டும்.

पवित्रलक्षणं वक्ष्ये श्रृणु कौशिक सुव्रत ।
कुशकाशपटिराश्च सुवर्णैस्त्रिभिरेव वा ॥ १३९ ॥

*பவித்ர லக்ஷணம் வக்ஷ்யே ச்ருணு கௌசிக ஸுவ்ரத!*
*குசகாச படீராச்ச ஸுவர்ணை ஸ்த்ரிபிரேவ வா!!*

பவித்ர லக்ஷணம்கூறப்படுகிறது. கௌசிகரே, கேளும்! குசம், காசம், தர்பம், இவைகளாலோ தங்கத்தினாலோ 3 பிரியாக செய்து

एकीकृत्याग्रतो दर्भानलूनमग्रमुद्रितम् ।
षोडशांगुलमायाममावर्तं वा समन्ततः ॥ १४० ॥

*ஏகீ க்ருத்யா க்ரதோ தர்பாந லூநமக்ர முத்ரிதம்!*
*ஷோடசாம் குல மாயாமம் ஆவர்த்தம் வாஸ மந்தத:!!*

நுனி அடியை ஒன்றாக வைத்து அனுகூலமாக உருக்கி அந்த தர்பையானது 16 அங்குலம் நீளமானதாகவும் ஸமமானதாகவும் இருக்க வேண்டும்.

त्रिगुणीकृत्य रज्ज्वग्रं ग्रन्थिरेकांगुलं भवेत् ।
दक्षिणावर्तं कर्तव्यं तदग्रं चतुरंगुलम् ॥ १४१ ॥

*த்விகுணி க்ருத்யரஜ்வக்ரம் க்ரந்திரேகாம் குலம் பவேத்!*
*தக்ஷிணாவர்த்தம் கர்த்தவ்யம் ததக்ரம் சதுரம் குலம்!!*

மூன்றாக மடக்கி பவித்ர முடிச்சு 1 அங்குலம் இருக்க வேண்டும். வலமாக சுற்றியதாக வைத்து பவித்ரத்தின் நுனி 4 அங்குலம் வைக்க வேண்டும்.

अनामिकायें योक्तव्यमुभयोर्हतयोरपि ।
सपवित्रकरेणैव कुर्यादाचमनक्रिया ॥ १४२ ॥

*அநாமிகாயா யோக்தவ்யம் உபயோர் ஹஸ்தயோரபி!*
*ஸபவித்ர கரேணைவ குர்யாத் ஆசமநக்ரியா!!*

மோதிர விரலில் இரண்டு கை விரலிலும் சேர்த்துக் கொள்ளவும் (ஸ்வர்ண பவித்ரம்) பவித்ரம் போட்டுக் கொள்ளப்பட்ட கையினாலேயே ஆசமனம் செய்யலாம்.

नोच्छिष्टं तत् पवित्रं तु भुक्तोच्छिष्टं तु वर्जयेत् ।
सौवर्णं चेत् पवित्रं स्यादाज्येनोत्क्षपणेव तु ॥ १४३ ॥

*நோச்சிஷ்டம் தத் பவித்ரந்து புக்தோச்சிஷ்டந்து வர்ஜயேத்!*
*ஸௌவர்ணம் சேத் பவித்ரம் ஸ்யாத் ஆஜ்யேநோக்ஷபணே நது!!*

அந்த ஆசமனத்தினால் உச்சிஷ்டம் தோஷம் ஏற்படாது, அதை பவித்ர மோதிரத்தை அணிந்து உண்வருந்தக் கூடாது. தங்க பவித்ரமாக இருக்கும் ஸமயத்தில் நெய்யாலும் சுத்தி செய்து

न भेरनामिकायास्तु कुर्याद् वृत्तं समं यया ।
पवित्रस्य विधिः पोक्ता पाद्यपात्रविधिं शृणु ॥ १४४ ॥

*நாபே: அநாமிகாயாஸ்து குர்யாத் வ்ருத்தம் ஸமம் யதா!*
*பவித்ரஸ்ய விதி: ப்ரோக்தம் பாத்ய பாத்ர விதிம் ச்ருணு!!*

தொப்புளில் மோதிர விரலில் 2 சுற்று செய்தால் உச்சிஷ்ட தோஷம் நீங்கும். பவித்ர லக்ஷணம் கூறி பாத்ய, பாத்ர லக்ஷணம் கூறி

सौवर्णमुत्तमं प्रोक्तं मध्यमं रजतं भवेत् ।
अधमं ताम्रकांस्यं स्यान्मृन्मयंचाधमाधमम् ॥ १४५ ॥

*ஸௌவர்ணம் உத்தமம் ப்ரோக்தம் மத்யமம் ரஜதம் பவேத்!*
*அதமம் தாம்ரகாம் ஸ்யம் ஸ்யாத் ம்ருண்மயம் சாதமாதமம்!!*

தங்க பாத்ரம் உத்தமமென்றும், வெள்ளி பாத்ரம் மத்யமமென்றும் தாம்ரபாத்ரம் வெண்கல பாத்ரம் அதமமென்றும், மண்பாத்ரம் அதமாதமம் என்றும் கூறப்படுகிறது.

तारे मूलांगुलं ज्ञेयमुत्सेधं तु युगांगुलम् ।
तत्पृष्ठेऽङ्घ्रिसमायुक्तं चतुरंगुलमानतः ॥ १४६ ॥

*தாரம் மூலாம் குலம் ஜ்ஞேயம் உத்ஸேதம் து யுகாம் குலம்!*
*தத் ப்ருஷ்டேங்க்ரி ஸமாயுக்தம் சதுரம் குலமாநத:!!*

உயரத்தின் அடிபாகம் 1 அங்குலமும், 4 அங்குல அளவால் பாத்ரத்தினடியில் பாதம் போன்ற அமைப்பும்

अर्धेनाधिकया युक्तं वेदांगुलसमायुतम् ।
पाद्यपात्रं समाख्यातं शृण्वाचमनपात्रकम् ॥ १४७ ॥

*அர்த்தே நாதிகயா யுக்தம் வேதாம் குல ஸமாயுதம்!*
*பாத்யக் பாத்ர ஸமாக்யாதம் ச்ருண்வாசமந பாத்ரகம்!!*

4 ½ அங்குலம் பாத்ய பாத்ர முகத்தின் அளவாகும். பாத்ய பாத்ரத்தின் முறை கூறப்பட்டு ஆசமந பாத்ரம் கூறப்படுகிறது.

आदित्यांगुलमानेन कुक्षिविस्तारमुच्यते ।
अष्टत्रिंशतिमात्रेण नाहं कुक्षेस्तु मध्यमम् ॥ १४८ ॥

*ஆதித்யாம் குல மாநேந குக்ஷிவிஸ்தார முச்யதே!*
*அஷ்ட த்ரிம்சதி மாத்ரேண நாஹம் குக்ஷேஸ்து மத்யமம்!!*

12 அங்குல அளவினால் பாத்ரத்தில் நடுபாகம் கூறப்படுகிறது. 38 அங்குல மாத்ராங்குலத்தினால் குக்ஷியாக சுற்றளவு கூறப்படுகிறது.

अग्न्यंगुलं गलोत्सेधं मार्गं व्योमांगुलं भवेत् ।
आस्यतारं त्रिमात्रं तु पार्श्वे घ्राणसमायुतम् ॥ १४९ ॥

*அக்ந்யம் குளம் கலோத்ஸேதம் மார்கம்
வ்யோமாம்குலம் பவேத்।
ஆஸ்யதாரம் த்ரிமாத்ரந்து பார்ச்வே க்ராண
ஸமாயுதம்॥*

பாத்ர கண்ட பாக அளவு 3 அங்குலமாகும். வெளிக் கொணர்வு 1 அங்குலமாகும். முகத்தின் பாத்ரத்தின் முக அமைப்புடன் விளிம்பு பாகம் வளைந்ததாக இருக்க வேண்டும்.

पक्षांगुलसमायामं रन्ध्रं कनिष्ठिकासमम् ।
आर्धार्धांगुलमानेन पादं कुर्यात्तु पृष्ठके ॥ १५० ॥

*பக்ஷாங்குல ஸமாயாமம் ரந்த்ரம் கநிஷ்டிகாஸமம்।
அர்த்தார்த்தாங்குல மாநேந பாதம் குர்யாத்து
ப்ருஷ்டகே॥*

15 அங்குல நீளமும் சுண்டு விரல் த்வாரமும் அரை, அரை அங்குல அளவாக பாத்ரத்தின் அடிபாகத்தில் பாதம் அமைக்கவும்.

यदाचमनपात्रं तदर्घ्यपात्रमथ श्रृणु ।
अर्घ्यपात्रं मया प्रोक्तं पालिकालक्षणं श्रृणु ॥ १५१ ॥

*யதாசமந பாத்ரந்தம் அர்க்ய பாத்ரம் அதச்ருணு।
அர்க்ய பாத்ரம் மயா ப்ரோக்தம் பாலிகா லக்ஷணம்
ச்ருணு॥*

இவ்வாறு ஆசமந பாத்ரம் கூறி அர்க்ய பாத்ரம் கூறப்படுகிறது. அர்க்ய பாத்ரமானது முன்பே கூறப்பட்டு பாலிகா லக்ஷணம் கூறப்படுகிறது.

पालिकाष्टादशांगुल्यमुच्चं मात्रांगुलेन तु ।
पालिकामुखविस्तारं षोडशांगुलमुच्यते ॥ १५२ ॥

*பாலிகாஷ்டாதசாங்குல்ய முச்சம் மாத்ராங்குலேநது।
பாலிகா முக விஸ்தாரம் ஷோடசாங்குல முச்யதே॥*

18 மந்த்ராங்குல அளவினால் பாலிகையின் உயரமாகும், பாலிகையின் வாய் அகலம் 16 அங்குலமாகும்.

तदर्धं पादविस्तारं रसभागैककोष्ठकम् ।
विस्तारस्य त्रिभागैकं वर्तितं विलमुच्यते ॥ १५३ ॥

*தத்தம் பாத விஸ்தாரம் ரஸபாகைக கோஷ்டகம்।
விஸ்தாரஸ்ய த்ரிபாகைகம் வர்த்திதம்பில முச்யதே॥*

அதில் பாதி 8 அங்குலம் பாகத்தின் சுற்றளவாகும். 6 ல் 1 பாகம் பாத்ர விளிம்பின் அளவாகும். சுற்றளவின் 3 ல் 1 பாகம் வட்ட வடிவமாக பாத்ரத்தின் உள் பாதியாகும். (உள் கொள்ளளவுமாகும்)

एवं पात्रक्रमं प्रोक्तं शेषं दण्डं प्रकल्पयेत् ।
विस्तारस्य त्रिभागैकं दण्डविस्तारमुच्यते ॥ १५४ ॥

*ஏவம் பாத்ர க்ரமம் ப்ரோக்தம் சேஷம் தண்டம்
ப்ரகல்பயேத்।
விஸ்தாரஸ்ய த்ரிபாகைகம் தண்ட விஸ்தார
முச்யதே॥*

இவ்வாறு பாத்ரம் அமைத்து மீத பாகத்தை தண்டம் கல்பிக்கவும், பாத்ர சுற்றளவின் 3 ல் 1 பகுதி தண்டத்தின் சுற்றளவாகும்.

पालिकालक्षणं प्रोक्तं घटिकालक्षणं श्रृणु ।
घटिकाघटविस्तारमष्टांगुलमुदाहृतम् ॥ १५५ ॥

*பாலிகா லக்ஷணம் ப்ரோக்தம் கடிகாலக்ஷணம்
ச்ருணு।
கடிகா கட விஸ்தாரம் அஷ்டாங்குல முதாஹ்ருதம்॥*

இவ்வாறு பாலிகா லக்ஷணம் கூறப்பட்டு கடிகா லக்ஷணம் கூறப்படுகின்றது. கடிகையானது குடம் போன்று அகலமாயும் 18 அங்குலம் உயரமாயும் இருக்க வேண்டும்.

पालिकापात्रवत्कुर्यात् दण्डं वै चतुरंगुलम् ।
पञ्चवक्त्रसमायुक्तं घटिकां कारयेद्बुधः ॥ १५६ ॥

*பாலிகா பாத்ரவத் குர்யாத் தண்டம்வை சதுரங்குலம்!*
*பஞ்சவக்த்ர ஸமாயுக்தம் கடிகாங்காரயேத் புத:!!*

பாலிகை பாத்ரம் போல் செய்து அதன் கீழ் 4 அங்குலம் தண்டம் அமைக்க வேண்டும். அகலமான முகத்தையுடையதாக கடிகையை அமைக்கவும்.

घटिकालक्षणं प्रोक्तं शरावमधुनोच्यते ।
शरावमुखविस्तारमादित्यांगुलमुच्यते ॥ १५७ ॥

*கடிகா லக்ஷணம் ப்ரோக்தம் சராவ மதுநோச்யதே!*
*சராவ முக விஸ்தாரம் ஆதித்யாங்குல முச்யதே!!*

கடிகை லக்ஷணம் கூறப்பட்டு சராவ லக்ஷணம் கூறப்படுகிறது. சராவ பாத்ரத்தின் முக சுற்றளவு 12 அங்குலமாகும்.

तदर्धं पदविस्तारमुत्सेधं वसुमात्रकम् ।
नाहं स्यात् पालिकादीनां विस्तारार्धेन वर्धितम् ॥ १५८ ॥

*ததர்த்தம் பாத விஸ்தாரம் உத்ஸேதம்*
*வஸுமாத்ரகம்!*
*நாஹம் ஸ்யாத் பாலிகாதீநாம் விஸ்தாரார்த்தேந*
*வர்த்திதம்!!*

அதன் பாதி பாதத்தின் சுற்றளவாகும். உயரம் 8 மாத்ராங்குலமாகும். பாலிகையின் சுற்றளவு பாத்ர சுற்றளவின் ½ அளவாகும்.

कालं भिन्नं न सुषिरं भेदं छेदं मलीनकम् ।
निर्दग्धं न पुराणं न विशेषेण विवर्जयेत् ॥ १५९ ॥

*காளம் பிந்நஞ்ச ஸுஷிரம் பேதஞ் சேதம் மலீநகம்!*
*நிர்தக்தஞ்ச புராணம் ச விசேஷேண விவர்ஜயேத்!!*

கருப்பானதும், உடைந்ததும், ஓட்டையானதும், விரிந்ததும், பிளவுபட்டதும் அழுக்கடைந்ததும், சுடப்படாததும், பழமையானதுமான சராவ பாத்ரங்களை தவிர்க்க வேண்டும்.

शरावलक्षणं प्रोक्तं गन्धपात्रं ततः शृणु ।
अष्टांगुलं तद्विस्तारं वेदांगुलसमुच्छ्रयम् ॥ १६० ॥

*சராவ லக்ஷணம் ப்ரோக்தம் கந்த பாத்ரந்தத ச்ருணு!*
*அஷ்டாங்குலந்தத் விஸ்தாரம் வேதாங்குல*
*ஸமுச்ரயம்!!*

சராவ லக்ஷணம் கூறி சந்தனபாத்ரம் கூறப்படுகிறது. 8 அங்குல விஸ்தாரமும் 4 அங்குலம் உயரம் உள்ளதாக

गन्धपात्रं समाख्यातं पुष्पपात्रमथ शृणु ।
विंशत्यंगुलमायामं वस्वंगुलसमुच्छ्रयम् ॥ १६१ ॥

*கந்த பாத்ரம் ஸமாக்யாதம் புஷ்ப பாத்ர மதச்ருணு!*
*விம்சத்யம் குல மாயாமம் வஸ்வம்குல ஸமுச்ரயம்!!*

சந்தன பாத்ரத்தில் கூறப்பட்டுள்ளது, புஷ்ப பாத்ர லக்ஷணம் கூறப்படுகிறது. 20 அங்குல நீளமும், 8 அங்குல உயரமும்

नालं पञ्चांगुलं कुर्यादुभयोः पार्श्वयोरपि ।
तन्मानं पादविस्तारं पिधानकवचान्वितम् ॥ १६२ ॥

*நாளம் பஞ்சாம்குலம் குர்யாது உபயோ:*
*பார்ச்வயோரபி!*
*தந்மாநம் பாத விஸ்தாரம் பிதாந கவசாந்விதம்!!*

தண்டு போன்ற அமைப்பு 5 அங்குலமும் அது 2 பக்கமும் அமைக்கவும், அதே அளவு பாதத்தின் சுற்றளவாகும். அது மூடி கவசத்தின் கூடியதாக இருக்க வேண்டும்.

द्रव्यालाभे मुनिश्रेष्ठ वस्त्रेणैव तु कारयेत् ।
पुष्पपात्रं समाख्यातमाज्यपात्रविधिं शृणु ॥ १६३ ॥

*த்ரவ்யாலாபே முநிச்ரேஷ்ட வஸ்த்ரேணைவது*
*காரயேத்!*
*புஷ்ப பாத்ரம் ஸமாக்யாதம் ஆஜ்யபாத்ர விதிம்*
*ச்ருணு!!*

மேற்கூடிய பாத்ர த்ரவ்யமெனில் வஸ்திரத்தினால் செய்ய வேண்டும். புஷ்ப பாத்ரம் கூறப்பட்டு ஆஜ்ய பாத்ரம் கூறப்படுகிறது.

वेदांगुलसमुत्सेधं विस्तारन्तुषडंगुलम् ।
अर्धांगुलेन तस्योष्ठमेतद्धि घृतपात्रकम् ॥ १६४ ॥

*வேதாம்குல ஸமுத்ஸேதம் விஸ்தாரந்து*
*ஷடங்குலம் !*
*அர்த்தாங்குலேந தஸ்யோஷ்டம் ஏதத்தி க்ருத*
*பாத்ரகம் !!*

4 அங்குல உயரமும் 6 அங்குல அகலமும், அரை அங்குலம் விளிம்புமுள்ளது. ஆஜ்ய பாத்ர லக்ஷணமாகும்.

घृतस्य पात्रमेवं स्यात् प्रणीतापात्रमुच्यते ।
पञ्चावृताङ्गुलन्तारं सार्धाग्न्यङ्गुलमुच्छ्रयम् ॥ १६५ ॥

*க்ருதஸ்ய பாத்ர மேவம் ஸ்யாத் ப்ரணீதா பாத்ர*
*முச்யதே !*
*பஞ்சாவ்ருதாம் குலம் தாரம் ஸார்த்தாக்ந்யம் குலம்*
*உச்ரயம் !!*

இவ்வாறு ஆஜ்ய பாத்ர லக்ஷணம் கூறி ப்ரணீதா பாத்ர லக்ஷணம் கூறப்படுகிறது. 5 அங்குல நீளமும் 3 ½ அங்குல உயரமும் உடையது ப்ரணீதா பாத்ரமாகும்.

प्रणीतापात्रमेवं स्यात् प्रोक्षणीपात्रमुच्यते ।
पञ्चाङ्गुलन्तु विस्तारं रुद्राङ्गुलसमुच्छ्रयम् ॥ १६६ ॥

*ப்ரணீதா பாத்ர மேவம் ஸ்யாத் ப்ரோக்ஷணீ பாத்ர*
*முச்யதே !*
*பஞ்சாம் குலந்து விஸ்தாரம் ருத்ராம்குல*
*ஸமுச்ரயம் !!*

ப்ரணீதா பாத்ரம் கூறப்பட்டு ப்ரோக்ஷணீ பாத்ரம் கூறப்படுகிறது. 5 அங்குல நீளமும் 11 அங்குல உயரமும் உள்ளது ப்ரோக்ஷணீ பாத்ரமாகும்.

प्रोक्षणीपात्रमेवं स्यात् स्कन्दकुम्भविधिं श्रृणु ।
त्रीण्यङ्गुलप्रविस्तारं रुद्राङ्गुलसमुन्नतम् ॥ १६७ ॥

*ப்ரோக்ஷணீ பாத்ர மேவம் ஸ்யாத் ஸ்கந்தகும்ப விதிம்*
*ச்ருணு !*
*த்ரீண்யங்குல ப்ரவிஸ்தாரம் ருத்ராங்குல*
*ஸமுந்நதம் !!*

ப்ரோக்ஷணீ பாத்ரம் கூறப்பட்டு ஸ்கந்த கும்ப விதி கூறப்படுகின்றது. 3 அங்குல நீளமும், 11 அங்குல உயரமும்

आस्यं वेदाङ्गुलं ज्ञेयं कर्णायामं तथाङ्गुलम् ।
व्योममेकाङ्गुलं प्रोक्तमर्धाङ्गुलन्तु निर्गमम् ॥ १६८ ॥

*ஆஸ்யம் வேதாம்குலம் ஜ்ஞேயம் கர்ணாயாமம் ததாம்*
*குலம் !*
*வ்யோமமேகாம் குலம் ப்ரோக்தம் அர்த்தாம் குலந்து*
*நிர்க்கமம் !!*

கும்பத்தின் முக அளவு 4 அங்குலமும் கும்ப கழுத்து அளவு 4 அங்குலமும் மேல் விளிம்பு 1 அங்குலமும் விளிம்பின் வெளிக்கொணர்வு ½ அங்குலமாகும்.

गले त्रिरेखा कर्तव्या पक्वबिम्बफलप्रभम् ।
कलङ्करहितं स्निग्धं सर्वदोषविवर्जितम् ॥ १६९ ॥

*களேத்ரிரேகா கர்த்தவ்யம் பக்வ பிம்ப பல ப்ரபம் !*
*களங்க ரஹிதம் ஸ்நிக்தம் ஸர்வதோஷ*
*விவர்ஜிதம் !!*

கழுத்தில் 3 கோடுகளும், பழுத்த கோவைப்பழம் போல் இருக்கவும், குற்றமற்றதாயும், கெட்டியானதாகவும் எல்லா தோஷமற்றதாயும் உள்ளது..

स्कन्दकुम्भमिति प्रोक्तं वर्धनीलक्षणं श्रृणु ।
रन्ध्राङ्गुलप्रविस्तारं वर्धनीजठरस्य तु ॥ १७० ॥

*ஸ்கந்தகும்பம் இதி ப்ரோக்தம் வர்த்தநீ லக்ஷணம்*
*ச்ருணு !*
*ரந்த்ராம்குல ப்ரவிஸ்தாரம் வர்த்தநீ ஜடரஸ்யது !!*

ஸ்கந்த கும்பம் என கூறப்பட்டு வர்த்தநீ லக்ஷணம் கூறப்படுகிறது. குடத்தின் வர்த்தனீ கலசத்தின் நடுப்பகுதி 9 அங்குல அளவாயும்

अव्यङ्गुलसमुत्सेधं वक्त्रमग्न्यङ्गुलं मतम्।
अश्विन्यङ्गुलमोष्ठं स्यात् पार्श्वे नालाङ्कुरायतम् ॥ १७१ ॥

*அப்த்யாம் குல ஸமுத் ஸேதம் வக்த்ரமக்ந்யம் குலம் மதம்!*
*அச்விந்யாம் குல மோஷ்டம் ஸ்யாத் பார்ச்வே நாளாம் குராயதம்!!*

7 அங்குல உயரமும், முகம் 3 அங்குலமுமாகும். 2 அங்குல அளவு விளிம்பு அமைப்பும் பக்கத்தில் தண்டு போன்றமைத்து

उत्पलाकृतिवत्कार्यं सार्धाङ्गुलप्रमाणत:।
अर्धाङ्गुलोच्छ्रयं ग्रीवमङ्गुलीयोष्ठनिर्गमम् ॥ १७२ ॥

*உத்பலாக்ருதிவத் கார்யம் ஸார்த்தாம்குல ப்ரமாணத:!*
*அர்த்தாங்குலோச்ரயம் க்ரீவம் அங்குலீயோஷ்ட நிர்கமம்!!*

1 ½ அங்குல அமைப்பில் நீலோத்பலம் போல் வர்த்தநீ கலச தண்டின் வாயின் அமைப்பு இருக்கவேண்டும் (கிண்டி) ½ அங்குல உயரமாயும் கழுத்து விளிம்பு விரல் ப்ரமாணம் வெளிக்கொணர்ந்ததாகும்.

वर्धनीलक्षणं प्रोक्तं कुम्भानां लक्षणं शृणु।
रुद्राङ्गुलविस्तारमोष्ठं व्योमाङ्गुलं भवेत् ॥ १७३ ॥

*வர்த்தநீ லக்ஷணம் ப்ரோக்தம் கும்பாநாம் லக்ஷணம் ச்ருணு!*
*ருத்ராம்குல ப்ரவிஸ்தார மோஷ்டம் வ்யோமாங்குலம் பவேத்!!*

வர்த்தநீ லக்ஷணம் கூறப்பட்டு கும்ப லக்ஷணம் கூறப்படுகிறது. 11 அங்குல நீளமும், விளிம்பு 1 அங்குலம் ஆகும்.

सार्धाङ्गुलं गलोत्सेधं त्रियवं तस्य निर्गमम्।
कुम्भानां लक्षणं प्रोक्तं कलशानां तत: शृणु ॥ १७४ ॥

*ஸார்த்தாம் குலம் களோத்ஸேதம் த்ரியவம் தஸ்ய நிர்கமம்!*
*கும்பாநாம் லக்ஷணம் ப்ரோக்தம் கலசாநாம் தத ச்ருணு!!*

1½ அங்குலம் கழுத்துப் பகுதி வரை அதன் வெளிக் கொணர்வு 3யவை அங்குலமாகும். கும்பத்தின் லக்ஷணம் கூறப்பட்டு கலச லக்ஷணம் கூறப்படுகிறது.

सप्ताङ्गुलप्रविस्तारमुत्सेधं चतुरङ्गुलम्।
ग्रीवमर्धाङ्गुलोत्सेधमोष्ठं तत्सममेव तु ॥ १७५ ॥

*ஸப்தாம் குல ப்ரவிஸ்தாரம் உத்ஸேதம் சதுராம் குலம்!*
*க்ரீவம் அர்த்தாங்குலோத்ஸேத மோஷ்டம் தத் ஸமமேவது!!*

7 அங்குல நீளமும், 4 அங்குல உயரமும், கழுத்து ½ அங்குல உயரமும் உதடு ½ அங்குல அளவாகும்.

त्र्यङ्गुलञ्चास्यविस्तारं यवमोष्ठस्य निर्गमम्।
शेषं युक्त्या प्रकर्तव्यं पक्वबिम्बफलोपमम् ॥ १७६ ॥

*த்ரயம் குலம் சாஸ்ய விஸ்தாரம் யவமோஷ்டஸ்ய நிர்கமம்!*
*சேஷம் யுக்த்யா ப்ரகர்த்தவ்யம் பக்வபிம்ப பலோபமம்!!*

கலச முக சுற்றளவு 3 அங்குலமாகும், விளிம்பு 1யவை அளவாகும். மற்றவையை புத்தி கூர்மையால் அறிந்து அது பழுத்த கோவைப்பழம் போல் அழகாக இருக்க வேண்டும்.

कलाशस्य विधिः प्रोक्ता कुण्डिकालक्षणं श्रृणु ।
वेदाङ्गुलं तद्विस्तारं दैर्घ्यमान्यङ्गुलं भवेत् ॥ १७७ ॥

*கலசஸ்ய விதி ப்ரோக்தம் குண்டிகாலக்ஷணம் ச்ருணு!*
*வேதாம் குலந்த த்விஸ்தாரம் தைர்க்யம் அக்ர்யம் குலம் பவேத் !!*

கலசஸ்ய லக்ஷணம் கூறப்பட்டு கிண்டி லக்ஷணம் கூறப்படுகிறது. 4 அங்குலம் நீளமும் 3 அங்குலம் உயரமும் ஆகும்.

सार्धांगुलं तस्य तारं मध्यमर्धांगुलं भवेत् ।
पादांगुलं गलोत्सेधं पार्श्वे घ्राणसमन्वितम् ॥ १७८ ॥

*ஸார்த்தாம் குலந்தஸ்யதாரம் மத்ய மர்தாம் குலம் பவேத்!*
*பாதாங்குலம் கலோத்ஸேதம் பார்ச்வே க்ராண ஸமந்விதம் !!*

1 ½ அங்குலம் அதன் கணமும், ½ அங்குலம் நடுப்பகுதியும் ¼ அங்குலம் கழுத்தின் நீளமும், பக்கத்தில் த்வாரத்துடன் மூக்கு போன்ற அமைப்பும் செய்து.

व्योमांगुलप्रमाणेन-पादमोष्ठे प्रकल्पयेत् ।
कुण्डिकालक्षणं प्रोक्तं हविःपात्रविधिं श्रृणु ॥ १७९ ॥

*வ்யோமாம்குல ப்ரமாணேந பாதமோஷ்ட ப்ரகல்பயேத்!*
*குண்டிகா லக்ஷணம் ப்ரோக்தம் ஹவி: பாத்ரவிதிம் ச்ருணு !!*

1 அங்குல அளவால் கிண்டியின் பாத அமைப்ப அமைக்கவும் கிண்டிகையின் லக்ஷணம் கூறப்பட்டு ஹவிர் பாத்ரம் லக்ஷணம் கூறப்படுகிறது.

तस्य कुक्षेस्तु विस्तारं धर्मांगुलमुदाहृतम् ।
अष्टांगुलसमुत्सेधं कणोत्सेधमथांगुलम् ॥ १८० ॥

*தஸ்யகுக்ஷேஸ்து விஸ்தாரம் தர்மாங்குலமுதா ஹ்ருதம் !*
*அஷ்டாங்குல ஸமுத்ஸேதம் கர்ணோத்ஸேத மதாங்குலம் !!*

பாத்ரத்தின் நடுப்பகுதி 8 அங்குலமாகும், 8 அங்குலம் உயரமாகும் கழுத்துப்பகுதி 1 அங்குலமாகும்.

कर्णव्योमांगुलं प्रोक्तमास्यतारं रसांगुलम् ।
शेषं युक्त्या प्रकर्तव्यं तत्पचेदाढकं मुने ॥ १८१ ॥

*கர்ணவ்யோ மாங்குலம் ப்ரோக்தம் ஆஸ்யதாரம் ரஸாங்குலம் !*
*சேஷம் யுக்த்யா ப்ரகர்தவ்யம் தத்பசேதாடகம் முநே !!*

பாத்ரத்தின் முக அளவு 6 அங்குலமாகும். மற்ற அமைப்புகளை புத்தி கூர்மையால் செய்யவேண்டும். அதில் 1படி அன்னம் தயார் செய்யவேணும்.

यावत्पचेच्छिवद्रोणं तावन्मात्रं प्रकल्पयेत् ।
हविःपात्रविधिः प्रोक्तं उपदंशस्य पात्रकम् ॥ १८२ ॥

*யாவத்பசேச்சிவத்ரோணம் தாவந்மாத்ரம் ப்ரகல்பயேத்!*
*ஹவி: பாத்ர விதி ப்ரோக்தம் உபதம்சஸ்ய பாத்ரகம் !!*

3 படி 1 மரக்கால் சமைப்பதற்கு அதற்குரியதான பாத்ரம் கல்பிக்கவும் ஹவிர் பாத்ர முறைகூறி உபதம்ச பாத்ர முறை கூறப்படுகிறது.

उदरस्य प्रविस्तारमष्टांगुलमुदाहृतम् ।
युगाङ्गुलसमुत्सेधं कण्ठमेकाङ्गुलं भवेत् ॥ १८३ ॥

*உதரஸ்ய ப்ரவிஸ்தாரம் அஷ்டாங்குல முதாஹ்ருதம் !*
*யகாங்குலஸமுத்ஸேதம் கண்டமேகாங்குலம் பவேத்!!*

பாத்ரத்தின் நடுப்பகுதி 8 அங்குலமாகும். 4 அங்குலம் உயரமானதாயும், கழுத்துப்பகுதி 1 அங்குலமாகும்.

आस्यतारं षडङ्गुल्यमोष्ठमेकांगुलं भवेत् ।
एतत्स्यादुपदंशाय पिधानस्य विधिं श्रृणु ॥ १८४ ॥

*ஆஸ்யதாரம்ஷடங்குல்யம் ஒஷ்டமேகாங்குலம் பவேத்!*
*ஏதத்ஸ்யாதுபதம் சாய பிதாநஸ்ய விதிம் ச்ருணு!!*

பாத்ரத்தின் முகப்பகுதி 6 அங்குலமும், விளிம்புப்பகுதி 1 அங்குலமும் ஆகும். இவ்வாறாக காய்கறி பாத்ரலக்ஷணம் கூறப்பட்டு பாத்ரத்தின் மூடி அளவு கூறப்படுகிறது.

पाद्यस्य तारं यावत्तु तानत्कुर्यात्पिधानकम् ।
पिधानस्य विधिः प्रोक्त दर्व्या लक्षणमुच्यते ॥ १८५ ॥

*பாத்ரஸ்யதாரம்யாவத்து தாவத்குர்யாத் பிதாநகம் !*
*பிதாநஸ்யவிதி ப்ரோக்தம் தர்வ்யாலக்ஷண முச்யதே !!*

பாத்திரத்தினுடைய வாய் சுற்றளவு எந்த அளவிலிருக்கிறதோ, அதன் அளவாக பாத்ர மூடி செய்யவேண்டும். பிதாந லக்ஷணம் கூறப்பட்டு தர்விலக்ஷணம் கூறப்படுகிறது.

द्वादशांगुलमायामं तद्दैर्घ्य पञ्चधा भवेत् ।
अत्यर्धांशेन पुच्छांशात् पक्षांशेनाग्रमुच्यते ॥ १८६ ॥

*த்வாதசாங்குலமாயாமம் தத்தைர்க்யம் பஞ்சதா பவேத்!*
*அத்யர்தாம்சேந புச்சாம்சாத் பக்ஷாம் சேநாக்ரமுச்யதே !!*

12 அங்குல நீளமும், அதன் கணம் 5ல் 1 பாகம் அகலமானதாகவும், 15 ½ அங்குல அளவு தர்வியன் பின் பகுதியின்.

त्र्यङ्गुलं पुच्छतारं वा वक्त्रतारं शरांगुलम् ।
व्योमांगुलप्रमाणेन मध्यतारं विधीयते ॥ १८७ ॥

*த்ரயங்குலம் புச்சதாரம்வா வக்த்ரதாரம் சராங்குலம் !*
*வ்யோமாங்குல ப்ரமாணேந மத்யதாரம் விதீயதே !!*

3 அங்குலம் கரண்டி காம்பும் அகலமும், கரண்டியின் முக அளவு 5 அங்குலமும், 1 அங்குல அளவாக கரண்டியின் உள் அளவாகும்.

अर्धाङ्गुलन्तु हीनं स्यान्मध्यमस्य चैव हि ।
दर्व्या लक्षणमाख्यातं स्थालिकालक्षणं श्रृणु ॥ १८८ ॥

*அர்தாங்குலந்து ஹீநம்ஸ்யாத் மத்ய மஸ்யது சைவஹி!*
*தர்வ்யா லக்ஷண மாக்யாதம் ஸ்தாலிகா லக்ஷணம் ச்ருணு !!*

½ அங்குலம் ப்ரமாணமாக தர்வி கைப்பிடி இருக்கவேண்டும். இவ்வாறு தர்வி லக்ஷணம் கூறப்பட்டு ஸ்தாலிகா லக்ஷணம் கூறப்படுகிறது.

कन्यसं कांस्यसंभूतं राजतं मध्यमं भवेत् ।
हैमजं चोत्तमं प्रोक्तं वृत्ताकारं सुशोभनम् ॥ १८९ ॥

*கந்யஸம்காம் ஸ்யஸம்பூதம் ரஜதம் மத்யமம் பவேத் !*
*ஹைமஜம் உத்தமம் ப்ரோக்தம் வ்ருத்தாகாரம் ஸுசோபநம் !!*

ஸ்தாலிகையின் லக்ஷணம் வெங்கல பாத்ரம் அதமமென்றும், வெள்ளி பாத்ரம் மத்யமம் என்றும் தங்க பாத்ரம் உத்தமம் என்றும் வட்டவடிவாகவும், அழகாகவும் இருக்க வேண்டும்.

द्वादशांसुलमारभ्य द्वित्र्यङ्गुलविवर्धनात् ।
षट्त्रिंशदंगुलान्तं च कन्यसादित्रयं त्रयम् ॥ १९० ॥

*த்வாதசாங்குல மாரப்ய த்வித்ரயங்குல விவர்தநாத்!*
*ஷட்த்ரிம்சத் அங்குலாந்தஞ்ச கந்யசாதி த்ரயம் த்ரயம் !!*

12 அங்குல முதற்கொண்டு 2, 2 அங்குல அதிகரிப்பால் 36 அங்குலம் வரை உத்தம, மத்தியம், அதமத்தில் 3,3 பாத்ர அமைப்பு விதமாகும்.

तद्द्वयं चोष्ठविस्तारमुत्सेधं तत्समं भवेत् ।
वेत्रं यवद्वये तु स्यात् अधमस्याधमस्य तु ॥ १९१ ॥

*தத்வயம்ச ஒஷ்ட விஸ்தாரம் உத்ஸேதம்*
*தத்ஸமம்பவேத்!*
*வேத்ரம் யவத்வயேத்ஸ்யாத் அதமஸ்ய*
*அதமஸ்யது!!*

மேற்கூறிய அளவில் 2 மடங்கு வாய் அளவும் அதே அளவு உயரமாகும். பாத்ரத்தின் விளிம்பளவு 2 யவை அளவாகும். இது அதமத்தின் அதம பாத்ர அளவாகும்.

यवैकेन विवृद्ध्या तु यावद्दशयवान्तिकम् ।
स्थालिकानां नवानाञ्च वेत्रोत्सेधं प्रकीर्तितम् ॥ १९२ ॥

*யவைகேந விவ்ருத்யாது யாவத்தச யவாந்திகம்!*
*ஸ்தாலிகாநாம் நவாநாஞ்ச வேத்ரோத்ஸேதம்*
*ப்ரகீர்த்திதம்!!*

ஒவ்வொரு யவையளவு வ்ருத்தியாக 10 யவை அளவு வரை 9 விதமான ஸ்தாலிகை பாத்ரத்தின் வேத்ர உயர அளவாகும்.

कांस्यादुक्तं मध्यमानं विंशदूर्ध्वशतं पलम् ।
स्वर्णेन रजतेनैव यथालाभं प्रकल्पयेत् ॥ १९३ ॥

*காம்ஸ்யா துக்தம் மத்யமாநம்*
*விம்சதூர்த்வசதம்பலம்!*
*ஸ்வர்ணேந ரஜதேநைவ யதாலாபம் ப்ரகல்பயேத்!!*

வெங்கல பாத்ரத்தை விட வெள்ளி பாத்ரம் 120 மடங்கு பலனாகும். தங்கத்தினாலோ, வெள்ளியினாலோ, ஸ்தாலி பாத்ரம் அமைக்கவும்.

स्थालिकालक्षणं प्रोक्तं त्रिपादीलक्षणं श्रृणु ।
चतुर्थाच्छङ्खपादी च बलिपादी त्रिपादिका ॥ १९४ ॥

*ஸ்தாலிகா லக்ஷணம் ப்ரோக்தம் த்ரிபாதீலக்ஷணம்*
*ச்ருணு!*
*சதுர்த்தாச்சங்க பாதீச பலிபாதீ த்ரிபாதிகா!!*

இவ்வாறு ஸ்தாலிகா லக்ஷணம் கூறப்பட்டு முக்காலி லக்ஷணம் கூறப்படுகிறது. 4 பாதமைப்பால் சங்கத்தின் நாற்காலியின் பலி பாத்ரத்திற்கு முக்காலியுமாகும்.

यावन्मानं तु पीठोच्चं तावदुच्चत्रिपादिकम् ।
कर्तव्यं स्थालिकापादं लक्षणेन विशेषतः ॥ १९५ ॥

*யாவந்மானந்து பீடோச்சம் தாவதுச்ச த்ருபாதிகம்!*
*கர்த்தவ்யம்ஸ்தாலிகா பாதம் லக்ஷணேந*
*விசேஷத:!!*

பீடத்தின் நீளம் எவ்வாறுள்ளதோ அந்த அளவு முக்காலியின் உயரமாகும். ஸ்தாலிகா பாதத்தை ஒரே முறைப்படி அமைக்கவும்

उच्चं युगांगुलं ज्ञेयं तच्चतुर्गुणमायतम् ।
ईषत् त्रिभङ्गिकापादं पक्षांगुलं तु नाहकम् ॥ १९६ ॥

*உச்சம் யுகாங்குலம் ஞேயம் தச்சதுர்குண மாயதம்!*
*ஈசது த்ருபங்கிகா பாதம் பக்ஷாங்குலந்து நாஹகம்!!*

உயரம் 4 அங்கலமும், நீளம் அதன் 4 பங்கும் (14) பங்கான சிறிது வளைந்தான பாதமும் அந்த பாதம் 15 அங்குல உயரமாகும்.

मृगराट्पादवन्मूले वक्त्रपादानि कीर्तिताः ।
शरांगुलन्तु विस्तारमुत्सेधं पर्वतांगुलम् ॥ १९७ ॥

*ம்ருகராட் பாதவன் மூலே வக்ர பாதாநி கீர்த்திதா:!*
*சராங்குலந்து விஸ்தாரம் உத்ஸேதம்*
*பர்வதாங்குலம்!!*

முக்காலியின் பாதடியில் சிம்ம பாதம் போன்றும் உயரத்தில் சிம்ம முகம் போன்று அமைக்கவும். 5 அங்குல விஸ்தாரமும் உயரம் 7 அங்குலமாகும்.

अग्निपादसमायुक्तं त्रिवर्गांगुष्ठनाहकम् ।
शरावाकृतिवन्मूले शेषं युक्त्या प्रकल्पयेत् ॥ १९८ ॥

*அக்நி பாத ஸமாயுக்தம் த்ரிவர்காங்குஷ்ட நாஹகம்!*
*சராவாக்ருதிவன்மூலே சேஷம் யுக்த்யா*
*ப்ரகல்பயேத்!!*

3 பாதமுடையதும் 3 கட்டை விரல் பெருமனுடையதும் சராவம் போன்று அதன் கீழ் பாகத்திலும் மீதியை புத்தி ஸாமர்த்தியத்தினால் செய்யவும்.

त्रिपादीलक्षणं प्रोक्तं पाद्याधारविधिं श्रृणु ।
चतुरंगुलमायामं पत्रद्वयसमन्वितम् ॥ १९९ ॥

*த்ரிபாதீ லக்ஷணம் ப்ரோக்தம் பாத்யா தார*
*விதிம்ச்ருணு!*
*சதுரங்குலமாயாமம் பத்ரத்வய ஸமந்விதம்!!*

த்ரிபாதி லக்ஷணம் கூறப்பட்டு ஆதார பாத்ரம் வைக்கும் விதியை கூறுகிறேன். 4 அங்குல நீளமும், 2 பத்ரம் போல் இருப்பதும்

तस्याधः सिंहपादं च शेषं युक्त्या प्रकल्पयेत् ।
पात्रं निधाय तस्योर्ध्वे तस्मिन् पात्रादिकं ददेत् ॥ २०० ॥

*தஸ்யாதம் ஸிம்மபாதஞ்ச சேஷம்யுக்த்யா*
*ப்ரகல்பயேத்!*
*பாத்ரம் நிதாய தஸ்யோர்த்வே தஸ்மிந் பாத்ராதிகம்*
*ததேத்!!*

அதற்கு கீழாக சிம்ம பாதம் போன்று அமைத்து மீதியை யுக்தியால் கல்பிக்கவும். அதன் மேல் பாத்ரத்தை வைத்து பாத்யாசமன பாத்ரத்தை வைக்கவும்.

पाद्यनचमनाधारविधिं श्रृणु महामुने ।
कलांगुलसमायामं मुखवारसमं भवेत् ॥ २०१ ॥

*பாத்யாசமந ஆதார விதிம் ச்ருணு மஹாமுநே!*
*கலாங்குல ஸமாயாமம் முகவார சமம் பவேத்!!*

பாத்ய, ஆசமந, இவையை ஆதார முறையை கூறுகிறேன் கேளும்! 16 அங்குல நீளமும் 7 அங்குல முகவிஸ்தாரமும்

ओष्ठमेकांगुलम् प्रोक्तं धुत्तूरकुसुमोपमम् ।
ऊर्ध्वकायमिदं प्रोक्तं दण्डायामं नवांगुलन् ॥ २०२ ॥

*ஒஷ்டம் ஏகாங்குலம் ப்ரோக்தம் தூர்தூர*
*குஸுமோபமம்!*
*ஊர்த்வ காயமிதம் ப்ரோக்தம் தண்டாயாமம்*
*நவாங்குலம்!!*

பாத்ரத்தின் விளிம்பு பாகம் 1 அங்குலமும் அது ஊமத்தம் பூ போலும் அமைக்கவும், இவ்வாறு ஆதார சக்தி மேல் பாகம் கூறி தண்டத்தின் அளவு 9 அங்குலமாக கூறப்படுகிறது.

अग्न्यंगुलं तु विस्तारं द्विगुणं पादविस्तरम् ।
गण्डिकात्रयसंयुक्तं दण्डं कुर्याद्विचक्षणः ॥ २०३ ॥

*அக்ன்யம் குலந்து விஸ்தாரம் த்விகுணம் பாத*
*விஸ்தரம்!*
*கண்டிகாத்ரய ஸம்யுக்தம் தண்டம் குர்யாத்*
*விசக்ஷண:!!*

3 அங்குலம் விஸ்தாரமும், 2 அங்குலம் பாத விஸ்தாரமும், 3 கண்டிகை இருக்கக் கூடிய தண்டத்தை அமைக்கவும்

न वर्जयेत् तले तस्मिन् पात्रे त्वाचमनोदकम् ।
प्रोक्तमाचमनाधारं जलाधारविधिं श्रृणु ॥ २०४ ॥

*நவர்ஜயேத் தலேதஸ்மிந் பாத்ரேது ஆசமநோ*
*தகம்!!*
*ப்ரோக்தம் ஆசமநாதாரம் ஜலதார விதிம் ச்ருணு!!*

ஆசமந தீர்த்தத்தை தரையில் விடப்படாது. பாத்ரத்தில் விட வேண்டும். இவ்வாறு ஆசமந பாத்ரம் கூறி ஜலாதாரம் முறை கூறப்படுகிறது.

चतुर्विंशत् त्रयं तु स्याद्विस्तारमुदरस्य तु ।
विंशदंगुलमुत्सेधमास्यातारं कलाङ्गुलम् ॥ २०५ ॥

*சதுர்விம்சத் த்ரயந்துஸ்யாத் விஸ்தாரம்து*
*உதரஸ்யது!*
*விம்சதங்குலம் த்ஸேதம் ஆஸ்யதாரம்*
*கலாங்குலம்!!*

24 அங்குலம், பாத்ரத்தில் நடுப்பகுதி ஈரமாகும். 20 அங்குலம் உயமும், முகத்தினளவு 16 அங்குலமாகும்

ओष्ठं पक्षाङ्गुलं ज्ञेयं तस्याधस्तात् त्रिरेखया ।
यवत्रयप्रमाणेन कुर्यादुदरबन्धनम् ॥ २०६ ॥

*ஓஷ்டம் பக்ஷாங்குலம்ஞேயம் தஸ்யாதஸ்தாத் த்ரிரேகயா!*
*யவத்ரய ப்ரமாணேந குர்யாத் உதர பந்தனம்!!*

விளிம்பு பகுதி 15 அங்குலமாகும். விளிம்பின் அடிப்பகுதியின் 3 கோடிடவும், 3 யவை அங்குல அளவு நடுப்பகுதி பட்டையானதாக சேர்க்கவும்

विस्तारमुदयं सर्वमेवं क्रमेण कारयेत् ।
पाद्यपात्राणि सर्वाणि कुर्यान्मानाङ्गुलेन तु ॥ २०७ ॥

*விஸ்தாரம் உதயம்ஸர்வம் ஏவம்க்ரமேந காரயேத்!*
*பாத்ய பாத்ராநி ஸர்வாநி குர்யாத் நாநாங்குலேநது!!*

பாத்ரத்தின் வாய் அகலமானது முன்பு சொன்னபடியே இருக்க வேணும், எல்லா பாத்ய முதலிய பாத்ரங்களையும், மாநாங்குல அளவால் செய்யவும்

जलधारविधिः प्रोक्ता रङ्गस्य च विधिं श्रृणु ।
क्षौमपट्टैर्दुकूलैर्वा कुर्यात् कार्पासशाटिभिः ॥ २०८ ॥

*ஜலதார விதிம் ப்ரோக்தம் ரங்கஸ்யச விதிம் ச்ருணு!*
*க்ஷௌமபட்டை: துகுலைர்வா குர்யாத் கார்பாஸ சாடிபி:!!*

இவ்வாறு ஜலதார விதி கூறப்பட்டு சபையின் லக்ஷணம் கூறப்படுகிறது. வெண்பட்டு வஸ்த்ரம், பட்டு வஸ்த்ரம், நூல் வஸ்த்ரம் இவைகளால்

दशवक्त्रयुतं वाऽपि रविवक्त्रयुतं तु वा ।
रन्ध्रवस्त्रयुतं वाऽपि चास्यज्जुसमन्वितम् ॥ २०९ ॥

*தசவஸ்த்ரஹ்ஹூதம் வாபி ரவிவஸ்த்ர யுதம் துவா!*
*ரந்த்ரவஸ்த்ர யுதம்வாபிச ஆஸ்யரஜ்ஜு ஸமந்விதம்!!*

பத்து வஸ்த்ரத்துடனோ, 12 வஸ்த்ரத்துடனோ, 9 வஸ்த்ரத்துடனோ, முக ரஜ்ஜுடன் கூடி

महावास्तुसमायुक्तं नानारूपसमायुतम् ।
एवं तु रङ्गमाख्यातं स्तम्भवेष्ठनमुच्यते ॥ २१० ॥

*மஹா வாஸ்து ஸமாயுக்தம் நாநாருப ஸமாயுதம்!*
*ஏவம்து ரங்க மாக்யாதம் ஸ்தம்ப வேஷ்டந முச்யதே!!*

பரந்த இடத்துடன் பலவித உருவத்துடனும் அமைப்பது ரங்கம் எனப்படும். இவ்வாறு ரங்க அமைப்பு கூறப்பட்டு ஸ்தம்ப வேஷ்டநம் கூறப்படுகிறது

गात्रमानसमं वस्त्रं पद्माकारे परं मतम् ।
एकवर्णेन युक्तं वा निश्छिद्रं तेन वेष्टयेत् ॥ २११ ॥

*காத்ரமாந ஸமம் வஸ்த்ரம் பத்மாகாரே பரம்மதம்!*
*ஏகவர்ணேந யுக்தம்வா நிச்சித்ரந்தேந வேஷ்டயேத்!!*

மூங்கில் கம்பத்தின் உயரத்திற்கு சமமாக வஸ்த்ரத்தை சுற்றி மேலே தாமரை புஷ்பம் போல் அமைக்கவும். ஒரே வர்ணமாகவோ இடைவெளியின்றி சுற்றவும்.

स्तम्भवेष्टनमाख्यातं वितानमधुनोच्यते ।
पङ्क्तिमानसमायामं विस्तारमपि तत्समम् ॥ २१२ ॥

*ஸ்தம்ப வேஷ்டந மாக்யாதம் விதாநம் மதுநோச்யதே!*
*பங்தி மாந ஸமாயாமம் விஸ்தாரமபி தத்ஸமம்!!*

இவ்வாறு ஸ்தம்ப வேஷ்டநம் கூறி விதாந லக்ஷணம் கூறப்படுகிறது யாகசாலை எந்த நீள அளவு இருக்கிறதோ அதற்கு சமமாக

पद्माकारं विधातव्यं नानारूपयुतं तु वा ।
दुकूलं पट्टदेवाङ्गैः कुर्यात् कार्पासकेन वा ॥ २१३ ॥

*பத்மாகாரம் விதாதவ்யம் நாநாருப யுதம்துவா!*
*துகூலம் பட்ட தேவாங்கை: குர்யாத் கார்ப்பாஸகே நவா!!*

யாகசாலைக்கு மேல் தாமரை பூ போன்றோ பலவித உருவமாகவோ வெண்பட்டு, பட்டு தேவாங்கபட்டு, நூல் வஸ்த்ரம் இவைகளாலோ அமைக்கவும்

वितानलक्षणं प्रोक्तं पताकालक्षणं श्रृणु ।
विंशदंगुलविस्तारमायामं त्रिंशदंगुलम् ॥ २१४ ॥

*விதாந லக்ஷணம் ப்ரோக்தம் பதாகா லக்ஷணம் ச்ருணு!*
*விம்சதங்குல விஸ்தாரம் ஆயாமம் த்ரிம்ச தங்குலம்!!*

விதாந லக்ஷணம் கூறப்பட்டு பதாகா லக்ஷணம் (நீள்படா் கொடி) (பேனா்) கூறப்படுகிறது. 20 அங்குல அகலமும், 30 அங்குல நீளமும்

विस्तारेण समं पुच्छं तस्यार्धं शिखरं भवेत् ।
चतुःपुच्छं त्रिपुच्छं वा पुच्छद्वयमथापि वा ॥ २१५ ॥

*விஸ்தாரேண சமம்புச்சம் தஸ்யார்தம் சிகரம் பவேத்!*
*சதுர்புச்சம் த்ரிபுச்சம் வா புச்சத்வயம் அதாபிவா!!*

அகலத்திற்கு சமமாக வாலும் அதன் பாதி பாகம் சிகரமும், 4 வால், 3 வால், 2 வால் உடையதாகவோ

पार्श्वे कलियुगायुक्तं पोत्त्रत्रयसमावृतम् ।
नवाष्टसप्तहस्तं वा शेषं ध्वजवदीरितम् ॥ २१६ ॥

*பார்ச்வே கலியுகாயுக்தம் போத்ரத்ரய ஸமாவ்ருதம்!*
*நவாஷ்ட ஸப்த ஹஸ்தம்வா சேஷம் த்வஜவத் ரிதம்!!*

பக்கத்தில் வீரன் போன்ற அமைப்பும் 3 துணிகளோடு கூடியதாகவும், 9, 8, 7 முழ அளவாகவோ செய்து மீதியை கொடி போன்ற அமைப்பாக செய்ய வேண்டும்.

ध्वजलक्षणमाख्यातं क्षुद्रध्वजविधिं श्रृणु ।
पादांगुलं तु विस्तारं द्वादशांगुलदैर्घ्यकम् ॥ २१७ ॥

*த்வஜலக்ஷண மாக்யாதம் க்ஷுத்ரத் வஜவிதிம் ச்ருணு!*
*பாதாங்குலந்து விஸ்தாரம் த்வாதசாங்குல தைர்க்யகம்!!*

இவ்வாறு த்வஜ லக்ஷணம் கூறப்பட்டு சின்ன கொடியின் அமைப்பை கூறுகிறேன். 4 அங்குல விஸ்தாரமும், 12 அங்குல நீளமும்

वेत्रद्वयसमायुक्तं शेषं कुर्यात्तु केतुवत् ।
शिखरे रज्जुसंयुक्तं वेणुदण्डं प्रलम्बयेत् ॥ २१८ ॥

*வேத்ர த்வய ஸமாயுக்தம் சேஷம்குர்யாத்து கேதுவத்!*
*சிகரே ரஜ்ஜுஸம்யுக்தம் வேணுதண்டம் ப்ரலம்பயேத்!!*

இரண்டு குச்சியுடன் கூடியதாகவும் அமைத்து மீதியை கொடியின் மேல் பாகம் கயிற்றினுடனும் மூங்கில் குச்சியை தொங்க விடவும்

ध्वजानां लक्षणं प्रोक्तं छत्रलक्षणमुच्यते ।
चतुर्मुखप्रविस्तारं समवृत्तमधोमुखम् ॥ २१९ ॥

*த்வஜாநாம் லக்ஷணம் ப்ரேக்தம் சத்ர லக்ஷண முச்யதே!*
*சதுர்முக ப்ரவிஸ்தாரம் ஸமவ்ருத்தம் அதோமுகம்!!*

கொடியின் அமைப்பு கூறப்பட்டு கொடையின் லக்ஷணம் கூறப்படுகிறது. 4 பக்கமும் சுற்றிலும் விஸ்தாரமானதும், கீழ்நோக்கியவாறும்

आधार वैणवेनैव तन्तुभिर्बंधयेत् क्रमात् ।
वस्त्रेण वेष्टयेत्सर्वं मुक्तादामैश्च रत्नकैः ॥ २२० ॥

*ஆதாரம் வைநவேனைவ தந்துபி: பந்தயேத்க்ரமாத்!*
*வஸ்த்ரேண வேஷ்டயேத் ஸர்வம் முக்தா தாமஸ்ச*
*ரத்நகை:!!*

கொடையின் ஆதாரம் மூங்கில் குச்சியாலும் நூலினால் கட்டி, வஸ்த்ரத்தினால் போர்த்தி எல்லா இடத்திலும் முத்துமாலை, ரத்னங்கள்

मकुटैः स्वर्णपट्टैश्च भूषयेत् भूषणार्हकैः ।
उत्तमं रत्नखचितं दुकूलाद्यैस्तु मध्यमम् ॥ २२१ ॥

*மகுடை: ஸ்வர்ணபட்டைஸ்ச பூஷயேத்*
*பூஷணார்ஹகை:!*
*உத்தமம் ரத்ன கசிதம் துகூலாத்யைஸ்து மத்யமம்!!*

மேலே மகுடம், தங்க பட்டம், அணிகலன்கள் இவைகளால் அலங்கரிக்கவும், ரத்னங்களால் அலங்கரிக்கப்பட்ட குடை உத்தமம் என்றும் பட்டு வஸ்த்ரங்களால் ஆனது மத்யமம் என்றும்

वस्त्रेणैवाधमं प्रोक्तं तालपत्रं महामुने ।
बाणाग्निरसतालैर्वा नालायामं प्रकीर्तितम् ॥ २२२ ॥

*வஸ்த்ரே ணைவ அதமம் ப்ரோக்தம் தாள பத்ரம்*
*மஹாமுநே!*
*பாண அக்னி ரஸ தாலைர்வா நாளாயாமம்*
*ப்ரகீர்த்திதம்!!*

வஸ்த்ரத்தினாலானது அதமம் என்றும், கூறப்பட்டு பண ஓலை குடை கூறப்படுகிறது. ஒரு தாளம் (?) 3, 6 பனை ஓலைகளாலோ, செய்து கைப்பிடியுடன் கூடியதாக அமைக்கவும்.

छत्रलक्षणमाख्यातं पिच्छलक्षणमुच्यते ।
मयूरपिच्छैः कर्तव्यं विस्तारं त्रियवं भवेत् ॥ २२३ ॥

*சத்ர லக்ஷணமாக்யாதம் பிஞ்ச லக்ஷண முச்யதே!*
*மயூர பிஞ்சை: கர்தவ்யம் விஸ்தாரம்*
*த்ரியவம்பவேத்!!*

குடையின் லக்ஷணம் கூறப்பட்டு தோகையின் (சுருட்டி) லக்ஷணம் கூறப்படுகிறது. மயில் தோகைகளால், 3 யவையளவு விஸ்தாரமுடையதாக செய்து

वस्त्रेण वेष्टयेत् सर्वं पुनः पिञ्छेन वेष्टयेत् ।
आधारमयसा कृत्वा हैमेन मकुटं तथा ॥ २२४ ॥

*வஸ்த்ரேண வேஷ்டயேத் ஸர்வம் புந: பிஞ்சேந*
*வேஷ்டயேத்!*
*ஆதாரம் அயஸாக்ருத்வா ஹைமேந மகுடம் ததா!!*

வஸ்த்ரத்தினால் மூடி பிறகு மயில் தோகையினால் சுற்றி கைப்பிடியை இரும்புத் தடியால் செய்து சுருட்டியின் மேல் பாகத்தில் தங்க மகுடம் அமைக்கவும்

शेषं युक्त्या प्रकर्तव्यं नालं स्याच्छत्रनालकम् ।
पिञ्छलक्षणमेवोक्तं चामरस्य विधिं शृणु ॥ २२५ ॥

*சேஷம் யுக்த்யாப்ரகர்தவ்யம் நாலம் ஸ்யாத்சத்ர*
*நாளகம்!*
*பிஞ்ச லக்ஷண மேவோக்தம் சாமரஸ்ய*
*விதிம்ச்ருணு!!*

மற்றவத்தை யுத்தியாக கல்பித்து கைப்பிடியை குடை போன்று அமைத்துக் கொள்ளவும். பிஞ்ச லக்ஷணம் கூறப்பட்டு சாமர லக்ஷணம் கூறப்படுகிறது.

स्वर्णेन रजतेनैव दन्तिदन्तेन दारुणा ।
शुल्वेन वाऽथ मतिमान् दण्डं कुर्यान्महामुने ॥ २२६ ॥

*ஸ்வர்ணேந ரஜதேநைவ தந்தி தந்தேந தாருணா!*
*சுல்பேநவா அத மதிமாந் தண்டம்*
*குர்யாந்மஹாமுநே!!*

தங்கம், வெள்ளி,யானை தந்தம், மரம் இவைகளால் கைப்பிடி அமைக்கவும்

चतुर्विंशदंगुलायामं दण्डनाहं शरांगुलम् ।
नानापंक्तिसमायुक्तं नानागण्डिसमायुतम् ॥ २२७ ॥

*சதுர்விம்சத ங்குலமாயாமம் தண்ட நாகம் சராங்குலம் !*
*நாநாபங்தி ஸமாயுக்தம் நாநாகண்டி ஸமாயுதம் !!*

24 அங்குல நீளமும், 5 அங்குல கனமும், பலவித மடிப்புகளுடனும் பலவித கண்டி போன்ற அமைப்புகளுடன்

चमरीवालसंयुक्तं यथाशोभं तु कारयेत् ।
चामरस्य विधिः प्रोक्ता मयूरव्यजनं श्रृणु ॥ २२८ ॥

*சமரீவால ஸம்யுக்தம் யதா சோபந்து காரயேத் !*
*சாமரஸ்ய விதிம் ப்ரோக்தம் மயூர வ்யஜநம் ச்ருணு !!*

மானின் வால் கேசங்களால் அழகுக்கு தக்கவாறு அமைக்கவும். சாமரத்தின் விதியை கூறிமயில் விசிறியின் அமைப்பை கூறப்படுகிறது

दण्डं तु पूर्ववत् प्रोक्तं शिखिपिञ्छं तु योजयेत् ।
अलङ्कारेण मतिमान् शेषं युक्त्या प्रकल्पयेत् ॥ २२९ ॥

*தண்டம்து பூர்வவத் ப்ரோக்தம் சிகி பிஞ்சஞ்து யோஜயேத் !*
*அலங்காரேண மதிமாந் சேஷம் யுக்த்யா ப்ரகல்பயேத் !!*

விசிறியின் கைப்பிடி முன்புபோல் கூறப்பட்டு அதற்கு மேல் மயில் தோகையைச் சேர்க்கவும், நன்கு அலங்காரமாய் வைத்து மீதியை தன் புத்தியால் செய்யவும்

मयूरव्यजनं प्रोक्तं दुकूलव्यजनं श्रृणु ।
षोडशांगुलविस्तारं वैणवेनैव वर्तुलम् ॥ २३० ॥

*மயூர வ்யஜநம் ப்ரோக்தம் துகூல வ்யஜநம் ச்ருணு !*
*ஷோடசாங்குல விஸ்தாரம் வைணவே நைவ வர்துலம் !!*

மயில் விசிறி கூறப்பட்டு, பட்டு விசறி கூறப்படுகிறது. 16 அங்குல சுற்றளவு மூங்கிலால் வட்டமாக அமைத்து.

क्षौमदेवाङ्गपट्टैर्वा दुकूलेनाथ वेष्टयेत् ।
त्रियंगुलं दण्डनाहं षट्त्रिंशदंगुलायतम् ॥ २३१ ॥

*க்ஷௌமதேவாங்க பட்டைர்வா துகூ லேநாத வேஷ்டயேத் !*
*த்ரயங்குலம் தண்டநாஹம் ஷட்த்ரிம்சத் அங்குலாயதம் !!*

வெண்பட்டு, தேவாங்கப்பட்டு, (சிவப்புப் பட்டு) பட்டினாலோ, சுற்றவும், 3 அங்குல சுற்றளவாக 36 அங்குல நீளமாகவும்

नानातन्तुसमायुक्तं दण्डमात्रं विचित्रयेत् ।
दण्डाग्रं तु यथा कृत्वा शेषं युक्त्या प्रकल्पयेत् ॥ २३२ ॥

*நாநாதந்து ஸமாயுக்தம் தண்ட மாத்ரம் விசித்ரயேத் !*
*தண்டாக்ரந்து யதாக்ருத்வா சேஷம் யுக்த்யா ப்ரகல்பயேத் !!*

பலவித நூல்களால் அலங்கரிக்கப்பட்டு தண்டத்தை பலவித நூல்களால் அலங்கரித்து மீதியை யுக்தியாக கல்பிக்கவும்

दुकूलव्यजनं प्रोक्तं उष्णीषस्य विधिं श्रृणु ।
सप्तषट्पञ्चहस्तांशं पञ्चभागैकविस्तृतम् ॥ २३३ ॥

*துகூல வ்யஜநம் ப்ரோக்தம் உஷ்ணீசஸ்ய விதிம்ச்ருணு !*
*ஸப்தஷட் பஞ்ச ஹஸ்தாம்சம் பஞ்சபாகைக விஸ்த்ருதம் !!*

இவ்வாறு பட்டு விசிறி கூறப்பட்டு தலைப்பாகை கூறப்படுகிறது. 7, 6, 5 இந்த முழம் நீளமுடையதும் அதில் 5ல் 1 பாகம் அகலமுடையதும்

सुश्लक्ष्णं सुदृशं सूक्ष्मं शिरोरोमविवर्जितम् ।
शिरसा चिबुकेनैव कर्णाभ्यामपि वेष्टयेत् ॥ २३४ ॥

*ஸுச்லக்ஷ்ணம் ஸுத்ருசம் ஸூக்ஷ்மம் சிரோரோம விவர்ஜிதம்!*
*சிரஸாசிபுகே நைவ கர்ணாப்யாமபி வேஷ்டயேத்!!*

மிருதுவானதும், மெலிந்ததாகவும், மிக மெல்லியதாகவும், கேசங்களற்றதும், உள்ள சிரோ வஸ்த்ரத்தை சிரோ மந்திரத்தினால் தாடை முதல் கழுத்து இவைகளுடன் தலையை சுற்றி

पुच्छं वै वामकर्णान्ते वेष्टयेत्तु प्रदक्षिणम् ।
एवं संवेष्ट्य मतिमान् शेषं शिरसि वेष्टयेत् ॥ २३५ ॥

*புச்சம் வை வாம கர்ணாந்தே வேஷ்டயேத்து ப்ரதக்ஷிணம்!*
*ஏவம் ஸம்வேஷ்ட்ய மதிமாந் சேஷம் சிரஸி வேஷ்டயேத்!!*

இடது காது பக்கம் நுனி உள்ளதாக சுற்றவும், இவ்வாறு சிரஸை சுற்றி மீதமுள்ள வஸ்த்ரத்தை சிரஸில் சுற்றவும்.

उष्णीषविधिराख्यातं उत्तरीयविधिं श्रृणु ।
बाणहस्तायतं वाऽपि वेदहस्तायतं तु वा ॥ २३६ ॥

*உஷ்ணீஷ விதி ராக்யாதம் உத்தரீய விதிம் ச்ருணு!*
*பாண ஹஸ்தாயதம் வாபி வேத ஹஸ்தாயதம்து வா!!*

இவ்வாறு தலைப்பாகை முறை கூறப்பட்டு அங்க வஸ்த்ர லக்ஷணம் கூறப்படுகிறது. 5 முழ நீளமாகவோ, 4 முழ அகலமாகவோ

तालमात्रं प्रविस्तारं बन्धयेत्तु द्विपुच्छकम् ।
यज्ञोपवीतवद्बध्वा उत्तरीयं विशेषत: ॥ २३७ ॥

*தாலமாத்ரம் ப்ரவிஸ்தாரம் பந்தயேத்து த்விபுச்சகம்!*
*யக்ஞோப வீதவத் பத்வா உத்தரீயம் விசேஷத:!!*

1 தால அளவு அகலமுடையதும், 2 நிலையும் கட்டியதாகவும், பூணூல் போல் சரீரத்தின் மேல் கட்டிக் கொள்வது உத்தரீயம் எனப்படும்.

यजने स्थापने चाग्निकार्ये शैवोत्सवे जपे ।
उष्णीषमुत्तरीयञ्च धारयेद्देशिकोत्तम: ॥ २३८ ॥

*யஜநே ஸ்தாபநே சாக்நி கார்யே சைவோத்ஸவே ஜபே!*
*உஷ்ணீஷம் உத்தரீயம்ச தாரயேத் தேசி கோத்தம:!!*

யாகம், ப்ரதிஷ்டை, அக்னி கார்யம், சிவோத்ஸவம், ஜபம் இந்த காலங்களில் தலைப்பாகையையும், உத்தரீயத்தையும் அவச்யம் தரிக்க வேண்டும்.

उत्तरीयलक्षणं प्रक्तं वस्त्रलक्षणमुच्यते ।
देवाङ्गक्षौमकं वाऽपि नेत्रं कार्पासजन्तु वा ॥ २३९ ॥

*உத்தரீய லக்ஷணம் ப்ரோக்தம் வஸ்த்ர லக்ஷண முச்யதே!*
*தேவாங்க க்ஷௌமகம் வாபி நேத்ரம் கார்பாஸ ஜந்துவா!!*

உத்தரீய லக்ஷணம் கூறப்பட்டு வேஷ்டி லக்ஷணம் கூறப்படுகின்றது. தேவாங்க பட்டு, வெண்பட்டு, நூல் வேஷ்டி இவைகள் 14 முழம் உள்ள வேஷ்டி

उत्तमं मनुहस्तं स्याद्रविहस्तन्तु मध्यमम् ।
अधमं दशहस्तं स्याते पञ्चतालन्तु विस्तृतम् ॥ २४० ॥

*உத்தமம் மநுஹஸ்தம்ஸ்யாத் த்ரவிஹஸ்தந்து மத்யமம்!*
*அதமம் தசஹஸ்தம் ஸ்யாத் பஞ்சதாலந்து விஸ்த்ருதம்!!*

உத்தமம், 12 முழ வேஷ்டி, மத்யமம் 10 முழ வேஷ்டி - அதமம், அதன் வேஷ்டியின் அகலம், 5 தாளம் ஆகும்

उत्तमं रक्तवर्णं स्यादलाभेऽन्यत्रगृह्यताम्।
स्निग्धं सुश्लक्ष्णकं नव्यं शिरोरोमविवर्जितम् ॥ २४१ ॥

*உத்தமம் ரக்த வர்ணம் ஸ்யாத் அலாபே அந்யத்*
*ப்ரக்ருஹ்யதாம்।*
*ஸ்நிக்தம் சுஷ்லக்ஷ்ணகம் நவ்யம் சிரோரோம*
*விவர்ஜிதம்॥*

சிகப்பு பட்டு உத்தமமென்றும், கிடைக்காவிடில் மற்ற நிரத்தையோ ஏற்கலாம், புதியதாயும், கெட்டியானதாயும், ம்ருதுவான தாகவும், கேஸ மற்றதும், ஆக இருக்க வேண்டும்.

जीर्णन्तु वह्निदग्धन्तु वर्जयेदाखुदष्टकम्।
वस्त्रलक्षणमित्येवं स्यात्पञ्चशयनं शृणु ॥ १४२ ॥

*ஜீர்ணந்து வஹ்நிதக்தந்து வர்ஜயேத்*
*ஆஹுதஷ்டகம்।*
*வஸ்த்ர லக்ஷணம் இத்யேவம் ஸ்யாத் பஞ்ச சயநம்*
*ச்ருணு॥*

ஜீர்ணமானதும் நெருப்பால் எரிக்கப்பட்டதும் எலிகடிக்கப்பட்டதும் வேஷ்டியை தள்ளுபடி செய்ய வேண்டும். வஸ்த்ர லக்ஷணம் கூறி 5 வித சயந லக்ஷணம் கூறப்படுகிறது.

चर्मजं रोमजं चैवमुण्डजञ्चाण्डज पुनः।
वामजं चैव पञ्चैते शयनं संप्रकल्पयेत् ॥ २४३ ॥

*சர்மஜம், ரோமஜஞ்சைவ முண்டஜம்ச*
*அண்டஜம்புந:।*
*வாமஜம்சைவ பஞ்சைதே சயநம்*
*ஸம்ப்ரகல்பயேத்॥*

தோலால் அமைக்கப்பட்டது, ரோமங்களால் அமைக்கப்பட்டது, பருத்தி முதலியவைகளால் செய்யப்பட்டது, பறவை தோகையால் செய்யப்பட்டது. பஞ்சால் செய்யப்பட்டது. இவைகள் ஐந்து வித சயனமாக கூறப்பட்டது

खट्वाया मञ्चविस्तीर्णमायामन्तु सुविस्तृतम्।
उत्सेधकं हस्तमात्रं प्रावृणीं व्याघ्रचर्मणा ॥ २४४ ॥

*கட்வாயாமஞ்ச விஸ்தீர்ணம் ஆயாமந்து*
*ஸுவிஸ்த்ருதம்।*
*உத்ஸேதகம் ஹஸ்த மாத்ரம் ப்ரவ்ருணீம் வ்யாக்ர*
*சர்மணா॥*

கட்டிலின் மேற்பகுதியின் பரப்பளவாக விதிக்கப்பட்டதாகவும், 1 முழ அளவிற்கு மேல் புலித் தோலாலும்

पूरितं तूलिकेनैव चर्मजं चेति कीर्तिम्।
आयामं पूर्ववत्कुर्याद्रोमैः कृष्णमृगोद्भवैः ॥ २४५ ॥

*பூரிதம் தூலிகேநைவ சர்மஜம் சேதி கீர்த்திதம்।*
*ஆயாமம் பூர்வவத் குர்யாத் ரோமை: க்ருஷ்ண*
*ம்ருகோத்பவை:॥*

நிரப்பப்பட்டது, புலி ரோமத்தினாலும் நிரப்பப்பட்ட்து சர்மஜ சயநம் எனப்படும், முன்புள்ள அளவுப்படியே

संपूरितञ्च यत्तल्पं रोमजं चेति कीर्तितम्।
पूर्वोक्तलक्षणोपेतं वस्त्रेणावरणं तथा ॥ २४६ ॥

*ஸம்பூரிதம் ச யத்தல்பம் ரோமஜம் சேதி கீர்த்திதம்।*
*பூர்வோக்த லக்ஷணோ பேதம் வஸ்த்ரோணா*
*வரணம் ததா॥*

மான் தோல், ரோமங்களால் வஸ்த்ரத்திற்குள் நிரப்பப்பட்ட எந்த விரிப்பு உள்ளதோ அது ரோமஜம் எனப்படும். முன்பு கூறப்பட்டுள்ள லக்ஷணப்படி வஸ்த்ரத்தினால் மூடப்பட்டு

शल्मली तूलसंपूर्णं मुण्डजं चेति कीर्तितम्।
पूर्वोक्तलक्षणोपेतं देवांगैः पञ्चरं मतम् ॥ २४७ ॥

*சல்மலீ தூல ஸம்பூர்ணம் முண்டஜம் சேதி*
*கீர்த்திதம்।*
*பூர்வோக்த லக்ஷணோ பேதம் தேவாங்கை: பஞ்சரம்*
*மதம்॥*

இலவம் பஞ்சினால் நிரப்பப்பட்ட சயனம் முண்டம் எனப்படும். முன்ப கூறப்பட்ட அளவுப் பட்டால் தேவாங்கப் பட்டால் மெத்தை செய்து அதில்

हंसरोमेण संपूर्णमण्डजं परिकीर्तितम् ।
सुरलक्षणं सुसितं सूक्ष्मं कार्पासेनैव कल्पितम् ॥ २५८ ॥

*ஹம்ஸரோமேண ஸம்பூர்ண மண்டஜம் பரிகீர்த்திதம்!*
*ஸுசலக்ஷ்ணம் ஸுஸிதம் ஸூக்ஷ்மம் கார்ப்பாஸே நைவ கல்பிதம்!!*

அன்ன பக்ஷி இரக்கைகளால் நிரப்பப்பட்ட சயனம் அண்டஜம் எனப்படும், வெண்மையானதும், ஸூக்ஷ்ம மானதும், வெள்ளையானதும், மிருதுவானதுமான பருத்தி பஞ்சினால் செய்யப்பட்ட

उपरिस्तरणं यत्तत् वामजं चेतिकीर्तितम् ।
उपर्युपरिकर्तव्यं तत्पञ्चशयनं स्मृतम् ॥ २४९ ॥

*உபரிஸ்தரணம் யத்தத் வாமஜம் சேதி கீர்த்திதம்!*
*உபர் யுபரி கர்த்தவ்யம் தத் பஞ்ச சயநம் ஸ்ம்ருதம்!!*

சயனமானது வாமஜம் எனப்படும், மேற்கூறப்பட்ட சயனங்களை மேற்கூறியவாறு வரிசையாக கல்பிக்கவும்

आख्यातं पञ्चशयनमुपधानविधिं शृणु ।
षट्त्रिंशदंगुलायामं नाहं तच्चिगुणं भवेत् ॥ २५० ॥

*ஆக்யாதம் பஞ்ச சயநம் உபதாந விதிம் ச்ருணு!*
*ஷட்த்ரிம்சத் அங்குலாயாமம் தந்நாஹம்த த்ரிகுணம் பவேத்!!*

பஞ்ச சயநம் முறை கூறப்பட்டு உபதானம் என்கிற தலையனை விதி கூறப்படுகிறது. 36 அங்குல நீளமும், 3ல் 1 பங்கு அகலமும், உள்ளதாகவும்

हंसरोमेण संपूर्णं देवांगेन तु पञ्जरम् ।
कार्पाससंभवेनैव कुर्यादुपरि वेष्टनम् ॥ २५१ ॥

*ஹம்ஸ ரோமேண ஸம்பூர்ணம் தேவாங்கேநது பஞ்சரம்!*
*கார்ப்பாஸ ஸம்பவே நைவ குர்யாத் உபரி வேஷ்டநம்!!*

ஹம்ஸ ரோமங்களால் நிரப்பப்பட்டதும் தேவாங்கப்பட்டினால் மூடப்பட்டதும், பருத்தி பஞ்சால் செய்யப் பட்டதாகவோ மேன் மேலும் தயாரிக்கப்பட்ட

उपधानं पाणिपद्भ्यां यथायुक्तं प्रकल्पयेत् ।
उपधानविधिः प्रोक्ता कक्ष्या लक्षणमुच्यते ॥ २५२ ॥

*உபதாநம் பாணி பத்ப்யாம் யதாயுக்தம் ப்ரகல்பயேத்!*
*உபதாந விதிப்ரோக்தம் கக்ஷ்யா லக்ஷண முச்யதே!!*

தலையானியை காலிற்கும், கைக்குமாக முறைப்படி வைக்கவும். தலையனை கூறப்பட்டு மெத்தையின் லக்ஷணம் கூறப்படுகிறது

अग्न्यङ्गुलन्तु विस्तारमश्विन्यङ्गुलमेव च ।
कार्पासेनैव सर्तव्यं यावत्खट्वा प्रवेष्टनम् ॥ २५३ ॥

*அக்ந்யங்குலந்து விஸ்தாரம் அச்விந்யம் அங்குலமேவச!*
*கார்ப்பாஸே நைவ கர்த்தவ்யம் யாவத் கட்வா ப்ரவேஷ்டநம்!!*

3அங்குல கனமாகவோ, 2 அங்குல கனமாகவோ, பருத்தி பஞ்சினால் கட்டிலின் பிரதேசம் வரை விரிக்கவும்.

कक्ष्या लक्षणमाख्यातं प्रच्छन्नपटमुच्यते ।
द्वारयामसमं दीर्घं विस्तारद्वारविस्तृतम् ॥ २५४ ॥

*கக்ஷ்யா லக்ஷண மாக்யாதம் ப்ரச்சந்நபட முச்யதே!*
*த்வாராயாம ஸமதீர்கம் விஸ்தார த்வார விஸ்த்ருதம்!!*

மெத்தையின் லக்ஷணம் கூறப்பட்டு திரையின் லக்ஷணம் கூறப்படுகிறது. வாயிற்படியின் அளவு, நீள அகல உயரமும் அமைத்து

द्वारमानेव कर्तव्यं पदव्याधारदण्डकम् ।
शक्तिं मयूरयूथञ्च लाञ्छनस्य तु चैव हि ॥ २५५ ॥

*த்வார மானேந கர்த்தவ்யம் பதவ்யாதார தண்டகம்!*
*சக்திம் மயூரயூதம் ச லாஞ்சநஸ்யது சைவஹி!!*

த்வாரத்தின் அளவு வரையாக திரை தொங்குவதற்கு தண்டத்தைச் சேர்த்து திரையில் சக்தியையும், மயில் கூட்டத்தையும், மயில் தோகையையும் வரையவும்

प्रच्छन्नपटमाख्यातं धूपपात्रविधिं श्रृणु ।
हैमेव राजतेनैव ताम्रेण त्रपुणाऽथवा ॥ २५६ ॥

*ப்ரச்சந்ந பட மாக்யாதம் தூப பாத்ர விதிம் ச்ருணு!*
*ஹைமேந ரஜதே நைவ தாம்ரேண த்ரபுணா஽ வா!!*

இவ்வாறு திரையின் லக்ஷணம் கூறப்பட்டு தூப பாத்ர முறை கூறப்படுகிறது. தங்கம், வெள்ளி, தாம்ரம், வெண்கலத்தினாலோ

वेदांगुलन्तु विस्तारं पात्रोत्सेधं तदर्धकम् ।
ओष्टमर्धांगुलं प्रोक्तं बाह्ये पद्मदलान्वितम् ॥ २५७ ॥

*வேதாங்குலந்து விஸ்தாரம் பாத்ரோத்ஸேதம் ததர்த்தகம்!*
*ஒஷ்டம் அர்த்தாங்குலம் ப்ரோக்தம் பாஹ்யே பத்ம தளாந்விதம்!!*

4 அங்குல அகலமும், 2 அங்குல உயரமும் விளிம்பு பகுதி ½ அங்குலமும், பாத்ரத்தின் வெளிப்புற பகுதி, தாமரை (இதழ்) தளம் போன்று அமைத்து

ग्रीवस्यादौ द्विपादन्तु पादायामं द्विमात्रकम् ।
अव्यंगुलसमायामं नाहं पक्षांगुलं भवेत् ॥ २५८ ॥

*க்ரீவ ஸ்யாதௌ த்விபாதந்து பாதாயாமம் த்விமாத்ரகம்!*
*அத்யங்குல ஸமாயாமம் நாஹம் பக்ஷாங்குலம் பவேத்!!*

கண்ட பாகத்தின் அடிப்பகுதியில் 2 பாதமும் பாதத்தின் நீளமும், 2 மாத்ரை அளவும், 7 அங்குல பாதத்தின் நீளமும், சுற்றளவும் 15-ம் ஆகும்.

दण्डपुच्छं पञ्चपादं कारयेदिति पूर्ववत् ।
पक्षांगुलन्तु विस्तारं नानावल्लिसमन्वितम् ॥ २५९ ॥

*தண்ட புச்சம் பஞ்ச பாதம் காரயேதிதி பூர்வவத்!*
*பக்ஷாங்குலந்து விஸ்தாரம் நாநாவல்லி ஸமந்விதம்!!*

தண்டத்தின் பின் பகுதி 5 ¼ மாத்ரை அளவாகும். 15 அங்குல சுற்றளவு கைப்பிடியில் பலவித கொடியமைப்புகள் செய்யவும்

अग्न्यंगुलं पिधानोच्चमनेकं सुषिरान्वितम् ।
कारयेन्मुकुलाकारं शेषं बुद्ध्या प्रकल्पयेत् ॥ २६० ॥

*அக்ந்யங்குலம் பிதாநோச்சம் அநேக ஸுஷிராந்விதம்!*
*காரயேந் முகுளாகாரம் சேஷம் புத்யா ப்ரகல்பயேத்!!*

3 அங்குலம் மூடியின் நீளமாகும். மூடியில் பலவித த்வாரங்கள் இருக்க வேண்டும். மூடியின் மேல் தாமரை மொட்டுபோல் மீதந்தை புத்தி ஸாமர்த்யத்தால் அமைக்கவும்.

धूपपात्रविधिः प्रोक्तं धूपघण्टाविधिं श्रृणु ।
बाणांगुलन्तु विस्तारमुत्सेधं तत्समं भवेत् ॥ २६१ ॥

*தூப பாத்ர விதி ப்ரோக்தம் தூபே கண்டா விதிம் ச்ருணு!*
*பாணாங்குலந்து விஸ்தாரம் உத்ஸேதம் தத் ஸமம் பவேத்!!*

இவ்வாறு தூப பாத்ர முறை கூறப்பட்டு தூப கண்ட (காலின்) முறை கூறப்படுகிறது.

. அங்குல உயரமும், 3 யவை அளவு விளிம்பின் அகலமும்

त्रियवञ्चोष्ठविस्तारं तन्निर्यूहञ्चतुर्गुणम् ।
उपपट्टिकया युक्तं मात्रेण शिखरान्वितम् ॥ २६२ ॥

*த்ரியவம் சோஷ்ட விஸ்தாரம் தந்நிர்யூஹம் சதுர்குணம்!*
*உபபட்டிகயா யுக்தம் மாத்ரேண சிகராந்விதம்!!*

பாத்ரத்தின் சுற்றளவு 12- யவை அளவு உபப்பட்டிகையோடு கூடியதாயும், 1மாத்ராங்குலத்தால் சிகரத்தோடு கூடியதாயும்

चतुर्यवङ्गुलोत्सेधं जिह्वा वेदांगुलायुतम् ।
घण्टायामञ्च तन्नाहं विस्तारेणैव वर्णितम् ॥ २६३ ॥

*சதுர்யவங்களோத் ஸேதம் ஜிஹ்வாவேதாங் குலாயுதம்!*
*கண்டாயாமம் ச தந்நாஹம் விஸ்தாரேணைவ வர்ணிதம்!!*

4 யவை அங்குல உயரமும் நாக்கு 4 அங்குல அளவும், மணியின் நீளம், அகலம், மேற்கூறிய 4 அங்குல அளவாயும்

अग्न्यंगुलेन दण्डोच्चं नाहं तत्सममेव वा ।
दण्डस्याग्रे गजं वाऽपि वज्रं वा शक्तिमेव वा ॥ २६४ ॥

*அக்ந்யங்குலேந தண்டோச்சம் நாஹம்தத்ஸமமேவச!*
*தண்டஸ்யாக்ரே கஜம் வாபி வஜ்ரம் வா சக்திமேவ வா!!*

நுனியின் தண்டோச்சம் (உயரம்) 3 அங்குலமாகும் (சுற்றளவு) அதே அளவேயாகும். தண்டத்தின் நுனியில் யானையையோ, வஜ்ரத்தையோ, சக்தியையோ, அமைத்து

मूलं वा मकुटं वाऽपि नलिनं तस्य कल्पयेत् ।
शेषं युक्त्या प्रकर्तव्यं शुद्धकांस्येन सुव्रत ॥ २६५ ॥

*மூலம் வா மகுடம் வாபி நளிநம் தஸ்ய கல்பயேத்!*
*சேஷம் யுக்த்யா ப்ரகர்த்தவ்யம் சுத்தகாம்ஸ்யேந ஸுவ்ரத!!*

அடிபாகம் மகுடம் போன்றோ, தாமரை போன்றோ அமைக்கவும். மீதம் ஆன அளவை யுக்தியாக கல்பித்து சுத்தமான வெங்கலத்தினால் அமைக்கவும்

कृत्वा नैवेद्य.काले तु बलिकाले विशेषत: ।
धूपदीपप्रदाने च होमकाले च घोषयेत् ॥ २६६ ॥

*க்ருத்வா நைவேத்ய காலேது பலிகாலே விசேஷத:!*
*தூப தீப ப்ரதாநேச, ஹோமகாலேச கோஷயத்!!*

நைவேத்தியகாரம், பலிகாரம், தூப தீபம் ஸமர்பிக்கும் காலம் ஹோமகாலம் இவைகளில் அடிக்கவும்

धूपघ विधि: प्रोक्ता दीपपीत्रविधि शृणु ।
धूपपात्रवदाकारं विशेषात् किञ्चिदरित हि ॥ २६७ ॥

*தூப கண்டா விதிப்ரோக்தம் தீப பாத்ர விதிம் ச்ருணு!*
*தூப பாத்ர வதா காரம் விசேஷாத் கிஞ்சித ஸ்திஹி!!*

தூப கண்டா முறை கூறி, தீப பாத்ரத்தின் லக்ஷணம் கூறப்படுகிறது. தூப பாத்ரம் போல் அமைத்து வித்தியாசமாக அமைத்து

अग्न्यंगुलप्रविस्तारमायामन्तु शरांगुलम् ।
अश्वत्थपत्रवत्कुर्यात् ओष्ठोच्चं त्रियवं भवत् ॥ २६८ ॥

*அக்ந்யங்குல ப்ரவிஸ்தார மாயாமந்து சராங்குலம்!*
*அச்வத்த பத்ரவத் குர்யா தோஷ்டோச்சந்த்ரியவம் பவேத்!!*

3 அங்குல அகலமும் 5 அங்குல நீளமுமாக அமைத்து அரசிலை போல் செய்து விளிம்பின் உயரம் 3 யவையளவு அமைக்கவும்

मध्यं नाभिसमायुक्तं मुकुलं चैव कल्पयेत् ।
तदेकं दीपपात्रं स्यात् पञ्चदीपयुतं तु वा ॥ २६९ ॥

*மத்யம் நாபி ஸமாயுக்தம் முகுளம் சைவ கல்பயேத்!*
*ததேக தீப பாத்ரம் ஸ்யாத்பஞ்சதீபயுதம் து வா!!*

தீப பாத்ர மத்தியில் நாபியில் தாமரை மொட்டு போல் கல்பிக்கவும். அதை 1 முகமாக தீபமாகவோ, 5 முக தீபமாகவோ செய்யவும்

दीपपात्रविधिः प्रोक्ता वक्ष्ये नीराजनस्य तु ।
सौवर्णं राजतं ताम्रं श्रेष्ठं मध्यकनिष्ठकम् ॥ २७० ॥

*தீப பாத்ர விதி ப்ரோக்தம் வக்ஷ்யே நீராஜ்ஜ நஸ்யது!*
*ஸௌவர்ணம் ரஜதம் தாம்ரம் ச்ரேஷ்டம் மத்யக நிஷ்டகம்!!*

தீபபாத்ர முறை கூறப்பட்டு நீராஜனை முறை கூறப்படுகிறது. தங்கம், வெள்ளி, தாம்ரம், இவை உத்தமம், மத்யமம், அதமமென பாத்ரலக்ஷணம் கூறுகிறது

षट्त्रिंशदङ्गुलायामं वृत्ताकारमनुत्तमम् ।
तस्मात्षडङ्गुलं हीनं मध्यमं पात्रमिष्यते ॥ २७१ ॥

*ஷட் த்ரிம் சதங்குளாயாமம் வ்ருத்தாகாரம நுத்தமம்!*
*தஸ்மாத் ஷடங்குலம் ஹீநம் மத்யமம் பாத்ர மிஷ்யதே!!*

36 அங்குல நீளத்துடன் வட்ட வடிவமாக உடையது உத்தமமாகும். 30 அங்குல பரப்புடைய பாத்ரம் மத்யமம் எனப்படும்

हस्तमात्रप्रविस्तारं कन्यसं पात्रमिष्यते ।
कर्णिकाञ्च त्रिभागैकं तत्पञ्चांशैकमुच्छ्रयम् ॥ २७२ ॥

*ஹஸ்த மாத்ர ப்ரவிஸ்தாரம் கந்யஸம் பாத்ர மிஷ்யதே!*
*கர்ணிகாஞ்ச த்ரிபாகைகம் தத் பஞ்சாம்சைக முச்ரயம்!!*

1 முழ சுற்றளவு உடைய பாத்ரம் அதமம் எனப்படும். பாத்ரத்தில் 3ல் 1 பங்கு கர்ணிகை அமைக்கவும், அந்த கர்ணிகையானது சுற்றளவு 5ல் 1 பாகம் உயரமானதாகும்

यवद्वयविशालेन परितः पट्टिका तथा ।
उत्सेधं तत्समं ज्ञेयं तद्बाह्येऽष्टदलं भवेत् ॥ २७३ ॥

*யவ த்வய விசாலேந பரித: பட்டிகா ததா!*
*உத்ஸேதம் தத்ஸமம் ஜ்ஞேயம் தத்பாஹ்யேஷ்ட தளம் பவேத்!!*

கர்ணிகை சுற்றிலும் 2 யவை அகலமாக சுற்றிலும் பட்டிகை அமைக்கவும். பட்டிகையின் உயரம் அதே அளவாகும். அதற்கு வெளியில் 8 தளம் வரையவும்.

ओष्ठन्तु परितः कुर्यात् कर्णिकोच्छ्रयमानतः ।
एवं कृत्वा मुनिश्रेष्ठ पूर्णचन्द्रसमप्रभम् ॥ २७४ ॥

*ஓஷ்டந்து பரித: குர்யாத் கர்ணிகோச்ரய மாநத:!*
*ஏவம் க்ருத்வா முநிச்ரேஷ்ட பூர்ண சந்த்ர ஸமப்ரபம்!!*

கர்ணிகையின் உயர அளவால் சுற்றிலும் விளிம்பு போன்ற பகுதி அமைக்கவும். இவ்வாறு பூர்ண சந்த்ர காந்தியாக அமைத்து

युगाङ्गुलसमुत्सेधं दीपाधारं घटोपमम् ।
अश्विन्यङ्गुलमायामं घटवत्तस्य कीर्तितम् ॥ २७५ ॥

*யுகாங்குல ஸமுத்ஸேதம் தீபாதாரம் கடோபமம்!*
*அச்விந்யங்குல மாயாமம் கடவத்தஸ்ய கீர்த்திதம்!!*

4 அங்குல உயரமாக குடம் போன்ற அமைப்புடன் தீபாதாரத்தை கல்பிக்கவும். கும்பம் போன்ற அமைப்புடைய தீபாதாரத்தின் அகலம் 2 அங்குலமாகும்

प्रोक्तं पक्षाङ्गुलं रन्ध्रं कर्णिकामध्यमं युतम् ।
दीपाधारमथाग्रेषु योजयेत्तु दलं प्रति ॥ २७६ ॥

*ப்ரோக்தம் பக்ஷாங்குலம் ரந்த்ரம் கர்ணிகா மத்யமே யுதம்!*
*தீபாதார மதாக்ரேஷு யோஜயேத்து தளம் ப்ரதி!!*

2 அங்குல அளவான கர்ணிகா மத்தியில் த்வாரம் கல்பிக்கவும். கர்ணிகை சுற்றியுள்ள 8 தளத்திலும் எண்கோண வடிவமாக தீபாதாரத்தை கல்பிக்கவும்

रन्ध्राधारशताधारमेकाधारमथापि वा ।
मध्ये चैव महेशास्युर्दीपाधाराणि कल्पयेत् ॥ २७७ ॥

*ரந்த்ராதார சதாதார மேகாதார மதாபிவா!*
*மத்யே சைவ மஹேசாஸ்யுர் தீபாதாராணி கல்பயேத்!!*

9 தீபாதாரம், 100 - தீபாதாரம், 1 - தீபாதாரத்துடனோ, கல்பித்து நடுவிலும், சுற்றிலும், மஹேசனை பூஜிக்கவும்

अग्न्यङ्गुलोच्चमानेन पृष्ठे पादं प्रकल्पयेत् ।
पात्रं नीरजनायेदं महाघण्टाविधिं श्रृणु ॥ २७८ ॥

*அக்ந்யங்குலோச்ச மாநேந ப்ருஷ்டே பாதம் ப்ரகல்பயேத்!*
*பாத்ரம் நீராஜநாயேதம் மஹா கண்டா விதிம் ச்ருணு!!*

3 அங்குல உயரமான நீராஜந பாதத்திற்கு பாத்ரம் அமைக்கவும். இவ்வாறு நீராஜந பாத்ரம் லக்ஷணம் கூறப்பட்டு பெரிய மணியின் லக்ஷணம் கூறப்படுகிறது.

शुद्धकांस्येन कर्तव्यं विस्तारं पर्वताङ्गुलम् ।
सुषिरेण समायुक्तं चतुर्वर्णसमायुतम् ॥ २७९ ॥

*சுத்த காம்ஸ்யேந கர்த்தவ்யம் விஸ்தாரம் பர்வதாங்குலம்!*
*ஸுஷிரேண ஸமாயுக்தம் சதுர்வர்ண ஸமாயுதம்!!*

சுத்தமான வெண்கலத்தினால் 7 அங்குல விஸ்தாரமும், ஓட்டையுடன் கூடியதாயும், நான்கு வர்ணத்துடன் கூடியதாயும்

तारार्धवर्धनं ताहं मिह्वारन्ध्राङ्गुलायतम् ।
शिखरं वलयोपेतं शेषं युक्त्या प्रकल्पयेत् ॥ २८० ॥

*தாரார்த்தம் வர்த்தநந்நாஹம் ஜிஹ்வாரந்த்ராங்குலாயதம்!*
*சிகரம் வலயோ பேதம் சேஷம் யுக்த்யா ப்ரகல்பயேத்!!*

10½ அங்குலம் நீளமானதும், நாக்கு 9 அங்குல நீளமும், மணியின் மேல் பாகம் வலயத்தினுடன் கூடியதாயும் அமைத்து மீதத்தை புத்தியால் அமைக்கவும்

महाघण्टाविधिः प्रोक्ता दर्पणस्य विधिं श्रृणु ।
त्रिद्व्याङ्गुलप्रविस्तारं पूर्णचन्द्राकृतिर्भवेत् ॥ २८१ ॥

*மஹா கண்டா விதி ப்ரோக்தம் தர்பணஸ்ய விதிம் ச்ருணு!*
*த்ரி த்வயங்குலம் ப்ரவிஸ்தாரம் பூர்ண சந்த்ரா க்ருதிர் பவேத்!!*

இவ்வாறு மஹா கண்டா விதி கூறப்பட்டு கண்ணாடியின் லக்ஷணம் கூறப்படுகிறது. 3, 2 அங்குல விஸ்தாரமாகவும் முழுச்சந்த்ரன் போல் அழகானதும் அதன் தண்டு பாகம்

नालं वस्वङ्गुलं ज्ञेयं पादं वेदाङ्गुलं भवेत् ।
नानापट्टिकसंयुक्तं शुद्धकांस्येन कारयेत् ॥ २८२ ॥

*நாளம் வஸ்வங்குலம் ஜ்ஞேயம் பாதம் வேதாங்குலம் பவேத்!*
*நாநா பட்டிக ஸம்யுக்தம் சுத்தகாம் ஸ்யேநகாரயேத்!!*

7 அங்குலமாயும், பாதம் 4 அங்குலமும் ஆகும். பலவிதமாக பட்டி அமைப்புடன் சுத்தமான வெண்கலத்தில் செய்ய வேண்டும்.

एतद् विस्तारमुदितं विस्तारार्धेन वर्धयेत् ।
उत्तमं दर्पणस्यैवमर्धपञ्चाङ्गुलान्तकम् ॥ २८३ ॥

*ஏத த்விஸ்தார முதிதம் விஸ்தாரார்த்தேந வர்த்தயேத்!*
*உத்தமம் தர்பணஸ்யைவ மத: பஞ்சாங்குலாந்தகம்!!*

இவ்வாறு விஸ்தாரம் கூறப்பட்டு விஸ்தாரத்தின் ½ பாகத்தால் கூட்டி செய்வது உத்தம தர்பணத்தின் அளவாகும். 5 ½ அங்குலம் வரை

नवमानं प्रकर्तव्यमुत्तमादित्रयं त्रयम् ।
दर्पणस्य विधिः प्रोक्ता विश्वामित्र महामुने ॥ २८४ ॥

*நவமாநம் ப்ரகர்த்தவ்யம் உத்தமாதி த்ரயம் த்ரயம்!*
*தர்பணஸ்ய விதி ப்ரோக்தம் விச்வாமித்ர*
*மஹாமுநே ।।*

9 வித அளவாக உத்தமத்ரயம், மத்யமத்ரயம், அதமத்ரயமாக தர்பணத்தின் அளவறிந்து கல்பிக்கவும். இவ்வாறு தர்பணத்தின் முறை கூறப்பட்டுள்ளது

इति श्रीकुमारतन्त्रे करणलक्षणविधिर्नाम
पञ्चत्रिंशः पटलः

இதி ஸ்ரீ குமார தந்த்ரே கௌசிக ப்ரச்னே
கரணலக்ஷண விதி: பஞ்ச த்ரிம்சத் படல:-

இவ்வாறு ஸ்ரீ குமார தந்த்ரத்தில் கௌசிக
ப்ரச்னத்தில்
கரண லக்ஷண விதி என்னும்
35-வது படலமாகும்.



2. பூர்ண கும்டம்



4. இரட்டை சாமரம்



6. ஸ்வஸ்திகம்

## ॥ षट्त्रिंशः पटलः ॥

ஷட் த்ரிம்ச: படல:

36 வது படலம்

पादुकाप्रोक्षणविधिः

பாதுகாப்ரோக்ஷண விதி:

திருவடிப்புனித நீராட்டு முறை சுருக்கம்

पादुकाप्रोक्षणं वक्ष्ये श्रृणु कौशिक सुव्रत ।
अनुग्रहाय मर्त्यानां पापनाशार्थमेव च ॥ १ ॥

*பாதுகா ப்ரோக்ஷணம் வக்ஷ்யே ஸ்ருணு கௌசிக ஸுவ்ருத!*
*அநுக்ரஹாய மர்த்யானாம் பாப நாசார்த்த மேவச!!*

சீலம் மிகு கௌசிக முனிவரே கேளுங்கள்! திருவடிப்புனித நன்னீராட்டு முறையை கூறுகிறேன். மனிதர்களுக்கு அருளுவதற்காகவும் அவர்களின் பாபங்களான தீ வினைகள் நீங்குவதற்காகவும்

भजनोत्सवयात्रायां पूनार्थ प्रवक्ष्यते ।
ध्रुवं च स्नपनं चैव बलिबेरञ्च कौतुकम् ॥ २ ॥

*பஜனோத்ஸேத யாத்ராயாம் பூஜநார்த்தம் ப்ரவக்ஷ்யதே!*
*த்ருவஞ்ச ஸ்நபனஞ்சைவ பலிபேரஞ்ச கௌதுகம்!!*

முருகனின் நாமங்களை மனமுருகிச் சொல்லும் பஜனை யாத்திரை சமயத்தில் பூஜிக்கவும். பாதுகை வடிவில் (திருவடிச்சேவை) அசையாதது - அசைவது அபிஷேகம் செய்ய ஏற்றது என்ற வடிவத்தில் சொல்லப்பட்டது.

उत्सवं यानबेरञ्च चलबेरञ्च पञ्चधा ।
एतेषां पादमानेषु यदिष्टं तत्प्रगृह्यताम् ॥ ३ ॥

*உத்ஸவம்யாந பேரஞ்ச சல பேரஞ்ச பஞ்சதா!*
*யேதேஷாம் பாதமாநேஷு யதிஷ்டம் தத்ப்ரக்ருஹ்யதாம்!!*

உற்சவமூர்த்தி இடம்விட்டு இடம் மாற்றத்தக்க மூர்த்தி என ஐந்து வடிவங்கள் சொல்லப்பட்டுள்ளன. இவைகளுள் ஏதேனும் ஒன்றின் பாத அளவில் எது விருப்பமோ அது எடுத்துக் கொள்ளப்படலாம்.

त्रिमात्राद्यर्धवृद्ध्या तु सप्तांगुलसमावधि ।
नवमानमिदं प्रोक्तं कन्यसादित्रयं त्रयम् ॥ ४ ॥

*த்ரிமாத்ராத்யர்த்த வ்ருத்யாது சப்தாங்குல ஸமாவதி!*
*நவமாநமிதம் ப்ரோக்தம் கன்யசாதித்ரயம் த்ரயம்!!*

மூன்றரை அங்குலம் முதல் ஏழு அங்குலம் வரை சிறப்பு இதற்கு நவமானம் என்று பெயர் மூன்று அங்குலம் அதமக் கூறாகும்.

आयामस्यार्धमुदितं पातुकाग्रस्य विस्तरम् ।
षडष्टांशेन मध्यान्तमायामं युगभागकैः ॥ ५ ॥

*ஆயாமஸ்யார்த்த முதிதம் பாதுகாக்ரஸ்ய விஸ்த்ரம்!*
*ஷடஷ்டாம்சே நமத்யாந்த மாயாமம் யுக பாககை!!*

திருப்பாதத்தின் நுனி வரை வியாபித்துள்ள நீளமானது மொத்த நீளத்தில் பாதியாக அமையலாம். நீளமானது நான்கு பாகங்களாக்கப்பட்டு 6 அல்லது 8 நடுப்பகுதி வரை ஒரே சம அளவாக அமைய வேண்டும்.

एकभागं भवेदष्टगुणांशे द्व्यंशकं घनम् ।
शेषमूर्ध्वदलं प्रोक्तं युक्त्यैव परिकल्पयेत् ॥ ६ ॥

*ஏகபாகம் பவேதஷ்ட குணாம்சே த்வ்யம்சகங்கநம்!*
*சேஷமூர்த்வ தளம் ப்ரோக்தம் யுக்த்யைவ பரிகல்ப்பயேத்!!*

ஒரு பகுதி எட்டு பாகம் இருப்பின் அது போல் 2 பகுதி தடிப்பு இருக்க வேண்டும். (கனம்)

மீதம் மேல் பகுதியாகவும் கவனமாக யுக்தியோடு தீர்மானித்து செய்ய வேண்டும்.

अंगुष्ठोच्चतलोत्यस्य चतुर्भागं त्रिभागकम् ।
चतुरंशे युगांशं तु नालशेषं तु पूर्ववत् ॥ ७ ॥

*அங்குஷ்டோச்சத லோச்சஸ்ய சதுர்பாகம் த்ரிபாககம் /*
*சதுரம்சே யுகாம்ஸந்து நாள சேஷந்து பூர்வவத் //*

பாத கட்டை விரலு (பெருவிரல்) டையதில் நாலில் மூன்று பாகம் அமைய வேண்டும். அப்படியே காலின் மேற்பகுதி அமைப்பும் முன்போல் 4 க்கு 4 ஆக அமைக்க வேண்டும்.

अंगुष्ठेच्चसमं पुष्पं विस्तारं मुकुलान्वितम् ।
पुष्पोन्नते त्रिभागैकं मुकुलङ्कारयेद् द्विज ॥ ८ ॥

*அங்குஷ்டோச்சமம் புஷ்பம் விஸ்தாரம் முகுளாந்விதம் /*
*புஷ்போன்னதே த்ரிபாகைகம் முகுளம் கார்யேத்விஜ //*

பெருவிரலின் அமைப்பு (திருவடிக்கு சமமாகவும்) அகலம் அரும்பு போலும் அமைய வேண்டும். திருவடி மேட்டின் மூன்றில் ஒன்றாக முகுளமெனும் விரல்கள் அரும்பு போல அமைய வேண்டும்.

उत्तमं काञ्चनेनैव मध्यमं रजतेन तु ।
तामेणैवाधमं प्रोक्तं कांसाग्रेनाधमाधमम् ॥ ९ ॥

*உத்தமம் காஞ்சநே நைவ மத்யமம் ரஜதே நது /*
*தாம்ரேனணவாதமம் ப்ரோக்தம் காம்சாத்யே நாதமாதமம் //*

தங்கம் உயர்தரமாகவும் வெள்ளி நடுத்தரமாகவும் அதற்கடுத்ததாக (செம்பு) தாமிரமும் வெண்கலம் கலந்து பித்தளை (த்ரா) கீழ்த்தரமாகவும் கருதப்படுகிறது.

पादुकाश्च यथाशोभं तथा युक्त्या प्रकल्पयेत् ।
एवं लक्षणमाख्यातं प्रोक्षणञ्च ततः श्रृणु ॥ १० ॥

*பாதுகாச்ச யதாசோபம் ததாயுக்த்யா ப்ரகல்பயேத் /*
*ஏவம் லக்ஷண மாக்யாதம் ப்ரோக்ஷணஞ்ச ததச்ருணு //*

பாதுகைகள் எதில் செய்தால் சிறப்பாக அம்சமாக அழகாக அமையுமோ அப்படி (பஞ்சலோகத்தினாலும்) செய்யலாம். இவ்வாறு பாதுகையின் இலக்கணம் கூறப்பட்டுள்ளது. மேல் அதற்கு கும்பாபிஷேகம் பற்றிக் கேள் கூறுகிறேன்.

पुण्यर्क्षतिथिवारे च मण्डपस्यैव मध्यमे ।
पुण्याहं वाचयेत्तत्र प्रोक्षयित्वास्त्रमन्त्रतः ॥ ११ ॥

*புண்யர்க்ஷ திதிவாரேச மண்டப ஸ்யைவ மத்யமே /*
*புண்யாஹம் வாசயேது தத்ர ப்ரோக்ஷயித்வாஸ்த்ர மந்த்ரத: //*

நல்ல நக்ஷத்திரம் திதி கிழமையில் மண்டபத்தின் நடுவே நல்ல நாள சொல்லுவித்தல் எனும் புவியை புனிதமாக்கும் மேற்திசை அதிபன் வருணனை பூசித்து அந்நீரால் அஸ்திரமந்திரத்தால் நீர் மேலெழுந்து வரும்படி செய்து புனிதமாக்குக.

स्थण्डिलं कल्पयेद्विद्वान् तिलतण्डुलशालिभिः ।
नववस्त्रमथास्तीर्य पादुकां पञ्चगव्यकैः ॥ १२ ॥

*ஸ்தண்டிலம் கல்பயேத்வித்வாந் தில தண்டுல சாலிபி: /*
*நவ வஸ்த்ர மதாஸ்தீர்ய பாதுகாம் பஞ்ச கவ்யகை: //*

சிறுமேடையை நிறுவி அறிவு மிகு ஆசான் நெல் அரிசி எள்ளை பரப்பி புதிய துணியை விரித்து பஞ்சகவ்யம் முதலியவைகளால் தூய்மை படுத்திய திருமுருகனின் திருப்பாதுகையை வைக்க வேண்டும்.

क्षालयित्वाष्टमृद्भिस्तु शुद्धोदैः स्कन्दमन्त्रतः ।
परिस्तीर्य तया दर्भैर्हृदयेन तु मन्त्रतः ॥ १३ ॥

*க்ஷாளயித்வாஷ்ட ம்ருத்பிஸ்து சுத்தோதைஸ்கந்த மந்த்ரத:!*
*பரிஸ்தீர்ய ததா தர்பைர் ஹ்ருதயேநது மந்த்ரத:!!*

எண்வகை மண்ணிட்ட புனித தூய நீரால் முருக மந்திரத்தால் புனிதப்பட்டு விட்ட பின் இருதய மந்திரத்தால் தர்பைகளை விரித்து (பரப்பி)

वस्त्रोपरिन्यसेद्धीमान् पादुकां वर्ममन्त्रतः ।
नववस्त्रेण संछाद्य पादुकाग्रे यथाविधि ॥ १४ ॥

*வஸ்த்ரோ பரிந்யஸேத்தீமாந் பாதுகாம் வர்ம மந்த்ரத:!*
*நவ வஸ்த்ரேண ஸந்ச்சாத்ய பாதுகாக்ரே யதா விதி!!*

அதன் மேல் புது துணி விரித்து கவச மந்திரத்தால் புது வஸ்திரத்தை (துணியை) பாதுகைக்கு மூடி திருப்பாதங்கள் மட்டும் தெரியும்படி முறைப்படி செய்க.

मयूरकुम्भं संस्थाप्य परितोऽष्टघटान्नयसेत् ।
ससूत्रान् सापिधानांश्च सवस्त्रान् वारिपूरितान् ॥ १५ ॥

*மயூர கும்பம் ஸம்ஸ்தாப்ய பரிதோஷ்ட கடாந்நயஸேத்!*
*ஸஸூத்ராநு ஸாபிதானாம்ச்ச ஸவஸ்த்ராந்வாரி பூரிதாநு!!*

மயிலுக்காக ஒரு கும்பம் நிறுத்தி அதைச் சுற்றி எட்டு நிறை கும்பங்களை அதற்குரிய இலக்கணங்களான நூல் சுற்றல் மாவிலைக் கொத்துக்களால் மூடி (தேங்காய் கூர்ச்சம்)

सकूर्चान् सहिरण्यांश्च कल्पयेत्कल्पवित्तमः ।
मयूरबीजमावाह्य मध्यकुम्भे समर्पयेत् ॥ १६ ॥

*ஸகூர்சான் ஸஹிரன்யாம்ச்ச கல்பயேத் கல்பவித்தம:!*
*மயூர பீஜ மாவாஹ்ய மத்ய கும்பே ஸமர்ச்சயேத்!!*

கூர்ச்சத்தோடும் பொற்காசுகளோடும் அறிந்தவர்கள் அறிந்த வண்ணம் செயல்பட்டு மயில் மஹாமந்திரத்தால் ஆவாஹனம் (நிலை பெறுதலைச் செய்து) மத்தியில் குடும்பத்தில் அர்ச்சிக்க வேண்டும்.

इन्द्रादिलोकपालांश्च पूर्वाद्यष्टघटं यजेत् ।
धेनुमुद्रां प्रदर्श्याथ तत्पृष्ठे सिकतैः कृतैः ॥ १७ ॥

*இந்த்ராதி லோக பாலாம்ச்ச பூர்வாத்யஷ்ட கடே யஜேத்!*
*தேனுமுத்ராம் ப்ரத்ருச்யாத தத்ப்ருஷ்டே ஸிகதை: க்ருதை:!!*

இந்திரன் முதலான எண்திசைத் தேவர்களையும் எட்டு கும்பத்திலும் பூஜித்து பசுமடிபோல் கையினால் விரித்து காட்டிப் பின்புறம் மணல்களால் செய்த தரையில்

स्थण्डिलं विधिवत्कृत्वा होमद्रव्याणि गृह्य च ।
अग्न्याधानादिकं सर्वमग्निकार्योक्तमाचरेत् ॥ १८ ॥

*ஸ்தண்டிலம் விதிவத் க்ருத்வா ஹோமத்ரவ்யாணி க்ருஹ்யச!*
*அக்ந்யாதாநாதிகம் சர்வமக்னி கார்யோக்த மாசரேத்!!*

முறைப்படி (ஹோம) வேள்விப் பொருள்களைச் சேகரித்து முத்தீ ஓம்பும் முறைப்படி வேள்வி வேட்டுவித்து (ஹோமம்) செய்ய வேண்டும்.

समिदाज्यचरून् लाजान् तिलान्सद्यादिमन्त्रतः ।
होमयेत्तु विशेषेण प्रत्येकं पञ्चविंशतिः ॥ १९ ॥

*ஸமிதாஜ்ய சருந்லாஜாந் திலாந் சத்யாதி மந்த்ரத:!!*
*ஹோமயேத்து விசேஷேண ப்ரத்யேகம் பஞ்சவிம்சதி:!!*

சமித்து வகைகள் நெய் ஹவிஸ் (வடிக்காமல் பக்குவம் செய்த கஞ்சியோடு கூடிய புதுத்தனிச் சோறு) நெய் தேன் மட்டும் கலந்தது)

நெற்பொறி, எள், ஸத்யோ ஜாதம் முதல் ஈசானம் வரைதனித்தனியே இருபத்தைந்து ஆஹுதிகள் செய்க.

मयूरमूलमन्त्रेण घृतेनाष्टोत्तरं शतम् ।
सर्वद्रव्यसमायुक्तं हव्यवाहे च होमयेत् ॥ २० ॥

*மயூர மூல மந்த்ரேண க்ருதே நாஷ்டோத்தரம் சதம்!*
*ஸர்வத்ரவ்ய ஸமாயுக்தம் ஹவ்யவாஹேச*
*ஹோமயேத்!!*

மயிலின் மந்திரத்தால் நெய்யினால் நூற்றெட்டு ஆவர்த்தி செய்து எல்லா வித திரவ்யங்களையும் முறைப்படி ஹோமம் செய்துவிட்டு அக்னி பகவானுக்கும் இறுதியில் முறைப்படி ஹோமம் செய்க.

प्रभाते सुमुहूर्ते तु कुम्भान्यभ्यर्च्य मन्त्रवित् ।
जयादिरभ्याधानञ्च राष्ट्रभृच्च क्रमाद्धुनेत् ॥ २१ ॥

*ப்ரபாதே ஸுமுஹூர்தேது கும்பாநப்யார்ச்ய*
*மந்த்ரவிது!*
*ஜயாதிரப்யாதாநஞ்ச ராஷ்ட்ரப்ருச்ச*
*க்ரமாத்துநேத்!!!*

மறுநாள் காலை இரண்டாம் காலம் பூஜைகளை மந்திரங்களோடு செய்துவிட்டு ஹோம முடிவில் ஜயாதி ஹோமம் ராஷ்ட்ரப்ருது என்ற மந்திரங்களால் முறைப்படி ஹோமம் செய்க.

आचार्यं पूजयेत्कर्ता वस्त्रभूषणकाञ्चनैः ।
मयूरबीजमन्त्रेण कुम्भान्तात् पादुकाद्वये ॥ २२ ॥

*ஆசார்யம் பூஜயேத் கர்த்தா வஸ்த்ர பூஷண*
*காஞ்சநை:!*
*மயூரபீஜ மந்த்ரேண கும்பாந்தாது பாதுகாத்வயே!!*

ஆசாரியரை யஜமானரானவர் உயர்ந்த (வஸ்த்ரங்கள்) ஆடை அணிகலன்களால் சந்தோஷப்படும்படி பூசித்து மயில் மூல மந்திரத்தால் பாதுகையில் கும்பத்தில் உள்ள நீரால் அபிஷேகம் செய்ய வேண்டும்.

न्यसेदिन्द्रादिबीजानि तयोः पूर्वादिषु न्यसेत् ।
तत्तत्कुम्भस्थतोयेन तत्तद्देशेऽभिषेचयेत् ॥ २३ ॥

*ந்யஸேதிந்த்ராதி பீஜாநி தயோ: பூர்வாதிஷு*
*ந்யஸேத்!*
*தத்தத்கும்பஸ்த தோயேந*
*தத்தத்தேசேபிஷேசயேத்!!*

அத்திருப்பாதங்களின் சுற்றிலும் இந்திரன் முதலான திசை மன்னர்களின் மூலமந்திர எழுத்துக்களோடு நினைத்து துதித்து அந்தந்த கலச நீரால் அந்தந்த இடங்களில் அபிஷேகம் செய்ய வேண்டும்.

मयूरमन्त्रादभ्यर्च्य मुद्गान्तं दापयेत्सुधीः ।
एवं यः कुरुते मर्त्यः सर्वान्कामानवाप्नुयात् ॥ २४ ॥

*மயூர மந்த்ராதப்யார்ச்ய முத்காந்நம்தாபயேது சுதீ:!!*
*ஏவம் ய: குருதே மர்த்ய ஸ்ஸர்வாந்*
*காமாநவாப்நுயாத்!!*

ஆகமக்குள் மயில் மூலமந்த்ரம் வேதமந்த்ரம் இவைகளால் அர்ச்சித்து பாசிப்பயிறு கலந்த வெண்பொங்கல் நிவேதனம் செய்ய வேண்டும். இவ்வாறு எவர் செய்கிறாரோ அவர் எல்லா விருப்பங்களும் இனியே எய்துவர்

इति श्रीकुमारतन्त्रे पादुकाप्रोक्षणविधिर्नाम
षट्त्रिंशः पटलः ॥

இதி ஸ்ரீ குமாரதந்த்ரே கௌசிக ப்ரச்னே பாதுகா ப்ரோக்ஷண விதி : நாம ஷட்த்ரிம் சத் படல:

இவ்வாறு ஸ்ரீ குமாரதந்த்ரத்தில் கௌசிக ப்ரசனத்தில் பாதுகா ப்ரோக்ஷண விதி (திருவடிப்புனித நீராட்டு முறை சுருக்கம்) என்னும் 36 வது படலமாகும்.

# ।।सप्तत्रिंश: पटल: ।।

### ஸப்தத்ரிம்ச: படல:

### 37 வது படலம்

### आत्मार्थयजनविधि:

### ஆத்மார்த்த யஜந விதி படல:

### ஆத்மார்த்த வழிபாட்டு முறை

आत्मार्थयजनं वक्ष्ये श्रृणुष्व मुनिपुङ्गव ।
ये ये ग्रहा: समुच्चानि तेषामिष्टप्रदं शुभम् ॥ १ ॥

*ஆத்மார்த்த யஜநம் வக்ஷ்யே ஸ்ருணுஷ்வ முநி புங்கவ!*
*யேயே க்ரஹா: ஸமுச்சாணி தேஷாமிஷ்ட ப்ரதம் சுபம்!!*

ஆன்மார்த்த வழி பாட்டு முறையை கூறுகிறேன் முனிவரே கேட்பீராக! எந்தெந்த கிரகங்கள் ஜாதகத்தில் உச்ச பலம் பெற்றிருக்கின்றனவோ அவர்களின் விருப்பப்படி அவர்கள் ஜாதகருக்கு நலம் பயக்கும் சுபம் மிகு பலன்களையே அளிப்பார்கள்

धर्मार्थकाममोक्षार्थमात्मार्थयजनं स्मृतम् ।
स्कन्दपूजां विना पुंसां पुत्रवृद्धि: कथं भवेत् ॥ २ ॥

*தர்மார்த்த காம மோக்ஷார்த்த மாத்மார்த்த ஜயநம் ஸ்ம்ருதம்!*
*ஸ்கந்த பூஜாம் விநா பும்ஸாம் புத்ர வ்ருத்தி: கதம் பவேத் !!*

அறம், பொருள், இன்பம், வீடு எனும் நால்வகை மனிதர்கள் அடைய வேண்டிய நற்பயன்களையும் தரக் கூடியது ஆன்மார்த்த வழிபாடு என்று கருதப்படுகிறது (கூறப்படுகிறது). முருகப் பெருமான் வழிபாடு செய்யாத மனிதர்கள் (வம்ச விருத்தி புத்ர) சந்தான பாக்யத்தை எவ்வாற்றானும் அடைய முடியாது. (புத்ர விருத்தி) பிறந்த குழந்தை அறிவு, ஆற்றல், உடல் வளர்ச்சி, உள்ள வளர்ச்சி, மெய்ஞான விஞ்ஞான வளர்ச்சி அடைய முடியாது.

प्रतिमां तु पटे वाऽपि मण्डलं स्थण्डिलेऽपि वा ।
जले वा हृदये वाऽपि नित्यं संपूजयेद्गुहम् ॥ ३ ॥

*ப்ரதிமாந்து படே வாபி மண்டலே ஸ்தண்டிலே பிவா!*
*ஜலே வா ஹ்ருதயே வாபி நித்யம் ஸம்பூஜயேத் குஹம் !!*

முருகப் பெருமானின் விக்ரஹம், படம், யந்திரம், வேள்வி வழிபாட்டிற்குரிய இடமாகிய ஸ்தண்டிலம் அல்லது குடும்பத்திலோ இதயத் தாமரையிலோ தினந்தோறும் பூஜிக்க வேண்டும்.

एकांगुलादिभूतान्तमात्मार्थमिति कीर्तितम् ।
मात्रांगुलेन कर्तव्यं यजमानं चरस्य तु ॥ ४ ॥

*ஏகாங்குலாதி பூதாந்த மாத்மார்த்த மிதி கீர்த்திதம்!*
*மாத்ராங்குலேந கர்தவ்யம் யஜமாநம் சரஸ்யது!*

ஒரு அங்குலம் முதல் ஐந்து அங்குலம் வரை தேவாங்குல விகிதத்தில் ஆன்மார்த்த பூஜைக்கு ஸ்ரீ முருகன் விக்ரகம் செய்யத் தகுந்தது. பூசிப்பவர் விருப்பப்படி சல மூர்த்தியாக (ஸ்திரமாக பிரதிஷ்டை செய்யாமல்) எங்கும் மாற்றியமைக்கும் படி இருப்பது நலம்.

आयादिशुभवर्गाणि यदेर्वाथ परीक्षयेत्।
उत्तमं काञ्चनेनैव मध्यमं रजतेन तु ॥ ५ ॥

*ஆயாதி சுப வர்காணி யவைர்வாத பரீக்ஷயேத!*
*உத்தமம் காஞ்சனே நைவ மத்யமம் ரஜதேநத் !!*

ஸ்ரீ முருகப் பெருமானின் விக்ரஹ அளவானது அதன் வரிசைகளாவது யவை நெல் அளவு கூட மிஞ்சாமலும், குறைவு படாமலும் இருக்கிறதா என்று சோதிக்க வேண்டும்.

தங்கத்தால் முருகப் பெருமான் உருவம் அமைப்பது உயர்தரம் என்றும் வெள்ளியால் அமைப்பது நடுத்தரம் என்றும்

शिलाया वाऽथ ताम्रेण कन्यसं परिकीर्तितम् ।
मृन्मयं दारुजं चैव न ग्राह्यन्तु गृहार्चने ॥ ६ ॥

*சிலாயாவாத தாம்ரேண கன்ய ஸம்பரி கீர்த்திதம்!*
*ம்ருண்மயந்தாருஜம் சைவ நக்ராஹ்யந்து*
*க்ருஹார்ச்சநே!!*

பச்சைக் கருங்கல் (ஆண்கல்) அல்லது தாமிர உலோகத்தால் அமைப்பது 3ம் தரமாகவும் கருதப்படுகிறது (கூறப்படுகிறது) மண்ணாலும், மரத்தாலும் அமைக்கப்பட்ட ஸ்ரீ முருகப் பெருமானின் உருவ வழிபாடானது வீட்டுப் பூஜைக்கு ஆத்மார்த்த பூஜைக்கு ஏற்றதல்ல

आसनं स्थानकं वाऽपि वाहनादिकमेव च ।
प्रतिमालक्षणोक्तेन मार्गेणैव प्रकल्पयेत् ॥ ७ ॥

*ஆசநம் ஸ்தாநகம் வாபீ வாஹநாதிக மேவச!*
*ப்ரதிமா லக்ஷணோக்தேந மார்கேணைவ*
*ப்ரகல்பயேத்!!*

ஸ்ரீ முருகப் பெருமான் உருவ இருப்பிடம் அவரது வாகனமான மயில் வெள்ளையானை போன்றவைகளும் உருவ அமைப்பு இலக்கணத்துக்கு சற்று கூட மிகாமலும் குறையாமலும் செய்ய வேண்டியது அவசியம் என வலியுறுத்தப்படுகிறது

शिल्पिहस्तात्समादाय सम्यग्बिम्बं परीक्षयेत् ।
समदृष्टिप्रसन्नास्यं स्वस्वरूपं शुभावहम् ॥ ८ ॥

*சில்பீ ஹஸ்தாத் ஸமாதாய சம்யக் பிம்பம்*
*பரீக்ஷயேத்!*
*சமத்ருஷ்டி ப்ரசந்நாஸ்யம் ஸ்வஸ்வ ரூபம்*
*சுபாவஹம்!!*

சிற்பியின் கையிலிருந்து சிலை வடிவில் உள்ள ஸ்ரீ முருகப் பெருமானின் பிம்பத்தை (விக்ரகத்தை) முன்பு கூறப்பட்ட படி உலோகம் உருவ அமைப்பு அளவுகள் நன்கு பரிசோதிக்கப்பட வேண்டும். முருகனின் முகப்பார்வை மேல்கீழ் பக்கவாட்டில் இல்லாமல் சமநோக்காக இருக்கிறதா என்று பார்க்க நலம் பெருகும்

ऊर्ध्वदृष्टिमधोदृष्टिं तिर्यग्दृष्टिं विवर्जयेत् ।
ऊर्ध्वदृष्टिः प्रजानाशमधोदृष्टिर्धनक्षयम् ॥ ९ ॥

*ஊர்த்வ த்ருஷ்டி மதோ த்ருஷ்டிம் திர்யக் த்ருஷ்டிம்*
*விவர்ஜயேத்!*
*ஊர்த்வ த்ருஷ்டி ப்ரஜாநாச மதோத்ருஷ்டி தன*
*க்ஷயம்!!*

மேல் நோக்குப் பார்வை கீழ் நோக்குப் பார்வை, பக்கப் பார்வையிருப்பின் அதை நீக்கி விட வேண்டுமென்றும் மேல்நோக்கும் பார்வை குடும்ப வம்சத்தை வாரிசுகளை பாதிக்கும் என்றும் கீழ்நோக்குப் பார்வை செல்வச் சீர் குலைவை உண்டு பண்ணுமென்றும்

तिर्यग्दृष्टिर्यशोनाशां तस्मात् ग्राह्यं समेक्षणम् ।
अप्रतिष्ठितबेरस्य पूजनं सर्वदोषकृत् ॥ १० ॥

*திர்யக் த்ருஷ்டி யசோ நாசம் தஸ்மாத் ப்ராஹ்யம்*
*சமேக்ஷணம்!*
*அப்ரதிஷ்டித பேரஸ்ய பூஜநம் சர்வ தோஷக்ருது!!*

பக்கப் பார்வை புகழ் அழிவையும் எனவே சமநோக்கே நன்றென்றும் நன்கு பிரதிஷ்டாபனம் (கும்பாபிஷேகம்) செய்யப்படாத விக்ரஹத்தை பூஜிப்பது எல்லா தோஷங்களையும் உண்டு பண்ணும் என்றும் (கூறப்படுகிறது)

बिम्बं मन्त्रमयं कृत्वा तस्मिन्देवं प्रपूजयेत् ।
स्नपनं शान्तिके यस्य अग्रे मतम् ॥ ११ ॥

*பிம்ப மந்த்ர மயம் க்ருத்வா தஸ்மின்தேவம்*
*ப்ரபூஜயேத்!*
*ஸ்நாபநம் சாந்திகே யஸ்ய அக்ரே (துவாஹ நனம்)*
*மதம்!!*

சிற்பியால் செய்யப்பட்ட சிற்பமாக சிலையாக உருவமாக உள்ள விக்ரஹம் மந்திரங்களால் புனிதப்பட்டு மந்திரங்கள் வடிவமாக ஸ்ரீ முருகப் பெருமானின் முழு சைதன்ய ஜீவப்ரகாசத்தை ப்ரகாசிக்கச் செய்யும் ஸ்தாபன பிரதிஷ்டா கும்பாபிஷேகத்தை முன்னே வாகனமான மயிலுடன் செய்வது நலம் எனக் கூறப்படுகிறது

उत्तरायणकाले तु शुक्लपक्षे विशेषत: ।
पुण्यर्क्षतिथिवारेषु पुण्यलग्ने सुशोभने ॥ १२ ॥

*உத்தராயண காலேது க்ருஷ்ண பக்ஷே விசேஷத:!*
*புண்யர்க்ஷ திதி வாரேஷு புண்ய லக்னே*
*சுசோபனே !!*

உத்திராயண காலமென கருதப்படும் (தை மாதம் 1 முதல் ஆனி 32) காலத்திலே நலம் பயக்க (விசாகம் நக்ஷத்திரத்திலோ அல்லது அதற்கு அனுகூலமான விண்மீனிலோ) ஷஷ்டி முதலான நற்திதியிலோ ரிஷபம், சிம்மம், மிதுனம், கன்னி, தனுசு, மீனமிறான சுப லக்னங்களில் செய்விப்பது நலம் மிகு நல்கும் எனக் கூறப்படுகிறது.

प्राप्तये सर्वकामानां प्रतिष्ठोत्सव'मुच्यते ।
प्रतिष्ठादिवसात्पूर्वं पञ्चमे सप्तमेऽपि वा ॥ १३ ॥

*ப்ராப்தயே சர்வ காமானாம் ப்ரதிஷ்டோத்ஸவ*
*முச்யதே !*
*ப்ரதிஷ்டாதி வசாத் பூர்வம் பஞ்சமே ஸப்தமேபிவா !!*

எல்லா இனிய நன்னலங்களும் ஸ்ரீ முருகப் பெருமான் ஸ்தாபனம் செய்யும் எனக் கூறப்படுவதால் அதை முன்னிட்டு பிரதிஷ்டை தினத்திற்கு 5 அல்லது ஏழு நாட்களுக்கு முன்பு

स्वसूत्रोक्तप्रकारेण कारयेदङ्कुरार्पणम् ।
प्रतिष्ठादिवसात्पूर्वे सायाह्ने नियत: शुचि: ॥ १४ ॥

*ஸ்வ சூத்ரோக்த ப்ரகாரேண*
*காரயேதங்குரார்ப்பணம் !*
*ப்ரதிஷ்டாதி வசாத் பூர்வே சாயான்னே நியதஸ்*
*சுசி: !!*

பூஜை செய்பவர்களுடைய கோத்திர சூத்திர முறைப்படி (ஆத்மார்த்த பூஜையாக வீட்டில் பிரதிஷ்டை செய்வதால்) அங்குரார்ப்பணம் என்னும் முளைப்பாலிகையிடு தலைமுறையாக முன்னதாக மாலை வேளையின் இறுதி நேரத்தில் பரிசுத்த நிலையில் நின்று செய்ய வேண்டும்.

मन्त्रेण सा प्रकर्तव्या रत्नन्यासविधानत: ।
नयनोन्मीलनं कुर्यात् नेत्रयुग्मयुते दिने ॥ १५ ॥

*மந்த்ரேண சாப்ர கர்தவ்யம் ரத்ன ந்யாஸ விதானத:!*
*நயனோன்மீலனம் குர்யான்நேத்ர யுகம் யுதே*
*தினே !!*

புது சிலைக்குச் செய்யப்பட வேண்டிய பதினெட்டு முன்னோடி சடங்குகளுடன் ஒன்றான கண் திறப்பு எனும் (நயனோன் மீலனம்) என்னும் கிரியையானது இரண்டு கண்களும் பிரகாசமாக இருக்கும் தினத்தில் (நேத்ரம் 2 ஜீவன் 1) (என்ற பஞ்சாங்க குறிப்பு நோக்கி) செய்வது சாலச் சிறந்தது என அறிவிக்கிறது

पञ्चगव्यैश्च मतिमान् पञ्चत्वक्सलिलैरपि ।
अष्टमृत्सलिलैश्चैव क्षालयेत् पवमानत: ॥ १६ ॥

*பஞ்ச கவ்யைச்ச மதிமான் பஞ்ச த்வக் சலிலைரபி!*
*அஷ்ட ம்ருத் சலிலைச்சைவ க்ஷாளயேத்*
*பவமானத: !!*

சிவாகம அனுபவ அனுபூதி அறிவுமிகு ஆதி சைவர் (ஆல், அரசுமா, அத்தி, நாவல்) ஐந்து மரப்பட்டைகள் ஊறிய (நண்டு வளை, புற்று, காளைக் கொம்பு, யானைத் தந்தம், கடல், ஆறு, நல்லை புல், வில்வ மரத்தடி) போன்ற எட்டு வகை மண்ணோடும் கலந்த நீரால் பவமான சூக்தம் -

கோஷசாந்தி - பஞ்ச சாந்தி போன்ற வேத மந்திரங்களோடும் அஸ்த்ர மந்திரங்களோடும் பிம்ப சுத்தியை செய்ய வேண்டும்.

पञ्चब्रह्मषडङ्गैश्च बिम्बशुद्धिं समाचरेत् ।
तीर्थदेशं नयेद्देवं स्वस्तिसूक्तमुदीरयन् ॥ १७ ॥

*பஞ்ச ப்ரம்ம ஷடங்கைச்ச பிம்ப சுத்திம் சமாசரேத் !*
*தீர்த்த தேசன் நயேத்தேவம் ஸ்வஸ்தி சூக்த முதீரயன் !!*

ஸம்ஹிதா மந்திரமெனும் ஐந்து பிரும்ம மந்திரங்களாலும் ஆறு அங்க மந்திரங்களாலும் திருமுருகனின் திருவுருவச் சிலையை புனிதப்படுத்தும் பிம்ப சுத்தி எனும் கிரியை செய்து நலம் பயக்கு நன் மந்திரங்களோடு பிம்பத்தை நீர் நிலையருகே கொண்டு செல்ல வேண்டும்.

लम्बकूर्चं ततो बध्वा वस्त्रयुग्मेन वेष्टयेत् ।
जलाधिवासनं कुर्यात् प्राक्शिरश्चोर्ध्ववक्त्रकम् ॥ १८ ॥

*லம்ப கூர்சம் ததோ பத்வா வஸ்த்ர யுக்மேனவேஷ்டயேத் !*
*ஜலாதி வாஸநங்குர்யாத் ப்ராக் சிரச்சோர்த்வ வக்த்ரகம் !!*

பிம்பத்தின் தலைப்பகுதியில் 36 தர்ப்பங்களால் ஆன கூர்ச்சத்தை அணிவித்து நழுவாதவாறு கட்டி இரண்டு ஆடைகளை அணிவித்து கிழக்கே தலைப்பகுதியை மேல்நோக்கி இருக்குமாறு தண்ணீரில் மூழ்கியிருக்கும் படி ஜலவாசம் செய்ய வேண்டும்.

दारुपीठे जलान्तस्थे स्कन्दगायत्रिमन्त्रत: ।
रक्षायै लोकपालांश्च पूर्वादिक्रमशोऽर्चयेत् ॥ १९ ॥

*தாரு பீடே ஜலாந்தஸ்தே ஸ்கந்த காயத்ரி மந்த்ரத: !*
*ரக்ஷாயை லோக பாலாம்ச்ச பூர்வாதி க்ரமசோர்சயேது !!*

மரத்தினால் செய்யப்பட்ட பீடத்தில் முருகன் சிலையை நிறுத்தி முருகனின் காயத்ரி மந்திரத்தை உருவேற்றி காப்பதற்காக இந்திரன் முதலான எண்திசை காப்பாளர்களை கிழக்கு முதலான திசைகளில் பூஜித்து காப்பை வேண்ட வேண்டும்.

श्रीरुद्रं चमकं चैव पञ्चशान्ति तथैव च ।
स्कन्दसूक्तं चतुर्दिक्षु कुर्यादध्ययनं तथा ॥ २० ॥

*ஸ்ரீ ருத்ர.ம் சமகம் சைவ பஞ்ச சாந்திம் ததைவ ச !*
*ஸ்கந்த சூக்தம் சதுர்திக்ஷு குர்யாதத்யயநம் ததா !!*

நான்கு திசைகளிலும் ஸ்ரீ ருத்ரம், சமகம், சாந்தி பஞ்சகம், ஸ்கந்த சூக்தம் ஆகிய நான்கு மந்திரங்களை அத்யயனம் மந்த்ராவர்த்தி பிறகு செய்யப்பட வேண்டுமென கூறப்படுகிறது.

जलाद्बिम्बं समुद्धृत्य प्रतिष्ठास्थानमाचरेत् ।
पुण्याहं वाचयित्वैव गव्यै: प्रोक्ष्य भुविस्थलम् ॥ २१ ॥

*ஜலாத் பிம்பம் சமுத்ருத்ய ப்ரதிஷ்டாஸ்தானமாசரேத் !*
*புண்யாஹம் வாசயித்வைவ கவ்யை: ப்ரோக்ஷ்ய புவிஸ்தலம் !!*

நீர்நிலை தண்ணீரிலிருந்து பிம்பத்தை நன்கு முறையாக பக்தியோடு வெளிக் கொணர்ந்து பிரதிஷ்டை செய்ய இருக்கின்ற இடத்தில் வைத்து இடப் புனிதத்திற்காக புண்யாக வாசனம் என்ற நல்ல நாளை சொல்லுவிக்கும் சடங்கையும் ஆனிடத்துண்டான ஐந்தான பால், தயிர், நெய், சாணம், நீர்களை கூட்டி ப்பூசித்துத் தெளிக்க

स्थण्डिलं तत्र सङ्कल्प्य तिलतण्डुलशालिभि: ।
पलाशोदुम्बराश्वत्थपत्रैर्दर्भै: परिस्तरेत् ॥ २२ ॥

*ஸ்தண்டிலம் தத்ர சங்கல்ப்ய தில தண்டுல ஸாலிபி: !*
*பலாசோ தும்பராஸ்வத்த பத்ரைர் தர்பை: பரிஸ்தரேத்: !!*

நாற்சதுர வடிவில் சிறிது உயரமான மேடையில் நெல், அரிசி, நவதான்யங்கள், எள் -

நெற்பொறி, ஒன்றன் மேல் ஒன்றிட்டு நாற்புறமும் புரசு இலை அத்தி, அரசு, ஆல் இலைகளாலும் தர்ப்பைகளால் நாற்புறமும் மந்திர வேலி அமைக்க வேண்டும்.

बेरञ्च कौतुकं बध्वा नैवेद्यमपि दापयेत् ।
बिम्बञ्च नववस्त्रेण प्रत्येकं परिवेष्ट्य च ॥ २३ ॥

*பேரஞ்ச கௌதுகம் பத்வா நைவேத்யமபி தாபயேத் !*
*பிம்பஞ்ச நவவஸ்த்ரேண ப்ரத்யேகம் பரிவேஷ்ட்யச !!*

பிம்பத்திற்கு மஞ்சள் மந்திர நூலால் ரக்ஷாபந்தனம் என்னும் காப்பைக்கட்டி நிவேதனம் செய்து பிம்பத்திற்கு புது ஆடையை ஒவ்வொரு சடங்குக்கும் தனித்தனியே அணிவித்துப் பூசிக்க வேண்டும்.

शयने शाययेददेवं प्राक्शिरश्चोर्ध्ववक्त्रकम् ।
देवसेनामहावल्लीं शाययित्वा यथाविधि ॥ २४ ॥

*சயனேசாய யேத்தேவம் ப்ராக் சிரஸ்சோர்த்வ வக்த்ரகம் !*
*தேவசேனா மஹா வள்ளீம் சாயயித்வா யதா விதி !!*

அடுத்து முறைப்படி அமைக்கப்பட்ட சயன ஸ்தானத்தில் ஸ்ரீ முருகப் பெருமான் விக்ரகத்தை கிழக்கே மேல்முகமாக தெற்கே வள்ளி நாயகியையும், வடக்கே தேவசேனா தேவியையும், முறையாக மேல் நோக்கிய முக அமைப்போடு முறையாக படுக்க வைத்து சயனாரோபண சடங்கை துவங்க வேண்டும்.

मातृकां बिन्दुसहितं मूर्धादिक्रमशो न्यसेत् ।
नैर्ऋते वास्तुनाथेभ्यो नमस्कृत्य लिखेद्बुध: ॥ २५ ॥

*மாத்ருகா பிந்து ஸஹிதாம் மூர்த்தாதி க்ரமஸோந்யஸேத் !*
*நைருதே வாஸ்து நாதேப்யோ நமஸ்க்ருத்ய லிகேத் புத: !!*

(அ) அகரம் முதலிய ஐம்பத்தோரு வடமொழி எழுத்து மகாமந்திர ஒலி தரும் எழுத்துக்களை தலை முதல் கால் வரை முறைப்படி நியாஸம் என்னும் கிரியை செய்து தென்மேற்கில் வாஸ்து சாந்தி வேண்டி வாஸ்து நாயகனை பரிவாரங்களோடு பூசிக்க முருகனுக்கு சொல்லப்பட்ட பரமசாயிக வாஸ்து பதம் முறைப்படி வரைக

प्रक्षिप्य विष्टरान् पश्चात्सामान्यार्घ्यं प्रकल्पयेत् ।
द्वाराणि द्वारपालांश्च लोकेशानायुधानि च ॥ २६ ॥

*ப்ரக்ஷிப்ய விஷ்டரான் பஸ்சாத் சாமான்யார்க்யம் ப்ரகல்பயேத் !*
*த்வாராணி த்வாரபாலாம்ச்ச லோகேஸாநாயுதானி ச !!*

யாகாலயத்துக்கு நாற்புறமும் விஷ்டரம் என்று சொல்லக் கூடிய 16 தர்ப்பங்களாலான நுனியின் முடிச்சுடனும் உடலில் தர்ப்பையினால் முறுக்கி சுற்றப்பட்ட தர்ப்பையினாலான விஷ்டரத்தை வைத்து சாமான்யார்க்யம் தயாரித்து வைத்துக் கொண்டு துவாரங்களையும் துவார தேவதைகளையும் திசைத் தெய்வங்களையும் அவர்களின் பத்து திசையதிபர்களின் ஆயுதங்களையும் முறையே பூசித்து பிரார்த்தனை செய்ய ஆயத்தமாகுக

प्रतिष्ठोक्तविधानेन तत्तद्दिक्षु समर्चयेत् ।
वेदिका दक्षिणे भागेऽप्युत्तरामुग्वमास्थित: ॥ २७ ॥

*ப்ரதிஷ்டோக்த விதானேன தத்தத்திக்ஷ சமர்ச்சயேத் !*
*வேதிகா தக்ஷிணே பாகே ப்யுத்தராமுக மாஸ்த்தித: !!*

கும்பாபிஷேக விதி முறைப்படி எல்லா மண்டப தேவதைகளையும் அந்தந்த திசைகளில் பூசித்து ப்ரார்த்தித்து வேதிகையின் தெற்கு பக்கத்தில் வடக்கு முகமாக அமர்ந்து கொண்டு

भूतशुद्धि तत: कुर्यादन्तर्यजनमाचरेत् ।
विशेषार्घ्य प्रकल्प्यात्र सम्भारान् प्रोक्षयेऽस्त्रत: ॥ २८ ॥

*பூத சுத்திம் தத: குர்யா தந்தர்யஜந மாசரேத் !*
*விசேஷார்க்யம் ப்ரகல்ப்யாத்ர சம்பாரான்*
*ப்ரோக்ஷயேஸ்த்ரத: !!*

பௌதீகமான மனித உடலை புனித உடலாக மாற்றி பூசிக்கும் தெய்வ இயல்பை பெற பூத சுத்தி என்னும் சடங்கை முடித்து பூசிக்க இருக்கும் தெய்வ நிலை பெற மகாமந்திர எழுத்துக்கள் அனைத்தையும் அவயவயங்களில் ஏற்றி அகப்பூசை புரிந்து அரிய பெரிய நலமளிக்கும் சிறப்பு பூசையை அதற்குரிய திரவியங்களோடு முறைப்படி செய்து பூசைக்குரிய யாகத்துக்குரிய பொருள்களின் தொகுதியைப் புனிதப்படுத்துக

आम्रपल्लवकूर्चाढ्यं द्रोणोदपरिपूरितम् ।
सापिधानं सरत्नं च सर्वलक्षणसंयुतम् ॥ २९ ॥

*ஆம்ர பல்லவ கூர்சாட்யம் த்ரோணோதபரி பூரிதம் !*
*சாபிதாநம் சரத்நஞ்ச ஸர்வ லக்ஷண சம்யுதம் !!*

இரண்டு மரக்கால் அல்லது எட்டு லிட்டர் கொள்ளளவு பிடிக்கும் தங்கம் முதலான புதுகுடத்தில் மாவிலை, கூர்ச்சம், தேங்காய், நவ ரத்னங்களோடு கூடிய அழகான கும்பாலங்காரம் செய்து

कुम्भं देवशिरोभागे धान्यासने प्रकल्पयेत् ।
वर्धनीद्वितये न्यस्य तस्य दक्षिणवामयो: ॥ ३० ॥

*கும்பம் தேவசிரோபாகே தான்யாஸனே*
*ப்ரகல்பயேத் !*
*வர்த்தனீத் விதயேன்யஸ்ய தஸ்ய தக்ஷிண*
*வாமயோ: !!*

நவதான்யங்களுக்கு மேல் எள், பொறி பரப்பிய குடிலாசத்தின் மேல் கும்பத்துக்கு தலையாகக் கருதப்படும் தேங்காயை வைத்து நடுவில் பெரிய கும்பத்தையும் இரு பக்கங்களிலும். வள்ளிநாயகி தெய்வ நாயகிக்காக ஸ்தாபிக்கவும் (அமைக்கவும்)

परित: कलशानष्टौ स्थापयित्वा यथाविधि ।
सुब्रह्मण्यं ततो मध्येपार्श्वयो: शक्तिकाद्वयम् ॥ ३१ ॥

*பரித: கலசாநஷ்டௌ ஸ்தாபயித்வா யதா விதி!*
*ஸுப்ரம்மண்யம் ததோ மத்யே பார்ச்வயோச்*
*சக்திகா த்வயம் !!*

பிறகு நாற்புரமும் என் திசைகளிலும் எட்டு கும்பங்களை நிறைவான நடுத்தரமான ஒரே அளவான கலசங்களை முறைப்படி நிறுவி நடுவே முருகனையும் இருபுறமும் இரு சக்திகளையும் ஸ்தாபித்து

जयन्ताद्यष्टविद्येशान् पूर्वादिकलशेषु च ।
पूर्वोक्तविधिनावाह्य समभ्यर्च्य यथाविधि ॥ ३२ ॥

*ஜயந்தாத்யஷ்ட வித்யேசான் பூர்வாதி கலசேஷு ச !*
*பூர்வோக்த விதிநாவாஹ்ய சமப்யர்ச்ய யதா விதி !!*

ஜயந்தன் முதலான எப்போதும் முருகனருகேயே வீற்றிருக்கும் பேறு பெற்றவர்களை கிழக்கு முதலான திசைகளில் அமைத்து முறைப்படி கும்பாலங்கார வேத சிவாகம மந்திரங்களைக் கூறி பஞ்சாஸன பூஜை நியாஸம், தியானம், ஆவரணப் பூசைகளை முறைப்படி செய்து ஜபசமர்ப்பணம் செய்து வேள்விக்காக வேண்டி மூலமந்த்ர ஜப சமர்ப்பணம் செய்து

तत्पूर्वे स्थण्डिलं कृत्वा होमद्रव्याणि गृह्य च ।
अग्न्याधानादिकं सर्वमग्निकार्योक्तमाचरेत् ॥ ३३ ॥

*தத் பூர்வே ஸ்தண்டிலங்க்ருத்வா ஹோம த்ரவ்யாணி*
*க்ரஹ்யச !*
*அக்ன்யா தானாதிகம் சர்வம் அக்னிகார்யோக்த*
*மாசரேத் !!*

கும்பங்களுக்கு முன்பு நாற்சதுர பரப்பில் பூமிக்கு மேல் சற்று உயரமான இடத்தில் ஹோமஞ் செய்ய இடங்கற்பித்து புனிப்படுத்தி எரியோம்பும் விதிமுறைப்படி அக்னி கொணர்ந்து ஸ்தாபித்து பூசித்து வேள்வி அவி சொரிந்து

पलाशसमिधान्नाज्यं लाजक्षीरगुलैरपि ।
स्कन्दस्य मूलमन्त्रेण होमयेत्पञ्चविंशति: ॥ ३४ ॥

*பலாச ஸமிதான்ஜ்யம் லாஜக்ஷீர குலை ரபி!*
*ஸ்கந்தஸ்ய மூல மந்த்ரேண ஹோமயேத் பஞ்ச விம்சதி:!!*

புரசு சமித்து, பசு நெய், நெற் பொறி, பால், வெல்லம் முதலிய திரவியங்களால் முருகனுடைய மூலமந்திரத்தினால் 25 முறை வேள்வி வேட்டலை செய்ய வேண்டும்.

पञ्चब्रह्मसर्ववक्त्रयुतै: षण्मूर्तिमन्त्रत: ।
प्रतिद्रव्यं ततो हुत्वा द्रव्यान्ते व्याहृतिं हुनेत् ॥ ३५ ॥

*பஞ்ச ப்ரம்ம சர்வ வக்த்ர யுதைஷ் ஷண்மூர்த்தி மந்த்ரத:!*
*ப்ரதி த்ரவ்யந்ததோ ஹுத்வா த்ரவ்யாந்தே வ்யாஹ்ருதிம் ஹுனேத்!!*

முருகனுக்குரிய அறு முகவனுக்குரிய ஆறுமுகத்திற்கும் உரிய பஞ்ச பிரும்ம மந்திர ஸம்ஹிதா மந்திரத்தோடு ஒவ்வொரு திரவியங்களையும் ஆகுதி செய்து முடிவில் வ்யாஹ்ருதி எனும் பூர்புவ - ஸுவ - பூர்ப்புவஸ்ஸுவஸ்வாஹா எனும் ஆகுதிகளைச் செய்து

जगद्भुवादिषण्मन्त्रै: स्कन्दगायत्रिमन्त्रत: ।
तत आचारमानेति द्रव्यं प्रतिहुनेत्तत: ॥ ३६ ॥

*ஜகத் புவாதி ஷண்மந்த்ரை ஸ்கந்த காயத்ரி மந்த்ரத:!*
*தத ஆசாரமானேதி த்ரவ்யம் ப்ரதி ஹுனேத் தத:!!*

முருகனுக்குரிய ஆறுமுகத்துக்குரிய ஜகத்புவம் முதலான வேத மந்திர ஸ்கந்த சூக்தத்தையும் காயத்திரி மந்திரங்களினாலும் பிறகு ஆசார மானேதி மந்திரங்களால் ஒவ்வொரு திரவியத்துக்கும் ஒவ்வொரு ஆகுதிக்கும் கூறி பிறகு

शक्तिद्वयस्य मूलेन सर्पिषा पञ्चविंशति: ।
सर्वद्रव्यसमायुक्तं तस्य मूलेन होमयेत् ॥ ३७ ॥

*சக்தி த்வயஸ்ய மூலேந சர்பிஷா பஞ்ச விம்சதி:!*
*சர்வ த்ரவ்ய சமாயுக்தம் தஸ்ய மூலேந ஹோமயேத்!!*

இரு தேவிகளான வனவல்லி, கஜவல்லிக்கும் அவர்களுக்குரிய மந்திரங்களால் நெய்யினாலும் எல்லா திரவியங்களினாலும் ஹோமம் செய்ய வேண்டும்.

रात्रिशेषं व्यपोह्याथ प्रात: स्नात्वा गुरूत्तम: ।
अनुष्ठानविधिं ज्ञात्वा प्रतिष्ठास्थानमेत्य च ॥ ३८ ॥

*ராத்ரி சேஷம் வ்யபோஹ்யாத ப்ராதஸ்நாத்வா குருத்தம:!*
*அனுஷ்டாந விதிங்க்ருத்வா ப்ரதிஷ்டாஸ்தாந மேத்யச!!*

இவ்வாறு ஓரிரவு (ஈரிரவு மூவிரவுகளென்று) முடிந்த வரை ஹோமம் செய்து அதிகாலையில் நீராடி பூசகர் அநுஷ்டான விதிகளை வழுவாது ஆற்றி பிரதிஷ்டையிடமடைந்து பிறகு

द्वारपूजादिकं कृत्वा कुम्भान्यभ्यर्च्य मन्त्रवित् ।
प्रायश्चित्तार्थमन्त्रेण घृतेनैव शतं हुनेत् ॥ ३९ ॥

*த்வார பூஜாதிகான் க்ருத்வா கும்பானப்யர்ச்ய மந்த்ர வித்!*
*ப்ராயச்சித்தார்த்த மஸ்த்ரேண க்ருதேனைவ சதம் ஹுனேத்!!*

வழக்கம் போல் சூரிய பூஜை முதலான துவார பூஜை, பூத சுத்தி, யாகேஸ்வர சிவ பூசை, வரை செய்து பிரார்த்தித்து முருகன், வள்ளி, தெய்வானை, ஜயந்தாதி மந்திர மூர்த்திகளை

பூசித்து ஹோமம் செய்து இடையே உண்டான எல்லா இடையூறுகளையும் போக்க வல்ல அஸ்த்ர மந்திரங்களால் நூறு முறை ஆகுதி செய்க

जयादिरभ्याधानाञ्च राष्ट्रभृच्च हुनेत्ततः ।
शयनाद्बिम्बमुत्थाप्य गव्यैः पञ्चामृतैरपि ॥ ४० ॥

*ஜயாதி ரப்யா தானம்ச ராஷ்ட்ரப்ருச்ச ஹு^னேத்ததா!*
*சயனாத் பிம்ப முத்தாப்ய கவ்யை:*
*பஞ்சாம்ருதைரபி!!*

செயல்கள் செம்மையாகும் பொருட்டு ஜயாதி அப்யாதானம் ராஷ்ட்ரப்ருத் முதலான பகுதிகளை பிறகு செய்து படுக்கையிலிருந்து முருகனை எழுப்பி சயனத்திலிருந்து முருக பிம்பத்தை எழுப்பி பஞ்ச கவ்யத்தாலும் பரிசுத்தப் படுத்தி

शुद्धाद्भिरभिषिच्याशु भूषयेद्भूषणार्हकैः ।
शिरोवदनहृत्कक्षिगुह्यपादद्वयेप्रदः ॥ ४१ ॥

*சுத்தாத் பிரபிஷிச்யாசு பூஷயேத் பூஷணார்ஹகை:!*
*சிரோ வதன ஹ்ருத்குக்ஷி குஹ்ய பாத த்வயே ப்ரத:!!*

பரிசுத்தமான நீராலும் நீராட்சி அணிவிக்கத் தக்க அணிகலன்களை அழகாக அணிவித்து தலை, முகம், இதயம், வயிறு தொப்புளுக்கு கீழ் மறைவிடமான மர்மஸ்தானங்கள் இருபாதங்கள் முதலான இடங்களில் முறையே

पञ्चब्रह्मसर्ववक्त्रयुक्तः षण्मूर्तिमेव च ।
विन्यस्य च षडङ्गानि स्वस्वदेशेषु विन्यसेत् ॥ ४२ ॥

*பஞ்ச ப்ரம்ம சர்வ வக்த்ர யுக்தஷ் ஷண்மூர்த்தி*
*மேவச!*
*வின்யஸ்யச ஷடங்கானி ஸ்வஸ்வ தேசேஷு*
*வின்யஸேத்!!*

பஞ்ச பிரும்ம ஷடங்க சைவ மஹாமந்திரங்களோடு ஆறு முகத்திற்கு ஆறாவது முகத்திற்கும் அந்தந்த இடங்களில் நியாஸம் செய்யவும்

न्यस्त्वाथ मातृकान्यासं मूर्धादिक्रमशो बुधः ।
कुम्भबीजं समादाय बेरस्य हृदि विन्यसेत् ॥ ४३ ॥

*ந்யஸ்த்வாத மாத்ருகா ந்யாஸம் மூர்த்தாதி க்ரமசோ*
*புத:!*
*கும்பம் பீஜம் சமாதாய பேரஸ்ய ஹ்ருதி*
*வின்யசேத்!!*

பிறகு "அ" முதல் "க்ஷ" வரையுள்ள 51 அக்ஷரமந்திரங்களால் முறைப்படி அந்தந்த அவயவங்களில் நியாஸம் செய்து ஷடாக்ஷர மூலமந்திரத்தை விக்ரஹத்தின் ஹிருதயத்தில் கும்பத்திலிருந்து எடுத்து அறிவறிந்த நிலையில்

मूलमन्त्रेण मतिमान् कुम्भाद्भिरभिषेचयेत् ।
वर्धन्योर्बीजमादाय न्यसेत् स्वस्वस्तनाग्रके ॥ ४४ ॥

*மூல மந்த்ரேண மதிமான் கும்பாத் பிரபிஷேசயேத்!*
*வர்த்தன்யோர் பீஜமாதாய ந்யேஸேத் ஸ்வஸ்வஸ்த*
*நாக்ரகே!!*

நின்று மூல மந்திரமான ஷடாக்ஷரத்தை உச்சரித்துக் கொண்டே கும்ப நீரால் நீராட்டி மற்ற இரு தேவி கும்பங்களிலிருந்து தேவி மூலமந்திரத்தால் அந்தந்த தேவியின் மார்பகத்தில் சேர்த்து

तत्तत्करकतोयेन स्वबीजेनाभिषेचयेत् ।
विद्येशकुम्भान् पूर्वादिपद्मपीठेऽभिषेचयेत् ॥ ४५ ॥

*தத்தத் கரக தோயேந ஸ்வபீஜேநாபி ஷேசயேத்!*
*வித்யேச கும்பான் பூர்வாதி பத்ம பீடேபிஷேசயேத்!*

அந்தந்த, கலச நீரால் தேவி மூல மந்திரத்தால் இரு தேவிக்கும் அபிஷேகித்துப் பின்னர் ஜயந்தாதி வித்யேச கும்ப நீரை ஸ்ரீ முருகனின் பத்ம பீடத்தில் கிழக்கு முதலான திசைகளில்அபிஷேகிக்க வேண்டும்.

वस्त्राभरणमाल्याद्यैरर्चयेत्तु हृदा बुध: ।
महाहविर्निवेद्याथ ताम्बूलमपि दापयेत् ॥ ४६ ॥

*வஸ்த்ராபரண மாலாத்யை ரர்சயேத்து ஹ்ருதா புத:!*
*மஹா ஹவிர் நிவேத்யாத தாம்பூலமபி தாபயேத்!*

ஆடை அணிகல மாலைகளாலங்கரித்து ஹிருதய மந்திரத்தால் ஞான வானான அர்ச்சகர் அர்ச்சித்து முறைப்படி பக்குவஞ் செய்யப்பட்ட சிறப்பு நிவேதனம் செய்து பிறகு வெற்றிலை பாக்கும் (முறைப்படி பட்டியாக வாசனைப் பொருள்களோடு கட்டப் பட்டதை) நிவேதனம் செய்ய வேண்டும்

प्रार्थयित्वा नमस्कृत्य ब्रह्मणान् भोजयेत्तत: ।
आचार्यं पूजयेत्तत्र वित्तशाठ्यं न कारयेत् ॥ ४७ ॥

*ப்ரார்த்த யித்வா நமஸ்க்ருத்ய ப்ராம்மணான்*
*போஜயேத் தத:!*
*ஆசார்யம் பூஜயேத்தத்ர வித்தசாட்யன்ன காரயேத்!!*

பிறகு ஸ்ரீ முருகப் பெருமானை மனதார வேண்டி நமஸ்கரித்துப் பிறகு அந்தணர்களுக்கு அன்னமளித்து ஆசார்ய சிவாசார்யரை ஸ்ரீ முருகனாக பாவித்து பூசித்து உரிய உயரிய முறையில் சன்மானங்கள் சம்பாவனைகளை ஒளிவு மறைவின்றி செய்விக்கற்பாலது

प्रतिष्ठविधिरित्युक्तं पूजाविधिमथ श्रृणु ।
आचार्यहस्तमादाय बेरकर्ता प्रपूजयेत् ॥ ४८ ॥

*ப்ரதிஷ்டாவிதி ரித்யுக்தம் பூஜா விதி மத ச்ருணு!*
*ஆசார்ய ஹஸ்தாநாதாய பேரம் கர்தா ப்ரபூஜயேத்!!*

ஸ்ரீ முருகப் பெருமானின் ஆன்மார்த்த மூர்த்தியின் பிரதிஷ்டை விதத்தை இவ்வாறு கூறப்பட்டது பிறகு பூசை முறைகளை கேள்! (என்று சிவபெருமான் கௌசிக முனிவருக்கு கூறுகிறார்). ஆசார்யர் தனது திருக்கரங்களால் பூஜை செய்ய இருக்கின்றவருக்கு (குருவருளால் திருவருள் பெறும்) (முறையில்) பெற்று பூசிக்க வேண்டும்.

एककालं द्विकालं वा त्रिकालं वा दिनं प्रति ।
पूजास्थानं नवेनैव गोमयेनानुलिप्य च ॥ ४९ ॥

*ஏக காலம் த்விகாலம்வா த்ரிகாலம்வா தினம் ப்ரதி!*
*பூஜா ஸ்தானன் நவேநைவ கோமயேனானு*
*லிப்யச!!*

பூஜை புரியும் அறை தரைப்பகுதி அவ்வப்போது பசுஞ்சாணத்தால் சுத்தப் படுத்தப்பட்டு மெழுகி துடைத்து கோலங்கள் போடப்பட்ட நிலையில் தினசரி ஒரு காலமோ, இரு வேளையோ, மூன்று வேளையோ (பூஜகர் விருப்பப்படி)

गन्धपुष्पजलादीनि पूजाद्रव्याणि गृह्य च ।
सौरपूजां पुरा कृत्वा चोत्तराभिमुखस्थित: ॥ ५० ॥

*கந்த புஷ்ப ஜலாதீனி பூஜா த்ரவ்யானி க்ருஹ்யச!*
*சௌர பூஜாம் புரா க்ருத்வா உத்தராபி முக ஸ்த்தித:!!*

சந்தனம், உதிரிமலர், (அணிவிக்கும் மாலைசரம்) பூஜைக்குரிய (தீபம், தூபம், கற்பூரம், ஊதுபத்தி, திராக்ஷை, கற்கண்டு, தேன், பால், அன்ன நிவேதனம்) முதலியவற்றோடு சூரிய பூஜையை முன்னதாக செய்து பிறகு வடக்கு முகமாக அமர்ந்து கொண்டோ நின்று கொண்டோ

भस्मनिक्षिप्य बिधिना रुद्राक्षमपि धारयेत् ।
षण्मूर्तिहितं पञ्चब्रह्माभि: पञ्चमन्त्रक: ॥ ५१ ॥

*பஸ்ம நிக்ஷிப்ய விதிநா ருத்ராக்ஷமபி தாரயேத்!*
*ஷண்மூர்த்தி ஸஹிதம் பஞ்ச ப்ரம்மபி: பஞ்ச*
*மந்த்ரத:!!*

திருநீறு தரித்து சிவமணிமாலை அணிந்து கொண்டு அறுமுகனின் ஆறுமுகத்துக்குரிய பஞ்ச பிரும்ம ஷடங்க மந்திரங்களை (குருமுகமாகக் கேட்டுக் கொண்டபடி)

शिरोवदनहृत्कुक्षिगुह्यपाददृये न्यसेत् ।
अङ्गान्यगेषु विन्यस्य प्रणवार्घ्यं प्रकल्पयेत् ॥ ५२ ॥

*சிரோவதந ஹ்ருத்குக்ஷி குஹ்ய பாதத்வயே ந்யஸேத் !*
*அங்கான்யங்கேஷு வின்யஸ்ய ப்ரணவார்க்யம் ப்ரகல்பயேத் !!*

தலை, முகம், இருதயம் வயிறு மறைவிட பாதமிரண்டிலும் மந்திர பூர்வமாக ந்யாசார்ச்சனை செய்து பிரணவ மகாமந்திரத்தால் பூஜைக்குரிய அர்க்கிய ஜலத்தில் அபிமந்திரணம் செய்து

विस्तीर्णपीठे मतिमान् पूर्वास्य: परमानयेत् ।
पूर्वद्वारं तु सञ्चिन्त्य द्वारदेवान् प्रपूजयेत् ॥ ५३ ॥

*விஸ்தீர்ண பீடே மதிமான் பூர்வாஸ்ய: பரமானயேத் !*
*பூர்வ த்வாரந்து ஸஞ்சிந்த்ய த்வார தேவான் ப்ரபூஜயேத் !!*

ஞான பண்டிதனை பூசிக்கும் பேறு பெற்ற ஞான வானான பூஜகர் கிழக்கு முகமாக பெரிய பீடத்தில் ஸ்ரீ முருகப் பெருமான் திருமேனியை எழுந்தருளச் செய்து கிழக்கு வாயிற் தேவதைகளை நன்கு மனதில் தியானித்து முதலில் பூஜித்து

वास्तुनाथं च नैर्ऋत्यामैशान्यां स्वगुरून् यजेत् ।
आत्मशुद्धि तत: कुर्यादन्तर्यजनमारभेत् ॥ ५४ ॥

*வாஸ்து நாதஞ்ச நைருத்யாம் ஐசான்யாம் ஸ்வகுருன் யஜேத் !*
*ஆத்ம சுத்திம் தத: குர்யா தந்தர்யஜந மாசரேத் !!*

பிறகு வாஸ்து நாதனை பிரும்மாவை தென்மேற்கிலும், தென் கிழக்கில் தனது குருநாதரையும் பூஜித்து ஆன்ம சுத்தியையும் அகப் பூசையையும் மேற்கொள்ள வேண்டும்.

विशेषार्घ्यं प्रकल्प्याथ द्रव्यशुद्धि समाचरेत् ।
स्कन्दमन्त्रै: समाहृय सोऽहंभावेन पूजयेत् ॥ ५५ ॥

*விசேஷார்க்யம் ப்ரகல்ப்யாத த்ரவ்ய சுத்திம் சமாசரேத் !*
*ஸ்கந்த மந்த்ரைஸ் சமாவாஹ்ய சோஹம்பாவேந பூஜயேத் !!*

பிறகு விசேஷார்க்யம் கல்பித்து பூசித்து சடாக்ஷரத்தால் மந்திரித்து பூசை உபகரணங்கள் திரவியங்களை புனிப்படுத்தி முருக மந்திரத்தால் தன்னை அர்ச்சித்து அவனே தானேயாகி நின்று புறப்பூசை ஆற்ற வேண்டும்.

पूजापर्युषितं सर्वं सुमित्राय प्रदापयेत् ।
पूजापीठे तलास्तीर्णं वामहस्ततलेऽपि वा ॥ ५६ ॥

*பூஜா பர்யுஷிதம் சர்வம் சுமித்ராய ப்ரதாபயேத் !*
*பூஜா பீடே தலாஸ்தீர்ணம் வாம ஹஸ்த தலேபிவா !!*

பூஜையில் சமர்ப்பிக்கப்பட்ட மலர்கள் நிவேதனங்களை (நிர்மால்யங்களை) சுமித்ர சண்டிகேஸ்வரருக்கு சமர்ப்பித்து முருகன் பூஜை பலனை வேண்டிப் பெற வேண்டும். பூஜை பலகையில் (பீடத்திலோ) இடது கையில் வைத்துக் கொண்டோ

देरं विदेश्य शुद्धाद्भि: स्नापयेतस्त्रमन्त्रत: ।
आधाराख्यमनन्तं च धर्माद्यांघ्रिचतुष्टयम् ॥ ५७ ॥

*பேரன் நிவேஸ்ய சுத்தாத்பி ஸ்நாபயே தஸ்த்ர மந்த்ரத: !*
*ஆதாராக்ய: மநந்தஞ்ச தாமாத்யாங்ரி சதுஷ்டயம் !*

திருவுருவை எழுந்தருளச்செய்து தூயநீரால் அஸ்த்ர மந்திரத்தால் நீராட்டி ஆதார சக்தி அனந்தாஸன பூஜையும் தர்மம் முதலான சிம்மாஸனத்திலுள்ள

अधर्मादिचतुष्पादमथोर्ध्वच्छदनद्वयम् ।
कन्दादीनि शकुन्यादि मण्डलत्रितयं यजेत् ॥ ५८ ॥

*அதர்மாதி சதுஷ்பாத மதோர்த்வச் ஸதநத்வயம் !!*
*கந்தாதீனி சகுன்யாதி மண்டல த்ரிதயம் யஜேத் !!*

அதர்மாதிகளையும் யோகாஸன பூஜையையும் கிழக்கு முதலான பத்மாஸன பூஜையில் சகுனீ முதலான நவ சக்திகளையும் தூர்ய சோம அக்னி மண்டலங்களையும் அதன் அதிபர்களையும்

पृथिव्यादिप्रकृत्यन्तं सुब्रह्मण्यासनं यजेत् ।
भानुमध्ये तु शिवयोर्मध्यगं संस्मरन् बुधः ॥ ५९ ॥

*ப்ருதி வ்யாதி ப்ரக்ருத்யந்தம் சுப்ரம்மண்யாஸநம் யஜேத்!*
*பானு மத்யேது சிவயோர் மத்யகம் ஸம்ஸ்மரன் குஹம்!!*

பூமி முதல் (ஆதார சக்தி முதல் குடிலா சக்தி வரை) முருகப் பெருமானின் ஆஸனங்களை பூசித்து தூரிய மண்டலத்தில் அம்மையப்பனோடு நடுவில் முருகப் பெருமானை தியானித்து

तस्मिन् मूर्ति समादाय मूलेनावाहयेत्सुधीः ।
स्थापनं चीशमन्त्रेण सन्निधानं तु पूरुषात् ॥ ६० ॥

*தஸ்மின் மூர்த்தி சமாதாய மூலேநாவாஹயேத் சுதீ:!*
*ஸ்தாபநம் ஈச மந்த்ரேண ஸன்னிதாநம்து பூருஷாத்!!*

அந்த விக்ரஹத்தில் தூர்ய மண்டல மத்தியில் சோமாஸ் கந்தராக தியானித்த மூர்த்தியையும் (தனது இதய குகையில் இடைவிடாது இலங்கும்) மூர்த்தியையும் நினைத்து ஈசான மந்திரத்தால் ஆவாஹந ஸ்தா பனமும் தத்புருஷ மந்த்ரத்தால் சன்னிதான செய்கையையும்

सन्निरोधमघोरेण स्वागदं वाम मन्त्रतः ।
दिग्बन्धमस्त्रमन्त्रेण कवचेनावकुण्ठनम् ॥ ६१ ॥

*ஸன்னிரோத மகோரேண ஸ்வாகதம் வாம மந்த்தரத:!*
*திக் பந்தமஸ்த்ர மந்த்ரேண கவசேனாவ குண்டனம்!*

பிறகு செய்யவேண்டிய சன்னிரோதன செய்கையை அகோர மந்திரத்தாலும் ஸ்வாகதம் எனும் வரவேற்பு அர்க்கியத்தையும் திக்பந்தனத்தை அஸ்த்ர மந்திரத்தாலும் கவச மந்திரத்தால் அவகுண்டனமெனும் மந்த்ர வேலியும்

अमृतीकरणं सद्योजातेनैव तु मन्त्रतः ।
स्वामिन्सर्वजगन्नाथ यावत्पूजावसानकम् ॥ ६२ ॥

*அம்ருதீ கரணம் சத்யோஜாதேநைவது மந்த்ரத:!*
*ஸ்வாமின் ஸர்வ ஜகன்னாத யாவத் பூஜாவஸாநகம்!!*

அமிருதீ கரணமெனும் ஸம்ஸ்காரத்தை ஸத்யோஜாத மந்திரத்தாலும் செய்து எல்லா உலகுக்கும் என்றும் நாயகரே தாங்கள் பூசை நிறைவுறும் வரை

तावत्वं प्रीतिभावेन बिम्बेऽस्मिन् संनिधिं कुरु ।
इदं मन्त्रं समुच्चार्य पद्ममुद्रां महाख्यकम् ॥ ६३ ॥

*தாவத் சம்ப்ரீதி பாவேந பிம்பேஸ்மின் சன்னிதிர்பவ!*
*இதம் மந்த்ரம் சமுச்சார்ய பத்ம முத்ரா மஹாக்யகம்!!*

(அதுவரை) பூசை நிறைவுறும் வரை இனிய கனிவான களிப்போடு இத்திருவுருவில் நிறைந்து எழுந்தருளியிருக்க வேண்டி மந்திரங்களை மனதால் கூறிக் கொண்டே தாமரை மலர் போன்ற முத்திரையையும், மகாமுத்திரையையும்

षण्मुखं दर्शयित्वाथ पाद्यमाचमनार्घ्यकम् ।
दत्त्वाभिषेचयेदद्भिरब्विगैर्न तु मन्त्रतः ॥ ६४ ॥

*ஷண்முகம் தர்சயித்வாத பாத்யமாசமனார்க்யகம்!*
*தத்வாபிஷேச யேதத்பி ரப்திகைர்நது மந்த்ரத:!!*

ஷண்முகீ முத்திரையையும் காண்பித்து பாத்யம் எனும் திருவடி வத்திருநீறு அளித்து வாயில்மும் முறை ஆசமனம் கொடுத்து தலையில் ஒருமுறை அர்க்கியமும் கொடுத்து அர்க்கிய

ஜலத்தினாலேயே அபிஷேக பாவனையில் நீர்த்துளிகளை மேல் நோக்கி தெளித்து பிம்பத்தின் மேல் மந்திரமின்றிச் செய்க

ततः कुमारमानेति चण्डापि स्कन्दसूक्ततः ।
मूलब्रह्मषडङ्गैश्च गायत्र्याचाभिषेचयेत् ॥ ६५ ॥

*தத: குமாரமானேதி சண்டாபி ஸ்கந்த ஸூக்தத:!*
*மூல ப்ரம்ம ஷடங்கைஸ்ச காயத்ரியாசாபி ஷேசயேத்!!*

பிறகு குமாரமான என்ற மந்திரத்தாலும் ஸ்கந்த ஸூக்தம் என்ற வேத மந்திரத்தாலும், மூல மந்திரத்தாலும், ஸம்ஹிதா மந்திரத்தாலும், ஸ்கந்த காயத்ரியாலும், சுமித்ர சண்ட ஸ்தானத்திலும் அபிஷேகத்தை ப்ரோக்ஷணமாக நீர்த்துளிகள் மேல்நோக்கு தெளிப்பாக செய்ய வேண்டுமென கூறப்படுகிறது.

सूक्ष्मवस्त्रं ततो दत्वा भूषयेद्भूषणार्हकैः ।
मनोरथार्घ्यं दत्वा दण्डभङ्गी समुच्चरेत् ॥ ६६ ॥

*ஸூக்ஷ்ம வஸ்த்ரம் ததோ தத்வா பூஷயேத் பூஷணார்ஹகை:!*
*மனோரதார்க்யம் தத்வாத தண்ட பங்கீம் சமர்ச்சயேத்!!*

மனதிற்கு கந்த வண்ணம் முருகனுக்கு மானசீகமாக உயர்ந்த தகுந்த அணிகலன்களால் அலங்கரித்து மனோரத அர்க்கியம் கொடுத்து தண்ட பங்கி நியாச அர்ச்சனையை நன்கு செய்யவும்

वक्त्रभङ्गीमपोह्याथ पञ्चावरणमर्चयेत् ।
धेनुपद्मात्रिशूलं च मकरस्रङ्नमस्कृताम् ॥ ६७ ॥

*வக்த்ர பங்கீ மபோஹ்யாத பஞ்சாவரண மர்ச்சயேத்!*
*தேனு பத்ம த்ரிசூலம்ச மகர ஸ்ருங் நமஸ்க்ருதாம்!!*

வக்த்ர பங்கியை அர்ச்சிக்காமல் பஞ்சாவரண தேவதைகளை அர்ச்சித்து தேனு முத்திரை பத்ம முத்திரை திரிசூல முத்திரை மகர முத்திரையும் ஸ்ருங் முத்திரையையும் காண்பித்து நமஸ்கரிக்கவும்

प्रदर्शयेद्धूपदीपं नैवेद्यमपि दापयेत् ।
पानीयमपि ताम्बूलमुखवाससमन्वितम् ॥ ६८ ॥

*ப்ரதர்சயேத்தூப தீபன் நைவேத்யமபி தாபயேத்!*
*பானீயமபி தாம்பூல முகவாஸ சமன்விதம்!!*

தூபங்காண்பித்து, பிறகு தீபம் காண்பித்து நிவேதனம் நிவேதித்து, குடிநீர் நிவேதித்து, வெற்றிலைப் பாக்கு, வாசனைப் பொருள்களோடு சமர்ப்பித்து

धूपं धूरसि मन्त्रेण दीपमुद्दीप्य मन्त्रतः ।
श्रियै जातेति मन्त्रेण नीराजनमतः परम् ॥ ६९ ॥

*தூபம்தூரஸி மந்த்ரேண தீபமுத்தீப்ய மந்த்ரத:!*
*ச்ரியை ஜாதேதி மந்த்ரேண நீராஜந மத: பரம்!!*

தூரஸி என்ற மந்திரத்தால் தூபமும், உத்தீப்ய என்ற மந்திரத்தால் தீபமும், ஸ்ரியை ஜாத என்ற மந்திரத்தால் பிறகு தீபாராதனையும் காண்பித்து

बृहत्सामेति मन्त्रेण भस्मं दत्वा गुहाय च ।
जगद्भवेति मन्त्रेण पुष्पाञ्जलिमतः परम् ॥ ७० ॥

*ப்ரஹத் சாமேதி மந்த்ரேண பஸ்மம் தத்வா குஹாயச!*
*ஜகத் புவேதி மந்த்ரேண புஷ்பாஞ்சலி ரத: பரம்!!*

பிருஹத்சாம என்ற மந்திரத்தால் முருகனுக்கு விபூதியை காண்பித்து (பிரஸாதமாக்கி) பிறகு ஜகத்புவம் என்ற மந்திரத்தால் புஷ்ப்பாஞ்சலியும் செய்ய வேண்டும்

मूलमन्त्रं शतं जप्त्वा ब्रह्माङ्गानां दशांशकम् ।
स्तोत्रप्रदक्षिणाभीष्टप्रार्थनां चैव कारयेत् ॥ ७१ ॥

*மூல மந்த்ரம் சதம் ஜப்த்வா ப்ரம்மாங்காநாந்த சாம்சகம் !*
*ஸ்தோத்ர ப்ரதக்ஷிணாபீஷ்ட ப்ரார்த்தநாஞ்சைவ காரயேத் !!*

மூல மந்திரத்தை நூறு முறை ஜபம் செய்து பஞ்ச பிரும்ம ஷடங்க மந்திரங்களையும் பத்தில் ஒரு பங்காக பத்து முறை ஜபம் செய்து தோத்திரங்கள் கூறி வலம் வருதலைச் செய்து ப்ராத்தனை வேண்டு கோள்களையும் செய்விக்க வேண்டும்.

साधु वाऽसाधु वा कर्म यद्यदाचरितं मया ।
तत्सर्वं देवदेवेश गृहाणाराधनं परम् ॥ ७२ ॥

*சாதுவாசாதுவா கர்ம யத்யதாசரிதம் மயா !*
*தத் ஸர்வந்தேவ தேவேச க்ரஹாணாராதனம் பரம் !!*

முறையாகவோ முறை மாறி தவறுதல்களாகவோ என்னால் பூஜை செய்யப்பட்ட முறையில் உண்டாகியிருக்குமேயாகில் அவைகள் அனைத்தையும் மேலான பூசை வரிசையாக ஏற்றுக் கொள்ள வேண்டுகிறேன்.

मन्त्रेणानेन देवाय दापयेच्चुलुकोदकम् ।
न्यूनातिरिक्तं यत् कर्म तत्क्षमस्व मया कृतम् ॥ ७३ ॥

*மந்த்ரேணானேந தேவாய தாபயேச்சுலு கோதகம் !*
*ந்யூனாதிரிக்தம் யத்கர்ம தத் க்ஷமஸ்வ மயாக்ருதம் !!*

இவ்வாறு மந்திரங் கூறிக் கொண்டு முருகனுக்கு மூல மந்திரம் முடிந்தவரை ஜபித்து விசேஷார்க்கிய ஜலம் சேர்த்து ஆள்காட்டி விரல் நுனிவழியே நீரை விட்டு வலதுகரத்தில் (வரத) (கையில்) அர்ப்பணித்துப் பிறகு என்னால் செய்யப்பட்ட பூசையில் குறைவு நிறைவுகளைப் பொருத்தருள வேண்டுமென ப்ரார்த்திக்கவும்

प्रियाभीष्टो हि भगवान् पुनरागमनाय च ।
पश्चात्सुमित्रपूजां च कुर्यादपि विशेषत: ॥
एवं य: कुरुते मर्त्य: स्कन्दसामीप्यमाप्नुयात् ॥ ७४ ॥

*ப்ரியாபீஷ்டோஹி பகவான் புனராகமனாய ச !*
*பஸ்சாத் சுமித்ர பூஜாம்ச குர்யாதபி விசேஷத: !!*
*ஏவம் ய: குருதே மர்த்ய ஸ்கந்த சாமீப்ய மாப்னுயாத் !*

பூஜையால் மன நிறைவெய்திய பகவானே மீண்டும் எனது பூஜையில் எழுந்தருள வேண்டுமென பிரார்த்தித்துப் பிறகு சுமித்ர சண்டிகேஸ்வரரை சிறப்பாக பூஜை செய்து முருக பூஜை பயனை முழுவதும் வேண்டி பெறுவது சிறப்பு ஆகும். இவ்வாறுயார் பூஜை செய்கிறாரோ அவர் முருகனின் சமீபத்தில் எப்போதும் வசிக்கும் பேறு பெறுவர்

इति श्रीकुमारतन्त्रे आत्मार्थयजनविधिर्नाम
सप्तत्रिंश: पटल:

இதி ஸ்ரீ குமாரதந்த்ரே ஆத்மார்த்த யஜந விதிர்நாம
ஸப்தத்ரிம்ச: படல:

இவ்வாறு ஸ்ரீகுமார தந்திர ஆகமத்தில் ஆன்மார்த்த வழிபாட்டு முறை அத்யாயமானது முப்பத்து ஏழாவது படலமாக கூறப்பட்டுள்ளது.

# ॥ अष्टत्रिंशः पटलः ॥

**அஷ்டத்ரிம்ச: படல:**

**38 வது படலம்**

**तैलाभ्यङ्गविधिः**

**தைலாபிஷேக விதி:**

**(தைலம்) எண்ணை காப்பிடும் முறை**

तैलाभ्यङ्गं प्रवक्ष्यामि श्रृणु कौशिक सुव्रत ।
स रोगविनाशार्थं गुहं तैलेन लेपयेत् ॥ १ ॥

*தைலாப்யங்கம் ப்ரவக்ஷ்யாமி ச்ருணு கௌசிக ஸுவ்ரத !*
*ச்ர்வரோக விநாசார்த்தம் குஹம் தைலேந லேபயேத் !!*

முருகப்பெருமானுக்கு (சுகந்த) வாசனைமிகு எண்ணெய்க்காப்பிடுவது எல்லா வியாதிகளையும் போக்கடிப்பதாகும். அப்படிச்சிறப்பான தைலக் காப்பைப் பற்றி கூறுகிறேன். கௌசிகரே! கேளும்.

सर्वकालेषु कर्तव्यमेके वा नित्यपूजने ।
मासादौ पञ्चदश्यां वा सोमाङ्गारकवारके ॥ २ ॥

*ச்ர்வ காலேஷு கர்தவ்ய மேகேவா நித்ய பூஜநே !*
*மாசாதௌ பஞ்ச தச்யாம்வா சோமாங்காரக வாரகே !!*

நித்ய பூஜையில் காலந்தோறும் ஒருமுறை எண்ணெய்காப்பிட வேண்டும். மாதப்பிறப்பு, பௌர்ணமி, அமாவாசை, செவ்வாய்க்கிழமை திங்கட்கிழமைகளிலும் கூட சிறப்பாக வாசனை பொருந்திய (எள் எண்ணெய்) அல்லது (சந்தனாதி தைலம்) காப்பிடப்பட வேண்டும்.

कृत्तिकायां विशाखायां प्रोक्षणे नैमित्तिके पुनः ।
उत्सवाद्यन्तकाले च काम्ये नैमित्तिके पुनः ॥ ३ ॥

*க்ருத்திகாயாம் விசாகாயாம் ப்ரோக்ஷணே நைமித்திகேபுந:*
*உத்ஸவாத்யந்த காலேச காம்யே நைமித்திகே புந: !!*

கார்த்திகை, விசாகம் போன்ற நக்ஷத்திரங்களிலும் கும்பாபிஷேக காலங்களிலும் திருவிழா முடிந்து திருக்கழுவாய் திருமஞ்சனம் (பிராயஸ்சித்தாபிஷேகம்) காலங்களிலும் மற்றும் வரும் வார, மாத, வருட விசேஷ தினங்களிலும் மறுபடியும் மறுபடியும் (திரு எண்ணெய்காப்பிடுவது சிறப்பும் பயனுமுடையது)

एवमादेषु कार्येषु तैलाभ्यङ्गं प्रचक्षते ।
शैलजे मृण्मये चैव दारुजेऽभ्यङ्गमुत्तमम् ॥ ४ ॥

*ஏவமாதிஷு கார்யேஷு தைலாப்யங்கம் ப்ரசக்ஷதே !*
*சைலஜே ம்ருண்மயேசைவ தாருஜேப்யங்க முத்தமம் !!*

இப்படிப்பட்ட காரியங்களிலும் காலங்களிலும் திருஎண்ணெய்க்காப்பு சிறப்புமிக்கது. கருங் கல்லினால் ஆனதும் மண்ணால் ஆனதும் மரத்தினா லானதும் எண்ணெய்க்காப்புக்குரியது

स्वर्णगेरे भित्तिचित्रे दर्पणेन विचक्षणः ।
रत्नजे लोहजे कुर्यात्प्रोक्षयेद्दारुमूर्धनि ॥ ५ ॥

*ஸ்வர்ணபே ரேபித்திசித்ரே தர்பணேந விசக்ஷண: !*
*ரத்நஜே லோஹஜே குர்யாது ப்ரோக்ஷயேத்தாரு மூர்த்நி !!*

தங்கத்தினால் செய்யப்பட்ட விக்ரஹத் திற்கும் சுவற்றில் சித்திரவடிவில் உள்ளவற்றிற்கும் பிம்பத்திற்கு எதிரே முகம் பார்க்கும் ரசம்பூசிய கண்ணாடியில் வைத்து அந்த நிழலை பிம்பத்தில் செய்தால் அந்த பிம்பத்திற்கு செய்தது போல் இருக்கும். மேலும் ரத்னங்களினால் ஆனதும் உலோகத்தால் மரத்தினால் செய்யப்பட்ட விக்ரஹத்திற்கு

தலையில் மேலிருந்து தெளித்தல் (சிரசில் தைலப்ரோக்ஷணம்)

नवीनतिलतैलञ्च पुष्पगन्धै: सुयोजयेत् ।
स्वर्णपात्रे तु रजते कांसपात्रे च मृण्मये ॥ ६ ॥

*நவீன தில தைலஞ்ச புஷ்பகந்தைச்ச யோஜயேத் !*
*ஸ்வர்ண பாத்ரே துரஜதே காம்ச பாத்ரேச மிருண்மயே !!*

புது எண்ணெயில் வாசனை மிகு மணத்தை தரும் மலர்களைப் போட்டு தங்கம், வெள்ளி, வெண்கலம், மண்பாத்திரங்களில் (வைக்கவும்)

शुद्धपात्रेण गृह्णीयात् तैलं वस्त्रेण शोधितम् ।
निरीक्ष्य मूलमन्त्रेण प्रोक्ष्य चास्त्रेण मन्त्रत: ॥ ७ ॥

*சுத்த பாத்ரேண க்ருஹ்ணீயா த்தைலம் வஸ்த்ரேண சோதிதம் !*
*நிரீக்ஷ்ய மூலமந்த்ரேண ப்ரோக்ஷ்ய சாஸ்த்ரேண மந்த்ரத :!!*

சுத்தமான பாத்திரத்தில் எடுத்து துணியினால் வடிகட்டி சுத்தம் செய்து மூலமந்திரத்தால் பார்த்து அஸ்த்ர மந்திரத்தால் மேலே இருந்து விழுமாப்போல நீர்த் தெளிக்கவேண்டும்.

तेन मन्त्रेण संताड्य कवचेनावकुण्ठयेत् ।
धेनुमुद्रां हृदा दत्वा विन्यस्य गुहसंनिधौ ॥ ८ ॥

*தேந மந்த்ரேண சந்தாட்ய கவசேனாவ குண்டயேத் !*
*தேனுமுத்ராம் ஹ்ருதாதத்வா வின்யஸ்ய குஹஸன்னிதௌ !!*

அதே அஸ்த்ர மந்த்ரத்தால் நன்குதட்டி கவச மந்திரத்தால் (வேலிபோல) ஆள்காட்டி விரலால் மந்திர வேலியிட்டு பசுமுலைக்காம்பு போல் முத்திரைக்காட்டி ஹ்ருதய மந்திரமுச்சரித்து முருகன் முன் வைக்கவேண்டும்.

संकल्पमपि पुण्याहं वाचयित्वा विचक्षण: ।
धूपदीपं हृदा दत्वा पाद्यमाचमनं तथा ॥ ९ ॥

*சங்கல்பமபி புண்யாஹம் வாசயித்வா விசக்ஷணம் !*
*தூபதீபம் ஹ்ருதாதத்வா பாத்ய மாசமனந்ததா !!*

(உறுதி) சங்கற்பம் செய்து புண்யாகம் (நல்லநாளை சொல்லுவிதிலை) செய்து, தூபதீபம் ஹ்ருதய மந்திரத்தால் கொடுத்து பாத்யம், ஆசமனமும் (கொடுத்து).

तेनैव दन्तकाष्ठञ्च तन्मन्त्रेणैव दर्पणम् ।
ताम्बूलं तेन मन्त्रेण पश्चादभ्यङ्गमाचरेत् ॥ १० ॥

*தேனைவ தந்த காஷ்டஞ்ச தன்மந்த்ரேணைவ தர்பணம் !*
*தாம்பூல -ந்தேந மந்த்ரேண பச்சாதப்யங்க மாசரேத் !!*

அதே ஹ்ருதய மந்திரத்தாலேயே பல்துலக்கும்குச்சி அதே மந்திரத்தால் கண்ணாடி தாம்பூலம் சமர்பித்து பிறகு தைலக்காப்பிட வேண்டும்.

प्रच्छन्नपटमावेष्ट्य वस्त्रादीनि विपोह्य च ।
मूलविन्दुसमादाय कूर्चेनास्त्रेण मन्त्रत: ॥ ११ ॥

*ப்ரச்சன்ன படமாவேஷ்ட்ய வஸ்த்ர தீனி விபோஹ்யச !*
*மூலபிந்து சமாதாய கூர்ச்சேநாஸ்த்ரேண மந்த்ரத:!!*

திரைசீலையை இழுத்து மூடி பிம்பவஸ்த்ரங்களை களைந்து அஸ்த்ர மந்த்ரத்தால் தர்பை கூர்ச்சத்தால் சிரஸில் எண்ணையை தெளித்து விடவும்.

प्रोक्ष्य बेरस्य शिरसि गुरुर्दक्षिणहस्तत: ।
मूर्धादिपादपर्यन्तमभ्यङ्गमपि पीठकम् ॥ १२ ॥

*ப்ரோக்ஷ்ய பேரஸ்ய சிரசி குருர்தக்ஷின ஹஸ்தத: !*
*மூர்த்தாதி பாத பர்யந்த மப்யங்க மபி பீடகம் !!*

பிம்பத்திற்கு சிரஸில் (தலையில்) புரோக்ஷித்து ஆசார்யர் வலக்கையால் தலைமுதல் கால்வரையிலும் பீடத்திலும் (தடவவேண்டும்).

तैलं हृदयमन्त्रेण लेपयेच्छुद्धवस्त्रत: ।
नमस्कृत्वा क्षमस्वेति शक्तिपूर्वं विचिन्तयेत् ॥ १३ ॥

*தைலம் ஹ்ருதய மந்த்ரேண லேபயே ச்சுத்தி வஸ்த்ரத:।*
*நமஸ்க்ருத்வாக்ஷமஸ்வேதி பக்திபூர்வம் விசிந்தயேத்॥*

தூய்மையான துணியால் இருதய மந்திரத்தினால் மெதுவாக தடவி பக்திமேலீட்டோடு வணங்கி பொறுத்தருளவேண்டி நன்கு சிந்திக்க

पिष्टं वामेन मन्त्रेण सर्वामपि लेपयेत् ।
स्नाप्य पश्चादघोरेण तथैवामलकैर्गुरु: ॥ १४ ॥

*பிஷ்டம் வாமேன மந்த்ரேண ஸர்வாங்க மபிலேபயேத்।*
*ஸ்நாப்ய பச்சாத கோரேண ததைவாமலகைர்குரு:॥*

அரிசி மாப்பொடியை வாமதேவமந்திரங் கூறிக்கொண்டே முருகனின் முழு உருவத்திலும் தடவவேண்டும். பிறகு நெல்லிவற்றல்தூளால் அகோர மந்திரங்கூறிக் கொண்டு அபிஷேகம் செய்யற்பாலது (அர்ச்சகரால்).

हरिद्रं वक्त्रमन्त्रेण शुद्धाद्भिरभिषेचयेत् ।
अर्चनोक्तविधानेन तदूर्ध्वं कर्मकारयेत् ॥ १५ ॥

*ஹரித்ரம் வக்த்ர மந்த்ரேண சுத்தாத்பிரபிஷேசயேத்।*
*அர்ச்சனோக்த விதாநேந ததூர்த்வம் கர்மகாரயேத்:॥*

மஞ்சள் தூள் (பொடி)யை கரைத்து தத்புருஷ மந்திரங்கொண்டு சுத்தஜலத்தினாலும் அர்ச்சனை பாதத்தில் செய்வதுபோல் அபிஷேகத்தை தலையிலிருந்து செய்யவேண்டும்.

भक्तेभ्य: परिचारेभ्यो दापयेत् तैलकं क्रमात् ।
ताम्बूलं दापयेत् पश्चादाचार्यमपि तोषयेत् ॥ १६ ॥

*பக்தேப்ய: பரிசாரேப்ய: தாபயேத்தைலகம் க்ரமாத்।*
*தாம்பூலந்தாபயேத் பச்சாதாசார்ய மபி தோஷயேத்॥*

முருகனின் பரிவார பக்த மூர்த்திகளுக்கும் அணிவித்து தாம்பூலம் சமர்பித்து (பிரசாத எண்ணெய்) (பக்தர்களுக்கு விநியோகித்து) அபிஷேகம் செய்த ஆசார்ய அர்ச்சகரை சந்தோஷப்படும்மாறு சன்மானங்கள் அளிக்கற்பாலது.

आम्लेन लोहबेराणि शुद्धिं कृत्वैवमर्चयेत् ।
एवं य: कुरुते मर्त्यो सर्वान् कामानवाप्नुयात् ॥ १७ ॥

*அம்லே நலோஹபேராணி சுத்திம் க்ருத்வை வமர்ச்சயேத்।*
*ஏவம் ய:குருதே மர்த்ய: ஸ்ஸர்வான் காமானவாப்நுயாத்॥*

பஞ்சலோக விக்ரஹங்களுக்கு (அபிஷேகத் திற்குப் பின்) அழுக்குகள் விலகும்படி சுத்திசெய்து அலங்கரித்து பூசிக்கவேண்டும். இவ்வாறு யார் செய்கிறார்களோ அவர் எல்லா விருப்பங்களும் இனிதே நிறைவேறப்பெறுவார்.

इति श्रीकुमारतन्त्रे तैलाभ्यङ्गविधिर्नामाष्टात्रिंश: पटल:

இதி ஸ்ரீகுமாரதந்த்ரே கௌசிகப்ரச்னே
தைலாபிஷேக
விதி படல:

இவ்வாறு ஸ்ரீகுமார தந்திரத்தில் கௌசிக பரச்னத்தில் தைலாபிஷேக முறை என்னும் முப்பத்தி எட்டாவது படலமாகும்.

# ।। एकोनचत्वारिंशः पटलः ।।

## ஏகோநசத்வாரிம்ச: படல:

## 39 வது படலம்

## मासपूजाविधिः

## மாஸ பூஜா விதி படல:

## மாத பூசை முறை சுருக்கம்

अतः परं प्रवक्ष्यामि मासपूजाविधिक्रमम् ।
चैत्रे दमनकं प्रोक्तं वैशाखे गन्धपूजनम् ॥ १ ॥

*அத: பரம் ப்ரவக்ஷ்யாமி மாஸ பூஜா விதி க்ரமம் /*
*சைத்ரே தமநகம் ப்ரோக்தம் வைசாகே கந்த பூஜனம் //*

இதற்கு மேல் மாதபூஜை முறை, முறைப்படி கூறப்படுகிறது. சித்திரையில் மருக்கொழுந்தும் வைகாசியில் சந்தனமும் சிறப்புப் பொருட்களாக

(சித்திரை மாத முழு நிலா (நாளிலும்) சித்திரை கூடிய நன்னாளிலும் வைகாசி நிறைநிலா நாளோடு இணையும் விசாக விண்மீன் கூடிய நாளில் மைதூர் சந்தனமும்) கூறப்படுகிறது.

ज्येष्ठमासे फलैः पूजा क्षीरेणाषाढ मासमके ।
श्रावणे शर्करापूजा पूर्वैः प्रोष्ठपदेऽर्चना ॥ २ ॥

*ஜ்யேஷ்ட மாஸே பலை: பூஜா க்ஷீரேணாஷாட மாஸகே /*
*ச்ராவணே சர்க்கரா பூஜா பூர்வை: ப்ரோஷ்ட பதேர்ச்சநா //*

ஆனியில் பழங்களாலும், ஆடியில் (பாலாடை திரட்டிப் பால்) பாலபிஷேகம் ஆவணியில் சர்க்கரை அபிஷேகமும், சர்க்கரை கலந்த அரிசி மாவால் செய்யப்பட்ட அதிரஸமும் புரட்டாசி பூரட்டாதியில் பௌர்ணமியில் சிறப்பு பூசை செய்யப்படுகிறது.

अश्विन्यामन्नपूजा च कार्तिक्यां दीपरोहणम् ।
घृतेन मार्गशीर्षे च क्षौद्रेण पुष्यमासके ॥ ३ ॥

*அஸ்வின்யா மன்ன பூஜாச கார்த்திக்யாந்தீப ரோஹணம் /*
*க்ருதேச மார்க சீர்ஷேச க்ஷௌத்ரேண புஷ்ய மாஸகே //*

ஐப்பசி மாத அஸ்வனி நக்ஷத்திரத்தில் பௌர்ணமியில் அன்னாபிஷேக பூஜையும் கார்த்திகையில் பௌர்ணமி கூடிய கார்த்திகையில் தீப பூஜை தீபத்தை உயர்வில் விமானத்தில் ஏற்றி வழிபடுவதும் மார்கழி பௌர்ணமி திருவாதிரை கூடிய நாளில் நெய்யபிஷேகமும் தைப்பூச நிறைநிலா நாளில்தேனாபிஷேகமும்

घृतकम्बलकं माघे फाल्गुने दधिपूजनम् ।
मासपूजां विनान्यैश्च पूजनैर्निष्फलं भवेत् ॥ ४ ॥

*க்ருத கம்பளகம் மாகே பால்குனே ததி பூஜனம் /*
*மாஸ பூஜாம் விநாந்யைச்ச பூஜனைர் நிஷ்பலம் பவேத் //*

மாசியில் நெய்யில் நினைத்த கம்பளம் (ஆட்டு உரோமத்தால் ஆனது) பங்குனியில் தயிர் அபிஷேகம் தயிர்சாத நிவேதனம் என்ற முறைப்படி மாத பூஜைச் சிறப்பு செய்திடாவிடில் (நித்ய) அன்றாடப் பூசையும் உலகுக்கு பயனின்றி ஆகிவிடும்.

प्रजावृद्धिकरं नृणां राज्ञां विजयवर्धनम् ।
नकुर्याच्चेत्तु मोहेन सर्वदोषकरं भवेत् ॥ ५ ॥

*ப்ரஜா விருத்திகரன் ந்ருணாம் ராஞ்ஞாம் விஜய வர்தனம் /*
*நகுர்யாச்சேத்து மோஹேன ஸர்வ தோஷகரம் பவேத் //*

மக்களுக்குச் சந்ததி மரபு வளர்ச்சியும் அரசர்களுக்கு வெற்றி அளிக்கும் இப்பூசையானது அறியாமையால் சரிவரச்

செய்யப்படாவிடில் (நேர்மாராக) எல்லாக் குற்றங்களும் தீவினைகளும் எளிதில் வளரும்.

तस्मात्सर्वप्रयत्नेन कर्तव्यं मासपूजनम् ।
नित्यपूजावसाने तु नैमित्तिकमथाचरेत् ॥ ६ ॥

*தஸ்மாத் ஸர்வ பிரயத்நேன கர்தவ்யம் மாஸ பூஜனம் /*
*நித்ய பூஜாவசாநேது நைமித்திக மதாசரேத் //*

ஆகையினாலேயே இம்மாத பூசையும் நித்திய பூசையின் இறுதியில் மாதச் சிறப்பு பூஜையை மிக மிக முயற்சியெடுத்து செய்யத் தக்கதாகும்.

# चैत्रमासपूजा

**சைத்ரமாஸ பூஜா**

**சித்திரை மாத சித்திரை கூடிய நிறை நிலாப்பூஜை**

चैत्रेषु षष्ठ्यां सप्तम्यां त्रयोदश्यां तु वार्चयेत् ।

कौशिक उवाच -

न ज्ञातं मदनोत्पत्तिस्तां वदस्व महेश्वर ॥ ७ ॥

ईश्वर उवाच -

*சைத்ரேஷு ஷஷ்ட்யாம் ஸப்தம்யாம் த்ரயோதஸ்யாம் து வார்ச்சயேத்!*

*கௌசிக உவாச :-*
*கௌசிகோ வாசனஞாதம் மதனோத் பத்திஸ்தாம் வதஸ்வமகேச்வர !!*

*ஈச்வர உவாச:-*

சித்திரை மாதத்தில் ஷஷ்டி அல்லது சப்தமி அல்லது திரயோதசியிலாவது செய்யலாம். கௌசிக முனி கூறுகிறார்:- சிவபெருமானே (ஒப்பிலா அப்பனே) அடியேனறியாத அனங்கன் (மன்மதன்) உதித்த வரலாறு கூறுவீராக.

ஈச்வரோவாச - சிவபெருமான் கூறுகிறார்

पुरा देव्यै मया प्रोक्तं मदनोत्पत्तिकारणम् ।
महर्षे श्रूयतां तेषां श्रोतॄणां पापनाशनम् ॥ ८ ॥

*புராதேவ்யை மயா ப்ரோக்தம் மதநோத்பத்தி காரணம்!*
*மஹர்ஷே சுருயதாம் தேஷாம் ஷோத்ருணாம் பாபநாசனம்!!*

முன்பு என்னால் என் தேவியின் பொருட்டு கூறப்பட்ட காமதேவனின் தோன்றக் காரணமான கூறப்பட்டதை மாமுனிவரே கேளும்! கேட்பவர்களுடைய பாபங்களை (தீவினைப் பயன்களை) நீக்கவல்ல வலிமை வாய்ந்ததை.

मया पुरा दग्धकामो अन्यैर्यत्र पुनर्ददेत् ।
रतिप्रीतिसमत्वेन गुहेन नयनाम्बुना ॥ ९ ॥

*மயா புராதக்த காமோ அன்யைர் யத்ர புனர்ததேத்!*
*ரதி ப்ரீதி ஸமத்வேன குஹேன நயனாம் புனா !!*

என்னால் முன்பு எரிக்கப்பட்ட மன்மதன் வேறு ஒரு சமயத்தில் அவனது துணைவியான ரதிதேவியின் வேண்டுகோளுக்கும் விருப்பத் திற்கும் இணங்க மீண்டும் கருவேளான மன்மதனும் செவ்வேளான முருகப் பெருமானும் கண்ணில் வெளிப்பட்ட நீராலேயே உண்டாயினர்.

तत्र स्थाने समुत्पन्ना दिव्या दमनमंजरी ।
तत्र तद्गन्धमाघ्राय सिद्धसाध्या दिवौकस: ॥ १० ॥

*தத்ர ஸ்தானே ஸமுத்பன்னா திவ்யாதமன மஞ்சரீ!*
*தத்ர தத் கந்த மாக்ராய சித்தஸாத்யாதி வௌகச:!!*

அவ்விடத்திலேயே ரதி தேவியானவள் வெளிப்பட்டாள் அங்கு அந்நறுமணமேந்தி ஸித்தர்கள், ஸாத்யர்கள், அமரர்கள் (அனைவரும் வந்தனர்)

सर्वे देवाश्च मुनयो हृष्टा नृत्यन्ति सर्वदा ।
परस्परं चिन्तयन्तो ब्रह्माद्या प्रापुरत्र वै ॥ ११ ॥

*ஸர்வ தேவாச்ச முனயோ ஹ்ருஷ்டா ந்ருத்யந்தி ஸர்வதா |*
*பரஸ்பரம் சிந்தயந்தோ பிரம்மாத்யா: ப்ராபுரத்ரவை ||*

எல்லா தேவர்களும் முனிவர்களும் மிகவும் குதூகலமடைந்து எல்லா விதத்திலும் சந்தோஷமடைந்து ஆடிப்பாடி களித்தார்கள். ஒருவருக்கொருவர் சிந்தித்துக் கொண்டும் சந்தித்துக் கொண்டும் பிரும்மாதி தேவர்களும் அங்கேயே கூடி நின்றனர்.

गुहाय शक्रः प्रणमत् ब्रह्माणमिदमब्रवीत् ।
किमिदं त्वतिसौरभ्यं तद्वदस्व प्रभो ततः ॥ १२ ॥

*குஹாய சக்ர: ப்ரணமத் பிரம்மாண மித மப்ரவீத் |*
*கிமிதம் த்விதி ஸௌரப்யம் தத்வதஸ்வ ப்ரபோதத: ||*

முருகப் பெருமானை இந்திரன் வணங்கினார் - பிரும்மாவிடம் இவ்வாறு கூறினார். எவ்வாறு எடுத்தியம்பினாரே ஏ! ப்ரபோ பிறகு அதை கூறுங்கள் என்று

ततः प्रोवाच हृष्टात्मा ब्रह्मा सुरपतिं प्रति ।
पुरा दग्धोऽथ देवेन दीप्तो यत्र मनोभवः ॥ १३ ॥

*தத: ப்ரோவாச ஹ்ருஷ்டாத்மா பிரம்மாசுர பதிம்ப்ரதி |*
*புரா தக்தோத தேவேன தீப்தோயத்ர மனோபவ: ||*

பிறகு மன நிறைவோடு பிரும்மாவானவர் இந்திரனிடம் கூறினார். முன்பு பரமசிவனால் மன்மதன் எரிக்கப்பட்ட வரலாற்றையும் மீண்டும் அவரது துணைவியால் (வேண்டப்பட்டு) மீண்டும் தோற்றுவிக்கப்பட்ட கதையையும் எடுத்தியம்பினார்.

तत्रोत्पन्ना वनाच्चित्रा दमनी कापि कन्दली ।
यथानङ्गस्तथा सा तु जगदानन्ददायिनी ॥ १४ ॥

*தத்ரோத்பன்னாவநாச்சித்ரா தமனீகாபி கந்தளீ |*
*யதாநங்க ஸ்ததா ஸாது ஜகதானந்த தாயினீம் ||*

அங்கு வந்த ரதிதேவியானவள் கற்புக் கரசியாய் உலகத்திற்கு உற்ற இன்பத்தை உயர்ந்த இன்பமாகத் தருபவள் மன்மதனையும் தான் மட்டும் கண்டு களித்து உலகத்தவர் மன்மதன் லீலைகளை மட்டும் காணாமல் களிப்பவர்களாகச் செய்தாள்

सर्वेषामपि देवानां हृष्टं दमनपूजनम् ।
ब्रह्मेत्युक्त्वा पुरं प्रायात् दिवं सर्वे ययुस्ततः ॥ १५ ॥

*ஸர்வேஷாமபி தேவானம் ஹ்ருஷ்டம் தமனபூஜனம் |*
*பிரம்மேத்யுக்த்வா பரம்ப்ராயாத் திவம் ஸர்வே யயுஸ்தத: ||*

எல்லா தேவர்களுக்கும் மருக்கொழுந்து பூஜையானது (சித்திரைப் பருவ சித்திர விண்மீனில்) மகிழ்ச்சி தருகிறது என்று கூறி எல்லோரும் விண்ணுலகடைந்தனர்.

कुमारस्य महत्प्रीतिर्दान्तं हि मुनिपुङ्गव ।
पूर्वोक्तायां तिथौ विप्र सुमुहूर्ते सुलग्नके ॥ १६ ॥

*குமாரஸ்ய மஹத்ப்ரீதிர் தாந்தம்ஹி முனிபுங்கவ |*
*பூர்வோக்த யாந்திதௌ விப்ர ஸுமுஹூர்தே ஸுலக்னகே ||*

முனிமணியே முருகனுக்கு மிகவும் விருப்பமான இம்மருக்கொழுந்து பருவ பூசையானது பௌர்ணமி நன்னாளில் நல்ல முகூர்த்த லக்னத்தில் முன்பு கூறப்பட்டது போல செய்யற்பாலது அந்தணரே

गत्वारामं तु दमनं प्रोक्षयेदस्त्रमन्त्रतः ।
हरप्रसादात् संजातो दमनत्वं पुराकिल ॥ १७ ॥

*கத்வாராமந்து தமனம் ப்ரோக்ஷயேதஸ்த்ர மந்த்ரத: |*
*ஹரப்ரஸாதாத் ஸஞ்ஜாதோ தமனத்வம் புராகில ||*

முன்பு அரனார் திருவருளால் உண்டானது அல்லவா மருவு - மரிக்கொழுந்து (தமனம்) அதை அஸ்திரமந்திரத்தால் நீர் மேலெழுந்து விழும்படிச் செய்து

सुब्रह्मण्यार्चनायैव नेतव्योऽपि प्रसीद मे ।
एवं दमनमामन्त्र्य संग्राह्य सदनं व्रजेत् ॥ १८ ॥

*சுப்ரம்மண்யார்ச்சனாயைவ நேதவ்யோஸி ப்ரஸீதமே!*
*ஏவம்தமன மாமந்த்ர்ய ஸங்க்ராஹ்ய பவனம் வ்ரஜேத்!!*

முருகன் திருவடியை அர்ச்சனையால் அடைய இருக்கும் ஏ! மரிக்கொழுந்தே எனக்கும் நீ அருள்வாயாக

देवाग्रे स्थण्डिलं कृत्वा तावत्तद्दमलिकाम् ।
कृतनित्यविधि: पश्चात् कुण्डे वा स्थण्डिलेऽपि वा ॥ १९ ॥

*தேவாக்ரே ஸ்தண்டிலம் க்ருத்வா தாவத் தத்பத்த மாலிகாம்!*
*க்ருத நித்ய விதி: பச்சாத் குண்டேவா ஸ்தண்டிலேபிவா!!*

முருகனுக்கு முன்பு சிறுமேடை அமைத்து அதில் மருக்கொழுந்தினால் அமைத்த மாலைகளை வைத்து அவைகள் சுத்திகரிக்கப்படும் வரையில் இருக்கப்பட வேண்டும்) பிறகு குண்டம் (ஹோம) அமைத்தோ அல்லது தரையிலேயே சிறுமேடையிலோ

विधिनाग्निं समुत्पाद्य समृद्धं तु हुताशने ।
पलाशसमिधान्नाज्यलाजान् सक्तुतिलानि च ॥ २० ॥

*விதினாக்னிம் ஸமுத்பாத்ய ஸம்ருத்தேது ஹுதாசநே!*
*பலாச ஸமிதாநாஜ்ய லாஜான் ஸக்து திலானிச!!*

முறைப்படி அக்னியை பூசித்து புரசு (முருக்கு) சமித்துகளாலும், நெய்யினாலும் பொரிகளாலும், சத்துமாவு, எள்ளினாலும் நிறைவாக வேள்வி செய்து

मूर्ति चैवाङ्गमन्त्रैश्च स्कन्दसूक्तेन होमयेत् ।
त्रिसप्तकृत्वा संपातां तथैव जुहुयात् गुरु: ॥ २१ ॥

*மூர்த்திஞ்சை வாங்க மந்த்ரைச்ச ஸ்கந்த தூக்தேந ஹோமயேத்!*
*த்ரிசப்த க்ருத்வா சம்பாதாம் ததைவ ஜுஹுயாத் குரு:!!*

முருகன் மூலமந்திரங்களாலும் ஸ்கந்த சூக்தத்தினாலும் பிரம்மாங்க மந்திரங்களாலும் மும்முறையோ, ஏழுமுறையோ செய்து தமன மாலைகளுக்கு (மரிக்கொழுந்து மாலைகளுக்கு (சம்பாதாஹுதி) மந்திரத்தின் முடிவில் (ஸ்வாஹா) ஸ்வா என்று தீயிலும் ஹா என்று மாலைகளிலும் ஆசார்யர் செய்தல் வேண்டும்.

ततो नित्यावसाने तु स्नपनं कल्पयेद्बुध: ।
अभ्यर्च्य गन्धपुष्पाद्यैनिवेद्यान्तं क्रमाद्ददेत् ॥ २२ ॥

*ததோ நித்யா வசாநேது ஸ்நபநங்கல்பயேது புத:!*
*அப்யர்ச்சய கந்த புஷ்பாத்யை: நிவேத்யாந்தம் க்ருமாத்ததேத்!!*

பிறகு நித்ய பூஜையின் முடிவில் ஸ்நபந காலங்களில் முருகனை அர்ச்சித்து (சந்தனம்) (மலர்கள் முதலியவைகளாலும்) நிவேதனம் வரை முறைப்படி செய்ய வேண்டும்.

मुखवासं च ताम्बूलं गुहाय च हृदा ददेत् ।
हिमतोयेन संमिश्रैर्धूपयेत्तु गुरू: पुन: ॥ २३ ॥

*முகவாஸஞ்ச தாம்பூலம் குகாயச ஹ்ருதாததேத்!*
*ஹிமதோயேன ஸம்மிச்ரைர்தூபயேத்து குரு: புந:!!*

பிறகு முகவாசம் என்னும் வாசனைப் பொருள்களோடு தாம்பூலத்தை ஹிருதய மந்திரத்தால் முருகனுக்கு அர்ப்பணித்து பன்னீர் தெளித்து மணங்கமழும்படி குருவான ஆசார்யர் செய்ய வேண்டும்

ततः पुष्पग्रहं कार्यं नानापुष्पैः सुशोभनैः ।
दमनमालां च पात्रस्थां वाहयित्वा द्विजेन तु ॥ २४ ॥

*தத: புஷ்ப க்ரஹங்கார்யம் நானாபுஷ்பைஸ்ச சோபனை:!*
*தமன மாலாஞ்ச பாத்ரஸ்தாம் வாஹயித்வா த்விஜேநது!!*

பிறகு மலர்மாலைகள் பல மலர்களால் மணப்பவைகளையும் பாத்திரத்தில் வைக்கப் பட்டுள்ள மரிக்கொழுந்து மருவுமாலை களை அந்தணரை எடுத்துக் கொள்ளச் சொல்லி

सर्वातोद्यसमायुक्तं कृत्वा धामप्रदक्षिणम् ।
द्वारेशानर्च्य देवाग्रे दामं न्यस्त्वासनोपरि ॥ २४ ॥

*ஸர்வாதோத்ய சமாயுக்தம் க்ருத்வாதாம ப்ரதக்ஷிணம்!*
*த்வாரேசாநர்ச்ய தேவாக்ரே தாமன்ய ஸ்த்வாஸநோபரி!!*

எல்லா மங்கள வாத்யங்களோடு ஆலயத்தை வலம் வந்து துவாரபாலகர்களை மலர்தூவி வழிபட்டு முருகனுக்கு முன் பெரியதட்டில் ஒரு ஆசனத்தில் மேல் வைத்து

आसनावरणादीनि संपूज्य च यथाविधि ।
मूर्धादिपादपर्यन्तं दामैर्भूष्य विशेद् गुरुः ॥ २६ ॥

*ஆஸநாவரணாதீனி சம்பூஜ்ய ச யதா விதி!*
*மூர்த்தாதி பாத பர்யந்தம் தாமைர்பூஷ்ய விசேத்குரு:!!*

ஆஸந மூர்த்தி மூல ஆவரணங்களையும் நன்கு முறைப்படி பூசித்து திருமுடி முதல் திருவடி வரை மரிக்கொழுந்து மாலைகளாலும் சரங்களாலும் தனிக் கொத்துக்களாலும் முருகனின் அங்கங்களில் படும்படி அழகுற அலங்கரிக்க வேண்டும் ஆசார்யர்

सैकत्रिंशत्कलान्यासं मातृकामपि विन्यसेत् ।
प्रभूतहविषं दद्यात् यथावित्तानुसारतः ॥ २७ ॥

*ஸைகத்ரிம்சத் கலாந்யாஸம் மாத்ருகாமபி வின்யஸேத்!*
*ப்ரபூத ஹவிஷந்தத்யாது யதா வித்தானு சாரத:!!*

முப்பத்தோரு எண்ணிக்கையுள்ள கலை நியாஸம் ஐம்பத்தோரு வடமொழி மஹாமந்திர எழுத்துக்களால் ஆன மந்திர நியாஸத்தையும் அர்ச்சனைகளாக செய்து தாராளமான அளவில் உயர்ந்த நிவேதனப் பொருள்களை முடிந்த அளவு நிவேதித்து

विज्ञापयेद्गुरुः पश्चात् वाञ्छितार्थफलप्रदम् ।
न्यूनं वाप्यतिरिक्तं वा भगवन् यन्मया कृतम् ॥ २८ ॥

*விக்ஞாபயேத் குரு: பச்சாத் வாஞ்சிதார்த்த பலப்ரதம்!*
*ந்யூனம் வாப்ய திரிக்தம்வா பகவன் யன்மயாக்ருதம்!!*

ஆசார்யர் விரும்பும் பயன்களை அடைய நன்கு பிரார்த்தித்து வேண்டுதல் செய்து என்னால் செய்த இப் பூஜையில் அறியாமையாலோ, தெரியாமையாலோ, புரியாமையாலோ, குறை நிறைகள் நிகழ்ந்திருப்பின் அவைகளை பொருத்தருள்க என மன்னிப்பு வேண்ட வேண்டும்.

सर्वं तदस्तु संपूर्णं महासेन कृपाम्बुधे ।
रात्रौ दाम विसृज्याथ स्कन्दसूक्तेन पूजयेत् ॥ २९ ॥

*ஸர்வந்த தஸ்து சம்பூர்ணம் மஹாசேன க்ருபாம்புதே!*
*ராத்ரௌ தாம விஸ்ருஜ்யாத ஸ்கந்த சூக்தேந பூஜயேத்!!*

பெரிய தேவசேனைத் தலைவரே கருணைக் கடலே யாவும் நிறை வை எய்தியதாக ஏற்றுக் கொள்ள வேண்டி இரவில் (இரவு இறுதிப்பூசையில்) மருக்கொழுந்துகளை நீக்கி ஸ்கந்த சூக்தம் எனும் திருமறையால் பூசிக்க வேண்டும்.

स्नपनं तत्र कर्तव्यं प्रभूतहविषं ददेत् ।
दान्तं निवेदितं सर्वं सुमित्राय प्रदापयेत् ॥ ३० ॥

*ஸ்நபனம் தத்ர கர்தவ்யம் ப்ரபூத ஹவிஷந்ததேத் !*
*தாந்தன் நிவேதிதம் சர்வம் சுமித்ராய ப்ரதாபயேத் !!*

ஸ்நபனம் (திருக்குடமுழுக்கு) அங்கு செய்யப்பட வேண்டும் மறுபடியும் மிகுந்த சுவையும் அளவுமுடைய நிவேதனம் நிவேதிக்கப்பட்டு (எல்லா பக்தர்களின் இதய குகையில் இடம்பெற்றுள்ள முருகன் திருப்தியடையும்படி விநியோகிக்க வேண்டும்) முருகனுக்கு முழுதும் அலங்கரிக்கப்பட்ட மருக்கொழுந்து பிரஸாதங்களையும் அவருடைய சண்டீசனான சுமித்ர சண்டிகேஸ்வரருக்கு அர்ப்பணித்து (அவரிடம் முருக பூசையின் முழுப் பயனையும் வேண்டிப் பெற வேண்டும்.

अकृत्वैवं विधानेन देशिको दोषभाग्भवेत् ।
तदन्ते चोत्सवं कुर्यात्सर्वालङ्कारशोभितम् ॥ ३१ ॥

*அக்ருத்வைவம் விதாநேந தேசிகோ தோஷ பாக்பவேத் !*
*ததந்தே சோத்ஸவம் குர்யாது சர்வாலங்கார சோபிதம் !!*

ஆசார்யரானவர் (பூஜகர் அர்ச்சகர்) (நேரம், காலம், திரவியம், மந்த்ரம்) இவைகளைத் தவறாமல் மறவால் செய்யத் தவறினால் குற்றங்கள் மலிய நேரிடும். பிறகு உற்சவரை அலங்கரித்து ஆலயம் வலம் வருதலையோ மாடவீதி வலம் வருதலையோ செய்விக்க வேண்டும்.

प्रतिसंवत्सरं दान्तं कारयेदुत्सवोत्तमम् ।
अश्वमेधफलं भुङ्क्त्वा सोऽन्तं स्कन्दपुरं व्रजेत् ।
दमनारोहणं प्रोक्तं श्रृणु शीतोपचारकम् ॥ ३२ ॥

*ப்ரதி சம்வத்ஸரம் தாந்தம் காரயேத்த்ஸ வோத்தமம் !*
*அச்வ மேத பலம் புங்க்த்வா சோந்தே ஸ்கந்தபுரம் வ்ரஜேத் !!*
*தமநாரோபணம் ப்ரோக்தம் ச்ருணு சீதோப சாரகம் !!*

பிரதி வருஷமும் (ஆண்டுதோறும்) சித்திரைப் பருவமாகிய சித்திரை விண்மீன் கூடிய நிறைநிலா நாளில் இத்திருவிழா இயற்றற்பாலது. அஸ்வமேதயாகம் எனும் யாகம் செய்த பலனானது இவ்வழிபாட்டுத் திருவிழாவால் அடையப் படுகிறது. இவ்வாறு இயற்றுபவர்கள் அனைவரும் நிறைவாழ்வை நில உலகில் பெற்று முருகனூரில் முழுமையெய்துவர் இந்த மருக்கொழுந்து வழிபாட்டுக்கு அடுத்து வைகாசி மாதத்தில் பௌர்ணமியில் விசாக நக்ஷத்திரத்தில் நடத்த வேண்டிய சீத உபசாரம் பற்றி கேட்பீராக.

इति चैत्रमासपूजाविधिः

இது (சைத்ர மாஸ பூஜை) சித்திரை மாத சித்திரை கூடிய நிறைநிலாப் பூஜையாகும்.

## ॥ वैशाखमासपूजाविधिः ॥

வைசாகமாஸபூஜா விதி:

वैशाखे तु विशाखर्क्षे कुर्याच्छीतोपचारकम् ।
नित्यपूजावसाने तु नैमित्तिकमथाचरेत् ।
नवभिस्तु घटैः शुद्धैः शीतोदैः स्नपनान्वितैः ॥ ३३ ॥

*வைசாகே து விசாகர்க்ஷே குர்யாச்சீதோபசாரகம் !*
*நித்ய பூஜா வஸாநேது நைமித்திக மதா சரேத் !*
*நவபிஸ்து கடைச்சுத்தை : சீதோதைஸ்ந பநாந்விதை: !*

வைகாசி மாதத்திலே விசாக விண்மீன் கூடிய பௌர்ணமி நிறை நாளில் சீத உபசாரம் எனும் குளிர்விக்கும் உபசாரம் செய்க. தினப்பூசையின் இறுதியில் சிறப்பு பூசையை இயற்றுக. புது ஒன்பது கும்பங்களில் சுத்தமான குளிர்ச்சியான நீரை நிரப்பி அதில்

नानागन्धै समोपेतै: स्नापयेदसुरान्तकम् ।
कर्पूरकुङ्कुमोपेतैर्हिमाम्बुयुतचन्दनै: ॥ ३४ ॥

*நாநா கந்தை ஸ்ஸமோபேதை*
*ஸ்தாபயேதசுராந்தகம் !*
*கற்பூர குங்குமோபேதைர் ஹிமாம்புயுத சந்தநை:!*

எல்லா நறுமணங்களோடும் சந்தனம், பச்சைக் கற்பூரம், பன்னீர், குங்குமப்பூ சேர்த்து அசுரர்களின் அந்தகனான முருகப் பெருமானுக்கு (வைகாசி மாதப் பூஜை செய்வதற்காக) ஸ்தாபிக்க வேண்டும். (நிறுவுதலை செய்ய வேண்டும்.)

मूर्धादिपादपर्दन्तमालिलिम्बेन्मुखं विना ।
सौरभ्यपुष्पैर्विविधैस्तत्क्षणप्रतिवोधितै: ॥ ३५ ॥

*மூர்த்தாதி பாத பர்யந்த மாலி லிம்பேந்முகம் விநா !*
*ஸௌரப்ய புஷ்பைர் விவிதை ஸ்தது க்ஷண ப்ரதி*
*போதிதை:!*

முடி முதல் அடி வரை மணப் பொருந்திய சந்தனத்தால் முகம் நீங்கலாகப் பூச வேண்டும். மணம்மிகு மலர்களையும் அதன்மேல் அழகுற அமைத்தல் வேண்டும்.

यथा निरन्तरं विप्र तथैवाच्छादयेद्गुहम् ।
कृष्णागरुभवैर्धूपैर्मृष्टैराजप्रकल्पितै: ॥ ३६ ॥

*யதா நிரந்தரம் விப்ர ததைவாச்சாதயேத் குஹம் !*
*க்ருஷ்ணாக ருபவைர் தூபைர் ம்ருஷ்டை, ராஜ*
*ப்ரகல்பிதை:!*

அருமறைகள் நிறை அந்தணர்கள் நிலை பெற்றிருக்க வேண்டி மணம்மிகு மலர்கள் சந்தனங்கள், நிறை மணிக்காட்சியாக செய்வித்து கஸ்தூரி, அகரு, முதலிய உயர்ந்த தூபங்காட்டி, தீபங்காட்டி, அரசர்கள் அமுது செய்கிறார் போல உள்ள உயர்ந்த முறையில் நிவேதனங்களை தயாரிக்கச் செய்து

कर्पूरवर्तिभिर्दीपै: पायसै: प्रचुरैरपि ।
जपैर्वेदस्वरैर्गीतैर्वाद्यै: सूक्तैर्मनोहरै: ॥ ३७ ॥

*கற்பூர வர்திபிர் தீபை: பாயசை: ப்ரசுரைர பி !!*
*ஜபைர்வேதஸ்வரைர் கீதைர் வாத்யைஸ் ஸூக்தைர்*
*மநோஹரை:!*

மனங்கள் நிறைந்து மணங்கள் நிறைந்து ஒரே மனதோடு முருகனின் முழுத் திருவருளையும் முயன்று அடையுமாப் போல பாயசம் ஈறாகப் பல்வேறு உணவு வகைகளையும் முறையாக தயாரித்து வேத் மந்த்ர மூல மந்த்ர காயத்ரி மந்த்ர மாலா மந்திரங்களாலும் தோத்தரித்து

वीणावेणुरवैस्तोत्रैर्नमस्कारप्रदक्षिणै: ।
पूजयेत्प्रत्यहं स्कन्दं भक्त्या सप्तदिनावधि ॥ ३८ ॥

*வீணா வேணுரவை ஸ்தோத்ரைர் நமஸ்கார*
*ப்ரதக்ஷிணை:!!*
*பூஜயேத் ப்ரத்யஹம் ஸ்கந்தம் பக்த்யா ஸப்த*
*திநாவதி!*

புல்லாங்குழல் வீணை தோத்திரங்கள் (நமஸ்க்கார பிரதக்ஷிணங்கள்) நிலந்தோய வீழ்ந்து வலம் வந்து தினசரி பக்தி மனங்கமழ தொடர்ந்து ஏழு நாட்கள் வரை செய்க

एवं य: कुरुते मर्त्य: पुत्रपौत्रविवर्धनम् ॥ ३९ ॥
यान्यान् कामयते कामान् तांस्तान् ध्रुवमवाप्नुयात् ।
वैशाखपूजनं प्रोक्तं वसन्तोत्सवमुच्यते ॥ ४० ॥

*ஏவம் ய:குருதே மர்த்ய: புத்ர பௌத்ர விவர்த்தநம் !!*
*யாந்யாநு காமயதே காமாநு தாம்ஸ்தாநு*
*த்ருவமவாப்நுயாத் !!*
*வைசாக பூஜநம் ப்ரோக்தம் வஸந்தோத்ஸவ*
*முச்யதே !!*

யார் இவ்வாறு முறையாக வழிபடுகிறாரோ அவர்கள் எப்படிப்பட்ட விருப்பங்களைக் கோருகிறார்களோ அவையனைத்தும் அவர்கள்

விருப்பப்படியே வாழையடி வாழையாக அவர்களது மரபு பிள்ளைகள், பேரன்கள் என்று இடைவிடாத குலப் பெருமையையும் குல வழித் தோன்றல்களையும் நிச்சயமாக அடைவர்

इति वैशाखमासपूजाविधि:

இது வைசாக மாஸ பூஜை விதியாகும்.

## ॥ वसन्तोत्सवविधि: ॥

**வஸந்தோத்ஸவ விதி:**

चैत्रे वैशाखमासे तु शुक्लषष्ठ्यां समाचरेत् ।
प्रतिसंवत्सरं कुर्यात् सर्वलोकहिताय वै ।
शुक्लपक्षे शुभर्क्षे च सुमुहूर्ते सुवारके ॥ ४१ ॥

*சைத்ரே வைசாகமாசேது சுக்ல ஷஷ்ட்யாம்:*
*ஸமாசரேத் !*
*ப்ரதி ஸம்வத்ஸரங்குர்யாத் ஸர்வலோக ஹிதாயவை !*
*சுக்ல பக்ஷே சுபர்க்ஷேச ஸுமுஹூர்தே*
*ஸுவாரகே !!*

வசந்தோத்ஸவமென்பது வசந்த ருதுவின் இரு மாதங்களான சித்திரை வைகாசி இவைகள் ஷஷ்டி தினத்தில் கொடியேற்றம் செய்து முதல் நாள் திருவிழா துவங்கினால் பத்தாவது நாள் தீர்த்த வாரி சித்திரையில் சித்திரையிலும் வைகாசியில் விசாகத்திலும் நிறைவுறும். ஆண்டுதோறும் அகில உலகமும் நன்மைகள் பெற செய்யப்பட வேண்டும். வளர்பிறையில் உயர்விண்மீனில் நல்லோரையில் நன்னாளில் துவங்கத் தக்கது.

पूर्वेद्युरङ्कुराण्यर्प्य कौतुकं बन्धयेन्निशि ।
स्नपनं कल्प्य देवेशं पूर्वोक्तविधिनार्चयेत् ॥ ४२ ॥

*பூர்வேத்யு ங்குராண்யர்ப்ய கௌதுகம் பந்தயேந்நிசி!*
*ஸ்நபநம் கல்ப்ய தேவேசம் பூர்வோக்த விதி*
*நார்சயேத் !!*

!

முதல்நாள் இரவு முளைப்பாலிகை யிடுதலைத் தொடர்ந்து மறுநாள் இரவு கங்கணம் கட்டிக் கொள்ளுதல் எனும் ரக்ஷாபந்தனக் கிரியை செய்து கொண்டு திருவிழா யாகாலயத்தில் முருகனை கும்பத்தில் புனல் வடிவிலும் குண்டத்தில் அனல் வடிவிலும் மூல உற்சவர் பிம்பத்திலும் முறையாக அர்ச்சித்து வழிபட வேண்டும்.

वसन्तं तु भवेच्छुद्धैर्दिव्यगन्धैर्मनोहरै: ।
नानापुष्पैश्च दामैश्च कुर्यात् पुष्पग्रहं बुध: ॥ ४३ ॥

*வஸந்தம் து பவேச்சுத்தைதர்*
*திவ்யகந்தைர்மநோஹரை:!*
*நாநா புஷ்பைஸ்ச தாமைஸ்ச குர்யாத் புஷ்ப கிரஹம்*
*புத:!!*

அறிவுமிகு அர்ச்சகரானவர் பூந்தோட்ட மெனும் நந்தவனம் நிறுவி அதில் மணமிகு மலர்களை நல்கும் பூச்செடி, பூக்கொடி, பூமரங்களை உயிர்ப்பித்து வசந்த காலமான சித்திரை வைகாசியில் மட்டுமே மலரக்கூடிய மணம்மிகு மலர்களை உற்பத்தி செய்து மணம் மிகு மணம் மிகு மலர்களால் அழகிய மலர் தொடுப்புக்களாம் மணமிகு மலர்மாலைகளைத் தொடுத்து மாலைகட்டி பூமாலைகளைப் புனைந்து அணிவித்து மகிழ்வித்து மகிழ வேண்டும்.

पुष्पमालाञ्च पत्रेषु निक्षिप्य कवचेन तु ।
देवाग्रे स्थण्डिलं कृत्वा हृदा संप्रोक्ष्य चास्त्रत: ॥ ४४ ॥

*புஷ்பமாலாஞ்ச பத்ரேஷு நிக்ஷிப்ய கவசேநது!*
*தேவாக்ரே ஸ்தண்டிலம் க்ருத்வா ஹ்ருதாஸம்*
*ப்ரோக்ஷ்ய சாஸ்த்ரத:!!*

மலர் மாலைகளை கவச மந்திரத்தால் அணிவித்து பத்திரங்களால் (இலைகளால்) அதே மந்திரத்தினால் அர்ச்சிக்க வேண்டும்.

முருகனுக்கு முன்பு சிறுமேடை அமைத்து இருதய மந்திரத்தாலும் அஸ்த்ர மந்திரத்தாலும் இயன்ற அளவு நீர் மேலெழுந்து விழுமாப்போல செய்க

अर्चयेद्धूपदीपं च कृत्वा धाम प्रदक्षिणम् ।
ततो मालां समुद्धृत्य शङ्खतुन्दुभिनि:स्वनै: ॥ ४५ ॥

*அர்ச்சயேத் தூப தீபஞ்ச க்ருத்வா தாம ப்ரதட்சிணம் !*
*ததோமாலாம் சமுத்ருத்ய சங்கதுந்துபி நிச்வநை: !!*

சங்க வாத்தியம் துந்து பி வாத்யம் (திருச் சின்னம்) இவைகள் முழங்க தூபதீப நிவேதனங் காண்பித்து அர்ச்சித்துப் பூஜிக்க வேண்டும். பிறகு மாலையை எடுத்து

विन्यसेत् स्कन्दमन्त्रेण मूलबेरस्य मूर्धनि ।
कृत्वागरुप्रधूपं च दीपं चैव प्रदापयेत् ॥ ४६ ॥

*விந்யஸேத் ஸ்கந்த மந்த்ரேண மூலபேரஸ்ய மூர்த்நி !*
*க்ருத்வா கரு ப்ரதூபஞ்ச தீபஞ்சைவ ப்ரதாபயேத் !*

முருகனின் மூல மந்திர உச்சரிப்போடு முருகனின் மூல பேர (மூலஸ்தான பிம்ப மூர்த்னி) திருமுடியில் அணிவித்து அகரு என்னும் நகராவாசனைப் பொருள்களை இட்டுத் தீவிகைகள் நீங்கி ஞான அறிவுச் சுடரை வளர்க்கும் தீபங்காட்டிப் பூசிக்க வேண்டும்.

स्नाप्यचोत्सवबेरं तु भूषयेद्भूषणार्हकै: ।
स्वर्णराजतताम्राद्यैर्दोलां कल्प्य विधानत: ॥ ४७ ॥

*ஸ்நாப்யசோத்ஸவபேரம் து பூஷயேத் பூஷணார்ஹகை: !*
*ஸ்வர்ணராஜத தாம்ராத்யை: டோலாங்கல்ப்ய விதாநத: !!*

முறைப்படி மூலபேரம் போல் உற்சவ சலமூர்த்தியான முருகன் பிம்பத்தை அபிஷேகித்து உரிய அணிகலன்களால் அலங்கரித்து தங்கம் வெள்ளி, தாமிரமாகிய, ஏதேனும் ஒரு ஊஞ்சல் நிறுவி

कूटपञ्जरसंयुक्तां सर्वालंकारशोभिताम् ।
डोलामारोप्य देवेशं शक्तिद्वयसमायुतम् ॥ ४८ ॥

*கூட பஞ்சர ஸம்யுக்தாம் சர்வாலங்கார சோபிதாம் !*
*டோலா மாரோப்ய தேவேசம் சக்தித்வய ஸமாயுதம் !!*

கூடு போன்ற எல்லா அழகுகளும் கூடிய ஊஞ்சலில் முருகப் பெருமானை இரு தேவியரோடு ஏற்றுவித்து

वाद्यैर्गीतैश्च नृत्तैश्च स्तोत्रैर्वेदपुराणकै: ।
डोलाक्रीडां तत: कृत्वा देवस्याचमनं ददेत् ॥ ४९ ॥

*வாத்யைர் கீதைஸ்ச ந்ருத்தைஸ்சஸ்தோத்ரைர்வேத புராணகை: !*
*டோலாகீடாந்தத: க்ருத்வா தேவஸ்யாசமநந்ததேத் !!*

வாத்யங்கள் முழங்க கீதங்கள் ஒலிக்க. ஆடல்கள் சிறக்க துதிகள் புராணங்கள் தழ ஊஞ்சல் சேவையை செய்வித்து முருகனுக்கு மும்முறை ஆசமனம் கொடுக்க

नालिकेरोदकं चैव पानकं विविधं तथा ।
अपूपान् विविधांश्चैव पायसैर्व्यञ्जनैर्युतम् ॥ ५० ॥

*நாளிகேரோதகஞ்சைவ பாநகம் விவிதந்ததா !*
*அபூபாங்விவிதாம்சைவ பாயஸைர்வ்யஞ்சநைர்யுதம் !!*

இளநீர், பானகத்தோடு பலவிதமான வடை அதிரஸம் போன்ற (ஐந்து வகை) பக்ஷணங்களுடன் பருப்பு பாயஸம் போன்ற எல்லாவகை அலங்கார சமையல் வகைகளோடும்

मुद्गान्नं कृसरान्नं च गुडान्नं सूपसंयुतम् ।
प्रियङ्गुपिष्टं मधुगत् वल्लिकन्दं सपक्वकम् ॥ ५१ ॥

*முத்கான்னம் க்ருஸராந்நஞ்ச குலான்னம் துபஸம்யுதம் !*
*ப்ரியங்குபிஷ்டம் மதுமத் வள்ளிகந்தம் ஸபக்வகம் !!*

வெண்பொங்கல், எள்சாதம் - வெல்ல அன்னம் - பருப்பு அன்னம், தினை மாவு, தேன் வள்ளிக்கிழங்கைப் பக்குவமாக சுட்டோ வேகவைத்தோ சுவைபட

नालिकेराम्बुपनसं फलपुण्ड्रेक्षुदण्डकैः ।
दद्याद्विधानतस्तत्र ताम्बूलमपि दापयेत् ॥ ५२ ॥

*நாலிகேராம்பு பனஸம் பல புண்ட்ரேக்ஷு*
*தண்டகை:/*
*தத்யாத் விதானதஸ்தத்ர தாம்பூலமபி தாபயேத்!!*

இளநீர் பலாப்பழம் கருந்தண்டு துண்டுகள் போன்ற வற்றையும் நிவேதித்து உயர்ந்த வாசனை பொருந்திய கொழுந்து வெற்றிலைப் பாக்குடன் நிவேதிக்க வேண்டும்.

सर्वातोद्यसमायुक्तं नानाच्छत्रसमावृतम् ।
नानाध्वजसमोपेतं चामरैर्व्यजनैर्युतम् ॥ ५३ ॥

*ஸர்வாதோத்யஸமாயுக்தம் நாநாச்சத்ரஸமாவ்ருதம் /*
*நானா த்வஜ ஸமோபேதம்*
*சாமரைர்வ்யஜனைர்யுதம்!!*

எல்லா வாத்யங்களும் இனிதே ஒலிக்க எல்லா வகையான குடை, கொடி, சாமரங்கள் பக்தஜனங்கள் புடை சூழ

ग्रामप्रदक्षिणं कुर्यात् राजचिह्नैः समस्तकैः ।
परिवेषं क्रमाद्गत्वा मन्दीभूते दिवाकरे ॥ ५४ ॥

*க்ராம ப்ரதக்ஷிணம் குர்யாத்*
*ராஜசிஹ்நைஸ்ஸமஸ்தகை!*
*பரிவேஷம் க்ருமாத் கத்வா மந்தீ பூதே திவாகரே!!*

கிராம பிரதக்ஷிணஞ் செய்து ராஜ மரியாதைகள் மிளிர வீதியுலாப் போந்து மாலையில்

पल्लवैर्मञ्जरीभिश्च फलैः पुष्पैः समृद्धिकैः ।
आस्थानमण्डपोपेते सर्वालंकारसंयुते ॥ ५५ ॥

*பல்லவைர் மஞ்சரீபிஸ்ச பலை:*
*புஷ்பைஸ்ஸம்ருத்திகை!*
*ஆஸ்தான மண்டபோபேதே சர்வாலங்கார*
*சம்யுதே!!*

கொழுந்துகளோடும், கொத்துக்களோடும் மலர்களோடும், ஆஸ்தான மண்டபத்தை வந்தடைந்து

नृत्तगीतादिसंयुक्ते जलवापीसमीपके ।
देवोद्याने नदे चैव सर्वालंकारसंयुते ॥ ५६ ॥

*ந்ருத்த கீதாதி ஸம்யுக்தே ஜலவாபீ சமீபகே!*
*தேவோத்யானேன தேவைஸ்ச சர்வாலங்கார*
*சம்யுதே!!*

ஆடல் பாடல் நிறைவோடு நீர்நிலைகள் சமீபத்தில் நந்தவனப் பூந்தோட்டத்தில் எல்லா அழகுடனும்

अकुर्वंश्च जलक्रीडान् धारायन्त्रैर्गुणोत्तमाः ।
केचित् स्वर्णमयैः श्रृङ्गैः रौप्यताम्रविनिर्मितैः ॥ ५७ ॥

*அகுர்வஞ்ச ஜல க்ரீடான் தாராயந்த்ரைர்*
*குணோத்தமா:!*
*கேசித் ஸ்வர்ணமயை ஸ்ருங்கை ரௌப்ய தாம்ர*
*வினிர்மிதை:!!*

சிலர் தங்கமயமான கொம்புகளாலும், அல்லது வெள்ளிமயமான கொம்புகளாலும், நீர் நிலையில் விளையாட்டை செய்வர்.

स्त्रियश्चाप्सरसः सर्वा नरा गन्धर्वकिनराः ।
एवं कृत्वा जलक्रीडां मण्डपे देवमानयेत् ॥ ५८ ॥

*ஸ்த்ரியஸ்சாப்ஸரஸஸ்சர்வா நராகந்தர்வ கின்னரா:!*
*ஏவங்க்ருத்வா ஜலக்ரீடாம் மண்டபே*
*தேவமானயேத்!!*

தேவ உலகத்துப் பெண்களும் மனிதப் பெண்களும், கின்னரர்களும் இவ்வாறு நீர்நிலை விளையாட்டைச் செய்து நீராழியின் நடுவே உள்ள மண்டபத்திற்கு முருகனை எழுந்தருளச் செய்வர்.

स्नपनं कल्प्य विधिना पूजयेदुपचारकै: ।
देव: समागतं स्तुत्वा वसनं कुसुमायुधम् ॥ ५९ ॥

*ஸ்நபநம் கல்ப்ய விதினா பூஜயேத் உபசாரகை:।*
*தேவஸ்ஸமாகதம் ஸ்துத்வா வஸநங்குசுமாயுதம்॥*

அங்கு ஸ்நபனம் எனும் குடவழிபாடு குன்றாது ஆற்றி பக்தர்கள் கூட்டத்தினர் நல்ல ஆடை, மலர்களை முருகனுக்கு அன்புக் காணிக்கையாக செலுத்தி மகிழ்வர்.

नीलदूर्वाङ्कुरश्याममतिसौन्दर्यशोभितम् ।
रतिप्रीत्युभयोर्मध्ये पुष्पसायकचापधृत् ॥ ६० ॥

*நீல தூர்வாங்குரச்யாமம் அதி ஸௌந்தர்ய சோபிதம்।*
*ரதி ப்ரீத்யுபயோர்மத்யே புஷ்பஸாயக சாபத்ருத்॥*

கரும்பச்சை நிறத்துடனும் அதிக அழகுடைய மன்மதனும் அவனுடைய அழகுமிகு பத்தினியுமான ரதிக்கும் நடுவில் மலரம்பும் கரும்பு வில்லும் கொண்டு

पुष्पमण्डलमध्ये तु रम्योद्याने समर्चयेत् ।
ओं नम: पञ्चबाणाय जगदाह्लादकारिणे ॥ ६१ ॥

*புஷ்ப மண்டல மத்யே து ரம்யோ த்யானே*
*சமர்ச்சயேத்।*
*ஓம் நம: பஞ்சபாணாய ஜகதாஹ்லாதகாரிணே॥*

அழகான பூந்தோட்டத்தில் மலர் மண்டலங்களின் மத்தியில் (இவ்வாறு அர்ச்சிக்க வேண்டும்) வணக்கத்திற்கும் போற்று தலுக்குமுரிய மலர்க்கணைகள் ஐந்துடைய மன்மதரே உலகனைத்தையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்த வல்லவரே

मन्मथाय जगन्नेत्रे रतिप्रीतिप्रियाय च ।
पुण्डरीकाक्षपुत्राय नमस्ते मीनकेतवे ॥ ६२ ॥

*மன்மதாய ஜகந்நேத்ரே ரதிப்ரீதி ப்ரியாய ச।*
*புண்டரீகாக்ஷ புத்ராய நமஸ்தே மீனகேதவே॥*

மனத்திலுதிப்பவருக்கும் உலகக் கண்ணாகப் போற்றப்படுபவருக்கும் ரதிதேவியின் உயர் உயிர் நாயகனானவர்க்கும் தாமரைக் கண்ணனான திருமாலின் தவப் புதல்வருக்கும், மீன் கொடி மன்னர்க்கும் வணக்கங்கள்

मन्मथाय पदं पूर्वं विद्महे तदनन्तरम् ।
कामदेवाय संयुक्तं धीमहीति पदं तत: ॥ ६३ ॥

*மன்மதாய பதம் பூர்வம் வித்மஹே ததநந்த்ரம்।*
*காமதேவா ஸம்யுக்தம் தீமஹி தீப தந்தத:॥*

மன்மதாய வித்மஹே காமதேவாய தீமஹி। தந்நோ நங்கப்ரசோதயாத்। மன்மதாய வித்மஹே என்று பதம் முன்பாகவும் வித்மஹே என்ற பதம் இரண்டாவதாகவும் காமதேவாய என்ற பதம் மூன்றாவதாகவும்

तन्नोऽनङ्गपदस्यान्तं प्रयोक्तव्यं प्रचोदयात् ।
चतुर्विंशाक्षरीप्रोक्ता गायत्री मदनस्य तु ॥ ६४ ॥

*தந்நோநங்க பதஸ்யாந்தே ப்ரயோக்தவ்யம்*
*ப்ரசோதயாத்।*
*சதுர்விம்சாக்ஷரீ ப்ரோக்தா காயத்ரீ மதநஸ்ய து॥*

தந்நோ அநங்க என்ற பதம் நான்காவதாகவும் ப்ரசோதயாது என்ற பதம் ஐந்தாவதாகவும் இருபத்து நான்கு அக்ஷரங்களை கொண்டது காமதேவனான மன்மத காயத்ரீ மந்தரமாகக் கூறப்படுகிறது.

दक्षे शैवलपिण्डेन रतिं पूर्वं समर्चयेत् ।
मञ्जर्या सहकारस्य वामे प्रीतिं प्रपूजयेत् ॥ ६५ ॥

*தக்ஷேசைவல பிண்டேந ரதிம் பூர்வம்*
*ஸமர்ச்சயேத்।*
*மஞ்சர்யா ஸஹ காரஸ்ய வாமேப்ரீதிம் ப்ரபூஜயேத்॥*

தெற்கே ரதிதேவியையும், வடக்கே மன்மதனையும் பூஜித்து அவர்களுக்கு ப்ரியமான மலர்க் கொத்துக்களாலும் பூஜிக்க வேண்டும்.

प्रणवेन धनुर्बाणं तच्छिलीमुखपङ्कजम् ।
वसन्तं वनराजिं च गन्धपुष्पादिभिर्यजेत् ॥ ६६ ॥

*ப்ரணவேந தநுர்பாணம் தச்சில்லீமுக பஞ்சகம்!*
*வசந்தம் வனராஜிஞ்ச கந்த புஷ்பாதிபிர்யஜேத்!!*

பிரணவ மந்திரத்தால் மலர்கணைகள் ஐந்து உடையவரையும் வசந்தகால மன்மதனையும் தாமரைக் கண்ணியான ரதிதேவியையும் சந்தனம் மணமிகு மலர்களால் போற்றுக.

वस्त्रेण वेष्ट्य नैवेद्यं पायसं तु निवेदयेत् ।
ताम्बूलं दापयेत् पश्चात् तोषयेत्तान् विशेषत: ॥ ६७ ॥

*வஸ்த்ரேண வேஷ்ட்ய நைவேத்யம் பாயஸம் து*
*நிவேதயேத்!*
*தாம்பூலந்தாபயேத் பஸ்சாத்*
*தோஷயேந்தான்விசேஷத:!!*

உயர்ந்த துணிகளால் அலங்கரித்து பால்பாயசம் நிவேதித்து மணமிகு தாம்பூலம் சமர்ப்பித்து அவர்களை இயன்ற அளவு சந்தோஷப்படும்படி செய்வது சாலச் சிறந்ததாகும்.

तस्माद्वसन्तमूर्तिं च रतिकाम समन्वितम् ।
देवाय दर्शयेद्विद्वान् फलै: पुष्पोपहारकै: ॥ ६८ ॥

*தஸ்மாத்வஸந்த மூர்த்திஞ்ச ரதிகாமசமந்விதம்!*
*தேவாய தர்சயேத்வித்வாந் பலை:*
*புஷ்போபஹாரகை:!!*

ஆகையினால் வசந்த காலத்தில் வசந்த மூர்த்தியை ரதிமன்மதனோடு பக்தர்களுக்கு காண்பித்து (பழங்கள் புஷ்பங்களால்) கனிகளாலும் மலர்களாலும் மகிழ்ச்சியூட்ட வேண்டும்

इक्षुदण्डैश्च गन्धैश्च ताम्बूलैश्च मनोहरै: ।
नानादीपशतैर्गेहं रात्रौ देवालयं व्रजेत् ॥ ६९ ॥

*இக்ஷு தண்டைஸ்ச கந்தைஸ்ச தாம்பூலைஸ்ச*
*மநோஹரை:!*
*நாநாதீபசதைர்கேஹம் ராத்ரௌ தேவாலயம்*
*வ்ரஜேத்!!*

கரும்புகளாலும் மணமிகு மலர்கள் சந்தனங்களாலும் மனங்கவர் நூறு விளக்குகளாலும் ஏற்றி மகிழ்வித்து இரவில் முருகப் பெருமானை ஆலயத்திற்கும் வீதியுலா முடிந்து பிரவேசிக்கச் செய்ய வேண்டும்.

प्रभूतहविषं दद्यात् यथाविभवविस्तरम् ।
ताम्बूलं दापयेत् पश्चात् धूपदीपं हृदा ददेत् ॥७० ॥

*ப்ரபூதஹவிஷந்தத்யாத் யதாவிபவ விஸ்தரம்!*
*தாம்பூலம் தாபயேத் பஸ்சாத் தூபதீபம்*
*ஹ்ருதாததேத்!!*

ஆலயம் வந்தவுடன் அதிக அளவில் மிகுந்த சுவையில் பிரஸாதங்கள் முருகனுக்கு பொருளா தாரத்துக்குத் தக்கவாறு செய்து தூபதீபம் காட்டி நிவேதித்து தாம்பூலம் சமர்ப்பித்து பிறகு

शुद्धैरन्नैश्च विविधै: रपरैर्वामहामुने।
जपैर्वेदस्वरैर्गीतैर्वाद्यैर्नृत्तैर्मनोहरै: ॥ ७१ ॥

*சுத்தைரந்நைச்ச விவிதை: ரபரைர்வாம ஹாமுநே!*
*ஜபைர்வேதஸ்வரைர்கீதை: வாத்யைர்ந்ருத்தைதர்*
*மநோஹரை:!!*

முனிவரே! மனதுக் உகந்த பலவிதமான சுத்தமான அன்னங்களாலும், ஜபங்களாலும் வேதமந்த்ர ஒலிகளாலும் வாய்ப்பாட்டுக்களாலும் வாத்ய இசைக் கருவிகளாலும்

वीणावेणुवरैस्तोत्रैर्नमास्करै: प्रदक्षिणै: ।
एवं य: कुरुते मर्त्य: स पुण्यां गतिमाप्नुयात् ॥ ७२ ॥

*வீணாவேநு வரைஸ்தோத்ரைர்நமஸ்காரை:*
*ப்ரதக்ஷிணை:!*
*ஏவம்.ய: குருதே மர்த்யஸ்ஸ புண்யாங்கதி*
*மாப்நுயாத்:!!*

வீணை, புல்லாங்குழலாலும், துதிப்பாடல்களாலும், வணங்கி வலம் வந்து முறையாக பணிவாக, அன்பாக, முருகனுக்கே தன்னை அர்ப்பணித்து யார் ஒருவர் முறை வழுவாது முருகனுக்கு செய்கிறார்களோ அவர்கள் நற்கதியை புண்யகதியையெய்துவர்.

यान् यान् कामयतेमर्त्यास्तांन् स्तान् ध्रुवमवाप्नुयात् ।
वसन्तोत्सवमाख्यातं ज्येष्ठमासार्चनं श्रुणु ॥ ७३ ॥

*யாந்யாந் காமயதே மர்த்ய ஸ்தாம்ஸ்தாந் த்ருவ மவாப்நுயாத் !!*
*வஸந்தோத்ஸவ மாக்யாதாம் ஜ்யேஷ்ட மாஸார்ச்சனம் ஸ்ருணு !*

எந்தெந்த விருப்பங்களை கோருகிறார்களோ அவையனைத்தும் நிச்சயமாக அடைவார்கள் வசந்தோற்சவம் எனும் இதற்குப் பிறகு ஆணி மாத பருவ பூசையைக் கேட்பீராக.

इति वसन्तोत்सवपूजाविधिः ।

இது வஸந்தோத்ஸவ பூஜை விதியாகும்.

## ॥ ज्येष्ठमासपूजाविधिः ॥

### ஜ்யேஷ்ட மாஸ பூஜா விதி:

### ஆனி மாத பௌர்ணமி

ज्येष्ठमासे मूलर्क्षे पूजयेत् स्वादुभिः फलैः ।
कदली पनसाम्रोत्थैर्नालिकेरफलैरपि ॥ ७४ ॥

*ஜ்யேஷ்ட மாஸேது மூலர்க்ஷே பூஜயேத் ஸ்வாதுபி: பலை: !*
*கதலீ பநஸாம் ரோக்தைர்ந்நாளிகேர பலைரபி !!*

ஆனியிலோவெனில் முருகனைப் பருவம் சேர்ந்த மூல விண்மீனில் சுவைமிகு பழங்களான வாழை, பலா, மா, இளநீர், தேங்காய் இவைகளை சமர்ப்பித்து

शर्करामधुसंयुक्तैर्यथाविभवस्तरम् ।
नवभाण्डे समाहृत्य न्यस्तव्य प्रोक्ष्य चाग्रतः ॥ ७५ ॥

*சர்க்கரா மது ஸம்யுக்தைர் யதாவிபவ விஸ்தரம் !*
*நவபாண் டே ஸமாஹ்ருத்ய ந்யஸ்த்வாக்ரே ப்ரோக்ஷ்யசாக்ரத: !!*

மேலும் வசதிக்குத் தக்கவாறு சர்க்கரை, தேன் முதலியவைகளை ஒன்பது புது பாத்திரங்களில் கொண்டுவந்து முருகனுக்கு முன்னர் சுத்திகரிக்கப்பட்ட சிறுமேடையில் எல்லாவற்றையும் வைத்து

संकल्पमपि पुण्याहं वाचयित्वा द्विजोत्तमैः ।
आधाराधेयपूजान्ते पवमानमुदीरयन् ॥ ७६ ॥

*ஸங்கல்பமபி புண்யாஹம் வாசயித்வா த்விஜோத்தமை: !*
*ஆதாராதேய பூஜாந்தே பவமாந முதீரயந் !!*

விநாயகர் பூஜை சங்கல்பம் புண்யாக வாசனம் முதலியவைகளை முறைப்படி மறையறிந்த வேதவிற்பன்னர்களால் செய்வித்து பவமான சூக்தம் என்ற வேதமந்திரமும் ஓதி

यामार्धं वा तदर्धं वा पठेत्तन्मूलतोऽपि वा ।
स्कन्दसूक्तेन मतिमान् शीतोष्णैरभिषेचयेत् ॥ ७७ ॥

*யாமார்தம்வா ததர்தம்வா படேத்தந்மூலதோபிவா !*
*ஸ்கந்த சூக்தேந மதிமாந் சீதோஷ்ணை ரபிஷேசயேத் !!*

பிறகு 1, ½ மணி நேரமோ அல்லது ¼ மணி நேரமோ முருகனின் ஆறெழுத்து மந்திரமும் ஓதி ஸ்கந்த சூக்தத்தினாலும் முருகனுக்கு குளிர் நீராலும் வெப்பநீராலும் நீராட்ட வேண்டும்.

वस्त्रैर्गन्धः सुमाल्यैश्च भूषणैर्भूषयेद्गुहम् ।
हिमतोयाक्तकल्हारैः नैरन्तर्यापि भूषयेत् ॥ ७८ ॥

*வஸ்த்ரைர் கந்தை ஸ்மால்யை ஸ்ச பூஷணைர் பூஷயேத் குஹம்!*
*ஹிமதோயாக்த கல்ஹாரைர் நைரந்தர்யாபி பூஷயேத்!!*

துணிகளாலும், மணமிகு மலர்மாலைகளாலும், முருகனை அலங்கரித்து பன்னீர் தெளித்த செங்கழுநீர்ப் பூக்களாலும் அழகு படுத்தவும்

पञ्चावरणपूजाञ्च कुर्यादपि विशेषतः ।
पायसं गुलसंयुक्तं ताम्बूलमपि दापयेत् ॥ ७९ ॥

*பஞ்சாவரண பூஜாஞ்ச குர்யாதபி விசேஷத:!*
*பாயஸங்குட ஸம்யுக்தம் தாம்பூல பிதாபயேத் !!*

பஞ்சாவரண பூஜை முடிய முருகனைப் பூசித்துப் பாயசம், வெல்லம் அதிகம் சேர்ந்தது நிவேதித்து மணமிகு வெற்றிலைப் பாக்கு வகைகளும் நிவேதிக்க வேண்டும்.

त्रिसंध्यमर्चयेदेवं सर्वकामस्य सिद्धये ।
ज्येष्ठमासार्चनं प्रोक्तमाषाढे पूजनं श्रृणु ॥ ८० ॥

*த்ரிஸந்த்ய மர்ச்சயேதேவம் ஸர்வ காமஸ்ய ஸித்தயே!*
*ஜ்யேஷ்ட மாஸார்ச்சநம் ப்ரோக்த மாஷாட பூஜநம் ஸ்ருணு!!*

காலை, மதியம், மாலை மூன்று வேளைகளிலும் அறம், பொருள், இன்பம் மூன்று மடைய பூசிக் கற்பாலது இவ்வாறு ஆனிப் பௌர்ணமி மாத சிறப்பு பூசை சொல்லப்பட்டது. அடுத்த ஆடி மாதப் பூசையைக் கேட்பீராக

इति ज्येष्ठमासपूजाविधिः

இது ஜ்யேஷ்டமாலை பூஜை முறையாகும்.

## ॥ आषाढमासपूजाविधिः ॥

### ஆஷாடமாஸபூஜா

### ஆடிமாத பூஜை செய்யும் முறை

पूर्वफल्गुनि नक्षत्रे चाषाढे मासपूजनम् ।
कौतुकं बन्धयेद्रात्रौ देवदेव्यौ च मन्त्रवित् ॥ ८१ ॥

*பூர்வ பல்குனி நக்ஷத்ரே சாஷாடே மாஸ பூஜநம்!*
*கௌதுகம் பந்தயேத்ராத்ரௌ தேவதேவ்யௌச மந்த்ரவித்!!*

ஆடி மாதத்தில் பூர நக்ஷத்திரத்தில் மாதச் சிறப்பு பூசை செய்ய வேண்டும். முதல் நாள் இரவில் (முளைப்பாலிகைகளோடு சந்திரனைப் பூசித்து) ஆசார்யர்தானும் முருகன், வள்ளி, தெய்வானை அம்பிகைகளுக்கும் கங்கணக் காப்பு மந்திரப் பூர்வமாக செய்யற்பாலது

प्रभाते ब्रह्मचारिभ्यो यज्ञसूत्राणि दापयेत् ।
हरिद्रां चैव कन्याभ्यो दक्षिणा सहितं बुधः ॥ ८२ ॥

*ப்ரபாதே ப்ரம்ஹசாரிப்யோ யக்ஞ சூத்ராணி தாபயேத்!*
*ஹரித்ராந்சைவ கந்யாப்யோ தக்ஷிணா ஸஹிதம் புத:!!*

அன்று (பூர நக்ஷத்திரக்)காலையில் உபநயனம் செய்விக்கப்பட்டு காயத்ரீ மந்த்ரோபதேசம் ஆனவர்களுக்கு பூணூல்கள் வழங்கி கன்னிச் சிறுமிகளுக்கு மஞ்சள் கிழங்குகளையும் தக்ஷிணக் கையுறைப் பொருள்களோடு வழங்குதல் வேண்டும்.

प्रीतये देवदेवीनां मद्गवतेभ्यो विधानतः ।
मुद्गाङ्कुरं सलवणं देव्योः पादे समर्पयेत् ॥ ८३ ॥

*ப்ரீதயே தேவ தேவீநாம் மது பக்தேப்யோ விதாநத:!*
*முத்காங்குரம் ஸலவணம் தேவ்யா: பாதே ஸமர்பயேத !!*

தேவரும், தேவியாரிருவரும் மகிழ்வதற்காக முருகப் பக்தர்களுக்கு முளையிடப்பட்டப் பச்சைப்பயிறு சிறிதளவு உப்பு கலந்து முருகனுடைய இரு தேவிகளுடைய பாதத்தில் சமர்ப்பிக்க வேண்டும். (பிறகு விநியோகிக்க வேண்டும்)

ग्रामप्रदक्षिणं कुर्यात् सर्वसंपत्कराय च ।
जलतीरं समागम्य यथाविभवविस्तरम् ॥ ८४ ॥

*க்ராம ப்ரதக்ஷிணம் குர்யாத் ஸர்வ ஸம்பத்கராய ச !*
*ஜலதீரம் ஸமாகம்ய யதா விபவ விஸ்தரம் !!*

எல்லா மங்களங்களையும் தரவல்ல கிராம பிரதக்ஷிண மெனும் திருவீதியுலாவை நீர்நிலை ஒரம்வரை சக்திக்குத் தக்கவாறு செய்தல் (நலம் பயக்கும்)

पीठोपरि समारुह्य देवदेव्यौ च भक्तिमान् ।
युवतीभिश्च युवभिर्जलक्रीडां विधाय च ॥ ८५ ॥

*பீடோபரி ஸமாருஹ்ய தேவ தேவ்யௌச பக்திமான் !*
*யுவ தீபிச்ச யுவபிர் ஜ்ஜல க்ரீடாம். விதாய ச !!*

திருக்குளத்தில் ஓடத்தில் முருகப் பெருமானை தேவியரோடு எழுந்தருளச் செய்து வாலிப நங்கையர்கள் நம்பியர்களும் நீராடி, நீர் விளையாடியும், மகிழ்ந்தும், மகிழ்வித்தும், சிறப்பிப்பது கூறப்பட்டுள்ளது.

यामं वापि तदर्धं वा तदर्धं वा समाचरेत् ।
प्रविश्य भवनं पश्चात् प्रभूतहविषं ददेत् ।
ब्राह्मणान् भोजयेद्विद्वान् दीनानाथांश्च भोजयेत् ॥ ८६ ॥

*யாமம் வாபி ததர்தம் வா ததர்தம் வா ஸமாசரேத் !*
*ப்ரவிச்ய பவநம் பச்சாது ப்ரபூத ஹவிஷந்ததேத் !!*
*ப்ராம்மணாநு போஜயேத் வித்வாநு தீநாநாதாந்ச*
*போஜயேத் !!!*

ஒன்றரை மணிநேரம் அல்லது ¾ மணி நேரமாவது செய்து ஆலயம் சேர்ந்து பிறகு கனிசமான நிவேதனம் நிவேதித்து

इति श्रावणमासपूजाविधिः

ச்ராவண மாச பூஜா (ஆவணி மாத பூஜை முறை)

# क्षीरपूजाविधिः

### க்ஷீர பூஜா விதி:

पूर्वाषाढे तु तन्मासे श्रवणे वा गुणान्विते ।
पूर्णिमायां तु वाऽषाढे कुर्यात्क्षीराभिषेचनम् ।
गवां वृद्धिकरं सर्वसस्यवृद्धिकरं शुभम् ॥ ८७ ॥

*பூர்வாஷாடே து தந்மாசே ச்ரவணே*
*வாகுணாந்விதே !*
*பூர்ணிமாயாந்து சாஷாடே குர்யாத் க்ஷீராபிஷேசநம் !*
*கவாம் வ்ருத்திகரம் ஸர்வ ஸஸ்ய வ்ருத்தி கரம்*
*சுபம் !*

ஆவணி மாதத்தில் பூராட விண்மீனில் பௌர்ணமியில் பாலாபிஷேகம் செய்விக்க வேண்டும். இதனால் பசு விருத்தியும் பயிர் விருத்தியும் உண்டாகும்.

गोक्षीरं ग्राह्य धारोष्णं नवभाण्डेषु पूरयेत्
शालिभिस्तण्डुलं कृत्वा विन्यसेत् क्षीरकुम्भकम् ॥८८॥

*கோக்ஷீரம் க்ராஹ்ய தாரோஷ்ணம் நவபாண்டேஷு*
*பூரயேத் !*
*சாலி பிஸ்தண்டுலம் க்ருத்வா விந்யசேத் க்ஷீர*
*கும்பகம் !!*

பசும்பாலை எடுத்து புதுப் பானைகளில் நிரப்பி நெல்மணிகளால் சிறுமேடை செய்து முருகன் முன்பு பானைகளை வைக்கவும்

उत्तमं दशभारं तु मध्यमं तु तदर्धकम् ।
तदर्धमधमं ज्ञेयं तदर्धमधमाधमम् ॥ ८९ ॥

*உத்தமந்தச பாரந்து மத்ய மந்து ததர்தகம் !*
*ததர்தம் மதமம் க்ஞேயம் ததர்தம் மதமாதமம் !!*

பத்து பாரம் உயர்வென்றும் ஐந்துபாரம் மத்தியமம் என்றும் 2½ பாரம் அதமம் என்றும் 1¼ பாரம் அதமாதமம் என்றும் கூறப்படுகிறது.

अस्त्रमन्त्रेण संप्रोक्ष्य ब्रह्माङ्गैरपि पूजयेत् ।
धूपदीपं ततो दत्वा पयोभिः स्नापयेद्गुहम् ॥ ९० ॥

*அஸ்த்ர மந்த்ரேண ஸம்ப்ரோக்ஷ்ய ப்ரஹ்மாங்கை ரபி பூஜயேத்!!*
*தூப தீபந்ததோ தத்வா பயோபிஸ்ஸ்நாபயேத் குஹம்!*

அஸ்த்ர மந்திரத்தினால் புரோக்ஷணம் செய்து பஞ்ச பிரும்ம ஷடங்க மந்திரங்களால் பாலைப் பூசித்து தூப தீபங்காட்சி அப்பூசித்த பாலால் முருகனுக்கு அபிஷேகம் செய்ய வேண்டும்.

आप्यायस्वेति मन्त्रेण स्कन्दसूक्तेन मन्त्रतः ।
कुमारमानेति मन्त्रेण मूलब्रह्मषडङ्गकैः ॥ ९१ ॥

*ஆப்யாயஸ்வேதி மந்த்ரேண ஸ்கந்த சூக்தேந மந்த்ரத:!*
*குமார மாநேதி மந்த்ரேண மூல ப்ரஹ்ம ஷடங்ககை:!*

ஆப்யாய எனத் துவங்கும் மந்திரத்தினாலும் ஸ்கந்த சூக்த வேத மந்திரத்தினாலும் குமார மான் என்ற மந்திரத்தினாலும் ஸ்ரீ முருகன் ஷடாக்ஷர மந்திரத்தாலும் பஞ்ச பிரும்ம ஷடங்க மந்திரங்களினாலும்

क्षीरैश्च शुद्धतोयैश्च स्नाप्याभ्यर्च्य यथाविधिः ।
प्रभूतहविषं दत्वा ब्राह्मणानपि भोजयेत् ॥ ९२ ॥

*க்ஷீரைச்ச சுத்த தோயைச்ச ஸ்நாப்யாப்யர்ச்ய யதாவிதி!*
*ப்ரபூத ஹவிஷந்தத்வா ப்ராம்மணாநபி போஜயேத்!*

பசும்பாலினாலும் தூய நன்நீராலும் அருள்மிகு முருகப் பெருமானுக்கு நன்னீராட்டி சுவைமிகுப் பெருமளவு அன்ன வகைகளை நிவேதித்து பக்தப் பெருமக்களுக்கும் அந்தணர்களுக்கும் அன்னம் பாலிக்கவும்

एवं यः कुरुतेमर्त्यः स पुण्यफलमाप्नुयात् ।
अनुक्तमन्यतो ग्राह्यमधिकं नैव दूष्यते ।
क्षीरपूजाविधिः प्रोक्तः पवित्रारोपणं श्रृणु ॥ ९३ ॥

*ஏவம் ய: குருதே மர்த்யஸ்ஸ புண்ய பல மாப்நுயாத்!*
*அனுக்த மன்யதோ க்ராஹ்ய மதிகந்நைவ தூஷ்யதே!!*
*க்ஷீர பூஜா விதி: ப்ரோக்த: பவித்ராரோபணம் ச்ருணு!!!*

இவ்வாறு எவரொருவர் முறை வழுவாது காலந்தவறாது முருகனுக்கு முழு மனதுடன் மாத பூசையை மறவாது செய்து வருவாரோ அவரே தீவினைகள் யாவும் நீங்கப் பெற்று தூய நல்வினைப்பயன் முழுதுமெய்துவர். கூறப்படாதவை களை சித்தந்தில் சஞ்சரிக்கும் முருகன் அப்போது தோன்றுபவைகளாக கொண்டு செயலாற்றுக. முடியாதவைகளை நீக்குக. இவ்வாறு பாற்பூசை பகரப்பட்டது. மேல் புனிதப்படுத்தும் பவித்ர சமர்ப்பணம் கூறுகிறேன் கேட்பீராக.

इति क्षीरपूजाविधिः

இது க்ஷீரபூஜை முறையாகும்.

## ॥ पवित्रारोपणविधिः ॥

பவித்ரா ரோபண விதி:

(பவித்ரா ரோபணம் முறை)

आषाढादित्रयोपेता श्रेष्ठमध्यमकन्यसाः ।
आश्विनीकृत्तिमामासावयवा संप्रकीर्तितौ ।
पूर्वपक्षे चतुर्दश्यामाषाढे मासि कारयेत् ॥ ९४ ॥

*ஆஷாடாதித்ரயோபேதா ஸ்ரேஷ்ட மத்யமகன்யஸா:!*
*அச்விநீ க்ருத்திகாமாஸா வதவா ஸம்ப்ரகீர்த்திதௌ!*
*பூர்வ பக்ஷே சதுர்தஸ்யாம ஆஷாடே மாஸி காரயேத்!*

ஆடி முதல் ஆவணி புரட்டாசி ஆகிய மூன்று மாதங்களுள் முறையே உத்தமம் மத்யமம் அதமம் எனக் கூறப்படுகிறது. ஐப்பசி, கார்த்திகை மாதத்திலும் முடியாத சமயம் செயற்பாலது வளர்பிறை சதுர்தசியில் ஆடி மாஸத்தில் (செய்வது நன்று) செய்விக்கவும்.

इतरेषु च मासेषु पक्षयोरुभयोरपि ।
चतुर्दश्यां च षष्ठ्यां वा पूर्णिमायां .च कारयेत् ॥९५ ॥

*இதரேஷு "ச மாஸேஷு " பக்ஷயோ ருபயோரபி !*
*சதுர்தஸ்யாஞ்ச ஷஷ்ட்யாம்வா பூர்ணிமாயாஞ்ச காரயேத் !!*

மற்ற மாதங்களிலோவெனில் இரு பிறைகளிலும் சதுர்தசி (14-வது திதி) ஷஷ்டி (6-வது திதி) பூர்ணிமா (நிறைநிலா நாளில் செய்விப்பது நன்று)

कृत्तिकादीपत: पश्चात् नैव कार्यं पवित्रकम् ।
शुक्लपक्षे गृहस्थानां यतीनां तु द्विपक्षयो: ॥ ९६ ॥

*க்ருத்திகா தீபத: பஸ்சாத் நைவ கார்யம் பவித்ரகம் !*
*சுக்ல பக்ஷேக்ரு ஹஸ்தானாம் யதீநாந்து த்விதபக்ஷயோ: !!*

கார்த்திகை தீபத்திற்கு பிறகு பவித்ரோற்சவம் செய்யக் கூடாது. வளர்பிறையில் இல்லறத்தோர்களும் துறவிகள் இரு பிறவியிலும் (செய்யலாம்)

भोगमोक्षप्रदं साक्षात् पवित्रारोपणं मुने ।
संवत्सरकृतं पापं नाशयत्यस्य पूजनात् ॥ ९७ ॥

*போக மோக்ஷ ப்ரதம் சாக்ஷாத் பவித்ரரோபணம் முனே !*
*சம்வத்ஸர க்ருதம் பாபம் நாஸயத்யஸ்ய பூஜநாத் !*

முனிவரே ! இகபர நலமளிக்கும் பவித்ர சமர்ப்பணம் உற்சவமாவது ஆண்டு முழுவதும் அறியாமையாலோ தெரியாமையாலோ அல்லது புரியாமையாலோ ஒரு முறையோ பல முறையோ உண்டான தீவினைப் பயன்கள் எல்லோரையும் வந்தடையா வண்ணம் காத்தற்பாலது. எனவே முயற்சியோடு முயன்று தவறாமல் மறவாமல் ஆண்டுதோறும் ஆற்றற்பாலது அவசியமே.

प्रायश्चित्तमकुर्वाणा ब्राह्मणा: शुद्धिमाप्नुयु: ।
प्रत्यहं वाङ्मन: कायकृतानि कलुषानि च ॥ ९८ ॥

*ப்ராயஸ்சித்த மகுர்வாணா ப்ராம்மணாஸ் சுத்திமாப்னு யு: !*
*ப்ரத்யஹம் வாங்மந: காய க்ருதானி கலுஷானி ச !!*

கழுவாய் வேறு செய்யப்படாமலேயே அந்தணர்கள் புனித வாய்ப்படுகிறார்கள். தினசரி வாக்கு மனம் காயம் (தேஹம்) இவைகளால் இயற்றப்படும் தீவினைகளை

तेभ्य: पवित्रे कुरुते तस्मादेत् पवित्रकम् ।
सावणरजतै: सूत्रै: पट्टोर्णै: सूत्रकैरपि ॥ ९९ ॥

*தேப்ய : பவித்ரம் குருதே தஸ்மாதேதது பவித்ரகம் !*
*ஸௌவர்ணை ரஜதைஸ்ஸூத்ரை: பட்டோர்னைஸ் சூத்ரகைரபி !!*

அகற்றுவதாலேயே இந்த உற்வத்திற்கு பவித்ரோற்சவம் எனக் கூறப்படுகிறது. ஆண்டவனுக்கு வேத மந்திரங்களால் புனிதப் படுத்தப்பட்ட பட்டு நூல் பருத்தி நூல் வெள்ளி தங்க கம்பிகளால் அணிவிப்பது அனைவரையும் அவரவர் தீவினையிலிருந்து புனிப்படுத்துகிறது.

कार्पासजभवैरन्यैर्मौञ्जिभिर्दर्भसंभवै: ।
वल्कलोत्थैश्च सूत्रैश्च नवभिर्गुणितै: शुभै: ॥ १०१ ॥

*கார்பாஸ ஜபவைரன்யைர் மௌஞ்சிபிர்தர்பஸம்பவை: !*
*வல்கலோக்தைஸ்ச சூத்ரைச்ச நவபிர்குணிதைஸ் சுபை: !!*

பருத்தி, நார்பை, மரவுரித் தோல், நூல் போன்ற ஒன்பது வகைகளாலும் பவித்ரா ரோபணமான செய்யற்பாலது மங்களங்களை வளர்க்கும்

द्विजातिकृतकार्पास सूत्रैः शुभ्रैरनिन्दितैः ।
रोमादिशोध्यतोयेन प्रक्षाल्य प्रोक्ष्य चास्त्रतः ॥ १०१ ॥

*த்விஜாதி க்ருத கார்பாச சூத்ரைஸ்*
*சப்ரைரனிந்திதை:!*
*ரோமாதி சோத்ய தோயேந ப்ரக்ஷால்ய ப்ரோக்ஷ்ய*
*சாஸ்த்ரத:!!*

அந்தணர்களால் ஆக்கப்பட்ட வெண்மையான தூய்மையான குற்றங்காணா பவித்ர நூல்மாலையை உரோமம் முதலியவையில்ல தூய்மையான நீரால் அலம்பி அஸ்த்ர மந்திர நீரால் மேல்நோக்கி தெளித்து

शुष्कं कृत्वा हृदा सम्यक् पवित्रं कारयेत्सुधीः ।
शक्तयस्तु शकुन्याद्या नवसूत्राधिदेवताः ॥ १०२ ॥

*சுஷ்கங்க்ருத்வா ஹ்ருதா ஸம்யக் பவித்ரங்காரயேக்*
*ஸுதீ:!*
*சக்தயஸ்து சகுன்யாத்யா நவசூத்ராதி தேவதா:!!*

முருகப் பெருமானின் ஒன்பது தனசக்தி தேவதைகளான சகுன்யா முதலான ஒன்பது அதி தேவதைகளை இருதய மந்திரத்தால் மேற்கூறிய பவித்ர மாலையை ஒவ்வொரு கட்டம் கட்டமாக கட்டி பவித்ரமாக்கிய பின்

अष्टोत्तरशतैः सूत्रैः कुर्यात् स्कन्दावतारकम् ।
उत्तमं बेरदैर्घ्य स्यान्मध्यमं बाहुमात्रकम् ॥ १०३ ॥

*அஷ்டோத்தர சதை ஸ்ஸுத்ரை: குர்யாத்*
*ஸ்கந்தாவதாரகம்!!*
*உத்தமம் பேர தைர்க்யம் ஸ்யாத் மத்யமம் பாஹு*
*மாத்ரகம்!*

நூற்றெட்டு இழைகளாலான பவித்ர பட்டு மாலையை முருகனின் முழு அளவு நீளம் உத்தமமாகவும், உயர்வாகவும் தோளளவு நடுத்தரமாகவும்

अधमं तु शिरोवेष्टं पवित्रं मुनिपुंगव ।
षट्कं मूर्ध्नि प्रकर्तव्यं षण्मूर्तिमरूपकम् ॥ १०४ ॥

*அதமந்து சிரோவேஷ்டம் பவித்ரம் முநி புங்கவ!*
*ஷட்கம் மூர்த்நி ப்ரகர்தவ்யம் ஷண்மூர்த்தி*
*மருபகம்!!*

தலைச் சுற்றளவு மட்டும் தயாரிப்பது அதமம் எனவும் ஆறுமுகப் பெருமானெனில் ஆறுதலையும் சுற்றுமளவு தயாரிக்க வேண்டும். முனிகுலத்திலகமே

पीठे स्पर्शनकं षटकं बाह्यमाला तथैव च ।
अष्टोत्तरशतं सूत्रमुत्तमं परिचक्षते ॥ १०५ ॥

*பீடே ஸ்பர்சநகம் ஷட்கம் பாஹ்ய மாலா ததை வச!*
*அஷ்டோத்தர சதம் சூத்ரம் உத்தமம் பரிசக்ஷதே!!*

நூற்றெட்டு இழைகளாலான பவித்ர மாலை கழுத்தில் அணிவித்தால் திருவடிக்குக் கீழ் பீடம் வரை தொங்கி நிற்பது சிறப்பெனக் கொள்க

तदर्धं मध्यमं ज्ञेयं कन्यसं तु तदर्धकम् ।
शतं वाऽपि तदर्धं वा पवित्रं कारयेत्सुधीः ॥ १०६ ॥

*ததர்தம் மத்யமம் க்ஞேயம் கன்யசந்து ததர்தகம்!*
*சதம்வாபி ததர்தம்வா பவித்ரம் காரயேத் சுதீ:!!*

அதற்க்கடுத்த நிலை நடுத்தரமாகவும் அதற்கடுத்த நிலை சாதாரண நிலையெனவும் கொள்ளவும். நூறு அல்லது ஐம்பதிலும் செய்யலாம்

एकैकया तु संवृद्ध्या तन्तवो द्वादशात्मिकाम् ।
नीचाल्पमध्यमं श्रेष्ठमुत्तमादित्रयं तथा ॥ १०७ ॥

*ஏகைகயாது ஸம்வ்ருத்யா தந்தவோத்வாத*
*சாத்மிகாம்!*
*நீசால்ப மத்யமம் ச்ரேஷ்ட முத்தமாதி த்ரயம் ததா!!*

ஆண்டுக்கு ஆண்டு கீழிலிருந்து மேல்வரை முறையாக ஏற்றி ஏற்றிச் செய்வது போற்றற்குரியது என உணர்க

ग्रन्थयस्तन्तुसंख्या स्यात् कूलगर्भ नवं मता ।
यथेष्टग्रन्थयो वाऽपि समा: सर्वशतांसिता: ॥ १०८ ॥

*க்ரந்தயஸ்தந்து ஸங்க்யாஸ்யாத் கூல கர்ப நவம்மதா!*
*யதேஷ்ட க்ரந்த்யோவாபி சமாஸ்ஸர்வ சதாஸிதா:!!*

அதிலிடப்பட்ட முடிச்சுகளின் எண்ணிக்கையானது நூற்றெட்டும் சம அளவில் தூய்மையாக அருமையாக இருத்தல் நலமெனக் கருதப்படுகிறது.

एकद्वित्र्यङ्गुला वाऽपि ग्रन्थिमानमिहोच्यते ।
ग्रन्थयो वेष्टदेशेषु विधातव्यं विचक्षणै: ॥ १०९ ॥

*ஏகத்வித்ரயங்குலோ வாபி க்ரந்திமாந மிஹோச்யதே!*
*க்ரந்தயோ வேஷ்டதேசேஷு விதாதவ்யம் விசக்ஷணை:!!*

ஒரே சம அளவுள்ள முடிச்சுகளாக ஓரங்குலம் அல்லது இரு அங்குலம் அல்லது மூன்றங்குலம் முடிச்சிடும் இடம் அறிவுக் கூர்மையால் செயற்பாலது

कुर्यात् पवित्रं शक्तीनां कण्ठादाजानुमात्रकम् ।
मयूरगजयो: सूत्रं तन्मस्तकपदावधि ॥ ११० ॥

*குர்யாத் பவித்ரம் சக்தீநாம் கண்டாதாஜாநு மாத்ரகம்!*
*மயூர கஜயோஸ் ஸூத்ரம் தந்மஸ்தக பதாவதி!!*

முருகனின் இரு தேவிகளுக்கும் அணிவிக்கும் பவித்ரப்பட்டு மாலையானது கழுத்திலிருந்து முழங்கால்வரை மட்டுமே இருக்கத் தக்கது. மயில் யானைகளுக்கு கழுத்து முதல் பாதம் வரை அளவுப் பார்த்து செய்வித்து பூசித்து புனிப்படுத்தி அணிவிப்பதே நன்றெனக் கொள்க

समानेनात्मन: कुर्यात् पवित्रं कुम्भसंख्या ।
क्रमागमज्ञशिष्याणामात्मवत् समुदीरितम् ॥ १११ ॥

*சமாநேநாத்மந: குர்யாத் பவித்ரம் கும்ப சங்க்யயா!*
*க்ரமாகமஞ்சிஷ்யாணா மாத்மவத் சமுதீரிதம்!!*

ஆகம அறிவுமிகு ஆசார்யர் தனக்கும் தனது சீடர்களுக்கும் கும்பங்களில் எண்ணிக்கைக்கு மேல் பவித்ரம் செய்யாது கும்பங்களின் எண்ணிக்கை அடிப்படையில் செய்து சாத்தி புனிதப்படுத்தி முருகப் பெருமானுக்கு அணிவித்துப் பின்னர் அவரது அருட்பிரஸாதமாக சீடர்களுக்கு அணிவிப்பார்.

रक्तचन्दनकाश्मीरगैरिकागरुचन्दनै: ।
कुष्ठकर्पूरसंमिश्रं हरिद्राकृष्णगन्धकै: ॥ ११२ ॥

*ரக்த சந்தன காஸ்மீர கைரிகா கருசந்தனை:!*
*குஷ்ட கர்பூர ஸம்மிஸ்ரம் ஹரித்ரா க்ருஷ்ண கந்தகை:!!*

கிருஷ்ண சந்தம் (கருஞ் சந்தனமோவெனில்) பவித்ரஹோம ரக்ஷையுடன் சந்தனத்தில் குங்குமப்பூ, பச்சைக் கற்பூரம், கஸ்தூரி, கஸ்தூரி மஞ்சள் தூள் இவைகளைக் கலந்து பிசைந்து சேர்த்து

रंजयेद्धृदयेनैव रक्तसूत्रादिभिस्तु वा ।
अन्त: शालागजस्थानप्रासादान्मूलवेश्मनाम् ॥ ११३ ॥

*ரஞ்சயேத்ருத யேநைவ ரக்த ஸூத்ராதிபிஸ்துவா!*
*அந்தஸ்ஸாலா கஜஸ்தாந ப்ராஸாதாந்மூல வேஸ்மநாம்!!*

இருதய மந்திரத்தால் மூலவர் முதல் எல்லா பிம்பங்களுக்கும் ஆலயத்தின் மூலதேசம் முதல் எல்லா இடங்களிலும் இட்டு மந்திரித்த சிவப்புபட்டுக் கயிற்றாலும் கூட கட்டிப் புனிதப்படுத்தலாம்

षट्सूत्रस्यैव कर्तव्यं तन्तुना संप्रशस्यते ।
एवं संकल्प्य पूर्वेद्युरधिवासनमाचरेत् ॥ ११४ ॥

*ஷட்ஸூத்ரஸ்யைவ கர்தவ்யம் தந்துநாஸம் ப்ரஸஸ்யதே!*
*ஏவம் ஸங்கல்ப்ய பூர்வேத்யு ரதிவாஸந மாசரேத்!!*

ஆறு ஆறுப்பட்டு கயிற்றினாலேயே கட்டப்பட வேண்டும். இவ்வாறு உறுதி செய்து முதல் நாளே கும்பங்களில் தயாரித்து அர்ப்பணித்து மந்திரித்து பூசித்து வேள்வி செய்து தீக்கடவுளால் அங்கீகரிக்கப்பட்டுச் செய்வதே சிறந்தது.

प्रासादस्याग्रके वाऽपि दक्षिणे पश्चिमेऽपि वा ।
कल्पिते मण्डपे वाऽपि पूर्वोक्तस्यैव कल्पितम् ॥ ११५ ॥

*ப்ராஸாதஸ்யாக்ர கேவாபி தக்ஷிணே பஸ்சிமேபிவா !*
*கல்பிதே மண்டபே வாபி பூர்வோக்தஸ்யைவ கல்பிதம் !!*

ஆலயத்திற்கு முன்போ தென் திசையிலோ மேற்திசையிலோ மண்டபத்தில் செய்வது நன்று. அல்லது பவித்ர மண்டபம் தனியாக உள்ள ஆலயத்தில் முன்பு செய்யப்பட்ட இடமிருப்பின் அங்கேயும் செய்யலாம்.

वितानदर्भमालादिफलपल्लवशोभिते ।
मध्ये वेदिसमायुक्ते नवपञ्चैककुण्डके ॥ ११६ ॥

*விதாந தர்ப மாலாதி பல பல்லவ சோபிதே !*
*மத்யே வேதி ஸமாயுக்தே நவபஞ்சைக குண்டகே !!*

மேலகட்டி. தர்பைமாலைகள் பழ கொத்துக்கள் தளிர் அலங்காரம் இவைகளுடன் கூடிய அழகிய மண்டபத்தில் நடுவில் வேதிகை அமைத்து வழக்கப்படி பழக்கப்படி அல்லது 9,5,1 என்ற அளவில் ஹோம குண்டங்கள் அமைத்து

तत्संख्यास्थण्डिलोपेते वेदिकारहितेऽपि वा ।
स्थण्डिलं शालिभिः कुर्यादष्टद्रोणैर्यथाविधिः ॥ ११७ ॥

*தத்ஸங்க்யா ஸ்தண்டிலோ பேதே வேதிகார ஹிதேபிவா !*
*ஸ்தண்டிலம் ஸாலிபி: குர்யாத் அஷ்டத்ரோணைர் யதாவிதி: !!*

வேதிகை இல்லையெனில் சிறுமேடை அமைத்து சிறுமேடையின் உயரத்தை 16 மரக்கால் (64 Kg) நெல்மணிகளால் அதில்பாதி 8 (32 Kg) மரக்கால் முனை முரியாத நல்ல அரிசி அதில்பாதி பாதி அளவில் கோதுமை முதலான ஒன்பது நவதான்யங்களும் மேல் கருப்பு எள்மேல் நல்ல நெற்பொறி அமைத்து அதன்மேல் தர்பைகள் வடக்கு நுனியாக பரப்பி முறைப்படி

स्कन्दकुम्भं च वर्धन्यौ परितश्चाष्टकुम्भकैः ।
स्थाप्य सम्यग् वितानाद्यैर्भूषयित्वाऽथ मण्डपम् ॥ ११८ ॥

*ஸ்கந்த கும்பஞ்ச வர்தந்யௌ பரிதஸ்சாஷ்ட கும்பகை:!*
*ஸ்தாப்ய ஸம்யக்விதாநாத்யைர் பூஷயித்வாத மண்டபம் !!*

முருகன் கும்பம் வள்ளி தெய்வானைக் கும்பங்களும் சுற்றி அஷ்ட வித்யேச கும்பங்களும் நிறுவி அலங்கரித்து

कृतनित्यविधिः सौरपूजा शुद्धमना गुरुः ।
पुण्याहप्रोक्षणं कृत्वा प्रकीर्य विकिरानपि ॥ ११९ ॥

*க்ருதநித்ய விதிஸ்ஸௌர பூஜா சுத்தமநாகுரு:!*
*புண்யாஹ ப்ரோக்ஷணம் க்ருத்வா ப்ரகீர்ய விகிரநபி!!*

நித்ய பூஜா விதிமுறைப்படி விநாயகர் பூசை, புண்யாக வாசனம், சூரியப் பூசை செய்து மண்டப தேவதைகளை பூசித்து பூதசுத்தி, முதலான சுத்தி செய்து கொண்டு பஞ்சகவ்யம் கூட்டிப் பரமனை ஆராதித்து நெல்பொறி மலர்கள் மஞ்சள் அரிசி, வெண்கடுகு, முதலியவை களோடு பஞ்ச கவ்யத்தைச் சேர்த்து அஸ்த்ர வேத மந்திரத்தோடு வாரித் தெளிக்க வேண்டும்.

मण्डपार्चनमार्गेण सर्वान् देवान् समर्चयेत् ।
मध्ये स्कन्दं समावाह्य महावल्लीं च दक्षिणे ॥ १२० ॥

*மண்டபார்ச்சன மார்கேண ஸர்வாந் தேவாந் ஸமர்ச்சயேத் !*
*மத்யேஸ் கந்தம் ஸமாவாஹ்ய மஹாவல்லீஞ்ச தக்ஷிணே !!*

மண்டப பூஜை செய்யும் முறைப்படி முருகனின் பரிவார மூர்த்திகள் முழுவதும் பூசித்து நடுவில் ஸ்ரீ முருகனையும் தெற்குப் பக்கத்தில் மகாவள்ளி நாயகியையும்

देवसेनां तथा वामे जयन्ताद्यान् समावृते ।
स्थण्डिलं पश्चिमे कूर्यात् रक्तषड्दलपद्मयुकू ॥ १२१ ॥

*தேவசேனாந்த ததாவாமே ஜயந்தாத்யாநு ஸமாவ்ருதே /*
*ஸ்தண்டிலம் பஸ்ச்சிமே குர்யாத் ரக்த ஷட்தல பத்மயுக் //*

தேவசேனாவை வடக்குக் கும்பத்திலும் சுற்றியுள்ள எட்டு கும்பங்களிலும் மேற்குத் திசையில் ஒரு சிறு மேடையில் ஆறுதள (பத்ம) தாமரைத் தளங்கிறி அதில்

तस्मिन् कुम्भं विदध्यार्च्य प्राप्यानुज्ञां ततो गुरु: ।
द्वारेशानर्चयेद् देवसमीपे स्वासने स्थित: ॥ १२२ ॥

*தஸ்மின் கும்பம் விதத்யார்ச்ய ப்ராப்யானுக்ஞாந்த தோகுரு:/*
*த்வாரேசானர்ச்சயேத்தேவ சமீபே ஸ்வாஸனேஸ்தித://*

அதில் கும்பம் வைத்து முருகனால் பூசித்து அனுமதி பெற்று துவார பாலகர்களை அவர்களது ஆஸனத்தில் பூசித்து

आसनार्चनमारभ्य कुर्यादावाहनान्तकम् ।
गव्यै: पञ्चामृतै: स्नाप्य विशेषस्नपनेन च ॥ १२३ ॥

*ஆஸநார்சன மாரப்ய குர்யாதா வாஹனாந்தகம்/*
*கவ்யை: பஞ்சாம்ருதைஸ் ஸ்நாப்ய விசேஷ ஸ்நாபனேநச //*

முறைப்படி பஞ்சாஸன பூஜை செய்து நியாசங்கள் செய்து ஆவாஹித்து ஆவரணப் பூஜை செய்து ஹோமம் செய்து பூர்ணாஹுதி செய்து ஸ்ரீ முருகனுக்கு சந்தனாதி தைலம் முதல் பஞ்ச கவ்யம் பஞ்சாமிருதம் முதலிய வரிசைக் கிரமப்படி அபிஷேகித்துப் பின்னர் விசேஷ ஸ்நபன கும்பங்களை அபிஷேகம் செய்து

पञ्चावरणमार्गेण गन्धपुष्पादिनार्चयेत् ।
सैकत्रिशत्कलान्यासं विधिना कारयेद्वुध: ॥ १२४ ॥

*பஞ்சாவரண மார்கேண கந்த புஷ்பா திநார்சயேத்//*
*சைக த்ரிம்சத் கலாந்யாஸம் விதிநாகாரயேத் புத:/*

ஐந்து ஆவரணத் தேவதைகளையும் (சந்தனம்) மணமிகு புஷ்பங்களால் அர்ச்சித்து முப்பத்தோரு கலாமந்திரங்களால் நியாசம் செய்து மதிமிகு ஆசார்யர் முறைப்படி செய்விக்க வேண்டும்

भक्ष्यभोज्यन्नपानादिप्रभूतहविषं ददेत् ।
कौतुकं वन्धयित्वा तु गत्वा कुण्डान्तिकं गुरू ॥ १२५॥

*பக்ஷ்ய போஜ்யாந்ந பாநாதி ப்ரபூத ஹவிஷந்தத்தேத்/*
*கௌதுகம் பந்தயித்வாது கத்வா குண்டாந்திகம் குரு://*

முருகனுக்கு பவித்ராரோபணத்திற்காக கங்கணம் கட்டிவிட்டு பலவித இனிப்பு பதார வகைகளும் பால் பாயசம் போன்றவற்றோடு அறுசுவைமிகு அன்னங்களும் நிவேதித்து மீண்டும் யாகசாலையில் குண்ட சமீபம் வந்து

अग्निकार्योक्तमार्गेण स्विष्टान्तं होममाचरेत् ।
समिदान्नंश्च लाजांश्च सर्षपं शालिभिस्तिलै: ॥ १२६ ॥

*அக்னிகார்யோக்த மார்கேண ஸ்விஷ்டாந்தம் ஹோம மாசரேத்/*
*ஸமிதந்நாம்ச்ச லாஜாம்ச்ச ஸர்ஷபட் சாலி பிஸ்திலை://*

பிறகு அக்னியில் முறைப்படி பூர்ணாஹுதிக்கு முன் செய்யப்பட்ட வேண்டிய சமித்து, அன்னம், நெய், நெற்பொரி, வெண்கடுகு, நெல், எள்

सक्तुवेणुयवैश्चैव मुद्गमाषप्रियङ्गुभिः ।
पलाशखदिराश्वत्थवटैः प्रागादिदिक्षु च ॥ १२७ ॥

*ஸக்து வேணுயவைச்சைவ முத்கமாஷ ப்ரியங்குபி:/*
*பலாச கதிராச்வத்த வடை: ப்ராகாதி திக்ஷு ச //*

சத்துமாவு, மூங்கிலரிசி, யவை, நெல், பச்சைப்பயிறு, உளுந்து, தினைகளாலும், முருக்கன், (பொரசு சமித்துக்களாலும்) கருங்காலி, அரசு, ஆல் இவைகளை ஒன்பது குண்டங்களில் கிழக்கு முதலான திசைகளிலும்

शमीखादिरमायूरप्लक्षोऽग्न्यादिविदिक्षु च ।
प्रधानस्य पलाशेन शतं वाऽपि तदर्धकम् ॥ १२८ ॥

*சமீ காதிர மாயூர ப்லக்ஷோ க்ந்யா திவி திக்ஷு ச //*
*ப்ரதாநஸ்ய பலாசேந சதம் வாபி ததர்தகம்/*

வன்னி கருங்காலி, நாயுருவி, இச்சி/அத்தி, இவைகளை தென்கிழக்கு முதலிய திசைக் குண்டங்களிலும் பிரதானமான குண்டத்தில் பொரசு, சமித்துக்களால் நூறு அல்லது ஐம்பது முறை,

स्कन्दमूलेन स ब्रह्मा मूर्तिमन्त्रैः षडङ्गकैः ।
हुत्वाऽथ स्कन्दसूक्तेन षण्मन्त्रेण रसाहुतिः ॥ १२९ ॥

*ஸ்கந்த மூலேந ஸப்ரஹ்மா மூர்த்தி மந்த்ரை ஷ்ஷடங்ககை:/*
*ஹுத்வாதஸ்கந்த தூக்தேந ஷண்மந்த்ரேண ரஸாஹுதி://*

ஸ்ரீமுருகனின் மூலமந்திரமான ஷடக்ஷர மந்திரத்தாலும், பஞ்சபிரும்ம ஷடங்க மந்திரங்களாலும், ஸ்கந்தசூக்தத்தாலும் ஆறு வகை பிரயோக மந்திரங்களாலும் ஆறு ஆறு முறை ஆறு திரவியங்களால் ஹோமம் செய்து

ततः कुमारमानेति मन्त्रेणैव तथा हुनेत् ।
एवं प्रधानकुण्डं स्यात्तदर्धेन तदर्धकम् ॥ १३० ॥

*தத: குமாரமாநேதி மந்த்ரேணைவ ததாஹுநேத்/*
*ஏவம் ப்ரதாந குண்டம்ஸ்யாத் ததர்தேந ததர்தகம்//*

பின்னர் குமாரமான் என்ற மந்திரத்தாலும் ஹோமங்களை பிரதான குண்டத்திலும் அதில் பாதி எண்ணிக்கை விதம் மற்ற எட்டு குண்டங்களிலும் செய்து

स्थालीपाकं ततः कृत्वा तद्गुदा विभजेत्त्रितम् ।
गुहांशमग्निभागं च मध्वाज्याभ्यां च मिश्रितम् ॥ १३१ ॥

*ஸ்தாலீ பாகம் ஹவி: க்ருத்வா தத்குதா விபஜேத் த்ரிதா/*
*குஹாம்சத மக்னி பாகந்ச மத்வாஜ்யாப்யாஞ்ச மிச்ரிதம்//*

யாகாலயத்திலேயே முறைப்படி தயாரிக்கப்பட்ட அன்னத்தை மூன்று பகுதியாக்கி ஆசார்ய பாகமொன்றை நீக்கி ஏனைய இருபாகத்திலும் நெய், தேன், சேர்த்து

कुर्यात्तात्मीयभागन्तु लवणेन घृतेन वा ।
हृदा देवांशमभ्यर्च्य तमादाय गुहान्तिकम् ॥ १३२ ॥

*குர்யாதாத்மீய பாகந்து லவணேந க்ருதேநவா/*
*ஹ்ருதா தேவாம்ச மப்யர்ச்ய தமாதாய குஹாந்திகம்//*

ஆத்மபாகமெனப்படும் ஆசார்யபாகத்தில் உப்பு நெய் சேர்த்து இருதய மந்திரத்தால் சேர்த்து தேவாம்ச பாகத்தை மட்டும் முருகனுக்கு சமீபத்தில்

गत्वा निवेद्य देवाय नीत्वा विज्ञाय मन्त्रवित् ।
दन्तकाष्ठञ्च तैलञ्च पूर्वे तत्पुरुषं स्मरन् ॥ १३३ ॥

*கதவா நிவேத்ய தேவாய நீத்வா விக்ஞாப்ய மந்த்ரவித்/*
*தந்த காஷ்டஞ்ச தைலஞ்ச பூர்வே தத்புருஷம் ஸ்மரேத்//*

கொண்டு வந்து நிவேதித்து மந்திரப்பூர்வமாக மனப்பூர்வமாகவும் வேண்டிக் கொண்டு பல்துலக்கும் குச்சி ஸ்நாநதைலம் முதலில் தத்புருஷ மந்திரத்தை நினைத்து

दक्षिणे दण्डकौपीनं वहुरूपेण मन्त्रत: ।
कमण्डल्वक्षमालाञ्च पश्चिमे सद्यमन्त्रत: ॥ १३४ ॥

*தக்ஷிணே தண்ட கௌபீநம் பஹுரூபேண மந்த்ரத:!
கமண்டல்வக்ஷ மாலாஞ்ச பஸ்சிமே ஸத்ய மந்த்ரத:!!*

தெற்குப் பகுதியில் ஞானதண்டம் கோவணம் முதலியவைகளை பஹுரூபமென வரும் வேதமந்திரத்தாலபி மந்திரித்து கமண்டலு ஜபமாலை இவைகளை மேற்கில் வைத்து ஸத்யோஜாதமந்திரத்தாலும்

वामे ज्ञानञ्च भस्मानि दर्पणं वाममन्त्रत: ।
ऐशान्यां पादुकानाञ्च ताम्बूलं त्वीशमन्त्रत: ॥ १३५ ॥

*வாமே ஞானஞ்ச பஸ்மாநி தர்ப்பணம் வாம மந்த்ரத:!
ஐஸான்யாம் பாதுகாநாஞ்ச தாம்பூலம் த்வீச மந்த்ரத:!!*

வடக்குப் பகுதியில் வேல், விபூதி, கண்ணாடி, இவைகளை வைத்து அதற்குரிய மந்திரமோதி வடகிழக்கில் இருபாதுகைகளையும் தாம்பூலமும் வைத்து ஈசான மந்திரமோதி

स्थण्डिले सूत्रनिकटे परितश्चापि साधयेत् ।
पवित्राणि च तन्मध्ये पात्रे स्थाप्य शुभाणुना ॥ १३६ ॥

*ஸ்தண்டிலே ஸூத்ரநிகடே பரிதஸ்சாபி ஸாதயேத்!
பவித்ராணிச தன்மத்யே பாத்ரேஸ்தாப்ய சுபாநுநா!!*

சிறுமேடையில் பவித்ர ஸூத்ரங்களை தாம்பாளத்தில் முறைப்படி ஸூத்ர குஞ்சங்களை கிழக்கு நோக்கி மத்தியில் வைத்து

अस्त्रेण प्रोक्षितं सम्यगवकुण्ठ्य हृदार्चनम् ।
धेनुमुद्रामृतीभूतं स्कन्दाङ्गैर्मनुभिर्यजेत् ॥ १३७ ॥

*அஸ்த்ரேண ப்ரோக்ஷிதம் ஸம்யக் அவகுண்ட்ய ஹ்ருதார்ச்சனம்!
தேனுமுத்ரா ம்ருதீபூதம் ஸ்கந்தாங்கைர்மநுபிர்யஜேத்!!*

அஸ்திர மந்திரத்தில் புரோக்ஷணம் செய்யப்பட்டதும் கவச மந்திரத்தால் அவகுண்டனமெனும் மந்திர வேலியிடப்பட்டதும் இருதய மந்திரத்தால் இருதய பூர்வமாய் அர்ச்சிக்கப்பட்டதுமான அமுதமயமாக்கும் பசுமாட்டு நாற்காம்பு போன்ற தேனுமுத்திரையைக் காண்பித்து அமிருதமயப் புனிதமான பவித்ரஸூத்ர மாலைகளை முருகனின் திருமேனியில் அலங்கரிக்கச் செய்யச் சொல்ல வேண்டும்.

मण्डले वेदिकोर्ध्वे तु पवित्रस्याशुचासनम् ।
मृगाजिनादिना चापि स्थापयेत्पावकान्तिके ॥ १३८ ॥

*மண்டலே வேதிகோர்த்வேது பவித்ரஸ்யாசுசாஸநம்!
ம்ருகாஜிநாதிநாவாபி ஸ்தாபயேத் பாவகாந்திகே!!*

வேதிகை மேலுள்ள மண்டலத்தில் பவித்ரப்புனித ஆசனத்தில் மான்தோல் முதலிய பொருள்களால் தென்கிழக்குப் பகுதியில் அக்னியிடம் வைக்கவும்

संवत्सरकृतं पापं यदसाक्षिणमव्ययम् ।
प्रायश्चित्तार्थमेतस्य पवित्रत्वं त्वां नमाम्यहम् ॥ १३९ ॥

*ஸம்வத்ஸர க்ருதம் பாபம் யதாஸாக்ஷிணமவ்யயம்!
ப்ராயசித்தார்த்த மேதஸ்ய பவித்ரம் த்வாந்நே மாம்யஹம்!!*

வைத்து இவ்வாறு வேண்டிக் கொள்ளவும் ஆண்டு முழுவதும் செய்யப்பட்ட பாபங்கள் முருகன் முன்னிற்க ஆதவனைக் கண்ட பனித்திவலைகள் போல் நீக்கவல்ல ஏ! பவித்ர மாலைகளே உன்னை முருகனாகவே வணங்குகிறோம்.

सुब्रह्मण्यं स्मरन् ब्रह्म षडङ्गैर्मूलमन्त्रत: ।
स्तण्डिले सूत्र निकटे परितश्चापि साधयेत् ॥ १४० ॥

*ஸுப்ரஹ்மண்யம் ஸ்மரந் ப்ரம்ம ஷடங்கைர்மூல மந்த்ரத:।*
*ஸ்தண்டிலே ஸூத்ரநிகடே பரிதஸ்சாபி ஸாதயேத்॥*

இவ்வாறு மந்திரபூர்வமாக மனப்பூர்வமாக பவித்ர சூத்ரமாலைகளை (அதிவாஸம்) ஓரிரவு பூஜையில் வைத்து முருகனை முழுதும் மனதார நினைத்து ஹிருதயாதி ஷடங்க மந்திரங்களாலும் பின் ஷடாக்ஷர மூல மந்திரத்தாலும்

इदं मन्त्रं समुच्चार्य पवित्राण्यधिवासयेत् ।
पवित्राणिच तन्मध्ये पात्रे स्ताप्य शिवाणुना ॥ १४१ ॥

*இதம்மந்த்ரம் ஸமுச்சார்ய பவித்ராண்யதிவாஸயேத்।*
*பவித்ராணிச தந்மத்யே பாத்ரே ஸ்தாப்ய சிவாணுநா॥*

சிறுமேடையில் பவித்ர சூத்ர மாலைகளிலும் நான்கு புறங்களிலும் பாத்திரத்திலும் பஞ்சாக்ஷர மந்திரங்களால் பிரார்த்தித்து ஜபித்து மலர்களைப் போட்டு

ददेद्वह्निस्थदेवाय तृतीयांशं चरुं गुरु: ।
त्रिसप्तकृत्वा संपातं तथैव जुहुयात्तत: ॥ १४२ ॥

*ததேத்வஹ்னிஸ்த தேவாய த்ருதீயாம்சஞ்ச ரும்।*
*த்ரிஸப்த க்ருத்வா ஸம்பாதம் ததைவ ஜுஹுயாத்தத:॥*

அந்தப் பவித்ர சூத்ரங்களுக்கு 21 முறை ஸம்பாதாஹுதி எனும் ஸ்வா என்று அக்னியிலும் ஹா என்று சூத்திரப்பட்டுப் பவித்ரத்திலும் ஷடக்ஷர மங்களாலும் (இயன்றவரை) செய்து

चरुशेषं हुतं भुक्तवा रात्रिशेषं व्यपोह्य च ।
तत: प्रभाते सुस्नात: स्नानसंध्यानुतर्पणम् ॥ १४३ ॥

*சருசேஷம் ஹுதம் புக்த்வா ராத்ரிசேஷம் வ்யபோஹ்யச।*
*தத: ப்ரபாதே ஸுஸ்நாத: ஸ்நாந ஸந்த்யாநு தர்ப்பணம்॥*

அன்ன ஹோமம் செய்து ஹுதசேஷங்களை ஆசார்யர் ஆத்மார்ப்பணம் செய்து கொண்டு மறுநாள் காலையில் முறைப்படி ஸ்நாநஸந்த்யா நுஷ்டானங்களையும் விசேஷ சந்தி தர்ப்பணாதிகளையும் முடித்துக் கொண்டு

समाचम्य कृतन्यासं सामान्यार्घ्यकरो गुरु: ।
कृत्वा नित्यविधि: सम्यगाचार्यो मन्त्रवित्तम: ॥ १४४ ॥

*ஸமாசம்ய க்ருதந்யாஸ ஸாமாந்யார்க்ய கரோத்குரு:।*
*க்ருத்வாநித்ய விதிம்ஸம்ய காசார்யோ மந்த்ரவித்தம:॥*

மும்முறை முறைப்படி ஆசமனம் செய்து பூதசுத்தியாதிகளை முடித்துக் கொண்டு சாமான்யார்க்யத்தோடு நித்ய விதிமுறைப்படி செய்து கொண்டு மந்திர விதிமுறையறிஞரான அர்ச்சகர்

द्वारं द्वाराधिपानिष्ट्वा गत्वा कुम्भान्तिकं गुरु: ।
सास्त्रान् दिक्पालकान् कुम्भान् पूर्वं कृत्वा समर्चयेत् ॥ १४५ ॥

*த்வாரம் த்வாராதி பாநிஷ்ட்வா கத்வா கும்பாந்திகம் குரு:।*
*ஸாஸ்த்ராந்திக் பாலகாந் கும்பாந் பூர்வம்க்ருத்வா ஸமர்சயேத்॥*

நான்கு த்வாராதிபதிகளைப் பூசித்து கும்ப பூஜைகளையும் முடித்து குண்டசமீபம் வந்து திக்பாலக கும்பங்களையும் அவர்களது ஆயுதங்களையும் முதலில் பூஜித்து விட்டு

कुण्डाधिदेवतान् पूज्य परिषिच्य यथाक्रमम् ।
स्कन्दमूलेन ब्रह्ममूर्तिमन्त्रै: षडङ्गकै: ॥ १४६ ॥

*குண்டாதிதேவதா: பூஜ்ய பரிஷிச்ய யதாக்ரமம்।*
*ஸ்கந்த மூலேந ப்ரம்மமூர்த்தி மந்த்ரைஷடங்ககை:॥*

முறைப்படி குண்ட தேவதைகளையும் பூஜித்து நாற்புறமும் முறைப்படி பரிசேஷணம்

செய்து முருகனின் மூலத்தாலும் பிரும்மாங்க பஞ்சபிரும்ம ஷடங்க மந்திரங்களாலும்

नाडीसंधानमार्गेण योजयेद् भावयेद् गुहम् ।
यान्येतानि पवित्राणि भगवान् संस्कृतानि च ॥ १४७ ॥

*நாடீசந்தான மார்கேண யோஜயேத் பாவயேத்குஹம் /*
*யாந்யே தாநி பவித்ராணி பகவாந் ஸம்ஸ்க்ருதாநிச //*

மண்டலத்திலும் கும்பத்திலும், குண்டத்திலும், முருகனை நாடி சந்தான முறையில் ஒருங்கிணைத்து முருகனை மூன்றிடத்திலும் பூசித்தவரை ஒன்றுபடுத்தி

मण्डलस्थगुहेनैव पावकस्थगुरुं तथा ।
अर्चयामि घटस्थाय गुहायाप्येषयेदिति ॥ १४८ ॥

*மண்டலஸ்த குஹேநைவ பாவகஸ்த குஹந்ததா /*
*அர்ச்சயாமி கடஸ்தாய குஹாயாத்யேஷயேதிதி //*

ப்ரபோ முருகா இங்குள்ள அனைத்து பவித்ரசூத்ர மாலைகளனைத்தும் செய்யப் படவேண்டிய அனைத்து சடங்குகளும் உனதருளால் செய்யப்பட்டு யாவும் உனக்கே அறப்பணிக்கே முயற்சியோடு உள்ளோம் என வேண்டி

समर्च्य रक्षणामस्मै षट्पवित्राणि देशिक: ।
एकैकं शक्तिवर्धन्यौ जयान्तादिभ्य एव च ॥ १४९ ॥

*சமர்ச்ய ரக்ஷணாமஸ்மை ஷட்பவித்ராணி தேசிக: /*
*ஏகைகம் சக்தி வர்த்தந்யௌ ஜயந்தாதிப்ய ஏவச //*

அர்ச்சித்து இவைகள் எங்களைக் காப்பதற்காக உனதருளை வேண்டி தங்களுக்கும் தேவியிருவருக்கும் ஜயந்தாதி எண்மருக்கும் பரிவார மூர்த்திகட்கும்

द्वारेशेभ्यो दिगीशेभ्यो दद्याद् गन्धपवित्रकम् ।
तत्तन्नामचतुर्थ्यन्तै: प्रतिगृह्णेति दापयेत् ॥ १५० ॥

*த்வாரேசாப்யோ திகீசேப்யோ தத்யாத் கந்த பவித்ரகம் /*
*தத்தந்நாம சதுர்த்யந்தை: ப்ரதிக்ருண்ஹேதி தாபயேத் //*

வாயிற்தோரண தேவதைகளும் திசைத்தேவர்களுக்கும் மணமிகு பவித்ரங்களை அவரவருடைய நான்காவது விபக்தியோடு நம: என முடியும் செல்வமளிக்கும் மந்திரம் சேர்த்து சாத்தி

यागशालागजस्थानं प्रासादपचनालयम् ।
द्वारकान् सूत्रषट्केण वर्मणा परिवेष्टयेत् ॥ १५१ ॥

*யாகசால கஜஸ்தாநம் ப்ராசாத பசநாலயம் /*
*த்வாரகாந் சூத்ரஷட்கேந வர்மணா பரிவேஷ்டயேத் //*

ஆறாறு சூத்ரங்களடங்கிய யாகசாலை யானை கோபுரம் திருமடப்பள்ளி த்வாரபாலகர்களுக்கு கவச மந்திரத்தால் பவித்ரம சமர்ப்பித்து

द्वारं पूर्ववदभ्यर्च्य गर्भगेहं प्रविश्य च ।
दन्तकाष्ठं च तैलं च ताम्बूलं हृदयेन च ॥ १५२ ॥

*த்வாரம் பூர்வதப்யர்ச்ய கர்பகேஹம் ப்ரவிச்ய ச /*
*தந்த காஷ்டஞ்ச தைலஞ்ச தாம்பூலம் ஹ்ருதயேநச /*

பிறகு மூலாலயம் செல்லும் முன முன்போல் வழக்கம்போல் துவாரபாலகர்களை அர்ச்சித்து கருவறைக்குள் சென்று கநதனுக்கு முன் பல்துலக்கும் குச்சி மணமிகு நல்லெண்ணெய வெற்றிலைப் பாக்கு இவைகளை ஹ்ருதய மந்திரத்தால் கொடுத்து

उपचारक्रमणैव युक्त्याद्दद्याद् क्रमाद् गुरु: ।
आधाराधेयपूजां च कुर्यादपि विशेषत: ॥ १५३ ॥

*உபசார க்ரமேணைவ யுக்த்யா தத்யாத் க்ரமாத் குரு: /*
*ஆதாராதேய பூஜாம்ச குர்யாதபி விசேஷத: //*

உபசாரம் செய்யும் வரிசைப்படி. ஆசார்யரானவர் ஆதாரசக்தி முதல் பஞ்சாஸன நியாஸ ஆவாஹநாதி பஞ்சாவரண பூஜைகளை சிறப்பாக முறைப்படி செய்து

विशेषस्नपनोपेतं यथाविभवविस्तरम् ।
आमन्त्रणपवित्रान्तं सुधामुद्राप्ररोपितम् ॥ १५४ ॥

*விசேஷ ஸ்நபநோபேதம் யதாவிபவ விஸ்தரம்!*
*ஆமந்த்ரண பவித்ராந்தம் சுதாமுத்ரா ப்ரரோபிதம்!!*

சிறப்புக் கலச பூஜைகளை பொருளாதார அடிப்படையில் செய்விக்க வேண்டும். ஆரம்பம் முதல் பவித்ராரோபணம் செய்யும் வரை தேனுமுத்ரையெனும் அமிர்த முத்ரை ஆங்காங்கு பூஜாஸ்தானங்களில் காண்பிக்கப்பட வேண்டும்

गुहःयारेप्य तन्मूर्ध्नि रेचकेण गुहार्चना ।
आमन्त्रणात्मकं कर्म पठेद् देवेशसंनिधौ ॥ १५५ ॥

*குஹாயாரோப்ய தன்மூர்த்னி ரேசகேந குஹார்சனா!*
*ஆமந்த்ரணாத்மகம் கர்ம படேத்தேவேச*
*ஸன்னிதௌ!!*

பவித்ர உற்சவ துவக்கம் முதல் முருகன் சந்நிதியில் வேதமந்த்ர படனம் (வாசித்தல்) (ஸ்வர அக்ஷர சுத்தமாக உதாத்த அனுதாத்த ஸ்வரித தீர்க்க ஸ்வரிதத்துடன் அனுஷங்கமாக சொல்லுவித்தல்) பவித்ராரோபண சமயம் வரை நீட்டிக்கப்பட வேண்டும்

नमस्ते विदिवच्छिद्र पुराणेश मखं प्रति ।
प्रभावान्मन्त्रयामि त्वां तदिच्छावाप्तिकारणम् ॥ १५६ ॥

*நமஸ்தேவிதிவச்சத்ர புராணே சமகம் ப்ரதி!*
*ப்ரபாவான்மந்த்ர யாமித்வா ததிச்சவாப்தி காரணம்!!*

புராணம் வாசித்தல், வேதம் ஓதுவித்தல் அதன் முழுப்பயனை அடைய விரும்புபவர்கள் யாகங்கள் எவ்வெப்பொழுது எங்கெங்கு நடைபெறுகிறதோ அங்கெல்லாம் கண்டிப்பாக முழு கவனத்தோடு எவ்வாற்றானும் கண்காணிக்க வேண்டும், - ஏனெனில் ஒளி வடிவாகவும் ஒலிவடிவாகவும் இறைவன் இருந்து பிரதிபலிப்பதை அனல் வடிவிலும் புனல் வடிவிலும் வழிபாடு நடத்தும் சமயங்களில் முறைப்படி நடத்துவது நலமிகு நற்செயலாகும்.

तत्सिद्धिमनुजानीहि यतः शरवणोद्भव ।
सर्वदा सर्वथा स्वामिन् नमस्तेऽस्तु प्रसीद मे ॥ १५७ ॥

*தத்ஸித்தி மனுஜாநீஹி யதஸ் சரவணோத்பவ!*
*சர்வதா ஸர்வதா ஸ்வாமின் நமஸ்தேஸ்து*
*ப்ரஸீதமே!!*

அதன் முழுப்பயனைத் தரவல்ல முருகப் பெருமானே இவ்வகையான நல்வாய்ப்புகளை மேலும் மேலும் எவ்வெப்போதும் எங்களுக்கு வழங்கியருள் பாலித்து ஆட்கொள்ள வேண்டும்.

जप्त्वा निवेद्य देवाय नमस्कृत्वा समापयेत् ।
षट्पवित्राणि मतिमान् मूर्तिमन्त्रैः प्रदापयेत् ॥ १५८ ॥

*ஜப்த்வா நிவேத்ய தேவாய நமஸ்க்ருத்வா*
*சமாபயேத்!*
*ஷட்பவித்ராணி மதிமான் மூர்த்தி மந்த்ரை:*
*ப்ரதாபயேத்!!*

ஜபித்து நிவேதித்து முருகனை முழுதும் வணங்கி பவித்ரா ரோபணம் எனும் புனிதப்பட்டு மாலைகளை நித்ய நிர்மலப் புனிதனுக்கு ஆண்டுப்பூசை அகிலத்திற்குப் பயன் தரவும் ஆறு பவித்ர மாலைகளை முருகனின் ஆறு மந்திரங்களையும் கூறி ஆறு பவித்ர மானவர்களுக்கு ஆறுமுகனின் அருட்பிரஸாதங்களாக ஆகம மறிந்த ஆசார்யர் அளித்து மகிழ்விப்பார்.

स्कन्दमूलेन मन्त्रेण दद्यात् स्कन्दावतारकम् ।
मन्त्रहीनं क्रियाहीनं भक्तिहीनं च यत् कृतम् ॥ १५९॥

*ஸ்கந்த மூலேந மந்த்ரேண தத்யாத்*
*ஸ்கந்தாவதாரகம் !*
*மந்த்ரஹீநம் க்ரியாஹீநம் பக்தி ஹீநஞ்ச*
*யத்க்ருதம் !!*

அச்சமயம் முருகனின் மூல மந்த்ரங்களை முறைப்படி முடிந்தவரை ஜபிக்கச் சொல்ல வேண்டும். அப்போது பக்தர்கள் முருகனின் புகழ்மிகு வரலாற்றை பக்திப் பரவசத்தோடு கேட்கும்படி புராண ப்ரவசன ஏற்பாடு செய்யத் தக்கது. பிறகு முருகனிடம் எங்களால் செய்யப்பட்ட பவித்ரோற்சவ வரிசையிலோ மந்திரங் கூறுவதில் செய்த காரியங்களில் மனோலயமில்லாத பக்திகுறைவு போன்ற

जपहोमार्चनाहीनं कृतं नित्यं मया तव ।
कृतं सावित्रिहीनं च तत्पूरय विधानत: ॥ १६० ॥

*ஜபஹோமார்சநா ஹீநம் க்ருதம் நித்யம் ம யாதவ !*
*க்ருதம் சாவித்ரி ஹீநஞ்ச தத் பூரய விதாநத: !!*

ஜப எண்ணிக்கைக் குறைவு வேள்வியில் எழுந்த குறைகள் எவையெனும் இருப்பின் முருகா உன் திருவருளால் அவைகள் அனைத்தும் நிறைவெய்தி நற்பயன்களையே நாளும் அளிக்க அருள்வாயாக

त्वया पवित्रितं सर्वं जगदेतच्चराचरम् ।
तथाप्यत्र पवित्राणि दापयामि त्वदाज्ञया ॥ १६१ ॥

*த்வயா பவித்ரிதம் சர்வம் ஜகதேதச்சராசரம் !*
*தவாப்யத்ர பவித்ராணி தாபயாமி த்வதாக்ஞயா !!*

தங்கள் திருவருளால் எப்போதும் உலகம் எங்கும் புனிதப்பட்டுத் தங்கள் திருவாணையால் உலகம் உய்ய உவப்பவந்து உதித்து அருள் புரிவீராக

निवेद्य देवदेवाय नमस्कुर्याद् विशेषत: ।
शक्तिद्वये पवित्रे द्वे दद्यात् तत्तद्धृदाधुना ॥ १६२ ॥

*நிவேத்ய தேவதேவாய நமஸ்குர்யாத் விசேஷத: !*
*சக்தித்வயே பவித்ரேத்வே தத்யாது*
*தத்தத்ருதாதுநா !!*

முருகப் பெருமானுக்கு எல்லாவற்றையும் மனமொழி மெய்களால் நிவேதித்து (தெரிவித்து) சிறப்பாக வணங்கி இரு தேவிமார்களுக்கு இதய மந்திரத்தோடு இப்பொழுது பவித்ர மாலை சாத்தி மனமுருகி வழிபாடியற்றுக

दिगीशपरिवारेभ्यो देवेभ्यस्त्वेकमेककम् ।
सुमित्रक्षेत्रपालेभ्यो दद्याद् गन्धपवित्रकम् ॥ १६३ ॥

*திகீச பரிவாரேப்யோ தேவேப்யஸ்த்வேகமேககம் !*
*சுமித்ர க்ஷேத்ர பாலேப்யோ தத்யாத்*
*கந்தபவித்ரகம் !!*

திசைத் தேவரெண்மருக்கும் ஏனைய முருகனின் ஆலயத்திலுள்ள பரிவார மூர்த்தங்களுக்கும் சுமித்ர சண்டிகேஸ்வரருக்கும் க்ஷேத்ரபாலரெனும் பைரவ மூர்த்திக்கும் தெய்வமணங்கமழ் புனிதப்பட்டு மாலைகளை சமர்ப்பித்து வேண்டுக.

प्रायश्चित्तं तत: कुर्यादस्त्रेणैव शताहुति: ।
सिद्धान्तपुस्तके तद्यात् स्वगुरोश्च पवित्रकम् ॥ १६४ ॥

*ப்ராயஸ்சித்தந்தத: குர்யாதஸ்த்ரேணைவ*
*ஸதாஹுதி: !*
*ஸித்தாந்த புஸ்தகே தத்யாத் ஸ்வகுரோஸ்ச*
*பவித்ரகம் !!*

மேலும் வேண்டுவதோடு வாளா இருந்துவிடாது எக்குறை எப்படி ஏற்பட்டிருப்பினும் அவை யாவும் முழுதும் நீங்கிமுழுப் பயனை அடைய அஸ்திர மந்திரங்களால் நூறு முறைத் தனித்தனியாக எல்லா அஸ்திரங்களையும் அதே அக்னியில்

செய்து மனநிறைவோடு தனது குருவுக்கு மேலும் ஞானமளிக்கும் இரு ஞான நூல்களை பணிவோடு சமர்ப்பித்து வணங்க வேண்டும்.

प्रभूतहविषं दद्यात् यथाविभवविस्तरम् ।
ब्राह्मणान् भोजयेत् पश्चात् दीनानाथांश्च भोजयेत् ॥ १६५ ॥

*ப்ரபூத ஹவிஷந்தத்யாது யதாவிபவ விஸ்தரம் /*
*ப்ராம்மணாநு போஜயேத் பஸ்சாத் தீநாநாதாம்ஸ்ச போஜயேத் //*

சுவைமிகுப் பேருணவை பொருளாதார மேம்பாட்டுக் கிணங்க பெருமானின் முன் முழுவதும் சமர்ப்பித்து நிவேதித்து பக்தப் பெருமக்கள் அனைவருக்கும் உவகையூட்டும் முறையில் அந்தணர்களுக்கும், ஏழை, எளியவர் குருடு, செவிடு போன்ற ஊனமுற்றவர்களுக்கும் அன்னதானத்தை நிதானமாக செய்து முழுப்பயனையும் முறையே பெறுக.

उत्तमं दशनिष्कं स्यात् मध्यमं तु तदर्धकम् ।
तदर्धमधमं ज्ञेयं देशिकस्य तु दक्षिणा ॥ १६६ ॥

*உத்தமம் தஸநிஷ்கம் ஸ்யாத் மத்யமந்து ததர்தகம் /*
*ததர்த மதமம்ஞேயம் தேஸிகஸ்யது தக்ஷிணா //*

பழைய காலத்தில் ரூபாய் நாணயங்கள் வெள்ளியினாலானவைகள் எனவே ஆசார்யருக்கு பவுன் விலை மலிவானதாகவும் இருந்த காரணத்தாலும் என்ன விலை விற்றாலும் பவுன்தான் தங்கந்தான் சன்மானமாகத் தரவேண்டுமென உயர்ந்த நிலையாக பத்து பவுனும் நடுத்தரமாக ஐந்து பவுனும் 2½ பவுன் கடை நிலையாகவும் பவித்ர உற்சவ ஸ்தலக்ஞர் உள்ளூர் ஆசார்யருக்கு மனமுவந்து வழங்க வேண்டும்.

मूर्तिपानां तदर्धं स्यात् जापकानां तदर्धकम् ।
अत्रोपकरणं सर्वं देशिकाय प्रदापयेत् ॥ १६७ ॥

*மூர்த்திபாநாம் ததர்த்தம் ஸ்யாத் ஜாபகாநாம்த ததர்த்தகம் /*
*அத்ரோபகரணம் ஸர்வம் தேஸிகாய ப்ரதாபயேத் //*

ஆசார்யருக்கு எவ்வளவு எந்த விகிதத்தில் வழங்கப்பட்டதோ அதில் பாதி மீதி எட்டு ரித்விக்குகளுக்கும் சாதகருக்கும் அதில் பாதி வேதமோதிய விற்பன்னர்களுக்கும், அங்கு புதிதாக வாங்கி பயன்பட்ட புதுகுடங்கள் சொம்புகள் தங்க வெள்ளிக் கம்பிகள் வெள்ளி ச்ருக்சிருவம், வெள்ளி மணப்பலகை, பஞ்சபாத்திரம், உருத்திரணி கிண்டி பவித்ரம், காப்பு, தர்ஜனி; போன்றவைகளையும் அச்சபையிலேயே மனமுவந்து ஆசார்யருக்கு வழங்கி மகிழ்வித்து எல்லோரும் மகிழ வேண்டும். ஏனெனில் முருகனுக்கே முழுதும் வழங்கிய பயனை அவரின் பிரதிநிதியாய் இருந்து பெற்றுக் கொண்டு வாழ்த்தும் ஊனக்கண்ணாலும் காணக் கூடிய முருகப்பிரானே உள்ளூர் பூஜகர் சிவாச்சாரியார் ஆவார்.

पवित्राणिच दर्भांश्च वस्त्राण्याभरणानि च ।
पुन: पुन: प्रयोक्तव्यं पूतान्येतानि सर्वदा ॥ १६८ ॥

*பவித்ராணிச தர்பாம்ஸ்ச வஸ்த்ராண்யாபரணாநிச /*
*புந: புந: ப்ரயோக்தவ்யம் பூதாந்யேதாநி ஸர்வதா //*

எப்பொழுதும் புனிதமாயுள்ள மீதமுள்ள பவித்ரமாலைகள் பட்டு, வஸ்திரங்கள் முருகனின் ஆடை, ஆபரணங்கள் மறுபடியும் மறுபடியும் உபயோகிக்கத் தக்கனவானதால் முறைப்படி பாதுகாத்துப் பயன்படுத்துக.

मण्डलस्थं घटं चैव वह्निस्थं नित्यमर्चयेत् ।
अर्धमासं च सप्तर्क्षं पञ्चाहं वा त्र्याहकम् ॥ १६९ ॥

*மண்டல ஸ்தம்கடஞ்சைவ வஹ்நிஸ்தம் நித்யமர்சயேத் /*
*அர்த மாசஞ்ச ஸப்தர்க்ஷம் பஞ்சாஹம் வாத்ர்யாஹகம் //*

மண்டலத்திலும், கடத்திலும், அக்னியிலும், பதினைந்து நாட்களுக்கும், அல்லது ஏழு நாட்களுக்கும், அல்லது ஐந்து நாட்களுக்கும் அல்லது மூன்று நாட்களாவது முறைப்படி தொடர்ந்து அர்ச்சிப்பது வேள்வி செய்வது நலம்பல பயக்கும்

एवं पवित्रं पूजां च प्रकुर्यात्तु दिनं प्रति ।
मन्त्रतर्पणकर्मान्तं कृत्वा निष्कृतिमाचरेत् ॥ १७० ॥

*ஏவம் பவித்ரம் பூஜாஞ்ச ப்ரகுர்யாந்து தினம்ப்ரதி!*
*மந்த்ர தர்ப்பண கர்மாந்தம் க்ருத்வா நிஷ்க்ருதி மாசரேத்!!*

இவ்வாறு மீண்டும் குற்றங்கள் வாரா வண்ணம் தினசரியே எந்தக் குறையும் எழா வண்ணம் எல்லோரும் கண்ணும் கருத்துமாக மந்த்ர தர்ப்பணங்களோடு தினப் பூசையையும் செய்து தானும் மகிழ்ந்து உலகும் மகிழும்படி செய்க.

अस्त्रेणैव शतं पश्चात् पूर्णां वै चित्ररूपिणीम् ।
लक्षञ्चाघोरमावर्त्य चाज्यहोमं समाचरेत् ॥ १७१ ॥

*அஸ்த்ரேணைவ சதம்: பஸ்சாத் பூர்ணாம்வை சித்ர ரூபிணீம்!*
*லக்ஷஞ்சா கோர மாவர்த்யாசாஜ்ய ஹோமம் ஸமாசரேத்!!*

பிறகு அஸ்த்ரமந்திரங்களை நூறு, நூறு ஆவர்த்தி ஜப ஹோமம் செய்து ஒரு லக்ஷம், அகோராஸ்த்ர ஜபம் செய்து பத்தாயிரம் ஹோமம் செய்து விட வேண்டும்.

भसितं दर्शयित्वाथ वह्निस्थं योजयेद् गृहम् ।
वह्नेर्मन्त्रं च संहृत्य नीत्वा तं द्वादशान्तके ॥ १७२ ॥

*பஸிதம்தர்சயித்வாத வந்நிஸ்தம் யோஜயேத்குஹம்!*
*வந்நேர் மந்த்ரஞ்ச ஸம்ஹ்ருத்ய நீத்வாதம் த்வாதசாந்தகே!!*

அனல் வழிபாட்டில் அமர்ந்துள்ள அரனார்பாலனை புனல் குடத்திலும் புன்னகையோடுள்ள புண்ணியனோடு அன்போடு சேர்ப்பித்து விடவேண்டும். (தலைக்கு மேல் 12 அங்குல உயரத்தில் குருவடிவாக திருவடித்தீக்கை செய்து எப்போதும் தப்பாது அருள்பாலிக்கும் முருகனை குருவாய் வருவாய் அருள்வாய் முருகா என அழைத்து குடவடிவில் உள்ள குமரன் தன் வலக்கரத்தில் யாக பயன்களை மலர்ப்புனலால் மகிழ்ந்து சேர்ப்பிக்க)

हृदये संनिवेश्याग्निं विसृज्योद्वास्य विष्टरान् ।
परिधिं च बलिं दद्यात् समाचम्य गुरुः शुचिः ॥ १७३ ॥

*ஹ்ருதயே ஸந்நிவேச்யாக்னிம் விச்ருஜ்யோ த்வாஸ்ய விஷ்டரான்!*
*பரிதிஞ்ச பலிந்தத்யாத் ஸமாசம்ய குரு: சுசி:!!*

இருதயத்திலிருந்து எடுத்த ஜாடராக்னியை பௌதீக சிவாக்னியோடு சேர்ப்பித்து மீண்டும் இதயத்தில் சேர்ப்பித்துக் கொள்ளல் (மரபு) வேண்டும். மதிமிகு அர்ச்சக ஆசார்யர் (பரிதி விஷ்டர பரிஸ்தரனங்களில்) யாக குண்டத்தின் மேல் வைத்த நீளமான நேரான 4 யாக சமித்துக் குச்சிகளிலும், பூசிக்கப்பட்ட பிரும்ம, விஷ்ணு, ருத்ர, ஈஸ்வரர்களையும் நடுமேகலையில் வைத்துப் பூசித்த நீளமான 4 விஷ்டரங்கள் எனும் தர்பை கட்டுடைய முடிச்சுடையவைகளில் திசைமன்னர் பதின்மரையும் கீழமேகலையில் அவர்களது பத்து ஆயுதங்களையும் பூசித்து பலியன்னமிட்டு வழியனுப்பி அர்க்ய ஆசமனங் கொடுத்து மீண்டும் அழைக்கும் போது அவசியம் வந்து அருள்புரிய பிரார்த்தித்து கொள்வார்.

स्कन्दकुम्भे च वर्धन्यौ मन्त्रान् संहृत्य योजयेत् ।
दिक्पालानस्त्रसहितान् द्वारपालांश्च संस्थितान् ॥ १७४ ॥

*ஸ்கந்த கும்பேச வர்த்தந்யௌ மந்த்ராந் ஸம்ஹ்ருத்யயோஜயேத் !*
*திக்பாலநஸ்த்ர ஸஹிதாந் த்வார பாலாம்ச்ச ஸம்ஸ்திதாந் !!*

முருகன் கும்பத்திலிருந்து முருகன் பிம்பத்திற்கும் இருதேவி கும்பங்களிலிருந்து இருதேவியர்களையும், ஆகர்ஷித்து மலர்களால் சேர்ப்பித்து நிலைநிறுத்திப் பூசித்து பிறகு அபிஷேகித்து அருள்மனம் மேலும் பொலிவுறச் செய்ய வேண்டும். பிறகு திசைத் தேவர்களையும், அஸ்த்ர தேவர்களையும், கர்ப்பக் கிரஹத்தின் உட்புறமே அந்தந்த இடத்தில் அபிஷேகித்து அருள்நிலை நாட்டுக. துவார பாலகர்களையும் அவ்வண்ணமே செய்க.

अर्घ्यं तन्नित्यपूजाङ्गं पुज्याद्यैः षरिकल्पयेत् ।
रव्यन्तं संविसृज्याथ पवित्राणि षडाननात् ॥ १७५ ॥

*அர்க்யந்தந்நித்ய பூஜாங்கம் புஷ்பாத்யை: பரிகல்படயேத் !*
*ரவ்யந்தம் ஸம் விச்ருஜ்யாத பவித்ராணி ஷடாநநாத் !!*

பூஜை நிறைவு அர்க்யமான நிரோதார்க்யம் அளித்து மலர் முதலியவைகளால் பூஜித்து சூரியன் வரை நிறைவு செய்து முருகனிடமிருந்து பவித்ரமாலைகளை சமர்ப்பிக்க வேண்டும்.

आदाय च सुमित्राय सर्वाण्येतानि दापयेत् ।
पवित्रं नित्यपूजाङ्गं पुणाद्यैः परिकल्पयेत् ॥ १७६ ॥

*ஆதாயச சுமித்ராய ஸர்வாண்யை தாநிதாபயேத் !*
*பவித்ரம் நித்ய பூஜாங்கம் புஷ்பாத்யை: பரிகல்பயேத் !!*

அன்றைய நித்ய பூஜையின் அங்கமாக இவையனைத்தையும் சமர்ப்பித்து மலர்கள் தூவி மகிழ்வோடு நிறைவேற்றுக. முடிவில் முருகனின் சண்டிகேஸ்வரரான சுமித்ரசண்டிகேஸ்வரருக்கு பவித்ரம் சமர்ப்பித்து முருகனின் யாக பூஜா பவித்ர சமர்ப்பண முழுப்பயனையும் வேண்டி நிறைவு செய்ய வேண்டும்.

एवं यः कुरुते मर्त्यः पवित्रोत्सवमुत्तमम् ।
मुच्यते ब्रह्महत्यायाः किं पुनश्चोपपातकैः ॥ १७७ ॥

*ஏவம்ய குருதே மர்த்ய: பவித்ரோத்ஸவ முத்தமம் !*
*முச்யதே ப்ரம்மஹத்யாயா: கிம்புநச்சோப பாதகை: !!*

இவ்வாறு காலந்தவறாது திரவியம் குறையாது, பக்திப்பணிவுமிகு, அன்பு குறையாது ஆண்டுதோறும் செய்விக்கத் தூண்டி எல்லோரையும் முருகனிடம் ஈடுபடுத்தி செய்து வருவார்களானால் (பிரும்மஹத்தி) பிராம்மணனைக் கொலை செய்த பாவமே நீங்குமேயென்றால் மற்ற பாபங்கள் நிச்சயமாக நீங்குமெனப் பொருள்) சகல பாபமும் தோஷமும் நீங்கிச் சுகமடைவர்

सर्वान् कामानिहप्राप्य सोऽन्ते स्कन्दपुरं व्रजेत् ।
पवित्रारोपणं प्रोक्तं श्रृणु श्रावणपूजनम् ॥ १७८ ॥

*சர்வாநு காமாந்நிஹப்ராப்ய ஸோந்தே ஸ்கந்தபுரம் வ்ரஜேத் !*
*பவித்ராரோபணம் ப்ரோக்தம் ச்ருணு ச்ராவண பூஜநம் !!*

(குறிப்பு) பிராம்மணனைக் கொலை செய்வது என்பது உயிரை எடுப்பது மட்டுமல்ல. (அவர்கள் தர்மங்களை செய்யவிடாமல் தடுப்பது. காலம் மாறிவிட்டது என்று மிரட்டி அவர்கள் வழிக்கு அந்தணர்களைத் திருப்புவதே பிராம்மணனைக் கொலை செய்ததை விட கொடிய கழுவாயில்லாத பாபமாகும் என்பதை யூகித்து அறிய நலமிகு பயக்கும்)

எல்லா இனிய நலன்களும் இனிதே இங்கேயே பெற்று நீடுழி வாழ்ந்து நிறைவாக

நிர்மலமான முருகனடியை முறையாக எய்துவர். பவித்ராரோபணம் என்னும் இப்பூசையில் ஆடியில் செய்ய வேண்டும் பிறகு ஆவணி மாத சிறப்பு பூசை பற்றிக் கேட்பீராக.

इति पवित्रारोपणविधिः

இதி பவித்ராரோபணவிதி:

இது பவித்ராரோபண முறையாகும்.

## ॥ श्रावणपूजाविधिः ॥

### சிராவணமாஸபூஜா

### ஆவணி மாத பூஜை முறை

श्रावणे तु श्रविष्ठान्तं तद्दिनात्पूर्वरात्रके ।
कौतुकं बन्धयेद्देवं पायसान्नं निवेदयेत् ॥ १७९ ॥

*ச்ராவணேது ச்ரவிஷ்டாந்தம் தத்திநாத் பூர்வராத்ரகே!*
*கௌதுகம் பந்தயேத்தேவம் பாயஸாந்நம் நிவேதயாத்!!*

ஆவணியில் அவிட்டத்தில் முடியில் வண்ணம் முன்னாளே முருகனுக்கு கங்கணங்கட்டி பாயஸம் நிவேதித்து பிரார்த்திக்க

प्रातः संध्यावसाने तु यथाविभवविस्तरम् ।
स्नपनं कल्प्य सपूज्य कुङ्कुमेनैव लेपयेत् ॥ १८० ॥

*ப்ராதஸ்ஸந்த்யாவஸாநேது யதாவிபவ விஸ்தரம்!*
*ஸ்நபநங்கல்ப்ய ஸம்பூஜ்ய குங்குமேநைவ லேபயேத்!!*

மறுநாள் காலை காலைக்கடன் நிறைவேற்றி பொருளாதாரத்துக்குத் தக்கவாறு கும்பங்கள் நிறுவிபூசித்து குங்குமமிடுக.

नववस्त्रेण संवेष्ट्य भूषयेद्भूषणार्हकैः ।
बन्धूकपुष्पदामैश्च नैरन्तर्यं विभूषयेत् ॥ १८१ ॥

*நவ வஸ்த்ரேண ஸம்வேஷ்ட்ய பூஷயேத் பூஷணார்ஹகை:!*
*பந்தூக புஷ்ப தாமைச்ச நைரந்தர்யம் விபூஷயேத்!!*

புத்தாடை அணிவித்து பூஷணங்களால் அலங்கரித்து செம்பருத்தி மலர் மாலைகளால் அழகுறச் செய்து நிறைமணிகளால் அலங்கரிக்கவும்

शर्करायाः शतप्रस्थं तदर्धं वा तदर्धकम् ।
पात्रे निधाय मतिमान् षण्मुखाय निवेदयेत् ॥ १८२ ॥

*சர்க்கராயாச்சத ப்ரஸ்தம் ததர்தம் வாததர்தகம்!*
*பாத்ரேநிதாய மதிமாந் ஷண்முகாய நிவேதயேத்!!*

ஒரு பெரியபடி (2 லிட்டர்) சர்க்கரைப் புது பாத்திரத்தில் புதுசர்க்கரையை (வைத்து) (அல்லது) 1 லிட்டர் அல்லது அரை லிட்டர் மதிமிகு பூஜகர் வைத்து அறுமுகப் பெருமானுக்கு அமுது செய்விக்க வேண்டும்.

प्रभूतहविषं दद्यात्ताम्बूलञ्च निवेदयेत् ।
एवं यः कुरुते मर्त्यः स पुण्यां गतिमाप्नुयात् ।
प्रोक्तं श्रावणपूजाञ्च श्रृणु भाद्रपदार्चनाम् ॥ १८३ ॥

*ப்ரபூத ஹவிஷந்தத்யாத் தாம்பூலஞ்ச நிவேதயேத்!*
*ஏவம்ய:குருதே மாத்யஸ்ஸபுண்யாங்கதிமாப்நுயாத்!!*
*ப்ரோக்தம் ச்ராவண பூஜாச ச்ருணுபாத்ர பதார்ச்சநம்!!!*

சுவைமிகு, அளவுமிகு அன்னம் படையல் செய்து மணமிகு வெற்றிலை பாக்குடன் நிவேதிக்க வேண்டும் இவ்வாறு செய்பவர் நற்கதியை அடைவதோடு நாளும் நலமே பெறுவர். ஆவணிப்பூசை அறிவிக்கப்பட்டது புரட்டாசிப் பூசை பற்றியைக் கூறுகிறேன். கேளும்.

इति श्रावणपूजाविधिः

இதி ச்ராவணபூஜா விதி:

## ॥ भाद्रपदमासपूजाविधिः ॥

(பாத்ர மத மாஸ பூஜா)

पूर्वाषाढे तु नक्षत्रे मासि भाद्रपदे यजेत् ।
कुसुमैः केतकैश्चैव शतैर्वाऽपि तदर्धकैः ।
सक्तुलाजतिलोपेतैः सहस्रप्रस्थमुत्तमम् ॥ १८४ ॥

*பூர்வாஷாடே து நக்ஷத்ரே மாசி பாத்ர பதே யஜேது!*
*குசுமை: கேதகைச்சைவ சதைர்வாபி ததர்த்தகை:!!*
*சக்துலாஜ திலோபேதை ஸ்ஸஹஸ்ர ப்ரஸ்த முத்தமம் !!!*

ஆவணி மாதப் பௌர்ணமியோடு பூராட நக்ஷத்திரத்தில் வரும் தினம் சிறப்பு மாத பூஜை தினமாகும். நூறு அல்லது ஐம்பது தாழம்பூக்களால் பூசிக்க வேண்டும். சத்துமாவு எள்ளுடன் கலந்தது ஆயிரம் படிகள் உயர்ந்ததாகக் கொள்ளப்படுகிறது.

तदर्धं मध्यमं पिष्टं सन्यसंस्यात्तदर्धकम् ।
अपूपं सर्पिषा कृत्वा पूरयेत्तु घटे घटे ॥ १८५ ॥

*ததர்தமத்யமம் பிஷ்டம் கன்யஸம்ஸ்யாத்த ததர்தகம்!*
*அபூபம் சர்பிஷா க்ருத்வா பூரயேத்து கடே கடே !!*

அதில் பாதியான 500 லிட்டர் அரிசிமாவும், 250 லிட்டர் அரிசிமாவும், மத்யமம் அதமமாகக் கருதப்படுகின்றது. இந்த அளவுக்கு ஒப்பாக வெல்லம் சேர்த்து நெய்யினால் அதிரஸங்கள் செய்து புதுப்புது மண்பானைகளுள் சேர்ப்பித்து

श्रीसूक्तैर्वेष्टयित्वाथ कूर्चं न्यस्त्वा विचक्षणः ।
विशेषस्नपनैः स्नाप्य प्रभूतहविषं ददेत् ॥ १८६ ॥

*ஸ்ரீ தக்தைர்வேஷ்ட யித்வாத கூர்சம்ந்யஸ்த்வா விசக்ஷண:!*
*விசேஷ ஸ்நபனைஸ்நாப்ய ப்ரபூத ஹவிஷந்ததேத் !!*

ஸ்ரீ சூக்த யஜுர்வேத மந்திரங்களால் முருகப் பெருமான் மேல் வரிசையாக அழகுற அர்ப்பணித்து அலங்கரிப்பதற்கு முன் சிறப்புக் குடமுழுக்குப் பூசை வேள்வியும் செய்து நீராட்சி தாராளமாக பக்தர்களுக்கு விநியோகிக்கும்படி ஏராளமாக சுவைமிகு அன்னம் தயாரித்து முருகனுக்கு முன் முறைப்படி அத்தனையும் சமர்ப்பித்து நிவேதிக்க வேண்டும்.

कदलीपनसैर्युक्तानपूपांश्च विशेषतः ।
ताम्बूलञ्च हृदा दत्वा प्रार्थयेदर्थमीप्सितम् ॥ १८७ ॥

*கதளீப நஸைர்யுக்தா நபூ பாம்ச்ச விசேஷத:!*
*தாம்பூ லஞ்ச ஹ்ருதா தத்வா ப்ரார்த்தயே தார்த்தமீப்சிதம் !!*

பூவன் பழங்களாலும் பலாச் சுளைகளாலும் நிறைத்து கூட சுவைமிகு நெய் அதிரஸங்களையும் நிவேதித்து மணம்மிகு தாம்பூலத்தையும் நிவேதித்து விரும்பும் வேண்டு கோள்களை விண்ணப்பிக்கலாம்

एवं यः कुरुते मर्त्यः सर्वपापैः प्रमुच्यते ॥
प्रोक्तं भाद्रपदे पूजाप्यश्विनीपूजनं श्रृणु ॥ १८८ ॥

*ஏவம் ய: குருதே மர்த்ய ஸர்வ பாபை ப்ரமுச்யதே!*
*ப்ரோக்தம் பாத்ரபதே பூஜாப்ய அச்விநீ பூஜநம் ச்ருணு!!*

இவ்வாறு எவர் முருகனுக்கு முறை வழுவாது காலந்தவறாது திரவியங்கள் குறையாது மந்திரங்களை முறைப்படி சொல்வித்து செய்கிறார்களோ அவர்கள்எல்லாப் பாபங்களிலிருந்து விடுபடுவதோடு விரும்பும் நற்பயன்களையும் அடைகிறார்கள். இவ்வாறு ஆவணிப் பௌர்ணமி பூராட சிறப்புப் பூசை கூறப்பட்டது. அடுத்து ஐப்பசி அசுவதி பௌர்ணமி சிறப்பு பூஜை பற்றி கேட்பீராக

इति भाद्रपदमासपूजाविधिः

இது பாத்ர பத மாஸ பூஜா முறையாகும்

# ॥ आश्वीजमासपूजाविधिः ॥

**ஆஸ்விஜ மாஸபூஜா**
**ஐப்பசி மாத பூஜை**

अश्विन्यामाश्विजे मासे प्रीणयेदन्नपूजनात् ।
विशेषस्नपनात्पूज्य भूषयेद्भूषणार्हकैः ॥ १८९ ॥

*அச்விந்யாமாச்விஜே மாஸே ப்ரீணயே தன்னபூஜநாத் !*
*விசேஷ ஸ்நபநாத் பூஜ்ய பூஷயேத் பூஷணார்ஹகை:!!*

ஐப்பசி மாதப் பௌர்ணமியில் அசுவனி நக்ஷத்திரத்தில் அன்னபூஜையினால் அழகன் முருகனை மகிழ்விக்க வேண்டும். சிறப்பு குடமுழுக்காக கலசபூஜை புரிந்து மங்களநீராட்டி உயர்ந்தவகை ஆடை அணிகலன்களால் அலங்கரித்து

लक्ष्मीपुष्पैश्च कुसुमैरुत्पलैः पूजयेद्गुहम् ।
शुद्धान्नं पायसं मुद्गं गुलान्नं कृसरान्नकम् ॥ १९० ॥

*லக்ஷ்மீ புஷ்பைச்ச குசுமைருத் பலை: பூஜயேத் குஹம் !*
*சுத்தான்னம் பாயஸம் முத்கம் குளான்னம்க் ருஸ ரான்னகம் !!*

தாமரை மலர்களாலும் நீலோத்பல மலர்களாலும் முருகனைப் பூசித்து சுத்தான்னம், பாசிப்பருப்பு பாயசம், வெண்பொங்கல், சர்க்கரைப் பொங்கல் (எள்ளன்னம்) எள்பொரித்துப் போட்ட வெல்ல அன்னம்

नीवारान्नं प्रियङ्ग्वन्नं दध्यन्नं वैणवान्नकम् ।
श्यामाकान्नं च नव्यञ्च मध्वन्नं घृतान्नकम् ॥ १९१ ॥

*நீவாரான்னம் ப்ரியம்க்வன்னம் தத்யன்னம் வைணவான்னகம் !*
*ச்யாமாகான்னஞ்ச நவ்யஞ்ச மத்வன்னஞ்ச க்ருதான்னகம் !!*

தினைச் சர்க்கரைப் பொங்கல், தயிரன்னம் மூங்கிலரிசி அன்னம், தேனன்னம், நெய்யன்னம், வரகரிசி அன்னம் போன்ற அன்னங்களும்

माषान्नं चैव मुद्गान्नं गोधूमान्नञ्च षोडश ।
एतैश्चैव द्विरष्टाद्यैः प्रीणयेत्तु षडाननम् ॥ १९२ ॥

*மாஷான்னம் சைவ முத்கான்னம் கோதூமான்னஞ்ச ஷோடச !*
*ஏதைஸ்சைவத் சிரஷ்டாத்யை: ப்ரீணயேத்து ஷடானனம் !!*

உளுந்தன்னம், பயிறு கலந்த வெண்பொங்கல், கோதுமை சாதம் போன்ற 16 வகை அன்னங்களால் ஆறுமுகப் பெருமானை ஆனந்திக்கச் செய்ய வேண்டும்.

फल्गुन्यामेव तन्मासे प्रकुर्यात् पार्वतीव्रतम् ।
तत्पूर्वे तु महावल्लीं देवसेनां महामुने ॥ १९३ ॥

*பல்குன்யாமேவ தன்மாஸே ப்ரகுர்யாத் பார்வதீ வ்ருதம் !*
*தத்பூர்வேது மஹாவள்ளீம் தேவஸேநாம் மஹாமுனே !!*

கௌசிக மாமுனிவரே ஐப்பசிப் பூரத்தில் ஆடிப்பூரம் போல் பார்வதிவ்ருதம் இயற்றப்பட வேண்டும். அதற்கு முன்னர் வள்ளீ தேவசேனாவ்ருதம் இயற்றப்பட வேண்டும்.

स्वर्णसूत्रेण विधिना कौतुकं बन्धयेन्निशि ।
ततः प्रभाते कन्याभ्यः स्नानाङ्गं दापयेत्सुधीः ॥ १९४ ॥

*ஸ்வர்ண சூத்ரேண விதினா கௌதுகம் பந்தயேன் நிசி !*
*தத: ப்ரபாதே கன்யாப்யஸ் ஸ்நாநாங்கம் தாபயேத் ஸுதீ:!!*

தங்கக் கம்பியினால் முறைப்படி கங்கணம் இரவில் கட்டப்பட வேண்டும். பிறகு அதிகாலையில் கன்னிப் பெண்களுக்கு மங்கள நீராடும் அங்கமாக அனைத்தும் வழங்க வேண்டும்.

स्नातेभ्यो वसनं गन्धं दाम चापि विशेषत: ।
नवभागादिभारान्तमुत्तमादित्रयं त्रयम् ॥ १९५ ॥

*ஸ்நாதேப்யோ வஸநம் கந்தம் தாமசாபிவிசேஷத:!*
*நவபாராதி பாராந்த முத்தமாதித்ரயம் த்ரயம் !!*

நீராடியக் கன்னிப் பெண்களுக்கு புத்தாடை நறுமணமிகு சந்தனம், மணமிகு மாலைகள், இவைகளெல்லாம் ஒன்பது பார முதல் ஒரு பாரம் வரை உத்தமம், மத்யமம், அதமம் என்ற கணக்கில் வழங்க வேண்டும்.

पात्रस्थान्सांकुरान्मुद्रान् तण्डुलान् सोपदंशकान् ।
दापयित्वा तु शक्तिभ्यां विधिना मन्त्रवित्तम: ॥ १९६ ॥

*பாத்ரஸ்தாந் ஸாங்குராந் முத்காந் தண்டுலான்*
*ஸோபதம்சகான்!*
*தாபயித்வாது சக்திப்யாம் விதிநா மந்த்ரவித்தம் !!*

பாத்திரங்களிலுள்ள முளையிட்ட பயிறுகளையும், அரிசிகளையும் உப உணவுகளோடு இரு சக்திகளான வள்ளி தெய்வயானைக்கு முறைப்படி மந்திரமறிந்தவர் அளித்துவிட்டு

मूलदेव्यौ समभ्यर्च्य विशेषस्नपनेन च ।
यात्रादेव्यौ कृते स्नाते नवशाटीपरिच्छदे ॥ १९७ ॥

*மூலதேவ்யௌ ஸமப்யர்ச்ய விசேஷஸ்நபநேநச !*
*யாத்ரா தேவ்யௌ க்ருதேஸ்நாதே நவசாடீ*
*பரிச்சதே !!*

மூலஸ்தான வள்ளி, தெய்வயானை இருவரையும் நன்குஅர்ச்சித்து சிறப்புத் திருமஞ்சன வரிசையில் உற்சவ மூர்த்தி தேவி இருவருக்கும் மங்கள நீராட்டி புத்தாடை புனைந்து

शुद्धनैवेद्यसन्तुष्टे गन्धस्रग्दामभूषिते ।
पयोघृतधरे कृत्वा दिनशेषं नयेत्क्रमात् ॥ १९८ ॥

*சுத்தநைவேத்ய ஸந்துஷ்டே கந்தஸ்ருக்தாம*
*பூஷிதே!*
*பயோக்ருத தரே க்ருத்வா தினசேஷந்நயேது*
*க்ருமாத் !!*

சுத்தமான மணமிகு சந்தனமிட்டு குங்குமிட்டு மணமிகு மலர்மாலைகள் சூட்டி அர்ச்சித்து சுத்தான்னம், பால், தயிர் இவைகளுடன் தினக்கட்டளை நிவேதனமும் நிவேதித்து

कृत्वा च पेषणीपूजां याम्यायां पावकेपि वा ।
तत्रामलकपिष्टेव रजन्याऽपि सुगन्धिना ॥ १९९ ॥

*க்ருத்வாசபேஷணீ பூஜாம் யாம்யாயாம்*
*பாவகேபிவா!*
*தத்ராமலக பிஷ்டேந ரஜன்யாபி சுகந்தினா!!*

தெற்கிலோ அல்லது தென்கிழக்கிலோ கருங்கல்லினாலான தான்யங்களை மாவாக்கும் கையினால் அரைக்கும் எந்திரத்துக்கும் முறைப்படி பூஜை செய்யுமுன் அங்கு நெல்லிவற்றல் தூள் அரிசிமாவு, மஞ்சள் தூள் முதலான வாசனை திரவியங்களால்

संस्थाप्य पेषणीं कृत्वा सप्तधान्यकृताश्रयाम् ।
गन्धैरालिप्य वस्त्रेण नवेनाच्छाद्यसासनाम् ॥ २०० ॥

*ஸம்ஸ்நாப்ய பேஷணீம் க்ருத்வா சப்த தான்யக்ரு*
*தாஸ்ரயாம்!*
*கந்தை ராலிப்ய வஸ்த்ரேண நவேநாச்சாத்ய*
*ஸாஸநாம் !!*

நீராட்டி சந்தனம் பூசி, புத்தாடை புனைந்து ஏழு தான்யங்களையும் பூசித்து புத்தாடையால் மூடி

ध्यात्वाथ पेषणीं गौरीं समभ्यर्च्य यथाविधि ।
नैवेद्यं सोपदंशञ्च दत्वा स्त्रीभि: प्रसादितम् ॥ २०१ ॥

*த்யாத்வாத பேஷணீம் கௌரீம் ஸமப்யர்ச்ய யதா*
*விதி!*
*நைவேத்யம் ஸோபதம் சஞ்ச தத்வாஸ்த்ரீபி:ச*
*ப்ரஸாதிதம் !!*

கருங்கல் எந்திரத்தில் முருகனின் தாய் கௌரீயையும் முறைப்படி ஆவாஹித்து பூஜித்து உப உணவுகளோடு உணவு நிவேதித்து மூவராலும் ஆசிபெற்று

ग्रामप्रदक्षिणं कृत्वा देवदेव्यौ च भक्तितः ।
सर्वालङ्कारसंयुक्तं पाददीपैः समन्वितम् ॥ २०२ ॥

*க்ராம ப்ரதக்ஷிணம் க்ருத்வா தேவதேவ்யௌ ச பக்திதஃ!*
*ஸர்வாலங்கார ஸம்யுக்தம் பாததீபை ஸ்ஸமந்விதம் !!*

முருகப் பெருமானை வள்ளி நாச்சியாரையும் தெய்வயானை நாச்சியாரையும் அலங்காரத்தோடு அகங்குழைந்து வீதியுலா வலம் செய்வித்து தீவெட்டி பந்தம் இவைகளோடு

तत्काले दापयेन्मुद्गांकुरं लवणसंयुतम् ।
वीथ्यां वीथ्यां जनेभ्यश्च व्यंजनं तण्डुलान्वितम् ॥ २०३ ॥

*தத்காலே தாபயேந்முத்காங்குரம் லவண ஸம்யுதம்!*
*வீத்யாம் வீத்யாம் ஜநேப்யச்ச வ்யஞ்ஜநம் தண்டுலாந்விதம் !!*

அச்சமயம் (வீதியுலா நேரத்தில்) முளைப்பயிறு, உப்பு சரியாக கலந்ததை வீதிக்கு வீதி மக்களுக்கு வெல்லம், தேங்காய், கரும்பு கலந்த அரிசியையும் வழங்க வேண்டும்.

आलयं तु प्रविश्याथ परिवेषक्रमान्नयेत् ।
शिष्योपाध्यायसंयुक्तान् सिद्धान्ताध्ययनं जपेत् ॥ २०४ ॥

*ஆலயந்து ப்ரவிச்யாத பரிவேஷ க்ரமாந்நயேத்!*
*சிஷ்யோபாத்யாய ஸம்யுக்தான் ஸித்தாந்தாத்ய யநந்ஜபேத் !!*

ஆலயம் திரும்பி வந்தவுடன் பரிவேஷ மரபுப்படி ஆசிரியர்களும் சீடர்களும் சிவஞான போதம் மூலமும் உரையும் படிக்க வேண்டும்.

ऋग्यजुः सामगाथर्वा वेदांगं च पृथक्पृथक् ।
शिवधर्मपुराणानि सेतिहासानि तत्समम् ॥ २०५ ॥

*ருக்யஜுஃஸ் ஸாமகாதர்வா வேதாங்கஞ்ச ப்ரதக் ப்ரதக்!*
*சிவதர்ம புராணாநி ஸேதிஹாஸாநி தத்ஸமம் !!*

ருக்வேதம், யஜுர் வேதம், ஸாம வேதம், அதர்வண வேதம், வேதத்துக்கு அங்கமானவைகளையும் தனித்தனியேயும் சிவபுண்ணிய தர்ம புராணங்களையும் இதிஹாஸம் முதலியவைகளையும்

काव्यञ्च शब्दशास्त्रञ्च ज्योतिश्शास्त्रं ततः परम् ।
आयुर्वेदं द्राविडञ्च श्रावयेत्प्रीणयेद्गुहम् ॥ २०६ ॥

*காவ்யஞ்ச சப்த சாஸ்த்ரஞ்ச ஜ்யோதிஸ்ஸாஸ்த்ரம் தத: பரம்!*
*ஆயுர்வேதம் த்ராவிடஞ்ச ச்ராவயேத் ப்ரீணயேத் குஹம் !!*

இலக்கியம், சப்தம், சாஸ்த்ரம், ஜோதிஷம், இவைகளை பிறகும் ஆயுர்வேதம் தென்மொழித் தமிழ் இவைகளை முருகப் பெருமான் மகிழும் வண்ணம் கேட்கும்படி நன்கு சொல்லச்சொல்ல வேண்டும்.

ब्राह्मणान्भोजयेत्तत्र वैदिकान् शिवभक्तकान् ।
कन्याश्च ब्रह्मचारींश्च दीनानाथांश्च भोजयेत् ॥ २०७ ॥

*ப்ராம்மணாந் போஜயேத்தத்ர வைதிகாந் சிவபக்தகாந்!*
*கந்யாச்ச ப்ரம்மசாரீம்ச்ச தீநாநாதாம்ச்ச போஜயேத் !!*

அந்தணர்களையும், மற்றும் வேத விற்பன்னர் களையும், சிவபக்தர்களையும், சாப்பிடச் செய்து கன்னிப் பெண்கள் மணமாகாத பிரும்மச்சாரிகள் ஏழைகள், குருடர்கள், அனைவரையும் சாப்பிடச் செய்ய வேண்டும்.

विधानमेतत्कर्तव्यं देव्याः सन्तुष्टकारणम् ।
एवं यः कुरुते मर्त्यः सर्वान्कामानवाप्नुयात् ।
अश्विनीपूजनं प्रोक्तं कृत्तिकापूजनं शृणु ॥ २०८ ॥

*விதாநமேதத் கர்தவ்யம் தேவ்யாஸ் ஸந்துஷ்ட காரணம் !*
*ஏவம் ய: குருதே மர்த்ய ஸ்ஸர்வாந் காமாந் வாப்நுயாத் !!*
*அச்வநீ பூஜநம் ப்ரோக்தம் க்ருத்திகா பூஜநம் ச்ருணு !!*

முருகப் பெருமான் முழுதும் சந்தோஷமடைய இம்முறைப்படி செய்வது சாலச் சிறந்தது. இவ்வாறு எவர் செய்கிறாரோ அவர் எல்லா விருப்பங்களையும் இனிதே எய்துவர். மாமுனிவரே அசுவனி பூஜை இவ்வாறு சொல்லப்பட்டது. கார்த்திகை பூஜை முறையைக் கேட்பீராக

इत्याश्विजमासपूजाविधिः

இது ஆஸ்வீஜமாஸ் பூஜா விதியாகும்.

## ॥ कार्तिकमासपूजाविधिः ॥

### கார்த்திக மாஸ பூஜா
### கார்த்திகைமாத பூஜை முறை

ब्राह्मणा यजुसूक्तैश्च भूभुजाः कुक्कुटैरपि ।
वैश्याः कर्पूरखण्डैश्च शूद्राद्याः फलपुष्पकैः ।
कार्तिक्यां कृत्तिकायोगे यः कुर्यात्स्वामिदर्शनम् ॥ २०९॥

*ப்ராம்மணாயஜு ஸூக்தைச்ச பூபுஜா: குக்குடைரபி!*
*வைச்யா: கற்பூர கண்டைச்ச சூத்ராத்யா: பல புஷ்பகை:!!*
*கார்திக்யாம் க்ருத்தியோகே ய: குர்யாத் ஸ்வாமி தர்சநம் !!!*

ஸ்வாமி என்ற பெயருக்கு எல்லாம் தமக்கே உரியர் என்பது பொருள் பரமசிவனையும் தமக்கே உரிய தாதையாகவும் சீடனாகவும் உரியதால் முருகனுக்கு ஸ்வாமி - தகப்பன் ஸ்வாமி - ஸ்கந்த சுவாமி - இவ்வளவு சிறப்பு பொருந்திய முருகப் பெருமானை கார்த்திகை மாதக்கார்த்திகை நக்ஷத்திரத்தில் பிராம்மணர்கள் யஜுர் வேத மந்திரங்களாலும், அரசர்கள் சேவல் முதலானவைகளோடும் வணிகச் செட்டியார்கள் தேங்காய் முதலியவைகளாலும், சூத்திரர் முதலானவர்கள் பழங்கள், புஷ்பங்கள் முதலியவைகளாலும் சேவிக்க

सप्तजन्मभवेद्विप्रो धनाढ्यो वेदपारगः ।
कार्तिक्यां कृत्तिकापर्वयोगे वृषलग्नके ॥ २१० ॥

*ஸப்த ஜந்ம பவேத்விப்ரோ தநாட்யோ வேதபாரக:!*
*கார்திக்யாம் க்ருத்திகாபர்வ யோகே வ்ருஷப லக்நகே !!*

ஏழு ஜன்மங்கள் உத்தமமான பிராம்மணர்களாகவும் செல்வந்தர்களாகவும் வேதம் முழுதும் ஓதுபவர்களாகவும் ஆவார்கள். கார்த்திகை மாதம் பௌர்ணமியோடு கூடிய கார்த்திகை நக்ஷத்திரத்தில் நலந்தரும் ரிஷப லக்னத்தில்

श्रद्धया कार्तिकेयाय यः कुर्याद्घृतदीपिकाम् ।
तस्य पुण्यमसंख्येयं विश्वामित्र महामुने ॥ २११ ॥

*ஸ்ரத்தயா கார்த்திகேயாய ய: குர்யாத் க்ருத தீபிகாம்!*
*தஸ்யா: புண்ய மஸங்க்யேயம் விஸ்வாமித்ர மஹா முநே !!*

விசுவாமித்திர முனிவரே! அன்போடும் ஆசாரத்தோடும் முருகனுக்காக எவர் நெய் தீபம் ஏற்றுகிறாரோ அவருக்கு எண்ணிலடங்கா புண்யமானது எனக் கருதப்படுகிறது

कृत्तिकापर्वयुक्तेनालाभे पर्वणि सम्मतम् ।
रोहिण्यां वा भरण्यां वा दीपं पर्वणि कारयेत् ॥ २१२ ॥

*க்ருத்திகா பர்வ யுக்தேநா லாபே: பர்வணி ஸம்மதம்!*
*ரோஹிண்யாம் வாபரண்யாம் வா தீபம் பர்வணி காரயேத் !!*

கார்த்திகை மாதம் பௌர்ணமியன்று கார்த்திகை நக்ஷத்திரம் சேர்ந்தோ அல்லது ரோகிணி பரணியோடு சேர்ந்து வந்தாலும் பரணி, கார்த்திகை ரோகிணி மூன்று நாட்களிலும் தீபமேற்றி வழிபடலாம். பௌர்ணமியில் வழிபாடு சிறப்பு

अपर्वणिकृतं दीपं राजराष्ट्रं विनश्यति ।
पर्वद्वये तु सम्प्राप्ते पूर्वं त्यक्त्वा परं ग्रहेत् ॥ २१३ ॥

*அபர்வணி க்ருதம் தீபம் ராஜராஷ்ட்ரம் விநஸ்யதி!*
*பர்வத்வயேது ஸம்ப்ராப்தே பூர்வந் த்யக்த்வா பரம் க்ருஹேத்!!*

பௌர்ணமி சேராத கார்த்திகை தீபம் அரசர்களுக்கு அழிவைத் தரும். இரு பௌர்ணமி ஒரே மாதத்தில் வருமாயின் முன் பௌர்ணமியை விட்டுவிட்டு பின் பௌர்ணமியையே தேர்ந்தெடுக்க வேண்டும்.

पूर्णायां खण्डितायां तु द्वयोर्नाड्याधिकं ग्रहेत् ।
रवेरस्तमनात्पूर्वे पादयामाद्विधानत: ॥ २१४ ॥

*பூர்ணாயாம் கண்டிதாயாந்து த்வயோர்நாட்யாதிகம் க்ருஹேத்!*
*ரவேரஸ்த மநாத்பூர்வே பாதயாமாத்விதாநத:!!*

பௌர்ணமி இருநாளில் பிரிந்து வருமாயின் இரண்டு நாளில் என்று அதிக நாழிகைகள் சூரிய அஸ்தமனத்திற்கு முன் நான்காவது யாமத்தில் சம்பந்தத்தோடு இரவில் வியாபித்துள்ள நாளைச் சரியெனக் கொள்ள வேண்டும்.

कालस्तदूर्ध्वे यामार्धपर्यन्तं दीपकर्मणि ।
नक्षत्रमृद्ध्या संस्पृष्टे तत्कालान्ते समाचरेत् ॥ २१५ ॥

*காலஸ்த தூர்த்வே யாமார்த்த பர்யந்தந்தீப கர்மணி!*
*நக்ஷத்ர வ்ருத்யா ஸம்ஸ்ப்ருஷ்டே தத்காலாந்தே ஸமாசரேத்!!*

அதற்கு மேல் இரவில் இரண்டாவது யாமம் முடிய பௌர்ணமி இருக்கும் நாள் கார்த்திகை தீபமேற்ற ஏற்ற நாள். அதிக நேரமிருக்கும் பௌர்ணமி நாளிலே தீபமேற்றத் தேர்ந்தெடுக்கவும்

यल्लग्ने विषसंस्पृष्टे तल्लग्नं परिवर्जयेत् ।
विषस्य परपूर्वे तु घटिकाद्वयत: शुभम् ॥ २१६ ॥

*யல்லக்நே விஷஸம்ஸ் ப்ருஷ்டே தல்லக்னம் பரிவர்ஜயேத்!*
*விஷஸ்ய பர பூர்வேது கடிகாத்வயத ஸ்சுபம்!!*

எந்த லக்னத்தில் குறை சேருமோ அதை விட்டு விடவும். அதற்கடுத்த அல்லது முன்னர் 2 நாழிக்கு முன்னரோ அல்லது பின்னரோ உள்ள சுபமான லக்னத்தை தீபமேற்ற தேர்ந்தெடுக்கவும்

कर्तुरष्टमराश्यादिलक्षदोषनिरूपणम् ।
विष्टिवैनाशिकर्क्षादिप्रेक्षणं नात्र सम्मतम् ॥ २१७ ॥

*கர்துரஷ்டம ராஸ்யாதி லக்ஷதோஷ நிருபணம்!*
*விஷ்டி வை நாசகர்க்ஷாதி ப்ரேக்ஷணந்நாத்ர ஸம்மதம்!!*

தீபமேற்ற இருக்கும் எஜமானருக்கு அஷ்டம ராசியில் சந்திராஷ்டம தோஷம் போல் தோஷம் அநேகமிருப்பதால் விஷம் வைநாசிகம் தரும் நக்ஷத்திரம் இல்லாமல் இருக்க வேண்டும். புரோக்ஷணம் நல்ல வேளையில் செய்வதே நல்லது.

पर्वयुक्तमयुक्तं वा नक्षत्रं तु प्रधानकम् ।
एवं परीक्ष्य मतिमान् कृत्तिकादीपमाचरेत् ॥ २१८ ॥

*பர்வயுக்தம யுக்தம் வா நக்ஷத்ரந்து ப்ரதாநகம்!*
*ஏவம் பரீக்ஷ்ய மதிமாந் க்ருத்திகா தீபமாசரேத்!!*

பௌர்ணமியோடு இணைந்தாலும் இணையா விட்டாலும் கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நக்ஷத்திரம் தான் முக்கியமாக எடுத்துக் கொள்ள வேண்டும். மதிமிகு அர்ச்சகர் இவ்வாறு பரிசோதித்து கிருத்திகை தீபத்தை நடத்த வேண்டும்.

पूर्वेद्युः कौतुकं बध्वा स्नाप्यचोत्सवबेरकम् ।
मङ्गलांकुरमन्त्रैश्च कुर्याद्विप्युक्तमार्गतः ॥ २१९ ॥

*பூர்வேத்யு: கௌதுகம் பத்வா ஸ்நாப்ய சோத்ஸவ பேரகம் !*
*மங்களாங்குர மந்த்ரைஸ்ச குர்யாத் வித்யுக்த மார்கத:!!*

உற்வசவருக்கு நீராட்டி முதல் நாள் கங்கணங்கட்டுவதற்கு முன் முளைப்பாலை யிடுவதை முறைப்படி செய்து மங்களாங்குர மந்திரங்களான ஒஷதி சூக்தம் எனும் மந்திரங்களோடு செய்யவும்

दीपारोहणकालस्य पूर्वे स्वामिनमर्चयेत् ।
मूलबेरमलंकृत्य पूपयेद्भूषणार्हकैः ॥ २२० ॥

*தீபாரோஹண காலஸ்ய பூர்வேஸ்வாமிந மார்ச்சயேத் !*
*மூலபேர மலங்க்ருத்ய பூஷயேத் பூஷணார் ஹகை:!!*

தீபமேற்றுவதற்கு முன்பு ஸ்ரீ முருகப் பெருமானை அர்ச்சிக்க வேண்டும். மூலஸ்தான முருகனை கருவறை கந்தசுவாமியை உரிய உரிய ஆபரணங்களால் அலங்கரிக்க வேண்டும்.

नीलोत्पलैश्च कमलैः पट्टिकैः पुष्पकैर्यजेत् ।
प्रभूतहविषं दत्वा ताम्बूलं दापयेत्ततः ॥ २२१ ॥

*நீலோத்பலைஸ்ச கமலை: பட்டிகை: புஷ்பகைர்யஜேத் !*
*ப்ரபூத ஹவிஷந்தத்வா தாம்பூலந்தா பயேத்தத:!!*

நீலோத்பல மலர்களாலும், தாமரை மலர்களாலும் தங்கப்பட்டி, மஞ்சள்பட்டி போன்ற மலர்களால் முருகனைப் பூசித்து அதிக அளவில் மிகுந்த சுவையோடு முருகனுக்கு முன் அன்னத்தைப் படைத்து தாம்பூலமும் தரமாக தர வேண்டும்.

आलये मण्डपे वाऽपि यागमण्डप एव च ।
शिवाग्निं तत्र संपूज्य गुहं सांगं समर्चयेत् ॥ २२२ ॥

*ஆலயே மண்டபே வாபியாக மண்டப ஏவச !*
*சிவாக்நிம் தத்ரஸம்பூஜ்ய குஹம் சாங்கம் சமர்ச்சயேத் !!*

ஆலயத்திலோ மண்டபத்திலோ (யாகமண்டபம்) வேள்விச் சாலையிலோ சிவாக்னியை ஆராதித்து அதில் ஸ்ரீ முருகப் பெருமானை ஆஸன ஆவரணங்களுடன் பூஜித்து

समिदाज्येन चरुणा दीपैः कार्पासबीजकैः ।
क्षीरेण शतमर्धं वा तदर्धं वा हुनेत्सधीः ॥ २२३ ॥

*சமிதாஜ்யேந சருணாதீபை: கார்பாஸ பீஜகை:!*
*க்ஷீரேண சதமர்தம்வா ததர்தம் வாஹு"நேத் ஸுதீ:!!*

மதிமிகு அர்ச்சகரானவர் ஸ்ரீமுருகப் பெருமானுக்கு சமித்துக்கள் அன்னம், நெய், பால், பருத்தி விதைகள், இவைகளால் தனித்தனியே நூறு அல்லது ஐம்பது அல்லது இருபத்தைந்து முறையாவது ஹோமம் செய்யாவது

स्कन्तमूलेन मन्त्रेण दशांशं जुहुयात्ततः ।
स्कन्दसूत्रं मन्त्रषट्कैर्द्रव्यषट्कैर्हुनेत्क्रमात् ॥ २२४ ॥

*ஸ்கந்த மூலேண மந்த்ரேண தசாம்சஞ் ஜு"ஹு"யாத்தத:!*
*ஸ்கந்த ஸூக்தம் மந்த்ரஷட்கைர் த்ரவ்ய ஷட்கைர் ஹு"நேது க்ரமாத் !!*

ஸ்கந்த மூலமெனும் ஷடக்ஷர மந்திரத்தாலும், அதில் பத்தில் ஒருபங்கு ஹோமம் செய்யவேண்டும். ஸ்கந்த சூக்தம் ஷடக்ஷரத்தின் ஆறுபிரயோக முறை மந்திரங்களாலும் ஆறுமுறைப்படி ஆறுதிரவியங் களால் செய்ய வேண்டும்.

कुमारमातेति मन्त्रेण प्रतिद्रव्यं हुनेत्ततः ।
पूर्णाहुतिं ततो हुत्वा शिवाग्निं च विसर्जयेत् ॥ २२५ ॥

*குமாரமேதி மந்த்ரேண ப்ரதித்ரவ்யம் ஹுநேத்தத:/*
*பூர்ணாஹுதிம் ததோஹுத்வா சிவாக்னிஞ்ச*
*விஸர்ஜயேத் //*

அயம்குமாரோ என்ற வேத மந்திரத்தாலும் மாதே குமாரம் என்ற யஜுர் வேத மந்திரத்தினாலும் ஒவ்வொரு திரவியத்தையும் ஹோமம் செய்து பூர்ணாஹுதி செய்து சிவாக்னியை முறைப்படி பராங்முகார்க்யம் கொடுத்து நிறைவு செய்ய வேண்டும்.

नारिकेलशमिस्तालपनसासनखादिराः
चम्पको देवदारुश्च मधुकः सालवृक्षकः ॥ २२६ ॥

*நாளிகேர சமீஸ்தால பநசாஸந காதிரா:/*
*சம்பகோ தேவதாருஸ்ச மதுகஸ்ஸாலவ்ருக்ஷகா://*

அந்த அக்னி (சிவாக்னியிலிருந்து) கிருத்திகா தீபமேற்ற வேண்டும். தென்னைமரம் மட்டை, பனைமரம் மட்டை, பலாமரம், கருங்காலி மரங்கள் மட்டைகள், கிளைகள் (இவைகளால்)

तदग्नौ दीपमारोप्य कृत्तिकादीपमाचरेत् ।
दीपदण्डद्रुमाः प्रोक्ताः कारयेल्लक्षणान्वितम् ॥ २२७ ॥

*ததக்நௌ தீபமாரோப்ய க்ருத்திகாதீபமாசரேத் /*
*தீபதண்டத்ருமா: ப்ரோக்தா: காரயேல்*
*லக்ஷணாந்விதம் //*

செண்பக மரம், தேக்கு மரம், தேவதாரு மரம், இலுப்பை மரம் இவைகளால் தீப தண்டத்துக்கு பயன்படுத்தக் கூடிய மரங்களால் அழகாகச் செய்யப்பட வேண்டும்.

अलाभे तु बहिः स्थाने वृक्षयोग्यद्रुमं ग्रहेत् ।
ध्वजदण्डोक्तमार्गेण दीपदण्डं प्रकल्पयेत् ॥ २२८ ॥

*அலாபே து பஹிஸ்தாநே வ்ருக்ஷயோக்ய த்ருமம்*
*க்ரஹேத் /*
*த்வஜதண்டோக்த மார்கேண தீபதண்டம்*
*ப்ரகல்பயேத் //*

கிடைக்காத நிலையில் கொடி மரத்துக்குக் கூறப்பட்ட இலக்கண வரம்பு வண்ணம் எடுத்துக் கொள்ளத்தக்க மரங்களுள் ஒன்னால் தீப தண்டம் செய்ய வேண்டும்.

त्रितालं स्तम्भनाहं स्यादृजुं शुद्धसमन्वितम् ।
नवकीलं समारोप्य व्योमकीलविवर्धनात् ॥ २२९ ॥

*த்ரிதாலம் ஸ்தம்ப நாஹம்ஸ்யாத்ருஜும் சுத்த*
*மந்விதம் /*
*நவகீலம் சமாரோப்ய வ்யோமகீல விவர்த்தநாத் //*

நேராகவும், சுத்தமானதாகவும், கீழ்முதல் மேல் வரை ஒன்பது நிலைப்படிகள் மூன்றுப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டதாகவும் இரும்பல்லாத இதர உலோக ஆணிகள் உபயோகிக்கத் தக்கது

सप्तविंशतिकीलन्तं रोहणार्थं सुयोजयेत् ।
द्वादशांगुलकारस्य व्योमांगुलविवर्धनात् ॥ २३० ॥

*சப்த விம்சதி கீலாந்தம் ரோஹணார்த்தம்*
*சுயோஜயேத் /*
*த்வாதசாங்குலகாரஸ்ய வ்யோமாங்குல*
*விவர்த்தநாத் //*

இருபத்தேழு முளை ஆணிவரை முழுவதும் செம்பினாற் செய்தாலது. இவையாவும் மேலே ஏறி தீபம் வைக்க வசதியாக இருப்பதற்கு அமைக்கப்பட வேண்டும். இவைகள் ரோகிணி முதல் துவங்கி 27-வது நக்ஷத்திரமாக 27 முளை ஆணியில் பூஜிக்க வேண்டும். மேல் கார்த்திகை பூஜிக்கப்பட வேண்டும்)

द्वाविंशदंगुलान्तं स्याद्दण्डात्कीलंविनिर्गत: ।
द्व्यंगुलात्पादवृद्ध्यादि षडंगुलसमावधि ॥ २३१ ॥

*த்வாவிம் சதங்குலாந்தம் ஸ்யாத் தண்டாத் கீலம் விநிர்கத:!*
*த்வ்யங்குலாத் பாத வ்ருத்யாதி ஷடங்குல ஸமாவதி!!*

22 அங்குல நீளம் வரை 2 அங்குல கனத்தில் கீல் முனைகள் அமைக்க வேண்டும். (அதாவது மரத்தில் உள் செலுத்தப்பட்டதும் வெளியில் கால் வைத்து ஏறி செல்ல வசதியாக அவைகள் அமைக்கப்பட வேண்டும்)

विस्तारं तद्घनं ज्ञेयं निर्गमादर्धमात्रकम् ।
दण्डप्रोक्तञ्च कीलानां सुदृढं कल्पयेद्बुध: ॥ २३२ ॥

*விஸ்தாரம் தத்கணம் ஞேயம் நிர்கமாதர்த்த மாத்ரகம்!*
*தண்டப்ரோக்தஞ்ச கீலானாம் ஸுத்ருடம் கல்பயேத் புத:!!*

நீளம், கனம் இரண்டும் தாங்கும் அளவு தரமாக இருக்கும் வண்ணம் அறிவாளியான ஆச்சாரியைக் கொண்டு ஆசார்யர் முன்னரே செய்வித்து வைக்கச் சொல்ல வேண்டும்.

लोहचक्रं तदूर्ध्वे तु व्योममूलं त्रिपादवत् ।
सुदृढं स्थापयेत्पात्रं धारणायां महामुने ॥ २३३ ॥

*லோஹ சக்ரம் ததூர்த்வேது வ்யோம மூலம் த்ரிபாதவத்!*
*சுத்ருடம் ஸ்தாபயேத் பாத்ரம் தாரணாயாம் மஹாமுனே!!*

மேலே வட்ட வடிவமாய் முக்காலி வடிவில் கொப்பரை போன்ற பாத்திரம் வைக்குமாப்போல திடமாக அமைக்கச் சொல்ல வேண்டும் முனிவரே!

दारूद्भवानि चक्राणि प्रतिकूलं सुयोजयेत् ।
न्यस्तव्याश्चक्रवद्दीपं स्तम्भमूलात्पृथक्पृथक् ॥ २३४ ॥

*தாருத்பவானி சக்ராணி ப்ரதிகூலம் சுயோஜயேத்!*
*ந்யஸ்தவ்யாஸ்சக்ர வத்தீபம் ஸ்தம்பமூலாத் ப்ருதக் ப்ருதக்!!*

மரத்தால் இல்லாமல் தீபஸ்தம்பம் அடி முதல் முடி வரை செம்பால் கீல் முனைகள் உள்ளும் புறமும் சரிபங்காய் இருக்கும்படி அமைத்துக் கொள்ள வேண்டும், ஏனெனில் மரத்தாலானது ஆபத்தானது

दीपिका प्रतिचक्रञ्च रसद्वादशषोडश ।
सहस्रदीपयुक्तं वा शतदीपयुतं तु वा ॥ २३५ ॥

*தீபிகா ப்ரதி சக்ரஞ்ச ரஸத்ராதச ஷோடச!*
*ஸஹஸ்ர தீப யுக்தம் வாசத தீபயுதந்துவா!!*

மேலே வைக்கப்படும் செம்பு பெரிய தட்டில் ஆறுபன்னிரண்டு 16 தளத்தட்டுகளாக வைக்கலாம். ஏனெனில் 1008 தீபங்களோ குறைந்த பாரம் 108 தீபங்களோ, வைக்க ஏதுவாக அமைக்கலம்

स्थापयेद्दीपदण्डांश्च मालाकारेण वास्तुन: ।
तोरणाकारतो वाऽपि वृत्ताकारेण वाथवा ॥ २३६ ॥

*ஸ்தாபயேத்தீப தண்டாம்ஸ்ச மாலா காரேண வாஸ்துந:!*
*தோரணாகாரதோ வாபி வ்ருத்தா காரேண வாதவா!!*

வட்ட வடிவமாகவோ, மாலைகள் போல் பல மடிப்புக்களோடோ தோரணங்கள் போல் படிப்படியாகவோ வஸ்துலக்ஷணத்துக்குட்பட்டு செய்விக்க வேண்டும்.

प्रासादस्यैव परितश्चतुर्दिक्षु विशेषत: ।
कूटाकाराणि कृत्वाथ चतुर्गात्रयुतानि च ॥ २३७ ॥

*ப்ரஸாதஸ்யைவ பரிதஸ்சதுர்திக்ஷு விசேஷத:!*
*கூடாகாராணி க்ருத்வாத சதுர்காத்ர யுதானிச!!*

ஆலயத்துக்கு நாற்புறமும் சிறப்பாக கூடாரம் போல் நான்கு அளவான சொக்கல் பனை கட்டி விட்டு

कूटवन्धेषु सर्वत्र पात्राणि न्यस्य कारयेत् ।
पुण्याहप्रोक्षणं कृत्वा दण्डं पूर्वेऽपि वासयेत् ॥ २३८ ॥

*கூட பந்தேஷு ஸர்வத்ரபாத்ராணின்யஸ்ய காரயேத் /*
*புண்யாஹ - ப்ரோக்ஷணம் க்ருத்வா தண்டம் பூர்வேபி வாஸயேத் //*

நான்கிலும் தீபபாத்ரம் அமைத்து முருகனுக்கு முன்பு தீபஸ்தம்பம் நாட்டி புண்யாக வாசன நீர்த்தெளித்து பிறகு தீபம் வைக்க வேண்டும்.

बलिपीठाग्रके वाऽपि ध्वजदण्डाग्रकेऽपि वा ।
यथ दृढतरं स्थाप्य पूरयेच्छुद्धवालुकैः ॥ २३९ ॥

*பலி பீடாக்ரகேவாபி த்வஜ தண்டாக்ரகேபிவா /*
*யதா த்ருடதரம் ஸ்தாப்ய பூரயேச்சுத்த வாலுகை: //*

பலிபீடத்திற்கு முன்போ கொடிமரத்துக்கு முன்பாகவோ ஸ்தம்பத்தை ஆழ குழிவெட்டி நிலை நிறுத்தி மணல்களால் நிரப்பி ஆடாதவாறு அமைக்க வேண்டும்.

वेदिमूले प्रकर्तव्यं वृत्तं वा चतुरश्रकम् ।
त्रिहस्तमात्रविस्तीर्णमेकहस्तोन्नता शुभा ॥ २४० ॥

*வேதி மூலே ப்ரகர்தவ்யம் வ்ருத்தம்வா சதுரஸ்ரகம் /*
*த்ரிஹஸ்தமாத்ர விஸ்தீர்ணமேக ஹஸ்தோன்னதா சுபா //*

ஸ்தம்பத்தின் அடியிலே நாற்புறமும் மூன்று முழ அளவு (4½ அடி) (சுற்றளவு உயரம்) அல்லது 1½ அடி வட்ட வடிவமாகவோ, நாற்கரமாகவோ செய்வது நலம்

गोमयालेपनं कृत्वा शालिपिष्टैर्विचित्रयेत् ।
नवेन युग्मवस्त्रेण दण्डमूलं प्रवेष्टयेत् ॥ २४१ ॥

*கோமயா லேபனங்க்ருத்வா சாலிபிஷ்டைர் விசித்ரயேத் /*
*நவேன யுக்ம வஸ்த்ரேண தண்டமூலம் ப்ரவேஷ்டயேத் //*

தீபத்தண்டின் கீழ் பசுஞ்சாணத்தால் மெழுகி நெல் அரிசி மாவினால் அலங்காரமாக கோலம் போட்டு புத்தாடையால் தீப தண்டின் அடியில் கட்டி மேல் வஸ்த்ரம் அணிவிக்க வேண்டும்.

पालिकाद्यैरलंकृत्य पुण्याहं वाचयेद्बुधः ।
अस्त्रेण प्रोक्ष्य तद्दण्डं प्रणवेन तु पूजयेत् ॥ २४२ ॥

*பாலிகாத்யை ரலங்க்ருத்ய புண்யாஹம் வாசயேத் புத: /*
*அஸ்த்ரேண ப்ரோக்ஷ்ய தத்தண்டம் ப்ரணவேனது பூஜயேத் //*

நெய்தீப அகல்களால் அலங்கரிக்கப்பட்டு புண்யாக நீர் அஸ்த்ரமந்தரத்துடன் தெளித்து அத்தீபதண்டத்தை ஓங்கார பிரணவ வடிவாய் நினைத்து பூசித்து

स्तम्भयानं यथा तद्वद्दीपं कुर्यान्मनोरमम् ।
कार्पासबीजैर्मतिमान्निच्छिद्रेणैव साधनम् ॥ २४३ ॥

*ஸ்தம்பமாநம் யதாதத்வ த்தீபங்குர்யாந் மனோரமம் /*
*கார்பாஸ பீஜைர் மதிமாந் நிச்சித்ரேணைவ சாதநம் //*

தீபத்தண்டத்தின் உயரத்துக் கொப்ப உயர்ந்த அளவில் எண்ணிக்கையினால் பருத்தித் திரியினால் பருத்தித் துணியினால்

पोट्टलीकं ततो बध्वा घृतपात्रे निधाय च ।
अष्टप्रस्थं घृतेनैव तदर्धेनैव पूरयेत् ॥ २४४ ॥

*பொட்டலீ கந்ததோ பத்வா க்ருத பாத்ரே நிதாயச /*
*அஷ்டப்ரஸ்தம் க்ருதே நைவ ததர்தேநைவ பூரயேத் //*

உள்ளே பொறி எள் வைத்து பொட்டலங்கட்டி நெய் பாத்திரத்தின் நடுவே நிமிர்ந்து நிற்குமாப் போல துணித்திரியை திரித்து எட்டு படி நெய்யூற்றி அல்லது நாலுபடி நெய்யாலாவது கொப்பரையை நிரப்ப வேண்டும்.

सौवर्णं राजतं ताम्रं मृण्मयं वाऽथ पात्रकम् ।
देवाग्रे मण्डलं कृत्वा शालिपिष्टैर्विचित्रयेत् ॥ २४५ ॥

*ஸௌவர்ணம் ரஜதம் தாம்ரம் ம்ருண்மயம் வாத பாத்ரகம்!*
*தேவாக்ரே மண்டலம் க்ருத்வா சாலி பிஷ்டைர் விசித்ரயேத் !!*

தங்கம், வெள்ளி, தாமிரம் மண்ணாலான பாத்திரத்தில் முருகனுக்கு முன் அறுகோண மண்டலத்தினால் மாக்கோலமியற்றி அழகுற

शालिभिर्विकिरेत्तत्र दर्भैश्चैव परिस्तरेत् ।
तन्मध्ये विन्यसेत्पात्रं हृदयेन तु मन्त्रतः ॥ २४६ ॥

*சாலி பிர்விகிரேத் தத்ர தர்பைஸ்சைவ பரிஸ்தரேத் !*
*தந்மத்யே விந்யஸேத் பாத்ரம் ஹ்ருதயேநது மந்த்ரத:!!*

நெல்பரப்பி அதன் தர்பைகளை வடக்கு நுனியாக பரப்பி அதன்மேல் இருதய மந்திரத்தால் தீபக்கொப்பரை பாத்திரத்தை வைத்து

दीपयेत्प्राङ्मुखो मन्त्री स्कन्दमूलमनुस्मरन् ।
एवं त्रिधा पञ्चधा वा शरावे पात्रमाचरेत् ॥ २४७ ॥

*தீபயேத் ப்ராங்முகோ மந்த்ரீ ஸ்கந்த மூல மநுஸ்மரந் !*
*ஏவம் த்ரிதா பஞ்சதாவா சராவே பாத்ரே மாசரேத் !!*

கிழக்கு முகமாக முருகனின் மூலத்தை மனத்தில் நிறுத்தி தீபத்தை ஏற்றி மூன்று ஐந்து அகல் ஏற்றவும்.

ब्रह्मसूक्तैश्च मन्त्रैर्वा गन्धपुष्पादिनार्चयेत् ।
धूपदीपं ततो दत्वा हृदयेन तु मन्त्रतः ॥ २४८ ॥

*ப்ரம்மஸூக்த்ரைஸ்ச மந்த்ரைர்வா கந்த புஷ்பாதிநார்ச்சயேத் !*
*தூபதீபம் ததோதத்வா ஹ்ருதயேநது மந்த்ரத:!!*

பிரும்மசூக்த மந்திரத்தால் மணமிகு மலர்களால் அர்ச்சித்து இருதய மந்திரத்தால் தூபதீபங் காட்டுக.

दीपानारोप्य हस्तैर्वावाहयित्वा शिवद्विजैः ।
सर्वातोद्यसमायुक्तं कृत्वा ग्रामप्रदक्षिणम् ॥ २४९ ॥

*தீபாநாரோப்ய ஹஸ்தைர்வா வாஹயித்வா சிவத்விஜை:!*
*சர்வாதோத்ய சமாயுக்தம் க்ருத்வாக்ராம ப்ரதக்ஷிணம் !!*

தீபங்களை தட்டில் வைத்து பிராம்மணர்களை எடுத்துக் கொள்ளச் சொல்லி மங்கள வாத்யங்களோடு கிராம வலம் வரச் செய்ய வேண்டும்.

गृहस्थो वा ब्रह्मचारी वा दीपं सग्राह्य पाणिना ।
अघोरास्त्रेण मन्त्रेण दीपदण्डेऽधिरोपयेत् ॥ २५० ॥

*க்ரஹஸ்தோ ப்ரம்ம சாரீவா தீபம் ஸங்க்ராஹ்ய பாணிநா !*
*அகோராஸ்த்ரேண மந்த்ரேண தீப தண்டே திரோபயேத் !!*

சுற்றிவந்த பின் (அல்லது ஆலயம் வந்து) மணமானவர்களோ, மணமாகதவர்களோ அகோராஸ்த்ர மந்திரமுச்சரித்துக் கொண்டு தீபதண்டத்தில் ஏறி ஏற்றி விடவேண்டும்.

सर्वातोद्यसमायुक्तं जयशब्दसमन्वितम् ।
सर्वैर्हरहरेत्युक्त्वा दीपदण्डेऽधिरोपयेत् ॥ २५१ ॥

*ஸர்வாதோத்ய ஸமாயுக்தம் ஜயசப்த ஸமந்விதம் !*
*ஸர்வைர்ஹர ஹரேத்யுக்த்வா தீபதண்டேதி ரோபயேத் !!*

எல்லா மங்கள வாத்யங்களும் முழங்க ஜயமங்கள முருகனின் நாமங்களை உரக்க மெய்சிலிர்க்க சிறப்பாக ஹர ஹரோ ஹர எனக் கூறிக்கொண்டே தீபதண்டத்தில் தீபமேற்ற வேண்டும்.

प्राङ्मुखोदङ्मुखो वाऽपि दीपं मन्त्रेण विन्यसेत् ।
प्रासादे गोपुरे शालपरिवारालयोर्ध्वके ॥ २५२ ॥

*ப்ராங்முகோ உதங்முகோவாபி தீபம்மந்த்ரேண விந்யஸேத் !*
*ப்ராஸாதே கோபுரேசால பரிவாராலயோர்த்வகே !!*

கிழக்கு முகமாகவோ, வடக்கு முகமாகவோ தீபமுன்புறமிருக்கும் வண்ணம் தீபமந்திரம் சொல்லிக் கொண்டே கோயிலின் மேலும் பரிவாரக் கோயில் விமானங்களிலும் வைக்க வேண்டும்.

प्रासादाभ्यन्तरे सर्वे पाकस्थानेन तु मण्डपे ।
वापीकूपतटाकेषु सर्वत्रैव प्रदीपयेत् ॥ २५३ ॥

*ப்ராஸாதாப்யந்த ரேஸர்வே பாகஸ்தாநேது மண்டபே !*
*வாபீகூபதடாகேஷு ஸர்வத்ரைவ ப்ரதீபயேத் !!*

ஆலயத்திற்கு உள்ளே எங்கேயும் மடப்பள்ளி, மண்டபம், குளம், கிணறு, குட்டை, ஏரிகளிலும், கூட எல்லா இடங்களிலும் ஒளிமயமாக தீபமேற்றுக

स्वात्वा चोत्सवबेरन्तु समलंकृत्य भूषणैः ।
ग्रामप्रदक्षिणं कृत्वा सर्वातोद्यसमन्वितम् ॥ २५४ ॥

*ஸ்நாத்வாசோத்ஸவ பேரந்து ஸமலம் க்ருத்ய பூஷணை: !*
*க்ராம ப்ரதக்ஷிணம் க்ருத்வா ஸர்வாதோத்ய ஸமந்விதம் !!*

மீண்டும் உற்சவரை நீராட்டி அணிகலன்களால் அலங்கரித்து வீதியுலா வரச் செய்வது எவ்வாற்றானும் முயற்சியோடு செய்யத் தக்கது

आलयन्तु प्रविश्याथ मूलबेरं समर्चयेत् ।
स्नपनं कारयेत् तत्र सहस्रादिषु शक्तितः ॥ २५५ ॥

*ஆலயந்து ப்ரவிஸ்யாத மூலபேரம் ஸமர்ச்சயேத் !*
*ஸ்நபனங்காரயேத்தத்ர ஸஹஸ்ராதிஷு சக்தி த :!!*

பிறகு மூலாலயம் சேர்ப்பித்து மூல முருகனை பூஜிக்க வேண்டும். 1008 கும்பங்கள் நிறுவி அல்லது 108 அல்லது ஒன்றாவது நிறுவி அபிஷேகித்து

पृथुकान् दापयेद्विद्वान् नालिकेरफलान्वितान् ।
मरीचिजीरकोपेतान् नालिकेरैश्च संयुतान् ॥ २५६ ॥

*ப்ருதுகாந் தாபயேத்வித்வாந் நாளிகேரபலாந் விதாந் !*
*மரீசிஜீர கோபேதாந் நாளிகேரைஸ்ச ஸம்யுதவாந் !!*

பொறித்த நல்ல முறைப்படி தயாரித்த அவல்களோடு பாகு சேர்த்து தேங்காய் (மிளகு, ஜீரகம்) (கொஞ்சம் சேர்த்து) மிகுதியாகச் சேர்த்து

दद्यात्पृथुकलाजांश्च गुलसारसमन्वितान् ।
प्रभूतहविषं दत्वा ताम्बूलमपि दापयेत् ॥ २५७ ॥

*தத்தேத் ப்ருதுக லாஜாம்ஸ்ச குலஸார ஸமந்விதாந் !*
*ப்ரபூத ஹவிஷந்தத்வா தாம்பூலமபி தாபயேத் !!*

அவ்வவலோடு சுவைமிகு அறுசுவை பக்குவமான அளவுமிகு அன்னப்படையல் செய்து தாம்பூலம் சமர்ப்பித்து

प्रतिसंवत्सरं ह्येवं कर्तव्यं फलकाङ्क्षिभिः ।
लाजान् पृथुकलाजांश्च पृथुकान् व्यञ्जनैर्युतान् ॥ २५८ ॥

*ப்ரதிஸம் வத்ஸரம் ஹ்யேவம் கர்தவ்யம் பலகாம் க்ஷிபி: !*
*லாஜாந் ப்ருதுகலாஜாம்ஸ்ச ப்ருதுகாந் வ்யஞ்சனைர் யுதாந் !!*

நலம் வேண்டுவோரால் ஆண்டுதோறும் இவ்வாறு செய்யற்பாலது நெற்பொறிகள் அவல் பொரிகளோடு அறுசுவை உணவோடும்

निवेदयेद्गुहस्यैवं पवित्र पापनाशनम् ।
यो भक्षयेत्ततो भक्त्या अग्निष्टोमफलं लभेत् ॥ २५९ ॥

*நிவேதயேத் குஹஸ்யைவம் பவித்ரம் பாபநாசநம் !*
*யோபக்ஷயேத் ததோபக்த்யா அக்னிஷ்டோம பலம் லபேத் !!*

நிவேதித்து பிறகு பருகுபவர்கள் அக்னிஷ்டோமம் எனும் பெரிய யாக பயனை பெறுவர்

एवं य: कुरुते मर्त्य: स मुक्त: सर्वपातकै: ।
सर्वान् कामानिह प्राप्य सोऽन्ते स्कन्दपुरं व्रजेत् ।
कृतिकादीपनं प्रोक्तं धनुर्मासार्चनं श्रृणु ॥ २६० ॥

*ஏவம் ய: குருதே மர்த்யம் ஸமுக்தஸ் ஸர்வ பாதகை:।*
*சர்வாந் காமாநி ஹப்ராப்ய சோந்தே ஸ்கந்தபுரம் வ்ரஜேத்॥*
*கிருத்திகா தீபநம்ப்ரோக்தம்தனுர்மாசார் சநம். ஸ்ருணு॥।*

இவ்வாறு எவர் செய்கிறாரோ அனைத்து பாபங்களிலிருந்தும் அவர் விடுபடுவர். எல்லா நலன்களோடும் இனிதே இங்கு வாழ்ந்து இறுதியில் உறுதியாக முருகனுலகம் முந்துவர் கார்த்திகை தீபம் இவ்வாறு கூறப்பட்டது மார்கழிப் பூஜையைக் கூறுகிறேன் கேளும்.

इति कार्तिकमासपूजाविधि:

இது கார்த்திகை மாஸ பூஜை முறையாகும்.

## ॥ धनुर्मासपूजा ॥

### தநுர்மாஸ பூஜா

### மார்கழி மாத பூஜை முறை

मण्डपं समलंकृत्य मुक्तादामैश्च वस्रकै: ।
गृहद्वारणि सर्वाणि एवमाद्यैरलंकरेत् ।
शुद्धतोयेन संस्नाप्य प्रियङ्ग्वन्नं निवेद्य च ॥ २६१ ॥

*மண்டபம் ஸமலங்க்ருத்ய முக்தாதாமைஸ்ச வஸ்த்ரகை:।*
*க்ரஹத்வாராணி ஸர்வாணி ஏவமாத்யை ரலங்கரேத்॥*
*சுதத தோயேன ஸம்ஸ்நாப்ய ப்ரியங்க்வன்னம் நிவேத்யச॥।*

அழகான மண்டபத்தை மேலும் அழகாக முத்துமாலைகளாலும் வண்ணத் துணிகளாலும் அவ்வாறே வாயிற் தோரணங்களிலும் இவ்வாறெல்லாம் அலங்கரிக்க வேண்டும். தூயநீரால் நீராட்டி தினை சர்க்கரைப் பொங்கல் நிவேதிக்கவும்.

धनुर्मासस्य मर्त्यानां प्रत्यूष: काल उच्यते ।
तस्मात्समाधिरात्र्यन्ते पूजयेच्छंकरात्मजम् ॥ २६२ ॥

*தனுர்மாஸஸ்ய மாத்யானாம் ப்ரத்யூஷ:கால உச்யதே।*
*தஸ்மாத் ஸமாதி ராத்ரயந்தே பூஜயேச்சங்காராத்மஜம்॥*

எல்லா அலங்காரங்களுடன் எல்லா வாத்ய கோஷங்களுடனும் முடிந்த அனைத்து ஏற்பாடுகளுடன் தனுர்மாத சிறப்பு பூஜையான மாத பூஜையை முடித்து மீண்டும் அதே மாதத்தில் ஆண்டுதோறும் தினந்தோறும் நடைபெற்று வரும் உஷக்கால சிறப்பாகக் கூறப்படுகிறது.

सर्वालंकारसंयुक्तं सर्वातोद्यसमन्वितम् ।
एकवारं धनुर्मासे भक्त्या य: पूजयेद्गुहम् ॥ २६३ ॥

*ஸர்வாலங்கார ஸம்யுக்தம் ஸர்வாதோத்ய ஸமன்விதம்।*
*ஏகவாரம் தனுர்மாஸே பக்த்யாய: பூஜயேத் குஹம்॥*

ஆகையினால் இரவின் முடிவு யாமமாகிய நான்காவது யாமத்தின் இறுதியில் ஸ்ரீ முருகப் பெருமானை ஒரு முறை தனுர்மாதமான மார்கழியில் எவர் பூஜை செய்யும் பேறு பெறுகிறாரோ அவர்

वर्षद्वयञ्च पूजाया: फलं प्राप्नोत्यसंशय: ।
श्रृङ्गिवेरसहस्रार्ध व्यञ्जनै: सममुच्यते ॥ २६४ ॥

*வர்ஷத்வயஞ்ச பூஜாயா: பலம் ப்ராப்நோத்ய ஸம்சய:।*
*ச்ருங்கிபேர ஸஹஸ்ரார்த்தம் வ்யஞ்ஜனைஸ் ஸம முச்யதே॥*

இரண்டாண்டு பூஜையின் பயனை நிச்சயமாகப் பெறுவர். எல்லாவகை உப உணவுகளுடன் கூட ஐநூறு

तत्समं दधि विप्रेन्द्र धनुर्मासस्य पूजने ।
अर्धरात्रात्परे तत्र जलसंग्रहणं मतम् ॥ २६५ ॥

*தத்ஸமம் ததி விப்ரேந்த்ர தனுர்மாஸஸ்ய பூஜனே!*
*அர்த்த ராத்ராத் பரேதத்ர ஜல ஸங்க்ரஹணம் மதம்!!*

அதற்குச் சமமான தயிரை மார்கழி மாத பூஜையில் பயன்படுத்த வேண்டும். பனிரண்டு மணிக்குப் பிறகு உஷக்காலப் பூஜைக்காக சேகரித்து வைக்கலாமெனக் கூறப்படுகிறது.

पुष्पसंग्रहणं विप्र पूर्वेद्युरह उच्यते ।
नीलोत्पलञ्च कमलं तुलसीबिल्वपत्रकम् ॥ २६६ ॥

*புஷ்ப ஸங்க்ரஹணம் விப்ர பூர்வேத்யுரஹ உச்யதே!*
*நீலோத்பலஞ்ச கமலம் துளஸீ பில்வ பத்ரகம்!!*

அதுபோல முன்னாளே விடியற்கால முதல் பூஜைக்கு நீலோத்பலம், தாமரை, துளசீ, வில்வம், (இவைகள் சேகரித்தல் நலம்)

एकाहोषितदोषाणि न दोषं तैः सुपूजयेत् ।
पूजाकालस्य पूर्वे तु सुस्नाताचमनो गुरुः ॥ २६७ ॥

*ஏகா ஹோஷித தோஷாணி*
*நதோஷந்தைஸ்ஸு பூஜயேத்!*
*பூஜாகாலஸ்ய பூர்வேது சுஸ்நாதாசமனோ குரு:!!*

மேற்கூறிய மலர்களுக்கு முதல்நாள் எடுத்த மலர் என்ற குற்றம் இல்லை. பூஜா காலத்திற்கு முன்னதாக ஆசார்யரானவர் சங்கல்பஸ்நாநம், மானஸ ஸ்நானம் இரண்டையும் செய்துவிட்டு

पादौ प्रक्षाल्याचम्य भस्मधारणविग्रहः ।
द्वारं संपूज्य विधिना मन्त्रकायः शिवद्विजः ॥ २६८ ॥

*பாதௌ ப்ரக்ஷால்யசாசம்ய பஸ்மதாரண*
*விக்ரஹம்!*
*த்வாரம் ஸம்பூஜ்ய விதிநா மந்த்ரகாயச்சிவத்விஜ:!!*

ஆலயம் நுழைவாயிலில் இரு கால்களையும் நன்றாக அலம்பிக் கொண்டு மும்முறை தத்வாசமனம் செய்து கொண்டு முறைப்படி திருநீறு தரித்துக் கொண்டு பூதசுத்தி, மந்த்ரநியாசம் அகப்பூஜை விசேஷார்க்யம், செய்து கொண்டு முருகனைப் பூஜிக்க முருகனாகவே தானாகி துவாரபூஜையை முதலில் செய்து கொண்டு

विशेषार्घ्यं ततो कल्प्य रात्र्यन्तं पूजयेद्गुहम् ।
स्कन्दमूर्त्यङ्गमन्त्रैश्च स्कन्दसूक्तेन मन्त्रतः ॥ २६९ ॥

*விசேஷார்க்யம் ததோ கல்ப்ய ராத்ர்யந்தே*
*பூஜயேத்குஹம்!*
*ஸ்கந்த மூர்த்யங்க மந்த்ரைஸ்ச ஸ்கந்த சூக்தேந*
*மந்த்ரத:!!*

பிறகு விசேஷார்க்யம் செய்து கொண்டு இரவின் இறுதியில் முருகனை ஷடாக்ஷர மந்திரத்தாலும், பஞ்சபிரும்ம மந்திரங்களாலும்

ततः कुमारमातेति स्कन्दगायत्रिया यतः ।
श्रीरुद्रचमकाद्यैश्च पूजयेद्गन्धतोयकैः ॥ २७० ॥

*தத: குமாரமாதேதி ஸ்கந்த காயத்ரியாயத:!*
*ஸ்ரீருத்ர சமகாத்யைஞ்ச பூஜயேத் கந்ததோயகை:!!*

பிறகு மாதே குமார மென்ற யஜுர்வேத மந்திரத்தாலும், ஸ்கந்த காயத்ரி மந்திரத்தாலும் ஸ்ரீருத்ரம், சமகம், மந்திரங்களாலும் வாசனைமிகு நன்னீரால் முருகனை பூஜிக்க வேண்டும்

धौतवस्त्रैरलंकृत्य भूषयेद्भूषणार्हकैः ।
कर्पूरकुङ्कुमोपेतं रक्तगन्धं च लेपयेत् ॥ २७१ ॥

*தௌத வஸ்த்ரைரலங்க்ருத்ய பூஷயேத்*
*பூஷணார்ஹகை:!*
*கற்பூர குங்குமோபேதம் ரக்த கந்தஞ்ச லேபயேத்!!*

வெண்மையான ஆடைகளால் அணிவித்து அணிவிக்கத் தக்க ஆபரணங்களால் அலங்கரித்து பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ, இவைகளோடு அரைத்து இழைத்த செஞ்சந்தனத்தை நன்கு பூச வேண்டும்.

नीलोत्पलारविन्दैश्च पूजयेत्तु विशेषत: ।
आसनावरणादीनि संपूज्य विधिना तत: ॥ २७२ ॥

*நீலோத்பலாரவிந்தைச்ச பூஜயேத்து விசேஷத:।*
*ஆஸநாவரணாதீநி ஸம்பூஜ்ய விதிநா தத:॥*

நீலோத்பலம் தாமரைகளால் சிறப்பாக பூசிக்கும்போது ஆஸனம், ஆவரணங்களோடு முறைப்படி பூஜிக்க வேண்டும்.

नवभारादिभारान्तमुत्तमादित्रयं त्रयम् ।
तण्डुलं स्यात् तदर्धेन यथा विभवविस्तरम् ॥ २७३ ॥

*நவபாராதி பாராந்தம் முத்தமாதி த்ரயம் த்ரயம்।*
*தண்டுலம் ஸ்யாத்த தர்த்தேந யதாவிபவ விஸ்தரம்॥*

ஒன்பது பாரம் முதல் மூன்று பாரம் வரை 9 உத்தமம், 6 மத்தியமம், 3 அதமம், எனக் கூறப்படுகிறது. அரிசியானால் அதில் பாதி அளவாகக் கூறப்படுகிறது. பொருளாதார அடிப்படையில் இவைகளை ஊகித்துக் கொள்ள வேண்டும்.

शुद्धान्नमेवं कर्तव्यं श्रृङ्गिबेरदधिप्लुतम् ।
कन्दमूलफलोपेतं गुलखण्डसमन्वितम् ॥ २७४ ॥

*சுத்தாந்நமேவ கர்த்தவ்யம் ச்ருங்கிபேர ததிப்லுதம்।*
*கந்தமூல பலோபேதம் குலகண்ட ஸமந்விதம்॥*

சுத்தான்னம் தயார் செய்ய வேண்டும். அத்துடன் இஞ்சி தயிர் சேர்த்து தயிர்சாதம் செய்ய வேண்டும். கிழங்கு பழம் வெல்லக்கட்டியுடன் நிவேதிக்க வேண்டும்.

नालिकेरफलैर्युक्तं मधुसूपसमन्वितम् ।
निवेदयेद्धृदा मन्त्री ताम्बूलमपि दापयेत् ॥ २७५ ॥

*நாளிகேர பலைர்யுக்தம் மதுஸூப ஸமந்விதம்।*
*நிவேதயேத்ருதா மந்த்ரீ தாம்பூல மபிதாபயேத்॥*

தேங்காய், தேன் பருப்புகளுடன் இருதய மந்திரத்தால் நிவேதித்து தாம்பூலமும் நிவேதிக்க வேண்டும்

नानाधूपैश्च दीपैश्च ततो नीराजनैरपि ।
वाद्यैर्गीतैश्च नृत्तैश्च जपै: स्तोत्रै: प्रदक्षिणै: ॥ २७६ ॥

*நாநா தூபைச்ச தீபைச்ச ததோ நீராஞ்ஜநைரபி।*
*வாத்யைர் கீதைச்ச ந்ருத்யச்ச ஜபைச்ஸ்தோத்ரை:*
*ப்ரதக்ஷிணை:॥*

எல்லா விதமான தூப தீபங்களைக் காண்பித்தபின் பிறகு கற்பூர நெய் தீபாரதனைக் காண்பித்து சகலமங்கள வாத்யங்களுடனும், வாய்ப்பாட்டுக்களும், ஆடல் பாடல்களும், ஜபம் தோத்திரங்களும் பிரதக்ஷிணங்களும் செய்ய வேண்டும்

नमस्कारैश्च मतिमान् प्रीणयेदसुरान्तकम् ।
एवं य: कुरुते मर्त्य: सप्तजन्मद्विजो भवेत् ॥ २७७ ॥
सर्वान् कामानिह प्राप्य तदन्ते मुक्तिमाप्नुयात् ।
धनुर्मासार्चनं प्रोक्तमार्द्रापूजाविधिं श्रृणु ॥ २७८ ॥

*நமஸ்காரைச்ச மதிமாந் ப்ரீணயேதஸுராந்தகம்।*
*ஏவம் ய: குருதே மர்த்ய ஸ்ஸப்த ஜந்ம த்விஜோ*
*பவேத்॥*
*ஸர்வாந் காமாநிஹ ப்ராப்ய ததந்தே முக்தி*
*மாப்நுயாத்।*
*தனுர்மாஸார்சநம் ப்ரோக்தம் ஆர்த்ரா பூஜாவிதி*
*ச்ருணு:॥*

எந்த மதிமிகு அர்ச்சகர் நமஸ்காரங்களாலும் ஸ்ரீ முருகப் பெருமானை மகிழ்விக்கிறாரோ அவர் ஏழு ஜன்மங்கள் அந்தணராக பிறந்து எல்லா விருப்பங்களை

இங்கு அனுபவித்து பிறகு முருகன் திருவடிப் பேறு பெறுவர். இவ்வாறு தனுர்மாஸ பூஜை கூறப்படுகிறது. திருவாதிரை சிறப்பு பூஜைப் பற்றி கேளுங்கள்.

इति धनुर्मासपूजाविधि:

இது மார்கழி மாத பூஜை முறையாகும்.

# ।। आर्द्रापूजा ।।

## ஆர்த்ரா பூஜா

### திருவாதிரை நக்ஷத்திர பூஜை முறை

तस्मिन् मासे तथार्द्रायां घृतेन स्नापयेद् गुहम् ।
पर्वयुक्तमयुक्तं वा नक्षत्रं तु प्रधानकम् ।। २७९ ।।

*தஸ்மிந் மாஸேததார்த்ராயாம் க்ருதேநஸ்நாபயேத் குஹம் !*
*பர்வயுக்தம்வா நக்ஷத்ரந்து ப்ரதானகம் !!*

அந்த மார்கழி மாதத்தில் அந்த சிறப்புமிகு ஆதிரை நாள் எனும் திருவாதிரை நன்னாளில் முருகப் பெருமானை நெய்பால் அபிஷேகிக்க வேண்டும். பௌர்ணமி இருந்தாலும் சிறப்பு இல்லாவிட்டாலும் திருவாதிரை நக்ஷத்திரம் தான் முக்கியமெனக் கருதப்படுகிறது.

खण्डिते सति नक्षत्रे द्वयोस्तावधिकं भवेत् ।
समर्थेनापरं ग्राह्यं पूर्वमङ्गलकारकम् ।। २८० ।।

*கண்டிதேஸதி நக்ஷத்ரே த்வயோஸ்தாவதிகம்பவேத் !*
*ஸமர்தேநாபரம் க்ராஹ்யம் பூர்வமங்கள காரகம் !!*

நக்ஷத்திரம் இரண்டுபட்டு இரண்டு நாட்களில் பிரிந்து வருமாயின் இரண்டாவது நாள் வியாபகம் இரவில் நிகழாது என்பதாலும் முதல் நாளே சிறப்பாக ஏற்பது நன்று.

एकमासे द्विनक्षत्रे संप्राप्ते त्वपरं वरम् ।
पूर्वमुत्सवबेरस्य ततः कौतुकबेरकम् ।। २८१ ।।

*ஏகமாஸே த்விநக்ஷத்ரே ஸம்ப்ராப்தேத்வ பரம் வரம் !*
*பூர்வமுத்ஸவபேரஸ்ய தத: கௌதுக பேரகம் !!*

ஒரே மாதத்தில் இரண்டு நக்ஷத்திரங்கள் வருமாயின் பின்னால் வருவதே கொள்ளத்தக்கது எனினும் முதலில் வரும் நக்ஷத்திரத்தில் முருகன் உற்சவ மூர்த்திக்கும் பின்னால் வரும் நக்ஷத்திரத்தில் மூல முருகன் பிம்பத்திற்கும் திருவாதிரை திருமஞ்சனத்தைச் செய்து சிறப்பிக்கலாம்.

पूर्वेद्युः कौतुकं बध्वा देवीभयं सह मन्त्रवित् ।
कदलीपूगपनसलिकुचाद्युद्भवैः फलैः ।। २८२ ।।

*பூர்வேத்யு: கௌதுகம் பத்வா தேவிபயம் ஸஹ மந்த்ரவித் !*
*கதளீபூகபநஸலிகுசாத்யுர்பவை: பலை: !!*

முன்னாள் அதாவது மிருகசீர்ஷம் அன்று கங்கணக் காப்புகளை இரு தேவிகளுக்கும் முருகனுக்கும் கட்டுவித்து வாழை, பாக்கு, பலா, எலுமிச்சை முதலான பழங்களால்

मण्डपं समलङ्कृत्य मुक्तादामैश्च वस्त्रकैः ।
गृहद्वाराणि सर्वाणि एवमाद्यैरलंकरेत् ।। २८३ ।।

*மண்டபம் ஸமலங்கிருத்ய முக்தாதாமைஸ்ச வஸ்த்ரகை: !*
*க்ரஹத்வாராணி ஸர்வாணி ஏவ மாத்யை ரலங்கரேத் !!*

மண்டபத்தை முத்துமாலைகளாலும் வண்ணமயத் துணிகளாலும் அலங்கரித்து கோயிலின் வாயில்களை எல்லாம் கூட இவ்வாறே சிறப்பாக அலங்கரிக்கவும்.

शुद्धतोयेन संस्नाप्य प्रियङ्ग्वन्नं निवेद्य च ।
सर्वालंकारसंयुक्तं सर्वातोद्यसमन्वितम् ॥ २८४ ॥

*சுத்ததோயேன ஸம்ஸ்னாப்ய ப்ரியங்க்வந்நம் நிவேத்யச !*
*ஸர்வாலங்கார ஸம்யுக்தம் ஸர்வாதோத்ய ஸமந்விதம் !!*

எவ்வாற்றானும் முயற்சியோடு எல்லா விதத்திலும் அலங்கரிக்கப்பட்ட மண்டபத்தில் முருகனின் உற்சவமூர்த்தி விக்ரஹத்தை அபிஷேகித்து அலங்கரித்த பின் தினைச்சர்க்கரைப் பொங்கல் நிவேதித்து

ग्रामप्रदक्षिणं कुर्यात् प्रातरुत्सवबेरकम् ।
गवामाज्यं ततो विद्वान् नवं शुद्धमनिन्दितम् ॥ २८५ ॥

*க்ராம ப்ரதக்ஷிணங்குர்யாத் ப்ராதருத்சவபேரகம் !*
*கவாமாஜ்யம் த தோவித்வாந் நவம் சுத்தமநிந்திதம் !!*

திருவீதியுலாவை முற்பகலிலேயே செய்து பசுநெய் பரிசுத்தமானதை புதுமையானதை தள்ளப்படாததைத் தேர்ந்தெடுத்து

आनीय रात्रौ तत्त्वज्ञः स्नापयेन्मूलबेरकम् ।
शिवत्रयं सार्धभारं भारं भारार्धभारकम् ॥ २८६ ॥

*ஆநீய ராத்ரௌதத்வக்ஞ: ஸ்நாபயேந்மூலபேரகம் !*
*சிவத்ரயம் சார்த்தபாரம் பாரம் பாரார்த்தபாரகம் !!*

கொண்டு வந்து விஷயமறிந்த அர்ச்சகர் மூலபேர முருகனுக்கு 3 மரக்கால் 12 லிட்டர் அல்லது 6 லிட்டர் அல்லது 3 லிட்டர் அளவுள்ள பசுநெயால் பூசி முழுதும் அபிஷேகிக்கவும்

द्वयभारस्त्रिभारञ्च षड्भारं चाष्टभारकम् ।
दशभार स्मृतं ज्ञेयमुत्तमादित्रयं त्रयम् ॥ २८७ ॥

*த்வயபாரஸ்த்ரிபாரஞ்ச ஷட்பாரஞ்சாஷ்டபாரகம் !*
*தசபாரம் ஸ்ம்ருதம் ஜ்ஞேய முத்தமாதித்ரயம் த்ரயம் !!*

(அதமத்தில் மூன்று நிலையாகவும் மத்யமத்தில் மூன்று நிலையாகவும் உத்தமத்தில் மூன்று நிலையாகவும்) பத்துபாரம் முதல் எட்டு ஆறு மூன்று இரண்டு பாரம் வரை நெய் அபிஷேகிக்கலாம்.

1பலம் (35 gm) - 8 பலம் ஒரு சேர் - 5 சேர் வீசை

35x 8 = 280x 5 = 1400gm = 1 வீசை x 8 = 11200

11200 x 8 = 89600/1000 - 1 பாரம் = 90 கிலோ

900 கிலோ முதல் 180 கிலோ வரை அளவு கூறப்பட்டுள்ளது.

देवाग्रे स्थण्डिलं कुर्यात् समद्रोणैश्च शालिभिः ।
तदर्धैस्तण्डुलैर्भूष्य तदर्धैश्च तिलैरपि ॥ २८८ ॥

*தேவா க்ரேஸ்தண்டிலம் குர்யாத் ஸமத்ரோணைஸ்சசாலிபி: !*
*ததர்தைஸ்தண்டுலைர் பூஷ்ய ததர்தைஸ்ச திலைரபி !!*

முருகனுக்கு முன்பு சிறுமேடை அமைத்து அதில் (50kg) ஒரு மூட்டை நெல்லும் 25 அரைமூட்டை அரிசியும் பரப்பி ¼ மூட்டை (12kg) எள்ளும் பரப்பி அதன் மேல்

परिस्तीर्य ततो दर्भैराज्यपात्राणि विन्यसेत् ।
पुण्याहप्रोक्षणं कृत्वा स्कन्दमन्त्रैः समर्चयेत् ॥ २८९ ॥

*பரிஸ்தீர்ய ததோதர்பை ராஜ்ய பாத்ராணி விந்யஸேத் !*
*புண்யாஹப்ரோக்ஷணங்க்ருத்வாஸ்கந்த மந்த்ரைஸ்ஸமர்ச்சயேத் !!*

நாணற்புற்களான தர்பைகள் பரப்பி நெய்பாத்திரங்களை வைத்து புண்யாகவாசன நீர்த் தெளித்து முருகனின் மூலமந்திரங்களான ஆறெழுத்துக்களை ஒரெழுத்தும் சேர்த்து அர்ச்சிக்க.

धूपदीपं ततो दत्त्वा द्वारपूजां विधाय च ।
आधाराधेयपूर्वं च कृत्वा नित्यावसानके ॥ २९० ॥

*தூபதீபந்ததோதத்வா த்வாரபூஜாம் விதாயச !*
*ஆதாராதேய பூர்வஞ்ச க்ருத்வாநித்யாவஸாநகே !!*

தூபதீபங்காட்டி துவார பூசை செய்து பஞ்சாஸன பூஜை நியாஸங்கள் செய்து ஆவாஹித்து பஞ்சாவரண பூஜை வரை செய்வித்து

स्कन्दमूलेन मन्त्रेण षडङ्गाद्यङ्गमन्त्रतः ।
स्कन्दमूलेन मतिमान् कुमारमेव मन्त्रतः ॥ २९१ ॥

*ஸ்கந்த மூலேந மந்த்ரேண ஷடங்காத்யங்க மந்த்ரத:!*
*ஸ்கந்த மூலேந மதிமாந் குமாரமேவ மந்த்ரத:!!*

முருகன் மூலத்தாலும் ஷடங்க மந்திரங்களாலும் குமாரமேவ எனும் வேதமந்திரங்களாலும் ஆகமஞ்சரான ஆசார்யர்

घृतेन मूलमन्त्रेण चास्त्रेण परिमार्ज्य च ।
पिष्टामलकपिण्याकैर्मर्षयेद् घृतनुत्तये ॥ २९२ ॥

*கருதேந மூல மந்த்ரேண சாஸ்த்ரேண பரிமார்ஜ்யச!*
*பிஷ்டாமலக பிண்யாகைர்மர்ஷயேத் க்ருதநுத்தயே!!*

மூலமந்திரத்தோடும் அஸ்த்ர மந்திரத்தோடும் முருகனுக்கு நெய்யை அங்கங்களின் அன்புடன் அர்ப்பணித்து அரிசி மாவு, நெல்லி வற்றல், தூள், சீயக்காய்தூள், அரப்புத்தூள் முதலியவற்றால் நெய்ப்பசை நீங்க அங்கங்கழுவி அபிஷேகித்து

श्रीरुद्रचमकाभ्याञ्च स्कन्दसूक्तेन मन्त्रवित् ।
मन्दोष्णैर्गन्धतोयैश्च स्नाप्य वस्त्रेणमार्जयेत् ॥ २९३ ॥

*ஸ்ரீருத்ர சமகாப்யாஞ்ச ஸ்கந்த ஸூக்தேந மந்த்ரவித்!*
*மந்தோஷ்ணைர்கந்த தோயைஸ்ச ஸ்நாப்ய வஸ்த்ரேண மார்ஜயேத்!!*

ஸ்ரீருத்ரம், சமகம், எனும் சிறப்புமிகு யஜுர்வேத மந்திர கோஷங்களுடன் ஸ்கந்த ஸூக்த மந்திரத்துடன் சற்றே பொறுக்கும் சூட்டில் வெந்நீராலும் மணமிகு பன்னீராலும் முருகனை முழுக்காட்டித் தூய்மையான மெல்லிய துணியால் முருகனை முழுதும் துவட்டிவிட்டு

वस्त्राभरणमालादीन् गुरुर्दत्वा हृदाणुना ।
आसनावरणादीनि पूजयेन्मुनिपुङ्गव ॥ २९४ ॥

*வஸ்த்ராபரண மாலாதீந் குருர்தத்வா ஹ்ருதாணுநா!*
*ஆஸநாவரணாதீநி பூஜயேந்முனி புங்கவ!!*

ஆடை அணிகல மாலைகளை இதய பூர்வமாக இருதய மந்திரத்தோடு ஆஸனம் ஆவரணம் முறையாக பூஜிக்கத் தக்கது முனிவரே

नीलोत्पलोत्थैः पुष्पैश्च नैरन्तर्य विभूषयेत् ।
स्नाप्य कौतुकबेरञ्च भूषयेद्भूषणार्हकैः ॥ २९५ ॥

*நீலோத்பலோத்தை: புஷ்பைஸ்ச நைரந்தர்யம் விபூஷயேத்!*
*ஸ்நாப்யகௌதுகபேரஞ்ச பூஷயேத் பூஷணார்ஹகை:!!*

நீலோத்பல மலர்களான நீள்மாலையால் திருவடி தோய அணிவித்து உற்சவருக்கும் இவ்வாறே அபிஷேகித்து அணிகல ஆடை மலர்மாலைகளால் அலங்கரித்து

नैवेद्यं दापयेत्पश्चात् सर्वव्यञ्जनसंयुतम् ।
ताम्बूलञ्च ततो दत्वा कृष्णगन्धेन लेपयेत् ॥ २९६ ॥

*நைவேத்யம் தாபயேத்பஸ்சாத் ஸர்வவ்யஞ்சந ஸம்யுதம்!*
*தாம்பூலஞ்ச ததோ தத்வா க்ருஷ்ண கந்தேந லேபயேத்!!*

நல்ல நிவேதனம் செய்து பக்குவ பக்க உணவுகளோடு பரிமாறி நிவேதித்து தாம்பூலம் சிறப்பாக சமர்ப்பித்து நறுமணமிகு நற்சந்தனமிட்டு

ग्रामप्रदक्षिणं नित्यं वीथिं कृत्वालयं विशेत् ।
आलयास्यग्रके वाऽपि सौम्ये वा जनतुष्टये ॥ २९७ ॥

*க்ராம ப்ரதக்ஷிணம் நித்யம் வீதிம்கருத்வாலயம் விசேத் !*
*ஆலயஸ்யாக்ர கேவாபி ஸௌம்யே வாஜந துஷ்டயே !!*

வீதியுலாவை வெகு விமரிசையாக முடித்து ஆலயம் வந்தவுடன் ஆலயத்துக்கு முன்புறமோ வடக்குப்புறமோ

डोलारोहं ततः कर्यात् वलिवेरं विशेषतः ।
डोलारोहं प्रकर्तव्यं प्रभाते चार्धरात्रके ॥ २९८ ॥

*டோலாரோஹந்தத: குர்யாத் பலிபேரம் விசேஷத:!*
*டோலாரோஹம் ப்ரகர்தவ்யம் ப்ரபாதேசார்த்த ராத்ரகே !!*

அமைக்கப்பட்டுள்ள அழகு ஊஞ்சலிலே காலையிலோ அல்லது நள்ளிரவிலோ வைத்து ஆட்டிவிட்டு

सुवर्णरौप्य लोहैर्वा दारुणात्वथ शिल्पिभिः ।
सर्वलक्षणसंयुक्तं स्थाप्य स्तम्भद्वयं तथा ॥ २९९ ॥

*சுவர்ணரௌப்ய லோஹைர்வா தாருணாத்வத சில்பிபி:!*
*ஸர்வ லக்ஷண ஸம்யுக்தம் ஸ்தாப்ய ஸ்தம்ப த்வயம் ததா !!*

தங்கம், வெள்ளி உலோகத்தினாலோ அல்லது உயர்ந்த மரங்களாலோ சிற்பிகளால் அமைக்கப்பட்ட ஸகல இலக்கணங்களுடன் கூடிய இரு தூண்களோடு

तयोरूर्ध्वे कलां योज्य डोलां तस्मिन् प्रसम्बयेत् ।
चतुर्हस्तसमोपेतामथवा द्विभुजान्विताम् ॥ ३०० ॥

*தயோரூர்த்வே கலாம்யோஜ்ய டோளாம் தஸ்மிந் ப்ரலம்பயேத் !*
*சதுர்ஹஸ்த ஸமோபேதா மதவா த்விபுஜாந்விதாம் !!*

அல்லது நான்கு தூண்களோடு கூடிய கலாமயமான கொக்கிகளில் ஊஞ்சலைத் தொங்கவிட்டு அதில்

अधस्तात् फलकं योज्य सर्वालंकारसंयुताम् ।
डोलां संप्रोक्ष्य चास्त्रेण सर्वालंकारसंयुताम् ॥ ३०१ ॥

*அதஸ்தாத் பலகாம்யோஜ்ய ஸர்வாலங்கார ஸம்யுதாம் !*
*டோளாம் ஸம்ப்ரோக்ஷ்ய சாஸ்த்ரேண ஸர்வாலங்கார ஸம்யுதாம் !!*

அதன் கீழ் பலகையில் எல்லா அலங்காரத்துடன் கூடிய ஊஞ்சலில் அஸ்த்ர மந்திரத்தால் தெளித்து

फलकोर्ध्वे न्यसेद्देवं शक्तिद्वयसमन्वितम् ।
नैवेद्यं चैव पानीयं ताम्बूलमपि दापयेत् ॥ ३०२ ॥

*பலகோர்த்வே ந்யசேத்தேவம் சக்தி த்வய ஸமந்விதம் !*
*நைவேத்யஞ்சைவ பாநீயம் தாம்பூலமபி தாபயேத் !!*

இரு தேவியரோடும், முருகனை எழுந்தருளச் செய்து காலலம்பும் நீர்வார்த்து நிவேதனம் தாம்பூலம் சமர்ப்பித்து

धूपदीपौ ततो दत्वा दत्वा भस्मानि मन्त्रवित् ।
वाद्यगीतैश्च नृत्तैश्च स्तोत्रैः सतोषयेद्गुहम् ॥ ३०३ ॥

*தூப தீபந்த தோ தத்வா தத்வா பஸ்மாநி மந்திரவித் !*
*வாத்திய கீதைஸ்ச நிர்தைஸ்ச ஸ்தோத்ரைஸ் தோஷயேத் குஹம் !!*

தூப தீபங்காட்டி விபூதிக் காண்பித்து இனிமை மிகு வாத்யங்களோடு மகிமை மிகு ராகங்களால் (வாய்ப்பாட்டாலும்) முருகனை ஆடல் பாடல்களாலும், தோத்திரப் பாக்களாலும் மகிழ்வித்த

नीराजनं ततो दत्वा प्रविशेदालयं सुधीः ।
प्रभूतहविषं दत्वा ब्राह्मणानपि भोजयेत् ॥ ३०४ ॥

*நீராஜநந்ததோ தத்வா ப்ரவிசேதாலயம் சுதீ: !*
*ப்ரபூத ஹவிஷந்தத்வா பிராம்மணாநபி போஜயேத் !!*

தீபாராதனைக்காண்பித்து ஆலயம் சேர்ப்பித்து சுவைமிகு அளவுமிகு அறுசுவை உணவுகளைப் படையலிட்டு நிவேதித்து அன்பர்களுக்கும் அந்தணர்களுக்கும் அர்ப்பணிக்க வேண்டும்

गुहस्नानार्थमम्भश्च गङ्गातोयसमं भवेत् ।
गुहपादोदकं पीत्वा सर्वयज्ञफलं भवेत् ॥ ३०५ ॥

*குஹஸ்நாநார்த்த மம்பஸ்ச கங்காதோய ஸமம்பவேத் !*
*குஹபாதோதகம் பீத்வா ஸர்வ யக்ஞபலம் பவேத் !!*

கங்கை மைந்தனான கந்தன் காலடிப்பட்ட நீர் கங்கையினும் மேலான புண்ணியம் நிறைந்தது - திருவடி திருநீர் பருகுவோர் எல்லா மேலான வேள்விப் பயனையும் வேலவனருளால் பெறுவர்

एवं यः कुरुते मर्त्यः सर्वान् कामानवाप्नुयात् ।
आर्द्रापूजाविधिः प्रोक्ता पुष्यमासार्चनं शृणु ॥ ३०६ ॥

*ஏவம் ய : குருதே மர்த்ய ஸ்ஸர்வாந் காமாநவாப்நுயாத் !*
*ஆருத்ரா பூஜா விதி: ப்ரோக்தம் புஷ்யமாசார்சநம் ஸ்ருணு !!*

எவரொவ்வருவரும் இவ்வாறு செய்விக்க துணை செய்கிறார்களோ, சேவிக்கிறார்களோ சேவிக்க சேவை செய்கிறார்களோ அவர்களனைவரும் விரும்பிய அரும்பிய அனைத்து நலனும் அடைவர். ஆதிரைப் பூசை அருளப்பட்டது பூசமாச பூசை கேளும் முனிவரே

इत्यार्द्रापूजाविधिः

இது ஆர்த்ரா பூஜை முறையாகும்.

## ॥ पुष्यमासपूजा ॥

### புஷ்யமாஸ பூஜா (தைமாத பூஜை)

पुष्यमासे तु पुष्यर्क्षे कुर्यात् क्षौद्राभिषेचनम् ।
सर्वव्याधिविनाशं च विजयप्रदकारणम् ॥ ३०७ ॥

*புஷ்ய மாஸேது புஷ்யர்க்ஷே குர்யாத் க்ஷௌத்ரா பிஷேசநம் !*
*ஸர்வ வ்யாதி விநாசஞ்ச விஜயப்ரத காரணம் !!*

தை மாதத்தில் சிறப்பாக பூச நக்ஷத்திரத்தன்று ஸ்ரீ முருகனுக்கு தேனபிஷேகம் செய்ய வேண்டும். இவ்வழிபாடு எல்லோருக்கும் எல்லா வியாதிகளையும் நீக்குவதோடு எவற்றிலும் வெற்றி வாய்ப்புக்கள் கிட்டும்

आर्द्राऋक्षविधानेन ऋक्षं निश्चित्य मन्त्रवित् ।
वस्त्रपूतं नवं शुद्धं कृमिदोषविर्जितम् ॥ ३०८ ॥

*ஆர்த்ரா க்ஷ விதாநேந க்ஷந்நிஸ்சித்ய மந்த்ர வித் !*
*வஸ்த்ர பூத நவம் சுத்தம் க்ருமி தோஷ விவர்ஜிதம் !!*

திருவாதிரை வழிபாடு போலவே பூச நக்ஷத்திரத்தை தை மாதத்தில் உறுதி செய்த மதிமிகு மந்திர விற்பன்னர் நல்ல துணியினால் வடிகட்டித் தூய்மையான நுண்ணியிர்கள் குற்றம் நீக்கிய

क्षौद्रमादाय मतिमान् शुद्धपात्रे प्रपूरयेत् ।
अष्टप्रस्थादिविप्रेन्द्र यावन्मानं शिवान्तकम् ॥ ३०९ ॥

*க்ஷௌத்ர மாதாய மதிமாந் சுத்தி பாத்ரே ப்ரபூரயேத் !*
*அஷ்ட ப்ரஸ்தாதி விப்ரேந்த் யாவந்மாநம் சிவாந்தகம் !!*

தேனை எடுத்து மதிமிகு அர்ச்சகர் சுத்தமான பாத்திரத்தில் நிரப்பி 8 படி முதல் 4 படி வரை சக்திக்கு ஏற்றவாறு

शिवधृद्ध्या नव मानं कन्यसादित्रयं मतम् ।
देवाग्रे स्थण्डिलं कृत्वा क्षौद्रपात्राणि विन्यसेत् ॥ ३१० ॥

*சிவ வ்ருத் யா நவம் மாநம் கந்யஸாதி த்ரயம் த்ரயம்!*
*தேவாக்ரே ஸ்தண்டி லங்க்ருத்வா க்ஷௌத்ர பாத்ராணி விந்யஸேத்!!*

ஒன்பது படி, ஆறுபடி, மூன்றுபடி, என்ற அளவில் முருகனுக்கு முன் சிறு மேடை செய்து தேன் பாத்திரங்களை வரிசையாக வைத்து

पुण्यहं वाचयित्वाथ प्रोक्षयेदस्त्रमन्त्रत: ।
स्कन्दसूक्तेन मन्त्रज्ञ: कुमारमेति मन्त्रत: ॥ ३११ ॥

*புண்யாஹம். வாசயித்வாத ப்ரோக்ஷயே தஸ்த்திர மந்த்திரத:!*
*ஸ்கந்த சூக்தேந மந்த்ரக்ஞ: குமார மேதி மந்த்ரத:!!*

பிறகு புண்யாக வாசனம் செய்து அஸ்த்ர மந்திரத்தினால் தெளித்து புனிதமாக்கி ஸ்கந்த சூக்தம், மாதேகுமாரம், அயங்குமாரம், போன்ற வேதமந்திரங்களால் மந்திரமறிந்த அர்ச்சகரானவர்

मूलब्रह्मषडङ्गैश्च कुर्यात् क्षौद्राभिषेचनम् ।
वस्त्राभरणमालादीन् दापयेत् हृदाणुना ॥ ३१२ ॥

*மூல பிரும்மாங்க ஷடங்கைஸ்ச்ச குர்யாத் க்ஷௌத்ராபிஷேசனம்!*
*வஸ்த்ராபரண மாலா தீன் தாபயேத்து ஹ்ருதாணுனா!!*

ஆறெழுத்து முருகனின் மூலத்தாலும், பஞ்ச பிரும்ம ஷடங்கங்களாலும், முருகனுக்கு தைப் பூசத்தில் தேனபிஷேகம் செய்து இருதய மந்திரத்தால் ஆடை அணிகலன்களையும் மலர் மாலைகளால் அலங்கரிக்கவும்

नीलोत्पलैश्च पद्मैश्च नैरन्तर्यं विभूषयेत् ।
प्रभूतहविषं दत्वा ब्राह्मणानपि भोजयेत् ॥ ३१३ ॥

*நீலோத்பலைஸ்ச பத்மைஸ்ச நைரந்தர்யம் விபூஷயேத்!*
*ப்ரபூத ஹவிஷந்தத்வா ப்ராம்மணாந பி போஜயேத்!!*

நீலோத்பல மலர்களாலும், தாமரை மலர்களாலும், சிறப்பாக அலங்கரித்து பெரிய அளவில் சுவைமிகு அன்னம் எதிரே பரிமாறி நிவேதித்து எல்லா பக்தர்களையும் பிராம்மணர்களையும் சாப்பிடும்படி செய்க

एवं य: कुरुते मर्त्य: सर्वान् कामानवाप्नुयत् ।
पुष्यमासविधि: प्रोक्ता माघमासविधिं शृणु ॥ ३१४ ॥

*ஏவம் ய: குருதே மர்த்ய: ஸர்வாந் காமாநவாப்நுயாத்!*
*புஷ்ய மாஸவிதி: ப்ரோக்தம் மாக பூஜா விதிம் ச்ருணு!!*

இவ்வாறு எவர் அவர் வாழ்நாளிலே முருகனுக்கு முறை வழுவாது பக்தியோடு செய்து வருபவர் நல்ல இனிய குரல் வளமும் செல்வ வளமும் பெறுவர். இவ்வாறு தை மாத சிறப்பு பூஜை கூறப்பட்டது. மாசி மாதப் பூஜை சிறப்பைப் பற்றிக் கேட்பீராக

इति पुष्यमासपूजाविधि:

இது தை மாத பூஜை முறையாகும்.

## ॥ माघमासपूजा ॥

### மாகமாஸ பூஜா
### (மாசி மாத பூஜை முறை)

माघमासे मखऋक्षे पूजयेद्धृतकम्बलम् ।
भूपतिर्जयदं सौम्यं प्राणिनां रोगनाशनम् ॥ ३१५ ॥

*மாகமாஸே மகாருக்க்ஷே பூஜயேத் க்ருதகம்பளம்!*
*பூபதிர்ஜயதம் ஸௌம்யம் ப்ராணிநாம் ரோகநாசநம்!!*

மாசி மாதத்தில் மகா நக்ஷத்திரத்தில் முருகப் பெருமானுக்கு நெய்யில் நினைத்த ஆட்டு உரோமங்களாலான கம்பளத்தை (உரோம குற்றம்

நீங்க நெய்யில் நினைத்து) அர்ப்பணித்து பூசிக்க வேண்டும். இதனால் அரசர் வெற்றியடைவர் - பிராணிகளின் பிணிகள் நீங்கும்

आर्द्राप्रोक्तविधानेन नक्षत्रं ग्राह्यमुत्तमम्।
उत्तमं कपिलासर्पिः स्वर्णवर्णगवामपि ॥ ३१६ ॥

*ஆர்த்ராக்ஷோக்த விதாநேந நக்ஷத்ரம் க்ராஹ்ய முத்தமம்!*
*உத்தமம் கபிலா ஸர்ப்பி ஸ்வர்ண வர்ண கவா மபி!!*

பௌர்ணமியோடு கூடிய மகத்திலோ தனித்த மகத்திலோ நக்ஷத்திரப் பிரதானமெனில் நக்ஷத்திரம் என்று முழுமையாகவோ அல்லது இரவிலோ உள்ளதோ பௌர்ணமி முக்கியமெனக் கருதினால் மகாநக்ஷத்திரத்தோடு இணையா விட்டாலும் என்று பௌர்ணமி திதி அதிகம் உள்ளதோ அன்று பொன்னிறப் பசுவின் நெய்யையோ அல்லது செம்மையும், கருமையும் கலந்த பசுவின் நெய்யோ சிறந்தது என (கொள்ளவும்)

निरोमं नूतनं शुद्धं क्षीरं कीटादिवर्जितम्।
तोयैः पात्राणि संपूर्य वारुणं बीजमुच्चरन् ॥ ३१७ ॥

*நிரோமம் நூதனம் சுத்தம் க்ஷீரம் கீடாதி வர்ஜிதம்!*
*தோயை: பாத்ராணி ஸம்பூர்ய வாருணம் பீஜ முச்சரந்!!*

உரோமமின்றி புதுமையானதும், சுத்தமாகவும், உள்ள புழு பூச்சியில்லாத பால் சிறந்ததாக எடுத்து அதிலிருந்து நெய் தயாரிக்கவும். நீரால் பாத்திரங்களில் நிரப்பி வருண மூலத்தை உச்சரித்துக் கொண்டு

निधाय पात्रं पात्रेषु पिण्डं कृत्वा तदाज्यकम्।
कुङ्कुमागरुसंयुक्तं शुद्धपात्रे निधापयेत् ॥ ३१८ ॥

*நிதாயபாத்ரம் பாத்ரேஷு பிண்டிங்க்ருத்வா ததாஜ்யகம்!*
*குங்குமாகரு ஸம்யுக்தம் சுத்த பாத்ரே நிதாபயேத்!!*



சுத்தம் செய்த பாத்திரத்தை வைத்து பாத்திரங்களில் தயார் செய்யப்பட்ட நெய்யை நிரப்பி அதில் குங்குமப்பூ, அகரு இவைகளை சேர்த்து

देवाग्रे स्थण्डिलोर्ध्वे तु पुण्याहप्रोक्षणान्वितम्।
घृतपात्रमि विन्यस्य ब्रह्ममूर्त्यङ्गमन्त्रकैः ॥ ३१९ ॥

*தேவாக்ரே ஸ்தண்டிலோர்த்வேது புண்யாஹ ப்ரோக்ஷணாந்விதம்!*
*க்ருத் பாத்ராணி விந்யஸ்ய ப்ரம்ம மூர்த்யங்க மந்த்ரகை:!!*

முருகனுக்கு முன்பு சிறுமேடை மீது வைத்து புண்யாக புரோக்ஷணங்களை செய்து நெய்ப் பாத்திரங்களில் பிரும்மாங்க மந்திரங்களை பஞ்ச பிரும்ம ஷடங்க மந்திரங்களால்

पुष्पैरभ्यर्च्य मतिमान् धूपदीपौ हृदा ददेत्।
कवचेनावकुण्ठ्यापि प्रातर्मध्याह्न एव वा ॥ ३२० ॥

*புஷ்பை ரப்யர்ச்ய மதிமாந் தூபதீபௌ ஹ்ருதாததேத்!*
*கவசேநாவ குண்ட்யாபி ப்ராதர்மத்யான்ன ஏவ வா!!*

மதிமிகு அர்ச்சகர் மலர்களால் அர்ச்சித்து தூப தீபங்களை இருதய மந்திரத்தால் கொடுத்து காட்டி கவச மந்திரத்தால் ஆள்காட்டி விரலால் அதன்மேல் சுற்றிக் காண்பித்து காலை சந்தி பூஜையிலோ, அல்லது உச்சிவேளைப் பூசையிலோ (நெய்க் கம்பளத்தை சாற்ற வேண்டும்)

विशेषेणार्घ्य सेनान्यमासनावरणैः सह।
मूर्धादिपादपर्यन्तमालिप्य च स पीठकम् ॥ ३२१ ॥

*விசேஷேணார்க்ய ஸேநான்ய மாஸநாவரணை: ஸஹ!*
*மூர்த்தாதி பாத பர்யந்த மாலிப்யசஸ பீடகம்!!*

சிறப்பாக சிங்கார வேலனை ஆசனம் ஆவரணங்களோடு பூசித்து முடி முதல் அடி வரை

நெய்யினால் அபிஷேகம் போல் தடவி அர்ப்பணித்து பீடத்திலும் நன்கு சாத்தி

गन्धैर्लिप्यापरं नीत्वा कम्बलेन च वेष्टयेत् ।
महाहविर्निवेद्याथ ताम्बूलमपि दापयेत् ॥ ३२२ ॥

*கந்தைர் லிப்யாபரன் நீத்வா கம்பளேந சவேஷ்டயேத்!*
*மஹாஹவிர் நிவேத்யாத தாம்பூல மபி தாபயேத்!!*

பிறகு அபிஷேக வரிசைப்படி எல்லாம் செய்து சந்தனத்தாலும் பூசி, சந்தனாபிஷேகம் ஆனதும் (நன்கு துடைத்து விட்டு) நெய்யில் நினைத்து பிழிந்து வைத்து கம்பளியை) நெய்க் கம்பளத்தால் சுற்றி சிறப்பு நிவேதனங்களை நிவேதித்து பிறகு மணமிகு தாம்பூலமும் தர வேண்டும்.

संध्यान्ते वा परेद्युर्वा कौतुकाद्यं विसृज्य च ।
विशेषस्नपनं कुर्यात् यथाविसविभवसविस्तरम् ॥ ३२३ ॥

*சந்த்யாந்தே வாபரேத்யுர்வா கௌதுகாத்யம் விஸ்ருஜ்யச!*
*விசேஷஸ்நபநங்குர்யாத் யதாவித் ஸவிஸ்தரம்!!*

முறைப்படி சிறப்பாக ஸ்நபன பூர்வமாக அபிஷேகம் செய்யும் முன்னாள் மாலையோ மறுநாள் காலையோ, கங்கணக் கட்டியிருப்பதை அவிழ்த்து விட வேண்டும்.

एवं यः कुरुते मर्त्यः सर्वरोगात् प्रमुच्यते ।
माघपूजाविधिः प्रोक्ता शिवरात्रिविधिं श्रृणु ॥ ३२४ ॥

*ஏவம் ய: குருதே மர்த்யஸ்ஸர்வ ரோகாத் ப்ரமுச்யதே!*
*மாக பூஜா விதி: ப்ரோக்தம் சிவராத்ரி விதிம் ஸ்ருணு!!*

இவ்வாறு முறையாக எவர் செய்து வருவாரோ அவர் எல்லா வியாதிகளிலிருந்தும் விடுபடுவர் எனக் கூறப்பட்டு வருகிறது. மாசி மாத பூஜை இவ்வாறு கூறப்பட்டது. இதே மாதத்தில் செய்யப்பட வேண்டிய சிவராத்திரி விதி கூறப்படுகிறது.

इति माघमासपूजाविधिः

இது மகாமாஸ பூஜை முறையாகும்.

## ॥ शिवरात्रिपूजा ॥

### சிவராத்ரி பூஜா

तन्मासे कृष्णपक्षे तु निद्यते या चतुर्दशी ।
तद्रात्रिः शिवरात्रिः स्यात् सर्वपुण्यशुभावहा ॥ ३२५ ॥

*தன்மாஸே க்ருஷ்ண பக்ஷேது வித்யதேயா சதுர்தசீ!*
*தத்ராத்ரிச் சிவராத்ரிஸ்யாத் ஸர்வ புண்ய சுபாவஹா!!*

அம்மாசி மாத தேய்பிறை சதுர்தசியானது எல்லாப் புண்ணியங்களையும் தரவல்ல மஹா சிவராத்ரியான படியால்

रात्रौ यामद्वयादर्वाक् घटिकैकामहानिशी ।
तत्स्याच्चतुर्दशी यस्मात्तद्रात्रं शिवरात्रकम् ॥ ३२६ ॥

*ராத்ரௌ யாமத்வயா தர்வாக் கடிகைகா மஹாநிசி!*
*தத்ஸ்யாச் சதுர்தசீ யஸ்மாத் தத்ராத்ரம் சிவராத்ரகம்!!*

இரவில் இரண்டு யாமத்துக்கு மேலோ முழு இரவுமோ என்று சதுர்தசி உள்ளதோ அன்றே சிவராத்திரி எனக் கொள்ளப்படுகிறது

मुख्या त्रयोदशीमिश्रा पर्वमिश्राऽधमाधमा ।
मध्यमा शिवरात्रिः स्यादहोरात्रं चतुर्दशी ॥ ३२७ ॥

*முக்யாத்ரயோதசீ மிச்ரா பர்வ மிச்ரா தமாதமா!*
*மத்யமா சிவராத்ரிஸ்யா த்ஹோராத் ரஞ்சதுர்தசீ!!*

திரயோதசியோடு கூடிய சதுர்தசி சிறப்பென்றும் அமாவாசையோடு சேர்ந்த சதுர்தசி சிறப்பற்றது என்றும் நடுத்தர சிவராத்தியானது பகல், இரவு, இரண்டிலும் சதுர்தசி திதி வியாபித்தது என்றும் கூறப்படுகிறது.

तस्यां पूज्यो महादेवः ब्राह्मगोहितकांक्षिभिः ।

ईश्वरोवाच -

कौशिकेदं शतं सत्यं मत्पूजायाश्चतुर्गुणम् ॥ ३२८ ॥

*தஸ்யாம் பூஜ்யோ மஹாதேவ: ப்ராம்ம கோஹித காங்க்ஷிபி: !*
*ஈச்வரோவாச ! கௌசிகேதம் சதம் ஸத்யம் மது பூஜாயாஸ் சதுர்குணம் !!*

அவ்வளவு சிறப்பு மிகு சிவராத்திரியில் அந்தணர்கள், ஆவினங்கள் முதலான அனைத்து உயிரினங்களும் உய்வதற்காக செய்யப்படுவதே மகாதேவனான சிவ பூஜையாகும்.ஈஸ்வரன் கூறுகிறார்: கௌசிக முனிவரே! நூறு மடங்கு உண்மை என் பூஜையினால் கிடைக்கும் பலனைவிட நான்கு மடங்கு முருகனை சிவராத்ரி தினத்தில் பூஜிக்கக் கிடைக்கும் (என்றார்)

अथेकदन्तसेनान्योः पूजया तोषयाम्यहम् ।
तस्मात् सर्वप्रयत्नेन तद्रात्रौ पूजयेद्गुहम् ॥ ३२९ ॥

*அப்யை கதந்தசே நாந்யோ: பூஜயாதோஷ யாம்யஹம் !*
*தஸ்மாத் ஸர்வ ப்ரயத்நேந தத்ராத்ரௌ பூஜயேத் குஹம் !!*

விநாயகப் பெருமானையும், முருகப் பெருமானையும் பூஜிப்பதனாலும் நானும் சந்தோஷப்படுகிறேன். எனவே முயற்சியோடு சிவராத்திரியில் முருகனைப் பூசிக்க (எனக் கூறினார்)

स्नात्वा नित्यविधिं कृत्वा कुर्याच्छुद्धोपवासकम् ।
देवेशं गन्धतैलेन पिष्टाद्यैरपि मन्त्रवित् ॥ ३३० ॥

*ஸ்நாத்வா நித்ய விதிம்க்ருத்வா குர்யாச் சுத்தோப வாஸகம் !*
*தேவேசம் கந்ததைலேந பிஷ்டாத்யைரபி மந்த்ரவித் !!*

நீராடி நித்ய கர்ம அனுஷ்டானங்களை முடித்து சுத்தமாக உணவில்லாமலும் யாருடன் தேவையில்லாமல் பேசாமலும் இரவில் விழிப்போடு இருந்து இறைவனுக்கே இறைவனான முருகப் பெருமானை சந்தனாதி தைலம், அரிசி மாவுப் பொடி போன்றவைகளால் மந்திரத்தோடு கூடிய மந்த்ரமயமான ஆசார்யர்

गव्यैः पञ्चामृतैश्चैव प्रतियामं विशेषतः ।
विल्वोदैः शुद्धतायैश्च गन्धोदैः शुद्धतोयकैः ॥ ३३१ ॥

*கவ்யை: பஞ்சாம்ருதைச்சைவ ப்ரதியாமம் விசேஷத:!*
*பில்வோதைச் சுத்த தோயைச்ச கந்தோதைச் சுத்த தோயகை:!!*

பஞ்சகவ்யம் பஞ்சாமிருதம் வில்வ பத்திர நீர், சுத்த நீர், நறுமணஞ்சேர் நீர், சுத்த நீர் இவைகளால் ஒவ்வொரு யாமத்திலும் இடம்பெறும் நான்கு யாமப்பூசைகளிலும்

चन्दनागरुकर्पूरकुङ्कुमैश्च क्रमेण तु ।
मल्लिकोत्पलपुष्पैश्च जातिपुष्पैश्च बिल्वकैः ॥ ३३२ ॥

*சந்தனாகரு கற்பூர குங்குமைஸ்ச க்ரமேணது!*
*மல்லிகோத் பல புஷ்பைஸ்ச ஜாதி புஷ்பைஸ்ச பில்வகை:!!*

சந்தனம், அகரு, பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ, மல்லிகை, நீலோத்பலம், ரக்தோத்பலம், ஜாதிமுல்லை, வில்வம், தாமரை மலர்களாலும்

सुवर्णभूषणै रत्नैः प्रवालैर्मौक्तिकैरपि ।
पायसैः कृसरान्नैश्च यवान्नैश्च गुलान्नकैः ॥ ३३३ ॥

*சுவர்ண பூஷணைரத்நை: ப்ரவாளைர் மௌத்திகை ரபி!*
*பாயஸை: க்ருஸராந்நைஸ்ச ஜாதிபுஷ்பைஸ்ச பில்வகை:!*

# ॥ एकपञ्चाशत्पटलः ॥

### ஏகபஞ்சாசத்படல:

### ஐம்பத்தோன்றாவது படலம்!!

### सायरक्षाविधिः

### சாயரக்ஷா விதி:

### மாலை பொழுது வழிபாட்டு முறை

सारक्षाविधिं वक्ष्ये श्रृणु कौशिक सुव्रत ।
सर्वलोकहितार्थाय सर्वप्राणिसुखावहम् ॥ १ ॥

*ஸாயரக்ஷா விதிம் வக்ஷ்யே ச்ருணு கௌசிக சுவ்ரத !*
*ஸர்வலோக ஹிதார்த்தாய ஸர்வப்ராணி*
*சுகாவஹம் !!*

எல்லா ஜனங்களுக்கும் நன்மைகள் தோன்றுவதற்கும் எல்லா ஜீவராசிகளும் நோயற்ற நல் வாழ்வைப் பெறுவதற்கும் மாலைப் பொழுதின் காப்பாய் விளங்கும் சாயரக்ஷையைப் பற்றி கூறப்போகின்றேன் நல்லவ்ருதானுஷ்ட் டானத்தை உடையவரான கௌசிக முனிவரே நீவிர் கேட்பீராக!

विशेषाद्बालरक्षार्थं सायरक्षां महामुने ।
जनानां नयनोच्छिष्टनिवृत्यर्थं प्रदोषके ॥ २ ॥

*விசேஷாத் பாலரக்ஷார்த்தம் சாயரக்ஷாம்*
*மஹாமுனே !*
*ஜநாநாம் நயநோச்சிஷ்ட நிவ்ருத்த்யர்த்தம்*
*ப்ரதோஷகே !!*

பெரிய முனிச்ரேஷ்டரே! இரவின் தொடக்கமான மாலைப் பொழுதில் மக்களுடையை கண்ணீரைத் துடைப்பதற்கும் பாலர்களாகிய குழந்தைகளைப் பேய் பிசாசு போன்ற துஷ்ட கிரஹங்கள் பிடிக்காமல் இருக்கவும் விசேஷமாக மாலை வழிபாடு கூறப்பட்டுள்ளது.

धूपदीपावसाने तुसायरक्षां समाचरेत् ।
सौवर्णं राजतं ताम्रं कास्यमेवास्य पात्रकम् ॥ ३ ॥

*தூப தீபாவஸானேது ஸாயரக்ஷாம் ஸமாசரேத் !*
*ஸௌவர்ணம் ராஜதம் தாம்ரம் காம்ஸ்யமேவாஸ்ய*
*பாத்ரகம் !!*

தூப தீபாராதனை முடிந்த பின்னர் சாய ரக்ஷை எனும் காரியத்தை நன்கு செய்தல் வேண்டும். தங்க மயமான பாத்திரம் வெள்ளி மயமான பாத்திரம், தாம்மிர மயமான பாத்திரம், வெண்கல மயமான பாத்திரம், முருகனுடைய வழிபாட்டிற்கு அமைத்தல் வேண்டும்.

विशत्यङ्गुलविस्तारमोष्ठमेकांगुलं भवेत् ।
एकांगुलं समारभ्य रव्यंगुलसमावधि ॥ ४ ॥

*விம்சத்யங்கு லவிஸ்தாரமோ ஷ்டமேகாங்குலம்*
*பவேத் !*
*ஏகாங்குலம் ஸமாரப்ய ரவ்யங்குல ஸமாவதி !!*

இருபது அங்குலம் விஸ்தார முள்ளதாயும், முகம் ஒரு அங்குல முள்ளதாயும், உயரம் ஒரு அங்குலம் முதல் 12 பன்னிரண்டு அங்குலம் உள்ளதாயும் அமைத்தல் வேண்டும். தீபாராதனையின் தட்டின் அளவும் தீபம் ஏற்றும் குழியின் அளவும் உயரமும் கூறப்பட்டுள்ளது.

दीपाधारन्तु तन्मध्ये वृत्ताकारं प्रकल्पयेत् ।
नवदीपयुतं श्रेष्ठं पञ्चदीपन्तु मध्यमम् ॥ ५ ॥

*தீபாதாரந்து தன்மத்யே விருத்தாகாரம் ப்ரகல்பயேத் !*
*நவதீபயுதம் ச்ரேஷ்டம் பஞ்ச தீபந்து மத்யமம் !!*

தீபத்தைத் தாங்கும் பகுதியும், நடுப்பகுதியும், வட்டமாக அமைத்தல் வேண்டும். ஒன்பது தீபமுடையது முதன்மையானது ச்ரேஷ்டமானதாகும். ஐந்து தீபமுடையது நடுத்தரமானது இடைப்பட்டதாகும்.

कन्यसं त्वेकदीपन्तु युक्त्या युञ्जीत बुद्धिमान् ।
दीपाधारेषु सर्वेषु वर्ति गोघृतसंयुतम् ॥ ६ ॥

*கன்யஸம்த்வேக தீபந்து யுக்த்யாயுஞ்ஜீத புத்திமான்!*
*தீபாதாரேஷு ஸர்வேஷு வர்திம் கோக்ருதஸம் யுதம்!!*

ஒற்றை தீபமுடையது கடைப்பட்டதான அதமமானதாகும்

हस्तांगुलसमुत्सेधं कर्पूरावर्तिरन्तकम् ।
सुब्रह्मण्यश्च लोकेशो नवदीपाधिदेवता: ॥ ७ ॥

*ஹஸ்தாங்குல முத்ஸேதம் கர்ப்பூராவர்த்தி ரந்தகம்!*
*சுப்ரஹ்மண்யச்ச லோகேஸோ நவதீபாதிதேவதா:!!*

ஐந்தங்குலம் உயர உடையதாக கற்பூர தீபம் (கற்பூரக்கலை) இருத்தல் வேண்டும். ஒன்பது தீபங்களுக்கு உரிய தெய்வங்கள் 1 சுப்பிரமணியர், 2. இந்திரன், 3.அக்னி, 4. யமன், 5. நைருதி, 6. வருணன், 7. வாயு, 8. குபேரன், 9. ஈசானன் என ஒன்பதாகக் கூறப்பட்டுள்ளன.

महादिग्देवता स्कन्द: पञ्चदीपाधिदेवता: ।
एकदीपे गुहं प्रोक्तं चतुष्पात्राभितो न्यसेत् ॥ ८ ॥

*மஹாதிக்தேவதா ஸ்கந்த: பஞ்சதீபாதி தேவதா:!*
*ஏகதீபே குஹம்ப்ரோக்தம் சதுஷ்பாத்ராபிதோந் யஸேத்!!*

கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய திக்குகளுக்கு உடையதேவதைகளான இந்திரன், யமன், வருண,ன் குபேரன், ஆகிய நால்வரும் ஸ்கந்தக் கடவுளுமாக ஐவர் ஐந்து தீபங்களுக்கு உரிய அதி தேவதைகளாகும். ஒரு தீபத்திற்கு குஹன் மட்டும் கூறப்பட்டுள்ளார். தீபங்களுக்கு எதிராக முன் கூறிய பொன், வெள்ளி , தாம்பிரம் வெண்கலம் ஆகியவற்றால் ஆன நான்கு பாத்திரங்களை வைத்தல் வேண்டும்.

निम्बपत्रं सर्षपञ्च तत: कार्पासबीजकम् ।
लवणञ्च क्रमान्यस्य द्रव्यं प्रसृतिमात्रकम् ॥ ९ ॥

*நிம்ப பத்ரம் ஸர்ஷ பஞ்சதத: கார்பாஸ பீஜகம்!*
*லவணஞ்சக்ரமாந் ந்யஸ்யத்ரவ்யம் ப்ரஸ்ருதி மாத்ரகம்!!*

அந்த நான்கு பாத்திரங்களில் ஒவ்வொரு பாத்திரத்தில் ஒவ்வொரு திரவ்யம் கையளவு போடுதல் வேண்டும். முதல் பாத்திரத்தில் வேப்பிலை போட வேண்டும். இரண்டாவது பாத்திரத்தில் கடுகு போட வேண்டும். மூன்றாவது பாத்திரத்தில் உப்பு போடுதல் வேண்டும். இந்த நான்கு த்ரவ்யங்கள் சாய ரக்ஷைக்குஉரிய பாத்திரத்ரவ்யங்களாகும்.

एवं सर्व समासाद्य मण्डपाभ्यन्तरं बुध: ।
स्कन्दायतनयोषिद्भिरथवा परिचारकै: ॥ १० ॥

*ஏவம் ஸர்வம்ச மாஸாத்ய மண்டபாப்யந் தரேபுத:!*
*ஸ்கந்தாய தநயோஷித் பிரதவா பரிசாரகை:!!*

புத்திமானாகிய ஆசார்யன் மண்டபத்தின் நடுவில் இவ்விதமாக எல்லாப் பொருள்களையும் நன்கு சேகரித்து முருக வழிபாட்டில் ஈடுபாடு உடைய பெண்களாலோ அல்லது பரிசாரகர் மூலமாக பாத்திரங்களில இடல் வேண்டும்.

तानि पात्राणि सर्वाणि वाहयित्वा विचारत: ।
समानीय गुहस्याग्रे न्यस्त्वा वर्तीन् प्रदीपयेत् ॥ ११ ॥

*தானி பாத்ராணி ஸர்வாணி வாஹ யித்வா விசாரத:!*
*ஸமாநீய குஹஸ்யாக்ரே ந்யஸ்த்வா வர்த்தீன் ப்ரதீபயேத்!!*

ஆராய்ந்து ஆசார்யன் அந்த த்ரவ்ய பாத்திரங்களைப் பரிசாரகர் மூலமாகவோ குஹவழிபாட்டுப் பெண்கள் மூலமாகவே எடுத்துக் கொண்டு வரச் செய்து குஹக் கடவுளுக்கு எதிராக வைத்து தீபத்தின் வத்திகளை ஏற்றல் வேண்டும்.

सायं रक्षा प्रकर्तव्या धूपदीपावसानके ।
गुहस्याचमनं दत्वाभ्यर्च्य तन्मूलमन्त्रत: ॥ १२ ॥

*சாயம் ரக்ஷாப் ரகர்தவ்யா தூபதீபாவ ஸாநகே !*
*குஹஸ்யாச மனம் தத்வாப்யர்ச்ய தன்மூல*
*மந்த்ரத:!!*

தூப தீபம் காட்டிய பிறகு சுப்பிரமண்யராகிய குஹப் பெருமானுக்கு ஆசமனம் முருகனது மூல மந்திரத்தால் கொடுத்து விட்டு பின்னர் அவருடைய மூலமந்திரங்களால் அர்ச்சித்தல் வேண்டும்.

अर्चयित्वा विधानेन वह्निबीजमनुस्मरन् ।
अस्त्रेणैव तु मन्त्रेण दिग्विरेचनमाचरेत् ॥ २३ ॥

*அர்ச்சயித்வா விதாநேந வஹ்னி பீஜமனுஸ்மரன் !*
*அஸ்த்ரேணைவது மந்த்ரேண திக்விரேசனம்*
*ஆசரேத் !!*

முருகனை முறைப்படி பூஜை பண்ணிய பிறகு ரம் என்கின்ற அக்னி பீஜத்தை நினைத்துக் கொண்டு மேற்கூறிய வேப்பிலை, கடுகு, பருத்திவிதை உப்பு ஆகியத்ரவியங்களை அஸ்திர மந்திரங்களைக் கூறிக் கொண்டு திக்குகளில் இறைத்தலை ஆரம்பிக்க வேண்டும். இவ்வாறு செய்வதால் பேய், பிசாசு போன்ற துஷ்ட கிரஹங்கள் விலகிப் போய்விடுகின்றன.

मुकुलीं पद्ममुद्राञ्च दर्शयेद्देशिकेन तु ।
धूपदीपौ समौ दत्वा नृत्तं वाद्यं समाचरेत् ॥ २४ ॥

*முகுலீம் பத்மமுத்ராஞ்ச தர்சயேத் தேசிகேநது !*
*தூப தீபௌ ஸமௌதத் வாந்ருத்தம் வாத்யம்*
*ஸமாசரேத் !!*

முருகனுக்கு ஆசாரியன் மொட்டு போன்ற தாமரை (பத்மம்) முத்திரையைக் காட்டுதல் வேண்டும். தூப தீபங்களைச் சமமாகக் காட்டுதல் வேண்டும். அதன் பிறகுதான் நாட்டியம் ஆடச் செய்தல் வேண்டும். வாத்தியம் வாசிக்கச் செய்தல் வேண்டும்.

धूपं धूरसिमन्त्रेण दीपमुद्दीप्यमन्त्रत: ।
सायं रक्षां प्रदिपयथ धूपदीपं ततो न्यसेत् ॥ १५ ॥

*தூபம் தூரஸி மந்த்ரேண தீப முத்தீப்ய மந்த்ரத:!*
*ஸாயம் ரக்ஷா ம்ப்ரதீப்யாத தூபதீபம் ததோந்*
*யஸேத் !!*

தூரஸி தூர்வதூர் வந்தம் எனத் தொடங்கும் வேதரிக்கினால் முருகனுக்கு தூபத்தைக் காட்டல் வேண்டும். உத்தீப்யஸ்வ எனத் தொடங்கும் வேத மந்திரத்தினால் தீபத்தைக் காட்டல் வேண்டும். மாலைப் பொழுதில் காப்பின் பொருட்டு (எல்லோரையும் காப்பதற்காக) தீபம் ஏற்றி மறுபடியும் தூப தீபங்களை முன் கூறிய மந்திரங்களால் காட்டி சாய ரக்ஷாத்ரவியங்களை தீபத்திற்கு முன்பாக வைத்தல் வேண்டும்.

जगद्भुवादिमन्त्रेण सायं रक्षा प्रदापयेत् ।
त्रिवारं परया भक्त्या भ्रामयेत्स्कन्दमूर्धनि ॥ १६ ॥

*ஜகத்புவாதி மந்த்ரேண ஸாயம் ரக்ஷாம் ப்ரதாபயேத !*
*த்ரிவாரம் பரயா பக்த்யா ப்ராமயேத் ஸ்கந்த மூர்தனி !!*

மேலான முருக பக்தியுடன் மேற்படி த்ரவியங்களை முருகனின் தலையைச் சுற்றி மூன்று முறை சுற்ற வேண்டும். ஜகத்புவம், வசத்புவம், விஸ்வபுவம், ருத்ரபுவம், ப்ரம்மபுவம், புவோத்புவம், என்றும் ஆறு மந்திரங்களால் சுற்றிப் போடுதலாகிய மாலைப் பொழுதின் காரியத்தைச் செய்துவிட்டு குழந்தைகளின் க்ஷேமத்திற்காக மும்முறை தீபாராதனை செய்ய வேண்டும்.

नृत्तवाद्यं समायुक्तं शङ्खध्वनिसमन्वितम् ।
भेरीमृदङ्गवाद्यैश्च स्तोत्रशब्दै: समन्वितम् ॥ १७ ॥

*ந்ருத்தவாத்யம் ஸமாயுக்தம் சங்க வாத்ய*
*ஸமன்விதம் !*
*பேரீம் ருதங்க வாத்யைச்ச ஸ்தோத்ர சப்தை*
*ஸமன்விதம் !!*

நாட்டியம், வாத்யம், இவற்றுடன் சங்க வாத்யம் கூடியதாய் பேரீ எனப்படும் முரசு

ம்ருதங்கம் போன்ற வாத்ய கோஷத்துடன் முருகனது துதிப் பாடல்கள் பாடுவதாகவும் இருக்கச் செய்தல் வேண்டும்.

द्रव्याण्यथ क्रमाद्विद्वानावर्त्यावर्त्य मूर्धनि ।
सायं रक्षां प्रदत्वैव दद्याच्छिष्यकरे ततः ॥ १८ ॥

*த்ரவ்யான் யதக்ரமாத்வித்வா நாவர்த்யா வர்த்ய மூர்த்தினி!*
*ஸாயம் ரக்ஷாம் ப்ரதத்வை வதத்யாச்சிஷ்ய கரேதத:!!*

சிவஞான சம்பன்னராகிய ஆசார்யன் முருகனது தலை மீது வேப்பிலை, கடுகு, பருத்தி, விதை, உப்பு, ஆகிய த்ரவியங்களை முருகனின் தலைமீது மும்முறை வீதம் சுற்றுதலாகிய மாலைப் பொழுதின் ரக்ஷையைச் செய்துவிட்டு அவற்றை சிஷ்யனுடைய கையில் கொடுத்தல் வேண்டும். ஒவ்வொரு பாத்திர திரவ்யத்தைத் தனித்தனியாகச் சுற்றுதல் வேண்டும்.

पात्रापात्रविधानेषु करं प्रक्षाल्य देशिकः ।
पश्चादाचमनं दत्वा प्रमवेन तु मन्त्रतः ॥ १९ ॥

*பாத்ரா பாத்ரவிதாநேஷு கரம்ப்ரக்ஷால்ய தேஸிக:!*
*பச்சாதாச மனம் தத்வா ப்ரணவேநது மந்த்ரத:!!*

த்ரவ்யங்களைப் பாத்திரத்துடன் சுற்றுதல், பாத்திரமில்லாமல் த்ரவியங்களை கைகளால் சுற்றுதல், ஆகிய செய்கையைச் செய்தபின் ஆசார்யன் கைகளை அலம்பிக் கொள்ளல் வேண்டும். பிறகு ஓம் என்ற மந்திரத்தினால் ஆசமனம் கொடுத்தல் வேண்டும்.

ततोऽस्य स्तवकं गृह्य कर्पूरादिसुगन्धियुक् ।
गृहीत्वा मुद्रया शक्त्या भ्राम्य स्कन्दोपरि त्रिधा ॥ २० ॥

*ததோ ஸ்யஸ்தபகம் க்ருஹ்ய கற்பூராதி சுகந்தியுக்!*
*க்ருஹீத்வா முத்ரயா சக்த்யா ப்ராம்ய ஸ்கந்தோ பரித்ரிதா!!*

கற்பூரம் முதலிய சுகந்த திரவ்யங்களை கொடுத்தாக எடுத்துக் கொண்டு இந்த முருகனது தலைமீது மும்முறை சுற்றும் பொழுது சக்தி முத்திரை எனப்படும் யோனி முத்திரை காட்டல் வேண்டும். பின்னரே த்ரவியங்களை எடுத்துக் கொள்ளுதல் வேண்டும்.

प्रक्षिपेद्दीपपात्रेषु कर्तव्यं स्कन्धमूर्धनि ।
अस्त्रेण विन्यसेदीषत् दक्षिणे धारयेत्ततः ॥ २१ ॥

*ப்ரக்ஷிபேத்தீப பாத்ரேஷு கார்தவ்யம் ஸ்கந்த மூர்த்தினி!*
*அஸ்த்ரேணவின்ய- ஸேத்தீஷத் தக்ஷிணேதார யேத்தத:!!*

அஸ்திர மந்திரங்களைக் கூறிக் கொண்டு அந்த த்ரவியங்களை தீப பாத்திரங்களிலும் போட வேண்டும். பின்னர் முருகனுடைய தோள் பட்டைகள் தலை இவற்றின் மீதும் போடல் வேண்டும். பிறகு கொஞ்சம் தக்ஷிணத்தில் தரித்தல் வேண்டும். (தெற்கே போடல் வேண்டும்)

पार्श्वयोर्हृदयेनैव विन्यसेद्भस्म मन्त्रवित् ।
बृन्दञ्च चामरं छत्रं दर्पणञ्च निदर्शयेत् ॥ २२ ॥

*பார்ஸ்வயோர் ஹ்ருதயேநைவ வின்யஸேத் பஸ்ம மந்த்ரவித்!*
*ப்ருந்தஞ்ச சாமரம் சத்ரம் தர்பணஞ் சநிதர்சயேத்!!*

மந்திரங்களை அறிந்த ஆசார்யன் ஹ்ருதய மந்திரத்தினால் இரு பக்கங்களிலும் விபூதியை வைத்தல் வேண்டும். ஆலவட்டம், சாமரம், குடை, கண்ணாடி போன்றவற்றை முருகனுக்குக் காட்டல் வேண்டும்.

तानि पात्राणि गणिका मूर्घ्नादिभिर्धृतानि हि ।
सर्वातोद्यसमायुक्तं पूर्वे वा चोत्तरेऽपि च ॥ २३ ॥

*தானி பாத்ராணி கணிகா மூர்த்நாதி பிர்த்ருதாநி ஹி!*
*ஸர்வ வாத்ய ஸமாயுக்தம் பூர்வே வா சோத்தரே பி வா!!*

அந்த த்ரவிய பாத்திரங்களையும் ஆலவட்டம் முதலியவற்றையும் வேசி எனப்படும் தாசிகளின் தலைமீது வைத்து எல்லா வாத்தியங்களும் முழங்க, கிழக்கு நோக்கியோ வடக்கு நோக்கியோ செல்லல் வேண்டும்.

वर्तिद्रव्यं तत्र त्यक्त्वो पुन: पात्राणि संगृहेत् ।
सायरक्षां च देवाय दिनं प्रति दिनं प्रति ।
एवं य: कुरुते मर्त्यो राजा विजयमाप्नुयात् ॥ २४ ॥

*வர்த்தி த்ரவ்யம் தத்ரத்யக்த்வா புன: பாத்ராணி ஸம்க்ரஹேத் ।*
*ஸாய ரக்ஷாம் சதேவாய தினம் ப்ரதி தினம் ப்ரதி ॥*
*ஏவம் ய: குருதே மர்த்யோராஜா விஜய மாப்னு யாத் ॥*

விளக்குத் திரியையும் வேப்பிலை, கடுகு, கொட்டைப் பஞ்சு, உப்பு, ஆகிய த்ரவியங்களை கிழக்கு அல்லது வடக்கு திக்கில் எறிந்து விட்டு பாத்திரங்களை மட்டும் எடுத்துக் கொண்டு கோவிலுக்கு வந்து ஒவ்வொரு நாளும் மாலைப் பொழுதில் இச்சடங்குகளைச் செய்தல் வேண்டும். எவன் ஒருவன் இவ்வாறு செய்கின்றானோ அவன் வெற்றி பெறுவான், அரசனுக்கு விஜயம், (வெற்றி கிட்டும்) உண்டாகும், என்று பெருமை வாய்ந்த லலிதா கமத்தின் வேதமாகிய குமார தந்திரத்தில் 51 ஐம்பத்தொன்றாவதாகிய ஸாயரக்ஷை விதி படலத்தில் கூறப்பட்டுள்ளது.

इति श्रीकुमारतन्त्रे सायरक्षाविधिरेकपञ्चाशत्पटल:

இதி ஸ்ரீ குமாரதந்த்ரே கௌசிகப்ரச்னே
ஸாயரக்ஷா விதி: நாம ஏகபஞ்சாசத் படல: ॥

இவ்வாறு ஸ்ரீ குமாரதந்த்ரத்தில் கௌசிகப்ரச்னத்தில்
ஸாயரக்ஷை பூஜை முறை என்னும்
51 - வது படலமாகும்.

॥ इति श्रीमल्ललितागमभेदे कुमारतन्त्रं संपूर्णम् ॥

शयनविधिपटल: कोशेपुत्यक्त: ।

இதி ஸ்ரீ மல்லலிதாகம பேதே குமாரதந்த்ரம்
ஸம்பூர்ணம்

இத்துடன் குமார தந்திரம் முடிவுற்றது.

॥ शुभम् ॥

சுபம்.